8-50

உ

முருகவேள் துணை

# ஆனந்த கதாசாகரம்

அல்லது

## அற்புத விநோதக் கதைகள்

இது

முத்துக்குமரன், முப்பெருந்தொண்டர் முதலிய
பல நூல்களின் ஆசிரியரான
எஸ். எஸ். அருணகிரி நாதரால்
எழுதப்பட்டு,



ROJA MUTHIAH
KOTTAIYUR-623 106
TAMILNADU INDIA

கீழ்கட்டளை
எஸ். துரைசாமி முதலியார் அவர்களால்
தமது
சென்னை, சூளை, ஸ்ரீ "பாரதி" அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1926

ரெஜிஸ்தர் காபி ரைட்] [விலை ரூபா 1 0 0

# முன்னுரை

தமிழ் நலமுணர்ந்த சகோதர சகோதரிகளே!

நீங்கள் இதுவரையில் என்னால் எழுதப்பட்ட அநேகம் புத்தகங்களை வாசித்து மகிழ்ந்திருப்பீர்கள். நான் இப் புத்தகத்தைப் புதியதோர் வகையில் எழுதி முடித்திருக் கின்றேன். இப்புத்தகத்தில், யான் அவ்வப்போது, சிந் தித்து எழுதிய பல அரிய கதைகளை நீங்கள் காணலாம். அக்கதைகளில் அநேகம் உண்மையிலேயே நமது இந்திய நாட்டில் நடந்தவைகளாகும். இப்புத்தகத்தை நீங்கள் வாசிக்கும்போது, இவைகளில் என்னால் புனைந்து எழுதப் பட்ட கதைகள் இவைகளென்றும், உண்மைக் கதைகள் இவைகளென்றும், நீங்களே எளிதில் அறிந்துகொள்ளுவீர்க ளென்னும் நம்பிக்கை எனக்கு உண்டு. ஒவ்வொரு கதை யிலும் அநேகம் அரிய பெரிய நீதிகளை அமைத்திருக்கின் றேன். 'நாவல்' என்றால் 'வேண்டாம்' என்கின்ற பெரியா ரும் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் இப்புத்தகத்தை நான் எழுதி யிருப்பதாக நினைக்கின்றேன். அந்நினைவு சரியோ தவறோ? நீங்களே உண்மையை அறிவீர்கள்! எஃது எப் படியாயினும் சரியே! இதுவரையில் என்னால் எழுதப்பட்ட புத்தகங்களை ஏற்றுக்கொண்டதைப் போலவே இதையும் நீங்கள் ஏற்றுக்கொள்ளுவீர்களென்னும் நம்பிக்கை எனக்கு உண்டு.

இப்புத்தகத்தின் இறுதியில் என் நண்பரொருவரால் எழுதப்பட்ட கதை யொன்றும் சேர்க்கப்பட் டிருக்கின் றது. அக்கதையும் தங்கள் மனத்தை முதலில் இருந்து முடிவு வரையில் கவருமென்பதில் தடையில்லை.

பல வகையிலும் எனக்கு ஆதரவாக நிற்கும் சகோதர சகோதரிகளாகிய உங்களுக்கும், இக்கதையை அன்புடன் ஏற்றுப் பிரசுரித்தவரும், இத்துறையில் எனக்கு ஊக்க மளித்து நிற்பவரும், அருங்குண முடையாருமாகிய கீழ்க் கட்டளை ஸ்ரீமான் துரைசாமி முதலியாரவர்கட்கும் என் வந்தனம் உரியதாகும்.

தங்கள் அன்பார்ந்த,

எஸ். எஸ். அருணகிரி நாதன்.



# கமலவதனம்

அல்லது

# காதலின் வலிமை

## அத்தியாயம் 1

### காதலில் கலந்தமனம்

**வ**சந்த காலத்திய மாலை நேரத்தில் குளிர்ந்தகாற்று சில்லென்று சுகத்திற்குவேண்டிய அளவு வீசுகின்றது. கங்காநதியில் ஜலம் மிக அழகாய் ஓடிக்கொண்டிருக்கிறது. ஒரு பெண்மணி சுமார் பதினெட்டுவயதைக் கடந்தவளும், சுருண்டு நீண்டு வளர்ந்த கேசமும், தாமரை மலர்போன்ற அழகிய முகமும், சற்றுக் கதிப்புற்ற கன்னங்களும், நீண்டு வேப்பிலைபோன்ற புருவங்களோடு கூடிய கரியவண்டுக்குச் சமானமான கண்களும், புன்னகைதவழும் அழகிய பவளம்போன்ற உதடுகளும், இளம்பிறை போன்ற நெற்றியும், அழகியகாதுகளும் இன்னும் பல சுபலட்சணங்களும் வாய்க்கப்பெற்றவளும், வெண்ணிறச் சலவைக்கல்லின்மீது தங்கப்பொடியைத் தூவினாற்போன்ற தேககாந்தியும் உடைய ஒரு பெண்மணி வெண்ணிறப் பட்டுப்புடவை ஒன்றைத் தற்கால நாகரீகத்திற் கேற்றவாறு உடுத்திக்கொண் டிருந்ததோடு காதில் வைரத்தோடும் கழுத்தில் பசும்பொற்சங்கிலியும் கையில் வைரமிழைத்த பசும்பொன் வளையல்களும் காலில் சதங்கையுமே அணிந்திருந்தாள். அதிகமென்? அவள்பார்வைக்கு இனிமையைத்

தரத்தக்க அழகிய தோற்றமுடையவளாய் இருந்தாள். அவள் தனவந்தர்கள் உல்லாசமாக நதியில் பிரயாணம் செய்வதற்காக உள்ளதைப்போன்ற, ஜலத்தில் கங்காநதியின் கரையோரத்திலிருந்த, ஒரு படகில் அமர்ந்து கையில் ஒரு புத்தகத்தைவைத்து வாசித்துக்கொண் டிருந்தாள். படகோ தரையில் இருந்த ஒரு மகிழமரத்தில் கயிற்ருற் கட்டப்பட்டிருந்தது. அப்போது மாலைநேரம் மணி ஐந்து இருக்கலாம்.

பெண்மணி கதைபுத்தகத்தைப்படிக்கும் ஆர்வத்தால் எதையுமே கவனிக்கவில்லை. அச்சமயம் அவளுக்கெதிரிலே கரையின்மீது ஒரு வாலிபன் அழகிய வெண்ணிறக் குதிரை ஒன்றின்மீது வந்துநின்ருன். அவன் பார்வைக்கு ஒரு யுத்த வீரனைப்போல் விளங்குகிருன். ஆனுல் அவன் யுத்த வீரனுக்குரிய உடையொன்று மணிந்துகொண் டிருக்கவில்லை. அரும்பி வளரும்மீசையும், கருணையே குடிகொண்டது போன்ற கண்களும், பவளம் போன்ற புன்சிரிப்பு வாய்ந்த உதடுகளும், விசாலித்தமார்பும், நீண்ட கைகளும், பரந்தநெற்றியும், அதிகபருமனும் அதிகம் மெலிந்தும் இல்லாத நடுத்தரமானதேகமும், பளபளப்பான தேககாந்தியும் வாய்ந்துள்ள அவ்வாலிபன் புருஷர்களில் அதிக அழகுடையவனுகத் தோன்றினுன். அவனுடைய வயது இரண்டு குறைய இருபத்து ஐந்து என்னலாம்.

ஜலத்தில் அசைந்தசைந்து மிதந்துகொண் டிருக்கும் படகின்மீது இருந்த பெண்மணி திடீரென்று நிமிர்ந்து தன்னெதிரே கரையைநோக்கினுள். அவள் கரையைப் பார்த்ததுதான் தாமதம். வாலிபனுடைய பார்வையும் பெண்மணியினுடைய பார்வையும் ஒன்ருே டொன்று கலந்தன. பெண்மணி தலைகுனிந்தாள். ஆயினும் அவள் மனம் மற்ருெருமுறை அவன் முகத்தைப் பார்க்க விரும்பி

யது. ஆனல் பெண்களுக்கு இயற்கையாயுள்ள வெட்கம் அவள் அவனைப் பார்க்காவண்ணம் செய்தது. "இதென்ன இதற்குமுன் நான் எத்தனையோ வாலிபர்களைக் கண்டிருக்கிறேன், அப்பொழுதெல்லாம் ஏற்படாதவெட்கம் இப்போது ஏற்படக்காரணம் யாது? அன்றியும் மற்ற வாலிபர்களைப் பார்க்கும்போதெல்லாம் அவர்களை என்மனம் சகோதரபாவனையாக எண்ணியதே யன்றி வேறுவிதமாக எண்ணவில்லை. ஆனல் இவரை—இதோ என்முன்நிற்கும் இந்தக் கட்டழகரை—என்மனம் சகோதர முறையில் பாவிக்கவில்லையே! இவர் திடீரென்று என்முன்னே தோன்றியதற்குக் காரணம்யாது?" இவ்வாறு அவள் இன்னும் பல தன்மனத்திற்குள் எண்ணிக்கொண்டிருக்கையில் வழி தெரியாமல் அங்குவந்து இக்கன்னிகையைக் கண்ட வாலிபன் மதுவுண்டவனைப்போல் மயங்கி, "இத்தகைய நாகரீகம்வாய்ந்த அழகுடன்கூடிய இப்பெண்மணியைக் கண்டவுடன் என்மனத்திலென்றுமே ஏற்படாத வித எழுச்சி இப்பொழுது உண்டாகிறது. மற்றப்பெண்களைப் பார்த்தகாலையில் எனக்கு இத்தகைய மனக்கிளர்ச்சி உண்டாகவில்லை. அழகிய ஸ்திரீகளைக்காண்பதே ஒருவித ஆநந்தத்திற்கிடமென்று பலர் கூறக்கேட்டிருக்கின்றேனாயினும் அத்தகைய ஆநந்தம் இப்பெண்மணியைப்பார்த்த இப்பொழுதுதான் உண்டாயிருக்கிறது. இவளோ குனிந்த தலை நிமிராமல் இருக்கின்றாள். பெண்களுக்கு வெட்கமென்பது இயற்கை. அதிலும் உத்தமஸ்திரீகளுக்குச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் நானாவது இவளோடு முதலிற் பேசுகிறேனென்று தன்னுள் எண்ணிக்கொண்டு அவ்வாலிபன் அம்மங்கையர்க் கரசியைநோக்கி, "மோகன்பூர் கிராமத்துக்குப் போகும்வழி எது?" என்றுகேட்டான்.

பெண்மணி பேசவில்லை. பார்த்தான் வாலிபன். "இப்

பெண்மணி செல்வத்திற்சிறந்த சீமானின் புத்திரியைப் போல் காண்கின்ருள். இவள் சாமான்ய யுத்தவீரனுகிய நம்மைவிரும்புவது கூடாமையாகும். ஆகையால் இங்கு நிற்பானேன்'' என்று தன்னுள் எண்ணிக்கொண்டு வந்த வழியேபோகக் குதிரையைத் திருப்பினுன்.

பார்த்தாள் மங்கை. "எனது மனத்தைக் கவர்ந்தமான வன் போய்விடுவான்போலிருக்கின்றதே'' என்று தன்னுள் எண்ணிக்கொண்டு அவனைப்பார்த்து, "எந்த கிராமத்துக் குப்போக வழிகேட்கின்றீர்கள்?'' என்றுகேட்டாள்.

கருணையுடன் அவள்முகத்தைநோக்கி; "மோகன்பூர் கிராமத்துக்குப் போகும்வழியைக் கேட்கின்றேன்'' என்று சாந்தமாக அழகுபட உரைத்தான் வாலிபன்.

இவ்வார்த்தையைக் கேட்டவுடன் பெண்மணி தன் னுடைய அழகியகையினுல் ஒரு பக்கத்தைச் சுட்டிக்காண் பித்து, "இவ்வழியே கூப்பிடுதூரம் போவீர்களானுல் அங்கு ஒரு பாலம் இவ்வாற்றைக் கடப்பதற்காகக் கட்டப்பட் டிருக்கின்றது. அதன்வழியாக ஆற்றைக்கடந்து அப்புறம் செல்வீர்களானுல் அங்கிருந்து ஒரு கொடிவழிவடதிசையை நோக்கிச் செல்கின்றது. அவ்வழியே போவீர்களானுல் நீங் கள் நன்ருக இருட்டிப்போகுமுன் மோகன்பூர் கிராமத் திற்குப் போய்விடலாம்'' என்று அமைதியுடன் மெல்லிய குரலில் நன்ருக விளங்கும்படி பதிலுரைத்தாள்.

"இவ்வளவுதூரம் தாங்கள் கூறியதற்காக நான் நன்றி யறிதல் செலுத்துவதோடும் தாங்கள் படித்துக்கொண் டிருக்கும்தருணத்தில் நான் இடையூருக குறுக்கிட்டதைப் பற்றித் தாங்கள் என்னை மன்னிக்கும்படியாகவும் கேட்டுக் கொள்கிறேன்'' என்று கூறினுன்வாலிபன்.

"என்னைப் பொருட்படுத்தித்தாங்கள் முதன்முதல் கேட்ட கேள்விக்கு நான் உடனே பதில் சொல்லாமைக்காகத் தாங்

கள் என்னை மன்னிக்கவேண்டிய அவசியமாகிறது'' என்று கூறினுள் மதியுள்ள மாதரசி.

இவ்வார்த்தையைக் கேட்டவுடன் "தாங்கள் என் கேள்விகளுக்குப் பதில்சொல்லித்தான் ஆகவேண்டுமென்னும் கட்டாயமிருந்தாலல்லவோ நான் கேட்டவுடன் தாங்கள் பதில் கூருதிருந்தது குற்றமாகும். அன்னியனும், முன்பின் பரிச்சிய மில்லாதவனுமாகிய என்னைத் தாங்கள் இவ்வளவு இலட்சியம் செய்து பதிலளித்ததற்காக நான் என்றும் மறவா நன்றியுடையவனு யிருக்கிறே'' னென்று கூறிவிட்டு வாலிபன் மறுபடியும் அப்பெண்மணியை நோக்கி "பொழுதுபோகும் சமயத்தில் தாங்கள் இங்கு இருக்க வேண்டிய தென்ன ? தங்கள் வீடு எங்குளது? '' என்று கேட்டான்.

"அதோ இருக்கும் அந்த மாந்தோப்புக்குள் தோன்றும் அழகிய வீடுதான் எங்கள் வாசஸ்தலம்'' என்று கூறினுள் பெண்மணி.

"எங்கள் என்ருல் இன்னும் யாரைக் குறிக்கின்றீர்கள்?'' என்றுகேட்டான் வாலிபன்.

"என் தந்தையையும், தாயையும்'' என்று கூறினுள் பெண்ணரசி.

"தங்கள் தந்தையின் பெயரென்ன? தங்கள் பெயரென்ன?'' என்று கேட்டான் வழிப்போக்கனுகிய வாலிபன்.

"வழிபோக்கராகிய ஒருவரிடம் இக்கேள்விக்குப் பதில்சொல்வது கூடாமை யல்லவா'' என்று கூறினுள் ஸ்திரீ.

'வழிப்போக்கர்' என்றவார்த்தையைக் கேட்டவுடன் அவ்வாலிபன் "வடநாட்டுப்பெண்களிற்பலர் அனேகமாய்ப் புருஷர்களுடன் சங்கோசமின்றிப்பேசும் முறைப்படி இப்

பெண்மணி நம்முடன் பேசுகின்றாளே யன்றி அதிகமாக ஒன்றும் நம்மை மதித்துவிடவில்லை என்று தெரிகிறது. நம்மை நாம் கருதியவாறு இவள் கருதியிருப்பா ளாயின் 'வழிப்போக்கராகிய' என்றுகூற நியாயமில்லை. இனியும் நாம் காலத்தைப் போக்கிக்கொண் டிருந்தால் சூரியன் அஸ்தமித்துப் போகும் என்று எண்ணிக்கொண்டே சட்டெனக் குதிரையைத்திருப்பி அப்பெண்மணி சொல்லிய அடையாளப்படி மோகன்பூர் கிராமத்தைநோக்கி விரைவுடன் சென்றான்.

நாம் எழுதுவதற்கு இவ்வளவு வளர்ந்ததாயினும் பெண்மணி பதில்கூறியதும் வாலிபன் போனதும் ஒரு கணப்பொழுதில் நடந்தேறியது. தான் பதில்கூறி வாய்மூடு முன் ஒன்றும் பேசாமல் வாலிபன் போவதைக்கண்ட பெண்மணி மறுபடியும் ஏதோ கூற வாய்திறப்பதற்கு முன் குதிரை வெகுதூரம் போயிற்று. வாலிபனும் மறைந்துவிட்டான். வாலிபனின் பின்னழகு பின்னும் அப்பெண்மணியின் மனத்தைக் கவர்ந்தது. அவள் ஒன்றும் தோன்றாமல் பைத்தியம் பிடித்தவள் போலானாள்.

"என்ன என்புத்தி! என் அறிவு! எண்ணறக்கற்று எழுத்தறவாசித்தாலும் பெண்புத்தி பெரும் பேதமைத்தே" என்னும் வாக்கியம் என்விஷயத்திற் பலித்தது. முன்பின் ஆலோசியாமல் நான் 'வழிப்போக்கர்' என்று கூறிய வார்த்தை அவர் மனத்தைச் சுட்டதுபோலும்! என்ன பேதமை! இருந்தால்தானென்ன! என்னைப்போல் பேசத் தெரியாத பெண்மணிகள் எவரும் இரார்! அவர்விஷயத்தில் என்னுடையமனம் எண்ணியதற் கிணங்க என் வார்த்தைகள் இல்லாமற்போயிற்றே. அவருடைய ஊரையாவது பெயரையாவது அறிந்தேனா? அதுவும் இல்லையே. அவரை நான் மறுமுறை பார்க்கவாவது, அவருடைய

ஞாபகத்தை என்னுடைய மனத்திலிருந்து விலக்கவாவது முடியுமென்று நான் எண்ணவில்லை. அவரைக் கண்டவுடன் எனக்குண்டான சந்தோஷமும், ஒருவித மனக்கிளர்ச்சியும் இதற்கு முன் நான்கண்ட புருஷர்களிடத்திலாவது இனி என் கண்ணிற்படும் புருஷர்களிடத்திலாவது உண்டாயிற் றென்றாவது, உண்டாகுமென்றாவது சொல்வதற்கில்லை. அவர்களையெல்லாம் நான் எனது சகோதரர்களைப்போல் கருதினேன்—இனியும் கருதுவேன். ஆனால் இப்போது என்முன் தோன்றிமறைந்தவரை நான் அப்படி—ஒரு சகோதரராக—பாவிக்க முடியவில்லை. அவரைநான் கண்ட தெப்படி? இத்தனை வருஷகாலமாக கவலையென்பதின்றி இருந்த என்மனம் இன்று எதிர்ப்பாராத ஏக்கத்தை யடைய நேர்ந்துவிட்டது. நான் கதைகளில் படித்திருக்கும் காத லின்வலிமை என்பது இதுதான்போலும். காந்தமும் இரும்பும் ஒன்றை ஒன்று சந்தித்தபோது எப்படி வேறொன்றின் உதவியின்றியே ஒன்றை ஒன்று பற்றிக் கொள்கின்றதோ அப்படியே ஒத்தமனதுடைய ஸ்திரீயும் புருஷனும் சந்தித்த காலத்தில் அவர்கள் ஒருவரை ஒருவர் நேசிக்கத் தொடங்குகின்றனர். அதுபோலவே இதுகாறும் அமைதியுற்றிருந்த என்மனம் இன்று அவ்வாலிபரைக் கண்டவுடன் அவரில் ஈடுபட்டுவிட்டது. அவருடைய மன மும் அவருடையமுகக் குறிப்பால் என்னில் ஈடுபட்டு விட்டதாகத் தோன்றினும் தீபோன்ற என் வாய்ச்சொல் அவரைச்சுட்டமையால் அவர் போய்விட்டனர். அந்தோ! இனி அவர் பிறிதோர் பெண்ணை விரும்பாது என்னை நினைந்துருகிவாடுவர் என்பதற்கையமில்லை. அவருடைய கவலைக்கு இனி நான் என்ன பரிகாரம் தேடமுடியும்? நான் கொண்டகாதல் உண்மையான காதலென்றால், உண்மைக் காதல் தெய்வீக சக்திவாய்ந்த தென்பது உண்மையானால்,

நான் மறுபடியும் அவரைக்காணும்படி இறைவன் செய்யட்டும்'' என்று அப்பெண்மணி கூறிக்கொண்டே தான் இருந்த படகிலிருந்து இறங்கி மாந்தோப்புக்குள்ளிருக்கும் தன் தந்தையின் மாளிகைக்குச் சென்றாள். அவள் பெயர் கமலவதனம் என்று வாசகர்கள் அறிந்துகொள்ளவும்.

---

## அத்தியாயம் 2

### தற்கோலை

முன் அத்தியாயத்தில் கூறிய சம்பவங்கள் நேர்ந்த சிலமாதங்களுக்குப்பிறகு கமலவதனம் தன் வீட்டின் மேன்மாடியில் ஓரிடத்தில் அமர்ந்து ஏதோ அழகிய கதைப் புத்தகமொன்றைக் கையிலேந்தி வாசித்துக்கொண்டிருந்தாள். அவள்முகம் ஏதோ கவலையால் வெளுத்திருந்தது. அத்தருணத்தில் கருத்துப் பருத்ததேகமும் நாகரீகமற்ற தோற்றமும் வாய்ந்த ஒருவன்—சுமார் இருபத்துஐந்து ஆண்டைக்கடந்தவன்—அங்குவந்து கமலவதனம் உட்கார்ந்துகொண்டிருந்த நாற்காலிக்கு எதிரிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு அவளைப்பார்த்து "கையில் இருப்பது என்னபுத்தகம்?'' என்று கேட்டான்.

"ஒரு கற்பனைக்கதை (நாவல்)'' என்று கூறினாள் பெண்மணி.

"கற்பனைக்கதையைப் படிப்பதால் ஸ்திரீகளுக்கு அறிவு விருத்தியாக இடமுண்டல்லவா?'' என்று கேட்டான் வந்தவன்.

"இருக்கலாம்'' என்று சலிப்புடன் பதிலளித்தாள் கமலவதனம்.

கமலவதனம் இவ்வளவுகூறியவுடன் அவன் அவளைப் பார்த்து, "கமலவதனம்! நான் உன் தாயோடுபிறந்த ஜெய

நாத னென்னும் சிறந்த பெயரினை யுடையவனல்லவா? எனது அக்காளாகிய உனது தாய்க்கு நீ என்னை விவாகம் செய்துகொள்ள மறுப்பதனல் எவ்வளவோ வருத்தம் ஏற்பட்டிருக்கிறது. நானும் உன் தந்தையைப்போன்ற ஒரு தனவந்தனல்லவா? என்னோடு பேசுவதென்றாலே உனக்குக் கஷ்டமாயிருக்கிறது. இப்போதாவது கூறு நீ என்னை விவாகஞ் செய்துகொள்ளுகிறேனென்று'' எனக் கூறினன் கமலவதனத்தின் மாமன்.

“நான் உம்மை மணந்துகொள்ள முடியாதென்று எத்தனையோமுறை இடித்துரைத்தும் நீர் வெட்கத்தை விட்டு இப்படிக்கேட்கலாமா? வெட்கம் கெட்ட எவனும் தன்னை விரும்பாதவளை அணுகி என்னைவிவாகம் செய்து கொள்ளுகிறயா? என்று கேட்கமாட்டானே. நீர் வெட்கம் கெட்டவர்களினும் பெரிதும் வெட்கம் கெட்டவரா யிருக்கின்றீரே! என் தந்தையும் தாயும் உம்மை மணந்து கொள்ளும்படி வற்புறுத்தவில்லை. அவர்கள் வற்புறுத்தினலும் உம்மை நான் மணந்துகொள்ளப் போகிறதில்லை. தானே கனியாத பழத்தைத் தடிகொண்டடித்தால் கனியுமா? நீர் தனவந்தரென்றும், உமது பெயர் ஜெயநாதனென்றும் நான் அறிந்திருக்கின்றேன். ஆகையால் இனி நீர் வேறு எவளையாவதுதேடி மணந்துகொள்ளும். மறுபடியும் இன்னொருமுறை நீர் ஆண்பிள்ளையானல் என்னிடத்தில் ‘என்னை நீ மணந்துகொள்ள மாட்டாயா?’ என்று கேட்க மாட்டீர்'' என்று மடமடவென்று ஜெயநாதனைப் பார்த்துக் கூறினள் கமலவதனம்.

இவ்வாறு கமலவதன கூறியவார்த்தையைக் கேட்டவுடன் ஜெயநாதன் கோபங்கொண்ட சிறுத்தையைப்போல் உறுமிக்கொண்டு, “உம். உன்னை நான் எப்படியாவது மணந்துகொண்டு அதன்பிறகு பேசிக்கொள்ளுகிறேன்''

என்று ஆத்திரத்துடனும், ஆவேசத்துடனும் கூறிக் கொண்டே அவ்விடத்தைவிட்டகன்றான்.

அவன் போனபிறகு கமலவதனம் எதைப்பற்றியோ ஆலோசித்தாள். அவள் கண்களில் நீர்த்துளிகள் முத்துக்களைப்போல் சொட்டின. அவளுடைய முகத்தில் சிவப்பேறியது. அவள்கையில் வைத்துக்கொண்டிருந்த புத்தகம் அவளை அறியாமலே தரையில் விழுந்தது. அவள் முகத்தைப்பார்க்கப் பரிதாபமாயிருந்தது. அவள், "என் தந்தையும் தாயும் என்னை ஜெயநாதனையே மணந்துகொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தவில்லை. என் மனத்திற்கிசைந்த ஒருவனைத்தான் மணந்துகொள்ளும்படி கூறுகிறார்கள். என்மனத்திற்கிசைந்த மணவாளர் இப்போது எங்கிருக்கிறா ரென்றும் எனக்குத்தெரியாது. ஆற்றங்கரையில் என் தீச்சொல்லைப்பொறுத்து அவர்திரும்பிப் போகையில் அவரை அறியாமல் தரையில்விழுந்து என் கைக்கெட்டிய அவருடைய கைக்குட்டையில் சுந்தரநாதன் என்று வரையப்பட்டிருந்தது. அதைத்தான் நான் அவரைப் பார்ப்பதுபோல் வைத்துக்கொண் டிருக்கிறேன். சுந்தரநாதரே! தங்கள் பெயருக்குத் தகுந்தாற்போல்தான் தங்களுடைய அங்க அமைப்பும் அமைந்திருக்கின்றது. ஆ! வெண்ணிறப்புரவி யொன்றில் இப்போதும் என் கண்ணெதிரில் நிற்பவர்போல் தோன்றுகிறீர். அந்தோ! படுபாவியாகிய யான் கூறிய ஒரு சொல் உமது உள்ளத்தைச் சுட்டதால் ஓடி மறைந்தீர் போலும்! இனி உம்மை எங்குக் காணப்போகிறேன். காண்பதென்பது கனவுதான். நான் சுந்தரநாதர்பால் சென்ற என் மனத்தைப் பிரிதொருவரிடம் செலுத்துவேனாயின், எனக்கும் தங்கள் தேகத்தைப் பொருள் நிமித்தம் பல ஆடவர்களுக்கு அடிமையாக்கும் விலைமாதர்களுக்கும் என்ன பேதம் இருக்கக்கூடும். ஒன்று

யில்லை. ஆதலால் இனியொருவனை நான்மணப்பதும் தவறு. மணப்பதென்றாலும் என்மனம் சம்மதிக்காது. சுந்தரநாதரை இந்த ஜன்மத்திற் காணமுடியாது. அவர் என்னை விரும்பினால் இத்தனை நாட்களாக அவருக்காக நான் அவ்வாற்றங்கரையில் அன்று அவர்என்னைச் சந்தித்தநேரத்திற்குச் சரியான நேரத்தில் பலதடவை காத்துக்கொண்டிருந்தேனே! அவர் வந்திருக்கமாட்டாரா? என் அசட்டுச் சொல்லால் புண்பட்ட மனத்தினையுடைய அவர் இனி ஒருபோதும் என்னை விரும்பமாட்டார். நான் அவரை அடையமுடியாததினால் வேறு எவரையாவது மணந்துகொள்ளுவதென்பது உத்தம ஸ்திரீகளுக்கு அழகன்று. விவாகம் இன்றி இருந்தால் சுற்றத்தார்வசை கூறுவார்களென்று என் தாய்தந்தையர் என்னைத் துன்புறுத்துகின்றனர். ஜெயநாதனோ தன்னை மணந்துகொள்ளும்படி என்னைக் கஷ்டப்படுத்துகின்றான். இவ்விதக் கஷ்டங்களையெல்லாம் விட்டு நீங்குவதற்கு எனக்கு ஒருவழிதான் தோன்றுகிறது. அதுதான் தற்கொலை. தற்கொலை செய்துகொள்வது சட்டவிரோதமாயினும், அது கூடாவொழுக்கமாயினும் நான் தற்கொலை செய்துகொண்டாலொழிய தப்ப எனக்கு வேறு வழியில்லை. எனது தந்தையாகிய கிருபாநந்தர் ஒரே ஒரு அருமந்த புத்திரியாகிய என்பிரிவைச் சகிப்பாரா? என் தாய்மனம் பொறுப்பாளா? எல்லாவற்றிற்கும் இறைவன் தான் கிருபை பாலிக்கவேண்டும்" என்று தன்னுள் எண்ணிக்கொண்டு அன்று தற்கொலை செய்துகொள்வதற்காக இரவு பொழுதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். அன்று பகல் முழுவதும் அவள் தன் தாயிடத்திலும், தந்தையிடத்திலும் நெருங்கி வசனித்துக்கொண்டிருந்தாள். என்றுமில்லாத குதூகலத்துடன் இன்று தங்கள் புத்திரி இருப்பதைக்கண்ட பெற்றோர்கள் மனக்களிப்படைந்தனர்.

சூரியன் மலைவாயில் மறைந்தான். கரிய இருள் பரவியது. அன்று ஆகாயத்தில் சந்திரன் இல்லை. மணி ஒன்பது. எல்லோரும் உண்டு உறங்கிவிட்டனர். உறங்குபவள்போல் தன்னுடைய அறையில் படுக்கையில் படுத்துக்கொண்டிருந்த கமலவதனம் ஓசைப்படாமல் எழுந்து பூனை நடப்பதுபோல் அடிமேல் அடிவைத்து வீட்டின் பின்புறமாக வெளியிற்சென்று தண்ணீர், சுழலிட்டுக்கொண்டு போகும் கங்காநதிக்கரைக்குச் சென்றாள். நதியில்போகும் ஜலமோ கன்னங்கரேலென்று பார்வைக்குப் பயங்கரமாயிருந்தது. கங்காநதியில் முதலைகள் இருக்குமென்பதை அறியாதவர்கள் ஒருவருமில்லை. இத்தகைய கங்காநதிக்கரையில் வந்து நின்ற கமலவதனம் தன்னைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்தாள். தேம்பித்தேம்பி அழுதாள். "ஆ கடவுளே! என் தலையெழுத்து இப்படியா முடிந்தது? செல்வத்திற் சிறந்த சீமானுக்குப்புத்திரியாகப் பிறந்தும் என்னபலனைக் கண்டேன். கங்காதேவி! என்னை இப்போதே உன்னிடத்தில் கிருபையுடன் ஏற்றுக்கொண்டு மறு ஜன்மத்திலாவது எனது காதலர்—சுந்தரநாதரை—நான் எனது பதியாக அடையச்செய்வாயம்மா" என்று தன்னுள் எண்ணி, சுந்தரநாதனின் உருவையே சிந்தனையாகக்கொண்டு ஜலத்தில் விழுந்தாள். அப்போது அவள் பின்னால் பேரிரைச்சலுடன் பலர் ஓடிவந்தார்களெனத் தெரிந்தது.

---

## அத்தியாயம் 3

### காதலியைப்பார்க்கக் காதல்கொள்ளுதல்

**மோகன்பூர்** கிராமத்தில் அழகிய மாடிவீடு ஒன்று தான் உள்ளது. மற்றவீடுகளெல்லாம் சிறு குடிசைகளும், கூரைவீடுகளுமேயாம். மாடிவீட்டின் சொந்தக்காரரின் பெயர் தயாநந்தர். அவருக்கு ஓர் இலட்சம்ரூபாயிக்கு ஆஸ்தி உண்டு. அவருடைய புத்திரன்தான் சுந்தரநாதன். காந்திபுரிஅரசரின் உபசேனாதிபதியாகிய சுந்தரநாதன் தன்னுடைய தந்தையையும், தாயையும் பார்த்துவிட்டுப் போவதற்காகவே காந்திபுரியினின்றும் வந்தான். அவன் மோகனன்பூரைவிட்டுக் காந்திபுரிக்குச்சென்று பத்துவருட காலமாய்விட்டபடியால் திரும்பிவரும்போது வழிதெரியாமல் அவன் கமலவதனத்தை வழிகேட்க நேர்ந்தது. தன் தந்தையின்வீட்டில் தனித்தோரிடத்திலிருந்த சுந்தரநாதன் என்னென்னவோ எண்ணினான். கமலவதனாவின் அழகிய உருவத்தையே பலமுறையும் நினைத்தான். பெருமூச்செறிந்தான். அவன்தேகமும் கிஞ்சிற்று இளைப்புற்றிருந்தது. ஏதேதோ எண்ணிய சுந்தரநாதன் முடிவில் “நான் செய்தது பெருந்தவறானகாரியம். எனது கண்மணி! ஆ! நான் கண்மணியென்று எப்படிக்கூறுவது! எனது மனத்தைக் கவர்ந்த மாதரசியை நான் இனிக் காண்பேனோ? அவள் என்னை ‘வழிப்போக்கராகிய’ என்றது அன்பினாலன்றி அன்னியனாகப்பாவித்துக் கூறவில்லையென்று இப்போதுதான் தோன்றுகிறது. உண்மையை அறியாமல் ஓடிவந்துவிட்டேன். என்னை அவள் பார்த்தபார்வையிலிருந்து என்னையே அவள் காதலிக்கின்றாளென நன்கு விளங்கியது. அப்படியிருந்தும் அவள் இஷ்டத்திற்கு இடங்கொடாமல் நான் வந்துவிட்டேன். அவள் இந்நேரம் எத்தெதி

யாயினளோ? என்பிரிவால் வருந்துகின்றளோ! என்னவோ இறைவன்தான் அறிவர். மணந்தால் அத்தகைய மங்கையர்க்கரசியை மணத்தல்வேண்டும். இன்றேல் இறக்கவேண்டும். ஆற்றங்கரையோரத்தில் படகில் படித்துக்கொண்டிருந்த அழகிய அவளுடைய தோற்றமும், இன்பம்வாய்ந்த அவளுடைய இனியசொற்களும் என்மனத்தைக் கவர்கின்றன. களங்கமற்ற அவளுடைய பார்வை எவ்வளவுபரிசுத்தமாய் விளங்கியது. நான் அவளைப் பார்க்காதபோது அவள் என்னைப்பார்த்து மகிழ்ந்தாள்: நான் அவளைப் பார்க்கும்போது அவள் என்னைப் பாராமல் தலைகவிழ்ந்தாள். இக்காட்சி என்றும் என்மனத்தை விட்டகலாதென்பது திண்ணம். நான் இங்குவந்து பல மாதங்களாயின. காந்திபுரிக்குப் போகவேண்டியகாலமும் நெருங்கிவிட்டது. நாளையதினமே நான் இங்கிருந்து புறப்பட்டுப் போகும் போது என் தந்தையிடம் பொர்சுகடிதம் ஒன்றுபெற்றுக் கொண்டு அப்பெண்மணியின் தந்தையைப்போய்க் காண்கின்றேன். அவர் என்னை வரவேற்றல்கூடும். அப்போது அங்கு நான் அப்பெண்மணியைக் காணுதலும்கூடும்'' என்று தன்னுள் சுந்தரநாதன் எண்ணிக்கொண்டிருக்கையில் அவ்வீட்டு வேலைக்காரனொருவன் ஏதோ காரியார்த்தமாய் அங்குவந்தான். அவனை நமது சுந்தரநாதன்பார்த்து, ''உனக்கு இக்கிராமத்தைச் சுற்றிலுமுள்ள கிராமங்களில் இருக்கும் தனவந்தர்களுடைய பெயர்கள்யாவும் தெரியுமா?'' என்று கேட்டான்.

அதற்கவன் ''என்ன எஜமானே! அவ்வளவுஎனக்குத் தெரியாதா—தெரியும். எல்லோருடைய பெயர்களையும் நான் அறிவேன்'' என்று கூறினன்.

''அப்படியானல் ரொம்ப சந்தோஷந்தான். இக்கிராமத்தின் அருகேசெல்லும் கங்கா நதியைக்கடந்து சிந்தூருக்

குச் செல்லும்வழியில் கங்காநதியில் ஒருபாலம் கட்டப்பட்டிருக்கிறதே அது உனக்குத் தெரியுமா?'' என்று சுந்தரநாதன் தன்வீட்டுவேலைக்காரனைப் பார்த்துக்கேட்டான்.

“ஆம்; தெரியும்'' என்று பணிவுடன் பதிலளித்தான் வேலையாள்.

“அந்தப்பாலத்தின் மேற்கே கூப்பிடுதூரத்தில் மிகச் செழிப்பாக வளர்ந்திருக்கும் மாந்தோப்பின் இடையில் கட்டப்பட்டிருக்கும் அழகியமாளிகை யாருடையது? அதற்குரியார் எத்தகையார்?'' என்றுகேட்டான் தயாநந்தரின்மகன்.

“அம்மாளிகை கிருபாநந்த ரென்னும் ஒரு இலட்சாதிபதியினுடையது. அவர்மிகவும் நற்குணமும், பரோபகாரமும் வாய்ந்தவரா யிருப்பதோடும் தற்கால நாகரிகத்திற்கும் ஏற்றவர். அவருக்கும் தங்கள் தந்தைக்கும் பெரிதும் நேசமுண்டு'' என்று கூறினன் வேலைக்காரன்.

“சரி; நீ போகலாம்'' என்று கூறினன் புத்தவீரனகிய வாலிபன்.

வேலைக்காரன் போய்விட்டான். அன்றுமாலை நான்கு மணிக்குத் தன் தந்தையிடத்திலும் தாயிடத்திலும் உத்தரவு பெற்றுக்கொண்டு காந்திபுரிக்குப் போகப் பிரயாணமானன் சுந்தரநாதன். அவன் பிரயாணமாகுமுன் தனது தந்தையிடத்தில் கிருபாநந்தரைப் பார்க்கச் சிபார்சு கடிதம் வாங்கிக்கொண்டா னென்பதை வாசகர்களுக்குக் கூறுகிறேன்.

---

## அத்தியாயம் 4

### பதினெண் கள்வர்களைப்பற்றிய விஷயம்

**கமலவதனுவின்** தந்தையாகிய கிருபாநந்தர் தம்முடையவீட்டின் வெளிப்புறத்து ஹாலில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர்முகத்தை இதற்குமுன் அவரைப் பார்க்காதவர்கள் பார்த்தாலும் அவர் ஏதோ பெரிதும் கவலையே குடிகொண்டவரா யிருக்கிறரென்று கூறுவர். அவரிடத்தில் அவருடைய வேலைக்காரன் ஒருவன்வந்து "குதிரைஒன்றில் சவாரிவந்துள்ளவாலிபர் ஒருவர் இதைத் தங்களிடம் கொடுக்கச்சொன்னர்" என்றுகூறிக் கடிதத் துண்டு ஒன்றைக் கொண்டுவந்துகொடுத்தான். அதில் 'சுந்தரநாதன், காந்திபுரி அரசரின் உபசேனுதிபதி' என்று வரையப்பட்டிருந்ததைக்கண்ட கிருபாநந்தரின் முகமும் ஒருவிதமாறுதலை அடைந்தது. "இவர் எதற்காக என்னைத் தேடி வந்திருக்க வேண்டும். இது வரையிலும் இவர் எனக்கு எவ்வகையிலும் பரிச்சியமானவரல்லவே. ஒருகால் அரசனுடைய ஏவலெதையாகிலும் கொண்டுவந்துளனே" என்று சற்றுநேரம் யோசித்துப் பின் வேலைக்காரனைப் பார்த்து 'அவரை உள்ளேவரச்சொல்' என்று கூறினர்.

வேலைக்காரன் வெளியிற்சென்ற ஒரு நிமிஷத்தில் சுந்தரநாதன் கிருபாநந்தரைவந்து கண்டான். கிருபாநந்தர் சுந்தரநாதனுக்கு சுந்தரமான நாற்காலி ஒன்றைக் காண்பித்து அதில் அவனை அமரச்செய்து "தாங்கள் யார்?" என்று கேட்டார்.

அதற்கு சுந்தரம் ஒன்றும் சொல்லாமல் தன்கையிலிருந்த ஒரு கடிதத்தை கிருபாநந்தரிடம் கொடுத்து "இதைப்பிரித்து வாசியுங்கள்" என்று கூறினன்.

அவர் அதைப்பிரித்துவாசிக்க அதில் பின் வருமாறு வரையப்பட்டிருந்தது.

"எனதருமைநண்பர் மோகன்பூர்

கிருபாநந்தருக்கு, 14-4-**

இக்கடிதம் கொண்டுவருபவன் எனதருமைக் குமாரனும், காந்திபுரி அரசரின் உபசேனாதிபதியுமாவன். அவன் தங்களைப்பார்க்க விரும்பியபடியால் இதைச் சிபார்சு கடிதமாகக் கொடுத்து அனுப்பினேன்.

தங்கள் அன்புள்ள நண்பர்

**தயாநந்தர்"**

இவ்விதம் எழுதியிருந்த கடிதத்தை கண்டவுடன் கிருபாநந்தரின் முகம் சிறிது சந்தோஷக் குறியுடன் தோன்றியது. அவர் சுந்தரநாதனைப்பார்த்து, "மனித சமூகத்தில் மிகச்சாதாரணமனிதனாகிய என்னை தாங்கள் விரும்பிப் பார்க்கவந்ததற்காக நான் பெரிதும் நன்றிசெலுத்தக் கடைப்பாடுடையேனா யிருக்கின்றேன்" என்றுகூறினார்.

அதற்கு நமது சுந்தரநாதன், "தாங்கள் தங்களைச் சாமான்யரென்று கூறிக்கொண்டாலும் உலகம் தங்களைப் பரோபகாரி என்றே கூறுகிறது. தங்களுடைய பரோபகார குணத்தைக் கேள்விப்பட்டுதான் அத்தகைய தங்களை அறிமுகம் செய்துக்கொள்ளவேண்டுமெனக் கருதியே காந்திபுரிக்குப்போகப் புறப்பட்ட நான் தங்களைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று இங்குவந்தேன்" என்று கூறினான்.

"இன்று எனது விருந்தினராக இருந்து நாளையதினம் தாங்கள் காந்திபுரிக்குச் செல்லல் வேண்டுமென்பது என்னுடைய கருத்து" என்று கூறினார் கிருபாநந்தர்.

'தங்கள் இஷ்டப்படியே' என்று கூறினான் வாலிபன்.

வாலிபன் இவ்வாறு கூறினவுடன் கிருபாநந்தர் அவ

ளோடு சிற்றுண வருந்தியானபிறகு தன்மனைவியிடம் விருந்துக்கு ஏற்பாடுசெய்யும்படி சொல்லிவிட்டுக் கமலவதன வழக்கமாக உலாவச் செல்லும் கங்கைநதியின் கரைக்குச் சுந்தரநாதனோடு உலாவச் செல்லுகையில் அவர் தமது வேலைக்காரன் ஒருவனைப்பார்த்து சுந்தரநாதன் ஏறிவந்த குதிரையை லாயத்திற்கட்டி அதற்காக வேண்டியவைகளைக் கவனிக்கும்படிக் கூறினர்.

சுந்தரநாதனும் கிருபாநந்தரும் கமலவதன வழக்கமாகக் கங்கைநதிக்கரையில் உலாவும் இடத்திற்குச் சென்று பல விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டே உலாவிக்கொண்டிருக்கையில் சுந்தரநாதன் அங்கிருந்த . படகை— அவன் முதன் முதல் கமலவதனவைக் காணும்போது அவள் உட்கார்ந்து கொண்டிருந்த படகை—அடிக்கடி கவனித்தான். காரணமறியாத கிருபாநந்தர் அவனைப் பார்த்து,"நாங்கள் அடிக்கடி படகைப்பார்ப்பதனல் அதில் சற்றுநேரம் உல்லாசமாக உலாவ எண்ணுகின்றீர்கள் போலும்' என்று கூறினர்.

"இல்லை: இல்லை, நான் அதில் உலாவ எண்ணவில்லை. தாங்களுடைய தானே அப்படகு ?" என்று கேட்டான் சுந்தரநாதன்.

"ஆம், என்னுடையதுதான். ஆனல் எனது குமாரி கமலவதனவின் பொருட்டு அதுகட்டப்பட்டதாகும். இப்போது சில மாதங்களாக அது பிரயோஜனமற்றுக் கிடக்கின்றது" என்று கூறினர் கிருபானந்தர்.

கமலவதனம் என்னும் பெயரைக் கேட்டவுடன் "ஆம்! அதிற்சந்தேகமென்ன! உண்மையில் தங்கள் திருக்குமாரியின் முகம் கமலத்தைப்போன்றே இருக்கிறது' என்று தன்னுள் எண்ணிக்கொண்டு சுந்தரநாதன் கிருபாநந்தரைப்பார்த்து, "ஏன் இந்தப் படகு சில மாதங்களாகப்

பிரயோஜனமற்றுக் கிடக்கின்றது என்று கூறுகிறீர்கள்? தங்கள் மகள் இப்போது இப்படுக்கை விரும்புவதில்லையோ?'' என்னும் கேள்விகளைக் கேட்டான்.

சிறிது வருத்தத்துடன் "விரும்பாமலென்ன! இருந்தால் விரும்புவாள்'' என்று பதிலளித்தார் கமலவதனாவின் தந்தை.

இவ்வார்த்தையைக் கேட்டவுடன் சுந்தரநாதன் திடுக்கிட்டானாயினும் அதை கிருபாநந்தர் அறிந்துகொள்ளா வண்ணம் அவரைப்பார்த்து, "ஏன், எங்கே, இல்லாமலென்ன?'' என்று சற்றுப் பரபரப்புடன் கேட்டான்.

அதற்கு அவர் "சுந்தரநாதரே! அது ஒரு துக்ககரமான சம்பவம். தங்களிடம் கூறியாவதென்ன?'' என்று கூறினார்.

அதற்கு அவன் "தாங்கள் இப்படிக் கூறுவீர்களென்று நான் எண்ணவில்லை. தங்கள் குமாரியின் விஷயத்தில் தங்களுக்கேதேனும் துக்க மேற்பட்டிருப்பின் அதிற்பாதி எனக்கும் பங்குண்டென்பதை அறியுங்கள். உள்ளதை உரைத்தால் என்னாலானதைச் செய்யத் தடை இல்லை'' என்று விரைவாகக் கூறினான்.

"சுந்தர நாதரே! தாங்கள் எனக்கு இப்பொழுதுதான் பழக்கமானவராயினும் என்விஷயத்தில் இவ்வளவு அனுதாபம் தாங்கள் காட்டுவதைப்பற்றி நான் நன்றிசெலுத்தாமலிருக்கமுடியாது. என் குமாரி விஷயமாகத் தாங்கள் எனக்கு ஏதேனும் உதவிசெய்ய முடியுமென்று எனக்கும் தோன்றுகிறபடியால் கூறுகிறேன்'' என்று மறுபடியும் அவனை நோக்கி, "சேனாதிபதியே! சில நாட்களுக்கு முன் எனது குமாரி வழக்கம்போல் இரவு போஜனமான பிறகு தன் படுக்கைக்குச் சென்றாள். பொழுது விடிந்தவுடன் அவளைக்காணவில்லை. நாங்கள் தேடாத இடமெல்

லாம் தேடியும் பிரயோசனமில்லாமல் போயிற்று, ஒரு தினம் எனக்கு ஒருகடிதம் கிடைத்தது. அதில் "கிருபாநந்தரே! உமதுபுத்திரி எங்கள் வசத்திலிருக்கிறாள். நீர் 3-11-** தேதியில் தவறாமல் பதினுயிரம் ரூபாவைக் கங்காநதிக்கரையில் உள்ள தங்கள் சிறு படகில் கொண்டுவந்து வைத்துவிட்டுப் போய்விடும். இரவில் நாங்கள் தங்கள் புத்திரியை அங்கு விட்டுவிட்டுப் பணத்தை எடுத்துக்கொண்டு செல்லுகிறோம். வேறு எங்களைப் பிடிக்கச் சூட்சி ஏதாவது செய்வீர்களேயாயின் தங்கள் மகளைக்கொலைசெய்து விடுவதோடும், அக்கதி தங்களுக்கும் நேரும்படி செய்வோம்" இங்ஙனம் பதினேண் கள்வர்கள்" என்று வரையப்பட்டிருந்தது. இவ்விதம் வரையப்பட்டிருந்ததைப் பார்த்தவுடன் பதினெண் கள்வர்கள்—திருடர்கள்—மிகப் பொல்லாதவர்களென்பதை உலகமறியுமாதலால் நான் பயந்து—எனக்காக வல்ல; எனது தவப் புதல்வியின் பிராணனுக்காக—பயந்து அக்கள்வர் கட்டளைப்படி நடந்தேன். 4—11—** அன்று நான் அதிகாலையில் என்மகளைக்காண ஆவலுடன் கங்கைகரைக்குச் சென்றேன். அதாவது இப்போது நாம் உலாவிக்கொண்டிருக்கும் இந்த இடத்திற்கு வந்தேன். இங்கு நான் என்மகளைக் காண்பதற்குப் பதிலாக என் மைத்துனனுடைய, அதாவது எனது மனைவியின் சகோதரனாகிய ஜெயநாதனுடைய பிரேதத்தைக்கண்டேன். படகில் நான் வைத்தபணத்தைக் காணோம். அதிகமென்? ஜெயநாதனின் பிரேதத்தை அடக்கம்செய்துவிட்டு எனது மனைவியும் நானும் என்னைச்சார்ந்த சிலரும் மாளாத்துயரத்தில் ஆழ்ந்திக் கிடக்கையில் மறுபடியும் இந்த படகிலிருந்து எனக்கு மற்றொருகடிதம் கிடைத்தது. அதில் "கிருபாநந்தரே! நாங்கள் கூறியபடி தாங்கள் நடந்துகொண்டீர்களாயினும் தங்களுடைய உத்திரவைப்பெற்றே பெருமலோ

தங்களுக்குத் தெரிந்தவனோ தெரியாதவனோ எவனோ ஒரு வன் தாங்கள் எங்களுக்காக வைத்தரூபாய்களை எங்களுக்கு முன் அங்குவந்து எடுத்துக்கொண்டு செல்லுந் தருணத்தில் நாங்கள் அந்தப் படகுக்குவந்து அவனைக்கொன்று பணத் தைக் கொண்டுசென்றோம். தங்கள் குமாரியை நாங்கள் எவ்வளவோ அருமையாகக் கவனித்துக்கொண் டிருக்கிறோ மாயினும் தாங்கள் தனவந்தரெனத் தெரிகின்றபடியால் இன்னும் பதினாயிரம் ரூபாவை 25—11—**ல் அன்று பதினாயிரம் ரூபாவை வைத்த இடத்தில் வைப்பீர்களே யாயின் நாங்கள் அதை எடுத்துக்கொண்டு தங்கள் குமா ரியை தங்கள் வீட்டில் ஒருவருமறியாவண்ணம் விட்டுச் செல்வோம். இங்ஙனம், பதினெண்கள்வர்கள்'' என்று வரையப்பட்டிருந்தது. நான் மறுபடியும் அக்கடிதத்திற் கண்டபடி நடந்துகொண்டேன். நான் அப்படி நடந்து கொண்ட மறுதினம் படகில்வைத்த ரூபாவைக் கள்வர் கள் கொண்டுசென்றார்களே யன்றி, எனது புத்திரியை இன்று வரையில் நான் கண்டபாடில்லை. எனது புத்திரி கள்வர்களிடத்தில்தா னிருக்கின்றாளோ அல்லது எக்கதி யாயினளோ அதை இறைவனே அறிவார்'' என்று பெரி தும் வருத்தத்துடன் கூறினார் கிருபாநந்தர். அவருடைய கண்களிலிருந்து அவரையும் அறியாமல் நீர்த்துளிகள் சொட்டின. இத்தருணத்தில் சூரியன் மறைந்து இருள் பரவ தொடங்கியது.

சுந்தரநாதன் அவர் முகத்தைப்பார்த்து மிகவும் பரி தாபமுற்று, "ஆ! தங்கள் திருக்குமாரியைப்பற்றி இவ்வளவு விஷயம் நடந்திருக்கின்றதா'' என்று ஆவேசத்துடன் கூறிப் பின்னும் அவரைப்பார்த்து, "கள்வர்கள் எழுதி யதைப்போல் வேறு எவரேனும் அக்கடிதங்களை ஏன் தங்க ளுக்கு எழுதியிருக்கக் கூடாது?'' என்று கேட்டான்.

“சுந்தரநாதரே! அப்படித் தாங்கள் சந்தேகம் பட வேண்டிய அவசியமே இல்லை. பதினெண் கள்வர்களைத் தவிர என் விஷயத்தில் வேறு எவரும் அப்படி நடந்து கொள்ள மாட்டார்களென்று நான் நிச்சயமாகக் கூறமுடியும்” என்று கூறினார் நற்குணமுடைய கிருபாநந்தர்.

இச்சமயத்தில் பதினெண்கள்வர்களில் பத்துப்பேர் திடீரெனத்தோன்றி கிருபாநந்தரையும், சுந்தரநாதனையும் கைப்பிடியாகப்பிடித்துக் கட்டிக்கொண்டுபோக முயன்றனர். அவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் குரூரமான ஆயுதங்கள் பல இருந்ததாயினும், சுந்தரநாதன் தற்காப்பின் பொருட்டுத் தன் கையிலிருந்த வாளால் அத்தனைக் கள்வர்களுடனும் சண்டைசெய்து அவர்கள் ஒவ்வொருவரும் தேகபலமும் தைரியமும் சண்டைசெய்வதிற் சிறந்தவன்மையும் உடையவர்களாயிருந்தும் அவர்களை ஐந்தே நிமிஷத்தில் கண்டதுண்ட மாக்கிவிட்டான். ஆனால் தெய்வச்செயலாகக் கள்வர்களில் ஒருவன்மாத்திரம் தப்பியோடிவிட்டான். சுந்தரநாதன் பிணமான கள்வர்களின் தேகங்களை ஒன்றையும் விடாமல் கங்கையில் இழுத்து எறிந்துவிட்டுத் தன் வாளைக் கழுவி உறையில் போட்டுக்கொண்டு கிருபாநந்தரை நோக்கினான். அவர் இன்னதுசெய்வது என்று தோன்றாமல் அவனை அப்படியே கட்டித்தழுவிக் கொண்டு, “சுந்தரநாதரே! வீரம்பொருந்திய வாலிபரே! இன்னேரம் தாங்கள் என் அருகில் இல்லாமலிருந்தால் என்னுடைய கதி என்னவாயிருக்குமென்பதை நான் அறியேன். தங்களுக்கு என்னுடைய உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்தாலும் அவை ஈடாகாதே. தங்களைப் புத்திரனாகப் பெற்ற தங்கள் தந்தையாரும் எனதாருயிர்த் தோழருமாகிய தயாநந்தருக்கும், தங்களை உபசேனாதிபதியாகப் பெற்ற காந்திபுரி அரசருக்கும் இனி என்னகுறை இருக்

கப்போகிறது—'' என்று இன்னும் ஏதோ கூற, எண்ணுகையில், அவர் வார்த்தையை இடைமறுத்து, "தாங்கள் என்னைப் புகழ்தல் வேண்டாம்; பதினெண் கள்வர்கள் இருக்குமிடம் எது?'' என்று பரபரப்புடனும், அவசரத்துடனும் கேட்டான் வாலிபன்.

கிருபாநந்தர் கிழக்குத்திசையைத் தமது விரலாற் சுட்டிக்காட்டி "இப்பக்கத்தில் இங்கிருந்து மூன்று மைல் தூரத்தில் கோலைக்காடு என்னும் பெயருடைய ஒரு காடு இருக்கின்றது. அங்குத்தான் அக்கள்வர்கள் வசிப்பதாக ஜனங்கள் கூறிக்கொள்ளுகிறார்கள். நானும் அப்படித்தான் நினைக்கின்றேன்'' என்று கூறினார்.

இவ்வார்த்தையைக் கேட்டதும், "இப்போதே நான் அங்குச்சென்று அக்கள்வர்களிருக்குமிடத்தை எப்படியாவது கண்டுபிடித்துத் தங்கள் குமாரியைக் கொண்டு வருகிறேன். இனி ஒரு நிமிஷமாயினும் தாமதித்தால் தப்பியோடிய திருடனால் தங்கள் குமாரிக்குப் பேராபத்து விளையுமென்பது திண்ணம். இவ்விஷயத்தில் தாங்கள் தடைசொல்லாமலிருந்தால் அதுவே தாங்கள் எனக்குச் செய்யும் பேருபகாரமாகும்'' என்று கூறினான் நிகரற்ற வீரசிகாமணியாகிய வாலிபன்.

வேறு ஒன்றும் சொல்வதற்கு வழியின்றி, "தங்கள் இஷ்டப்படியே செய்யலாம்'' என்று கூறினார் கிருபாநந்தர்.

அவர் இவ்விதம் கூறியவுடன் நமது வீர சிகாமணியாகிய வாலிபன் அவருடன் அவருடைய வீட்டிற்குச் சென்று ஆகாரங்கூட அருந்தாமல் கிருபாநந்தரை வீட்டிலேயே இருக்கும்படி கூறிவிட்டு லாயத்திலிருந்த தன்னுடைய குதிரையைக் கொண்டுவரச்செய்து அதில் ஏறி கிருபாநந்தர் குறிப்பிட்டக் காட்டை நோக்கி வாய்வுவேகமாகக் குதிரையைச் செலுத்தினான்.

# அத்தியாயம் 5

## கங்கையில்வீழ்ந்தவள் காதலனேக்கண்டாள்

இரவு மணி எட்டிருக்கும். கோலேக்காடு முழுவதும் கரிய இருள் பரவியிருந்ததாயினும் மேகங்களின் இடையே ஆகாயத்தில் பிரகாசிக்கும் சந்திரனுல் சிறிதளவு வெளிச்சமுமிருந்தது. என்னவாயினும் தாராளமாய் அக்காட்டில் பிரயாணம்செய்ய முடியாதபடி முட்புதர்களும் மரங்களும் அடர்ந்து வளர்ந்திருந்தன. அந்தக் காட்டிலோரிடத்தில் தீவர்த்திவெளிச்சம் மிகஜோதியுடன் பிரகாசித்தது. அங்குப் பதிணெண்கள்வர் கூட்டத்தாரில் இறந்தவர் போக பாக்கி ஒன்பதுபேர் கூட்டமாகக்கூடி நின்றனர். அவர்கள் மத்தியில் நமது அருமைக் கதாநாயகி கமலவதனம் கண்ணீரை வடித்துக்கொண்டு கொடிய வேங்கைப் புலிகளிடத்தில் சிக்கிய மானைப்போல் அஞ்சிபயந்து நிற்கின்றுள். திருடர்களிலொருவன் மற்ருெருவனைப் பார்த்து, "இங்க பாருங்கடா, நாமட்டும் இன்னம் ரெவநேரம் தாமசம் செய்திருந்தேண்ணு" என்றுகூறி கமலவதனையைச் சுட்டி "இவ அப்பனேட சிப்பாய்யாட்டம் இருந்தவன் என்னக்கூடகொண்ணுபுட்டு இருப்பான். அந்தமுட்டுக்கும் நான் அதிட்டக்காரன் இண்ணதொட்டுதப்பி ஓடியாந்துட்டேன்" என்று கூறினுன்.

இத்திருடன் 'சிப்பாய்யாட்டம்' என்ற வார்த்தையைக் கேட்டவுடன் கமலவதனைக்குச் சுந்தரநாதனின் ஞாபகம்வந்தது. அவள் 'தரித்திரம்பிடித்த எனக்கா அத்தகைய உத்தமபுருஷரின் எண்ணம்' என்று மனதிற்குள் எண்ணி மௌனமுற்ருள். சுந்தரநாதனிடம் அகப்படாமல் ஓடிவந்த திருடன் கூறியவார்த்தையைக் கேட்டவுடன் ஒரு திருடன், "ஏண்டா என்னென்னமோ பேசிக்கினுக்கிரீங்

களே. இவளாலேதானே நம்ம அண்ணுத்தைங்கள்ளாஞ் செத்தாங்க. இவளைத் தூக்குப்போடாமெ என்னென்ன மோ பேசிரீங்களே" என்று கூறினன்.

உடனே மற்றத்திருடர்கள் கமலவதனவைப்பார்த்து, "இந்தாகுட்டி! நீ அழுதாகிழுதா உட்டுபுடுவோமிண்ணு நினைச்சுக்காதே. இந்தக் கவுத்தை ஒங்கழுத்திலே சுருக்குப் போட்டுத்தூக்குப்போடப்போரேம். நீஎன்னசொல்றே?" என்று கேட்டனர்.

இவ்வார்த்தையைக் கேட்டவுடன் கமலவதன கண் கலங்கி கள்வர்களைப்பார்த்து, "பெண்ணென்ருல் பேயுமிரங் கும். நீங்கள் வன்னெஞ்சம்படைத்து ஒருமணி நேரமாக நான் பலவாறுகெஞ்சிக் கேட்டுக்கொண்டும் என்னைக் கொலைசெய்யக் கங்கணம் கட்டிக்கொண் டிருக்கின்றமை யால் நான் உங்கள் இஷ்டத்திற் குட்படாமல் வேறுசெய்வ தென்ன இருக்கிறது" என்றுகூறி, "இறைவனே முழு! முதற் கடவுளே! எல்லாவற்றையும் படைத்த அருட்பெரும் ஜோதியே; நான்கருணையே ஒருருவான கிருபாநந்தருக்குப் புத்திரியாகப் பிறந்தது உண்மையானல், எம்மதத்தினர்க் கும் கடவுள் ஒருவரே என்பதுமெய்யானல் நான் இச் சென்மத்தில் என் மனமறிய ஒருபாவமும் செய்யாதது வாஸ்தவமானல் மறுஜன்மத்திலாவது நான் கட்டழகர் சுந் தரநாதரையே எனதுபதியாக அடையும்படி செய்யவேண் டும்" என்று வாய்விட்டுச்சொல்லி மௌனமுற்ருள்.

அவளுடைய நிலைமை பரிதாபிக்கத் தக்கதாயிருந்தது. அவளுக்கு உதவிபுரிவார் ஒருவரையுங்காணேம். கொடி யவர்களாகிய கள்வர்கள் அவளுடையகழுத்தில் வழவழப் பான ஒரு மெல்லிய நூற்கயிற்றைச் சுருக்கிட்டு அதன்மற் றெருமுனையை அருகிலிருந்த மரக்கிளையில் மாட்டி கமல வதன தொங்கும்படி அக்கயிற்றை இழுக்க ஆரம்பித்தனர்.

"திக்கற்றவர்களுக்குத் தெய்வமேதுணை" என்னும் வாக்கியத்திற்கிணங்க அச்சமயத்தில் அதிவேகமாக வெண்ணிறப்புறவியொன்றில் உருவியவாளுடன் அங்குவந்த ஒரு வாலிபன்கயிற்றைப் பிடித்திழுத்தக் கள்வனின்சிரசை ஒரே விச்சில் இருதுண்டாகும்படி வெட்டி நிலத்தில் வீழ்த்தினன். மற்றக்கள்வர்கள் சுந்தரநாதனைச் சூழ்ந்துகொண்டு அவன் கையும் மெய்யும் சோரும்படி சலிக்காமல் அரைமணிநேரம் சண்டைசெய்தார்க ளாயினும் வீரம்பொருந்திய வாலிபன் அவர்களிலொருவரும் தப்பி ஓடாவண்ணம் எல்லோரையும் சின்னபின்னமாக வெட்டிநிலத்திற் சாய்த்துவிட்டுக் குதிரையை விட்டிறங்கிக் கமலவதனையின் கழுத்தில் மாட்டியிருந்த கயிற்றைக் கழற்றி எறிந்துவிட்டு அவளை உற்று நோக்கினன்.

கமலவதனை தன்னுடைய கண்களை நம்பவில்லை. 'இறைவனே இவ்வுருவாகவந்து என்னைக் காப்பாற்றினரோ' என்று மயங்கினள். அவளுக்கு எல்லாம் கனவுபோல் தோன்றியது.

சுந்தரநாதன் கமலவதனையைப்பார்த்து, "என்னைத் தெரியவில்லையோ? ஆற்றங்கரையில் அன்று சந்தித்த அன்னியனகிய 'வழிப்போக்கன்' நான்தான்" என்றுகூறினன்.

"அன்பரே! என தாருயிரே! அறியாதவள் அன்பினல் அவ்விதம் கூறினேனன்றி வேறன்று. தாங்கள் வேறு விபரீதமாக எண்ணவேண்டாம். உயிர்ப்பிச்சைக் கொடுத்த வீரரே!" என்று கூறிக்கொண்டே கண்களில் நீர்வடிய அப்படியே அவன்மேற்சாய்ந்து தனது மல்லிகைபோன்ற மெல்லிய இருகரங்களாலும் அவனை இருகத்தழுவி பின்னும் கண்ணீர் வடித்தாள்.

"காதலி ! கமலவதனை ! என்கற்பகமே ! நீ இன்னும் வருந்துவது எதற்கு" என்று கூறிக்கொண்டே தன் கையி

லிருந்த குட்டையினால் அவள் கண்ணீரைத் துடைத்து அலங்கோலமாயிருந்த அவள் தலைமயிரைக் கோதி முடித்தான்.

அரைமணி நேரத்திற்குமுன் சுந்தரநாதனை கனவிலாவது காணமுடியுமென்று கருதாத கமலவதனைவுக்குச் சுந்தரநாதனின் சரீரத்தின் பரிசத்தினால் உண்டான இன்பம் எம்மால் எழுதத்தரமன்று. அவ்வின்பத்தை அநுபவித்தவர்களுக்கே தெரியும்.

"அன்பரே! நாம் விரைவில் இங்கிருந்து போய்விட வேண்டும். இன்றுமாலை இங்கிருந்து வெளியிற்சென்ற பத்துக் கள்வர்களில் ஒன்பதுபெயர் இன்னும் திரும்பிவரவில்லை. அவர்கள்யாரோ ஒரு போர்வீரரால் கொல்லப்பட்டார்களென்று தப்பிவந்தகள்வனால் தெரிகிறது. அஃது உண்மையோ என்னவோ" என்று கூறினாள் கிருபாநந்தரின் புத்திரி.

"கண்மணீ! அந்த ஒன்பது கள்வர்களையும் கொன்றவன் நான்தான்" என்றுகூறி நடந்தவிஷயங்களை விவரமாகக் கூறினான் சுந்தரநாதன்.

சுந்தரநாதன் கூறியவார்த்தைகளைக் கேட்டவுடன் கமலவதனை அவனை மறுபடியும் இருகத்தழுவி முத்தமிட்டு "எனதாருயிர் காதல! இன்றுதான் எனது ஜன்மம் ஈடேறியது. இப்போது தாங்கள் செய்த பேருதவிக்கு எங்கள் தலைமுறை தலைமுறையாக நாங்கள் தங்களுக்கு அடிமையாயிருந்து உழைத்தலும் ஈடாகாது. ஆயினும் எனது உடல், பொருள், ஆவி மூன்றும் தங்களுக்குரியது" என்று கூறி, அவனுடைய முகத்தை அண்ணார்ந்து பார்த்தாள்.

சுந்தரநாதன் அவளுடைய வார்த்தைக்கும், பார்வைக்கும் தனது கருணைநிறைந்த பார்வையால் ஆதரவுகாட்டி

அவளைப்பார்த்து, "பெண்மணி! நீஎன்னை அதிகமாகப் புகழ்தல்வேண்டாம். நான் சாதாரணமாக உதார குணமுள்ள எந்தமனிதனும் செய்யத்தக்க உதவிக்குமேல் ஒன்றும் செய்துவிடவில்லை. கட்டழகியாகிய நீ என்னை காதலித்தது எனது அதிர்ஷ்டவசமேயாம்" என்றுகூறி "இன்னும் எவரேனும் இங்குக் கள்வர்கள் இருக்கின்றனரோ?" என்று உசாவினன்.

"கங்கைநதிக்கரையில் தங்களால் கொல்லப்பட்ட ஒன்பதுபேர் ஒழிய மிகுதியான ஒன்பது பெயரும் இப்போது தங்களால் கொல்லப்பட்டமையால் இனி, கள்வர்கள் ஒருவருமிங்கு இல்லை" என்று கூறினள் கமலவதனை.

பிறகு சுந்தரநாதன் அவளைப் பார்த்து, "கண்ணே! சிலமாதங்களுக்குமுன் இரவுபோஜனமுண்டு உன்னுடைய படுக்கைக்குச் சென்ற நீ பொழுதுவிடிந்தவுடன் காணமற் போய்விட்டாயென்று உன் தந்தை கூறினார். உன் படுக்கையிற் படுத்திருந்த நீ இக்கள்வர்கையிற் சிக்கியதெப்படி?" என்றுகேட்டான்.

"ஆருயிரே! சுந்தரநாதரே! சுருங்கக்கூறி விடுகிறேன். தங்களை ஆற்றங்கரையில் முதன்முதல் கண்டபோதே எனக்கு என்றுமில்லா ஆனந்தமுண்டாயது. அப்போதே தங்களை என்பதியாக அடைய என்மனதில் எண்ணினேன். தாங்களோ நான் அன்பினால் 'வழிப்போக்கர்' என்றுகூறிய வார்த்தையினால் மனம் புண்பட்டு என்னை விட்டகன்றீர்கள். அதன் பிறகு நான் தங்கள் நினைவுடன் காலங் கழித்தேன். தங்களிடமிருந்து என் கையில் அகப்பட்ட கைக்குட்டையினால் தங்கள் பெயர் சுந்தரநாதர் என்பதை அறிந்து சாலவும் தங்கள் பெயரையே சிந்தித்துக் கொண் டிருந்தேன். எனது தந்தையும் தாயும் என்னை என் மனதிற் கிசைந்த எவரையாவது ஒருவரை சீக்

கிரத்தில் மணந்துகொள்ளும்படி தூண்டினர். அதோடு எனது தாயின் சகோதரனாகிய ஜெயநாதன் தன்னை மணந்துகொள்ளும்படி என்னை வேண்டினான். தங்களிடம் என் மனம் ஈடுபட்டு விட்டபடியால் என்மனம் எங்கும் செல்லவில்லை. தங்கள் ஊர் முதலியவற்றை அறியாதவளாதலால் தங்களை இச்சென்மத்தில் அடையமுடியுமென்று நான்எண்ணவில்லை. தங்களைக் காணமுடியாமையாலும்,என் தாய் தந்தையர் இஷ்டப்படியாவது ஜெகநாதனின் இஷ்டப்படியாவது மணம் செய்துக்கொள்ளக் கூடாமையாலும் தற்கொலைசெய்துகொள்வதென்று தீர்மானித்து விட்டேன். எண்ணியபடியே ஒரு தினம் இரவு போஜனமான பிறகு படுக்கைக்குச் செல்பவள்போல் பசாங்குசெய்து எல்லோரும் உறங்கியவுடன் மெல்ல எழுந்து கங்கைக்கரையை அடைந்து தங்களையே மறுஜன்மத்திலாவது பதியாக அடையவெண்ணிக் கடவுளை வணங்கிக் கங்கையில் வீழ்ந்தேன். நான் விழுந்ததுதான் தாமதம். எங்கிருந்தோ என்னைப் பார்த்துவிட்ட இப்பதினெண் கள்வர்களும் ஓடிவந்து என்னைக் கங்கையினின்றும் கரைசேர்த்துத் தங்கள் வாசஸ்தலமாகிய இங்குள்ள அவர்களுடைய சுரங்கத்திற் கொண்டுவந்து சேர்த்துவிட்டனர். அதுமுதல் இங்குநான் இப்போது தங்களைக்காணும்வரையில் அவர்களிடம் அவஸ்தைப்பட்டுக்கொண் டிருந்தேன். இவ்வளவுதான் எனது வரலாறு'' என்று சுந்தரநாதனைப்பார்த்துக் கூறினாள் கமலவதனம்.

காதலி ! நீ தற்கொலை செய்துகொள்ள எண்ணியது கூடாமையாகும். அஃது உன்னுடைய ஆழ்ந்த அறிவுக்கு ஏற்றதன்று. எப்பொழுதும் இப்படித்தான் அநேக ஆண்களும் பெண்களும் அற்பதுன்பத்தைச் சகிக்கமாட்டாமல் தற்கொலை செய்துகொண்டு பின்னால் தங்களுக்கு கிடைக்க

விருக்கும் பெருஞ்சுகத்தை இழந்துவிடுகின்றனர். நான் மோகன்பூரில் பெருந்தனவந்தராகிய தயாநந்தரின் புத்திரனும் காந்திபுரி அரசரின் உபசேனாதிபதியுமாவேன் என்று இப்போது நான் உனக்குக் கூறுகிறேன். நிற்க, அந்தோ! தற்கொலை செய்துகொள்ளுவது பெரும் பேதைமையே யாகும். நீ கங்கையில் விழாதபடி உனது உயிரைக் காப்பாற்றியவர்கள் பதினெண் கள்வர்களென்று நான் முன்னமே அறிந்திருப்பேனாயின் அவர்களைக் கைப்பிடியாகப் பிடிக்கத்தக்க உபாயந் தேடியிருப்பேனேயன்றி கொன்றிருக்கமாட்டேன்'' என்று கூறினான் தயாநந்தரின் மகன் சுந்தரநாதன்.

தன் காதலன் ஒரு பெரிய அரசரின் சேனாதிபதியும் தனவந்தரின் புத்திரனுமாவன் என்பதை அறிந்த கமலவதனா அவனைப் பார்த்து, "காதலரே! தாங்கள் கள்வர்கள் விஷயத்திற் பரிதாபப் படவேண்டாம். அவர்கள் என் நகைகளையும் என்னால் என் தந்தையிடம் பெரும் பொருள் பெறலாமென்பதையும் கருதியே என்னை எனது பிராணாபாயத்தினின்றும் மீட்டனரேயன்றி காருண்யத்தினாலன்று. அப்படியானால் சற்றுமுன் அவர்கள் என்னைக் கொலை செய்ய முற்படுவார்களோ? நான் தற்கொலை செய்து கொள்ள முற்பட்டது மட்டிலும் முற்றும் பிசகென்று ஒப்புக்கொள்ளுகிறேன். அப்படி நான் மதியின்றிச்செய்ய முன்வந்த காரியத்திற்காகவே கடவுள் தண்டனையாக நான் கள்வர்களிடத்தில் சிலமாதம் கஷ்டப்பட்டேன். நான் தற்கொலை செய்துகொள்ள முயன்றதும் ஜெயநாதனின் கஷ்டத்தினாலேயாம்'' என்று உள்ள விஷயத்தை உண்மையாகக் கூறினாள்.

கமலவதனா இவ்வாறு கூறியவுடன் ஜயநாதன் இறந்த விஷயத்தைப்பற்றியும் அவன் இறந்ததற்குக் காரணத்தைப்

பற்றியும் கமலவதனவிடம் கூறினன் சுந்தரநாதன்.

அவன் இறந்ததைக் கேட்டகமலவதன சாதாரண முறையில் சிறிது வருத்தமுற்றுளாயினும் உடனே அதை மறந்து சுந்தரநாதனை அழைத்துக்கொண்டு கள்வர்களின் வாசஸ்தலமாகிய சுரங்கத்திற்குட்சென்று அங்குப் பல இடங்களையும் அவனுக்குக் காண்பித்தாள். அச்சுரங்கம் தரைக்குள் ஐந்துகஜ ஆழத்திற் கட்டப்பட்டிருந்தது. சுரங்க வாயில் பழக்கப்பட்டவர்களுக்கே தெரியுமேயன்றி மற்ற வர்கள் சுரங்கமிருக்குமிடத்தைச் சாதாரண தரையென்றே எண்ணுவார்கள். சுரங்கத்திற்குட்சென்ற இருவரும் அங்கு நன்றாகச் சுற்றிப் பார்த்தபின்பு அங்கோரிடத்தில் பூட்டப் படாமலிருந்த இரும்புப்பெட்டியைக்கண்டு அதைத்திறந்து பார்த்தனர். அதில் சுமார் ஆயிரம் பவுன் நிறம்பிய ஒரு பையும் கமலவதனவின் வைரநகைகள் நிறம்பிய ஒரு பையுமே இருந்தன. அவைகளை இவர்கள் எடுத்துக்கொண்டு வேறு முக்கிய பொருள்கள் ஒன்றையும் அங்குக் காணமை யால் சுரங்கத்திற்கு வெளியில்வந்து அங்கிருந்த குதிரையில் இருவரும் ஏறி கிருபாநந்தரின் வீட்டை நோக்கிச் சென்றனர்.

* * * *

* * * *

தம்மிடத்திலிருந்து கொலைகாட்டுக்குப்போன சுந்தர நாதனைப்பற்றிய எல்லாவிஷயங்களையும் கிருபாநந்தர் தம் மனைவிக்குக் கூறினர்.

நற்குணம்வாய்ந்த அவர்மனைவி அத்தகைய வாலிபன் ஜயத்துடன் திரும்பிவரும்படி கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். அன்றிரவு முழுவதும் கிருபாநந்தரும் அவர் மனைவியும் நித்திரைசெய்யாமல் விழித்துக்கொண் டிருந்தனர். வீட்டைச்சுற்றிலும் ஜாக்கிரதையாகக் காவ

லாளிகள் காவல் காத்துக்கொண் டிருக்கின்றனர்: இரவு மணி இரண்டு என்னலாம்,

கிருபாநந்தர் வீட்டின் வெளிப்புறத்திலிருந்த காவலாளியின் கண்ணுக்குக் கொஞ்சதூரத்தில் யாரோ குதிரையின்மீது வருவதுபோல் தோன்றியது. அந்தக் குதிரையின்மீது வந்தவர்கள் பின்னும் ஒரு நிமிஷத்திற்குள் அங்கு வந்து குதிரையைவிட் டிறங்கினர்கள். அப்படி இறங்கியவர்கள் அன்றுமாலே அவ்வீட்டுக்குவந்த வாலிபனும், கமலவதனவுமேயாம் என்று அறிந்தகாவலாளி காரணமறியாதவனதலால் பிரம்மித்து நின்றான். அவனிடம் சுந்தரநாதன் குதிரையை ஒப்புவித்து லாயத்திற் கொண்டு போய்க்கட்டி அதற்கு ஆகவேண்டியவைகளைக்கருத்துடன் கவனிக்கும்படி கூறிவிட்டு வீட்டிற்குட்சென்றான். அங்கு விளக்குகள் பட்டப்பகற் பொழுதேபோல் பிரகாசித்துக் கொண்டிருந்தன. கமலவதன தன்வாயால் 'அம்மா, அம்மா' என்று அழைத்தாள். மகளின் குரலொலியைக் கேட்ட மாதாபிதாக்கள் தாங்களிருந்த இடத்திலிருந்து எழுந்தோடிவந்து தங்கள் எதிரில்நிற்கும் கமலவதனவை கட்டிக்கொண்டு 'கோ' வென்று அழுதனராயினும், தங்கள் மகள் மீட்கப்பெற்ற சந்தோஷத்தினல் களிப்படைந்தனர். சுந்தரநாதனை கிருபாநந்தரும் அவர்மனைவியும் வாயார வாழ்த்தி மனமாரப் புகழ்ந்தனர். அப்பொழுதே ஒரு வேலைக்காரனிடம் எல்லா விஷயங்களையும்கூறி அவ்விஷயங்களை எல்லாம் மோகன்பூர் கிராமத்துக்குச் சென்று தயாநந்தரிடமும் அவர் மனைவியிடமும்கூறி அவர்களைத் தமது வீட்டுக்கழைத்துக்கொண்டு வரும்படி அவனை அனுப்பினார் கிருபாநந்தர். வேலைக்காரனும் அப்பொழுதே புறப்பட்டு மோகன்பூருக்குச் சென்றான்.

---

# அத்தியாயம் 6

## சுந்தரநாதனின் மரணம்

**முதல்தினம்** பட்டகஷ்டத்தினால் பொழுது விடிந்து மணி எட்டாகியும் சுந்தரநாதன் படுக்கைவிட்டெழுந்திருக்கவில்லை. மணி எட்டேகால் இருக்கும். தன்னையாரோ மெல்ல தட்டி எழுப்பியதாகத் திடுக்கிட்டெழுந்தான் சுந்தரநாதன். தன்னெதிரில் நிற்கும் கமலவதனையைக் கண்டு பிரமித்தான். அவள்—கமலவதனை—விடியற் காலையிலேயே எழுந்திருந்து ஸ்நானம்செய்து தன்னை என்றுமில்லாத மாதிரி அன்று அழகுபட ஆடைஅணிகளால் அலங்கரித்துக்கொண்டு சுந்தரநாதன் முன்தோன்றினாள். அவள் பார்வைக்கு நிகரற்றஅழகுடன் விளங்கினாள். அவளைப் பார்த்துச் சுந்தரநாதன், "உன் தாய் தந்தையர் இருக்கும்வீட்டில் தனித்து என்னிடத்திற்கு நீவரலாமா?" என்று கேட்டான்.

அவன் வார்த்தையின் கருத்தை அறிந்து கொண்ட கமலவதனை அவனைப் பார்த்து, "நாமிருவரும் ஒரு குதிரையில் சவாரிவந்ததை என் தாய்தந்தையர் அறிந்திருக்கின்றனர்" என்று விநயத்துடன் கூறினாள்.

"அதற்கென்ன! சமயா சமயங்களில் வித்தியாசம் பாராட்ட முடியாதென்னும் பாவனையில் அவர்கள் நாமிருவரும் ஒரேகுதிரையின்மீது வந்ததைப்பற்றி எண்ணிக்கொண் டிருக்கலாம். மற்றவிஷயங்கள் அவர்களுக்கு என்னதெரியும்" என்று கூறினான் காந்திபுரி அரசனின் சேனாதிபதி.

"எனதாருயிர் நேசரே! இன்னும் நான் தாமதிப்பதேதற்கு? இதோதங்கள் தந்தையும் தாயும் இன்றுகாலையில் இங்குவந்து என் தந்தை தாயாரோடு பேசிக்கொண்டிருக்கின்றனர். என் தாயினிடம் இன்றிரவே நான் நம்மிரு

வருக்குள்ளும் முதன்முதல் கங்கைக்கரையில் ஏற்பட்ட சந்திப்புமுதல் நடந்துள்ள எல்லாவிஷயங்களையும் சொன்னேன். அவ்விஷயத்தை எனது தந்தையும் அறிந்தார். எனது தந்தை தாயரிருவர்க்கும் தாங்கள் என்னை மணந்து கொள்ளும் விஷயத்தில் யாதொரு ஆக்ஷேபணையுமில்லை. இதைப் பற்றி—நமது விவாகத்தைப் பற்றி—இப்போது தான் சற்றுமுன் எனது தந்தையும் தாயும் தங்களுடைய தந்தை தாயரிடத்தில் கூறினர். அவர்கள் உண்மையில் மனதார தாங்கள் என்னை மணந்துக்கொள்ள முழுமனதுடன் சம்மதித்திருக்கின்றனர். அவர்கள் இப்போது தங்களைப் பார்க்க விரும்புகின்றபடியால் குளிக்கும் அறையில்தயாராயிருக்கும் வெந்நீரில் குளித்துவிட்டுப் பிறகு அவர்களைப் போய்ப்பாருங்கள்'' என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு குளிக்கும் அறைக்குட்சென்று தன்கையால் வெந்நீரைப் பதம்பட ஆற்றி இன்னும் ஆகவேண்டியவைகளைத் தயார்செய்துவிட்டுத் தான் தன்னறைக்குட்சென்று சுந்தரநாதன் குளித்தவுடன் அணிந்துகொள்வதற்காக வேண்டிய ஆடைகளை எடுத்துவைத்துக் கொண்டிருந்தாள். சுந்தரநாதன் குளித்துவிட்டுக் கமலவதனத்தின் அறைக்குட் சென்றான். அங்கு அவளால் கொடுக்கப்பட்ட தன் உடைகளை அணிந்துகொண்டு எல்லாம்வல்ல இறைவனை நமஸ்கரித்துவிட்டுத் தனது தாய்தந்தையரைக்காண அவர்கள் இருக்குமிடத்திற்குச் சென்றான். மைந்தனைக்கண்ட மாதாபிதாக்கள் அவனை வாழ்த்தி மகிழ்ந்தனர். கிருபாநந்தரும் அவர் மனைவியும், தயாநந்தரையும் அவர் மனைவியையும் பார்த்து, "தங்கள் குமாரர் சென்ற சுமார் 15-மணி நேரத்திற்குள் எங்கள் குடும்பத்திற்குச் செய்த பேருதவிக்காக நாங்கள் என்னகைம்மாறுசெய்தாலும் ஈடாகாது'' என்று கூறி மறுபடியும் அவர்களைநோக்கி, "எங்கள் புத்திரியை

தங்கள் திருக்குமாரர் மணந்துகொள்வதற் கிசைந்த தங்களுக்கு நாங்கள் என்றும் நன்றியறிதலுள்ளவர்களா யிருக்கிறேம்'' என்று கூறினர்கள்.

இச்சமயத்தில் கமலவதனம் அங்கு வந்தாள். கிருபாநந்தரும், அவர் மனைவியும் கூறியவார்த்தையைக் கேட்டவுடன் தயாநந்தரும் அவர் மனைவியும் அவர்களைப்பார்த்து, "எங்களுடைய குமாரன் சாதாரணமாக மனிதர்கள் செய்யத்தக்க உதவியையே தங்கள் குடும்பத்துக்குச் செய்திருக்கின்றனேயன்றி வேறு அதிகமாக ஒன்றும்செய்து விடவில்லை. தங்கள் குமாரியை நாங்கள் மருமகளாக அடைய நேர்ந்ததே எங்களுடைய அதிர்ஷ்டமாகும்'' என்று கூறினர்.

இத்தருணத்தில் ஓர் வேலைக்காரன்வந்து யாரோ ஒரு குதிரைவீரன் மாளிகைக்கு வெளியில் குதிரையின்மீது வந்து நின்றுகொண்டு சுந்தரநாதனைக் காண விரும்புவதாகக் கூறினன். இவ்வார்த்தையைக் கேட்டவுடன் சுந்தரநாதன், 'அவனை உள்ளேவரும்படிச்சொல்' என்று கட்டளையிட்டு அனுப்பினன். ஸ்திரீகளில் இருவர்எழுந்து வீட்டின் மேன்மாடிக்குச் சென்றனர். கமலவதனம் தன்னுடைய அறைக்குட் சென்றாள். வேலைக்காரன் வெளியிற் சென்றதும் குதிரைவீரன் உள்ளேவந்து சுந்தரநாதனுக்கு தாழ்மையுடன் மரியாதைசெய்து அவனிடம் ஒரு கடிதத்தைக்கொடுத்துவிட்டு மரியாதையுடன் அடங்கி ஒடுங்கி நின்றான்.

சுந்தரநாதன் கடிதத்தைப் பிரித்து வாசிக்கலானன். அதில் "உபசேனதிபதியாகிய சுந்தரநாதர் அறியவேண்டியதென்னவென்னில், தாங்கள் மறுபடியும் தங்கள் வேலையைவந்து ஒப்புக்கொள்ளவேண்டிய காலம் இன்னும் இருக்கின்றதாயினும் தாங்கள் உடனே புறப்பட்டு காந்திபுரிக்குவந்து தங்கள் வேலையை ஒப்புக்கொள்ளவேண்டும். ஏனெ

னில் காரணமின்றி இந்துப்பூர் அரசன் நம்மீது சண்டைக்கு வந்திருக்கின்றான். நாளையதினம் நாம் யுத்தத்திற்குத் தயாராயிருக்கவேண்டும். இங்ஙனம் காந்திபுரி அரசர் ஜெயபாலரின் உத்தரவுபடி யுத்தமந்திரி ஜயசிம்ஹர்'' என்று எழுதி தேதியும், அரசனுடைய அடையாளக்குறியும் இடப்பட்டிருந்தது. சுந்தரநாதனின் முகத்தில் கோபத்தீ பறந்தது. 'இந்துப்பூர் அரசனை ஒரே நாளில் தொலைத்துவிடுகிறேன்' என்று கர்ஜித்தான். விஷயத்தை எல்லோரும் அறிந்து சுந்தரநாதன் யுத்தத்திற்குச் செல்வதைப்பற்றி வருந்தினர். சுந்தரநாதன் அவர்கட்கு தேறுதல் கூறிவிட்டுக் கமலவதனாவின் அறைக்குட் சென்றான். அங்கு அவள் தன் காதலன் யுத்தத்திற்குச் செல்வதைக் குறித்து யுத்தத்திற்குச் சென்றால் என்னவாகுமோ எனப் பயந்து கடவுளை நோக்கிக் கண்ணீருதிர்த்துக் கொண்டிருந்தாள். சுந்தரநாதனைக் கண்டவுடன் அவள் திடீரென எழுந்து அவனைக் கட்டியணைத்து முத்தமிட்டுப் பரிதாபத்துடன் அவன் முகத்தைப் பார்த்து, "அன்பரே! தாங்கள் போர் முகத்துக்குப் போகத்தான் வேண்டுமோ?" என்று கேட்டாள்.

"அரசனுக்கு நேரிட்ட இடையூறு எனக்கேற்பட்டதல்லவா? இப்பொழுதே போகப்போகிறேன். கண்மணீ! நான் சுகமாகத் திரும்பிவராமல் இறந்துபோவேனாயின் நீ தற்கொலை செய்துகொள்ளாதிருத்தல் வேண்டும். அது ஒன்றே நீ எனக்காக செய்யவேண்டியது" என்றுகூறி அவள் முகத்தில் அன்புடன் முத்தமிட்டு வேறு ஒன்றும் கூறாமல் வெளியிற்சென்று எல்லோரிடத்திலும் உத்தரவு பெற்றுக்கொண்டு தன் தாய்தந்தையரைத்தான் திரும்பி வருமளவும் கிருபாநந்தர் வீட்டிலேயே இருக்கும்படி கூறிவிட்டு அரசனிடமிருந்துவந்த குதிரைவீரனுடன் காலே

ஆகாரம்புசித்த பிறகு தன்னுடைய குதிரையிலேறி குதிரை வீரனோடு காந்திபுரிக்குச்சென்றான். கமலவதனாவின் துயரத்திற் களவில்லை.

அவன் சென்ற சில தினங்களுக்குப் பிறகு ஒருநாள் மாலை காந்திபுரி அரசனின் போர்வீரன் ஒருவன் தயாநந்தரிடம் கடிதம் ஒன்றைக்கொண்டுவந்துக் கொடுத்து விட்டுச் சென்றான். அதில் "தயாநந்தரே! மூன்றாம்நாள்யுத்தத்தில் அதாவது இன்றுகாலை தங்கள் குமாரர் உபசேனாதியாகிய சுந்தரநாதர் யுத்தகளத்தில் பலமான காயம்பட்டு உயிரிழந்தனர். இங்ஙனம் யுத்தமந்திரி ஜயசிம்ஹர்', என்று எழுதப்பட்டு தேதியும் அரசனுடைய அடையாளக் குறியும் இடப்பட்டிருந்தன. இவ்விஷயத்தை எல்லோரும் அறிந்தனர். அவரவர்கள்கொண்ட துக்கத்துக்கும் துயரத்துக்கும் அளவில்லை. கமலவதனத்தின் துயரத்தை எம்மால் எழுதத்தரமன்று.

---

## அத்தியாயம் 7

### மாண்டவன் மீண்டான்

**மூன்** அத்தியாயத்தில் கூறிய கடிதம்வந்த அன்று இரவு எல்லோரும் தூக்கம் பிடியாமல் துக்கப்பட்டுக் கொண்டிருக்கையில் காந்திபுரி அரசரிடமிருந்து ஒரு போர் வீரன் வந்து தயாநந்தரைக் கூப்பிட்டு அவரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றான். அதில் "தயாநந்தரே! தங்கள் குமாரர் இறந்துபோகவில்லை. சண்டையில் இறந்துபோகும் முக்கியஸ்தர்களின் பெயரைக் குறித்தனுப்புகிறவர் உபசேனாதிபதி சுந்தரசிம்ஹர் இறந்தாரென்பதற்குப் பதிலாக உபசேனாதிபதி சுந்தரநாதர் இறந்தாரென தவறுதலாகத் தெரிவித்துவிட்டார். இப்போது யுத்தகளத்திலிருந்து வந்தசெய்தியால் சுந்தரநாதர் சுகமா

யிருக்கிறாரென்றும், அவராலேயே இன்னும் இரண்டு தினங்களுக்குள் யுத்தம் நமக்கனுகூலமாக முடியுமென்றும் தெரிகிறது. இங்ஙனம்: ஜயசிம்ஹர்" என்று எழுதப்பட்டிருந்ததோடும், தேதியும் அரசனின் அடையாளக் குறியும் இடப்பட்டிருந்தன. இவ்விஷயத்தை எல்லோரும் அறிந்தனர். ஆநந்தக்கடலிலாழ்ந்தனர். கமலவதனம் களிப்புற்று பொழுதுவிடிந்தவுடன் அவ்வூரிலுள்ள கோயில்களுக்கு அபிஷேகம் செய்வித்துப் பிழைக்க வகையற்ற பதினாயிரம் ஏழைகட்கு அன்னம் அளித்தாள்.

பல தினங்களுக்குப்பிறகு தயானந்தர், அவர் மனைவி, கிருபானந்தர், அவர் மனைவி ஆகிய இந்நால்வரும் கமலவதனையும் வீட்டின் முன்புறத்து ஹாலில் பேசிக்கொண்டிருக்கையில் சுந்தரநாதன் அவனுடைய வெண்ணிறக் குதிரையில் வந்திறங்கி தன் தாய்தந்தையருக்கும், கமலவதனையின் தாய் தந்தையருக்கும் மரியாதைசெலுத்தினான். அவர்கள் அவனைக்கண்களில்ஆநந்தபாஷ்பம்பெருக வரவேற்று உபசரித்தனர். தன் சட்டைபைக்குள் இருந்து ஒரு செம்புப்பட்டயமொன்றை எடுத்துத் தனது தந்தையிடம்கொடுத்தான் சுந்தரநாதன். அதில் சிலவரிகள் எழுதப்பட்டிருந்தன. அதை எல்லோரும்அறியும்படி தயாநந்தர் வாசித்தார். அதில்பின்வருமாறு வரையப்பட்டிருந்தது. " * * * வருஷம் சித்திரை மாதம் மூன்றாம் தேதியில் எனக்கும், இந்துப்பூர் அரசனுக்கும் நடந்தசண்டைப்போரில் எனக்கு ஏற்பட்ட ஜயமானது எனது உபசேனாதிபதியாகிய சுந்தரநாதராலேயேயாம். ஆகையால் அவருக்கு எனது ஆளுகைக் குட்பட்டவைகளும், அவருடைய ஜனனபூமியாகிய மோகன்பூரைச் சுற்றியிருப்பவையுமான ராய்,சிகந்தா,வேண்டலா,நகரி,நந்தலூர், பிருந்தை, சிம்ஹார் நகரம், அந்திப்பூர் ஆகியகிராமங்களை அவருக்கு வரிசெலுத்தும் நிபந்தனையின்றி நான் என்

முழுமன சம்மதத்துடன் கொடுத்துவிட்டேன். இனி எல்லோரும் அவரை மோகன்பூர் ஜமீன்தார் என்றே அழைத்தல்வேண்டும். எனது தலைமை சேனாதிபதியுத்தத்தில் மாண்டமையினால் இனி சுந்தரநாதனையே தலைமை சேனாதிபதியாகவும் ஏற்றுக்கொண்டேன். ஒப்பம்: ஜயபாலர், காந்திபுரியின் அரசர்'' என்று வரையப்பட் டிருந்ததோடும், அரசனின் அதிகார முத்திரைக்குறியும் இடப்பட்டிருந்தது. இவ்விதம் வரையப்பட்டிருந்ததை அறிந்த எல்லோரும் ஆனந்தக்கடலில் விழுந்து கரையேற வழிதெரியாம லிருந்தார்கள்.

*  *  *  *

*  *  *  *

சில தினங்களுக்குப்பிறகு சுந்தரநாதனுக்கும், கமலவதனத்திற்கும் இறைவனருளால் விவாகம் நிறைவேறியது. விவாகத்துக்கு காந்திபுரி அரசனே முன்னின்று எல்லாகாரியத்தையும் நடத்தினன். மற்றும் அவன் விவாகத்திற்கு வந்திருந்த போர்வீரர்களின் சிறப்பையும், தனவந்தர்களின் பெருமையையுட், தனவந்தர்களின் காட்சியையும் இத்தகைய தென்பதை நேரிற்பார்த்தவர்களே அறிவர். சுருங்கக்கூறுமிடத்து அவனுடைய விவாகம் சிறப்பாய் நடந்தேறியதுபோல் வேறு எவருடைய விவாகமும் அத்தனைச் சிறப்பாக நடந்ததில்லை என்றுமட்டும் கூறுவேன். கமலவதனமும் சுந்தரநாதனும் வெகுகாலம்வரையில் புத்திரமித்திரர்களுடனும், அவரவர்கள் தாய் தந்தையர்களுடனும் வாழ்ந்து கொண்டிருந்ததாக நமக்குக் கேள்வி.

முற்றிற்று.

# இராஜகுமாரி

வெகுகாலத்திற்குமுன் சிந்துதேசத்தை அகமதுஷா என்னும் பெயரினையுடைய முகம்மதிய மன்னனொருவன் அரசாண்டுகொண்டிருந்தான். அவன் நடுத்தரமான வயதும் கம்பீரமான தோற்றமும் உடையவன். அவன் தன் இராஜ்ஜியத்திற் குட்பட்டிருந்த விசாலமான நீர்ப் பரப்பினையுடைய ஏரியொன்றில் மரத்தினால் சிறு தீவு ஒன்று ஏற்படுத்தி அதில் அழகிய மாளிகை ஒன்றை அமைத்து அம் மாளிகையில் கோடைக்காலந்தோறும் தங்கி உல்லாசமாகக் காலங்கழிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தான். அம்மன்னன் போரிற் புறங்கொடாதவன். சிற்பம், சித்திரம், கவி முதலிய கலைகளை ஆதரிப்பதில் சிறந்து விளங்கினான். ஆயினுமென்ன ?

வழக்கம்போல் ஒருவருடம் கோடைக் காலத்தில் அவன் ஏரியின்நடுவில் தான் அமைத்த உல்லாசமாளிகையில் தன் பரிவார சகிதமாகச் சென்று தங்கியிருந்தான். அப்போது பௌர்ணமி வந்தது. நிலவு பால்போல் காய்ந்தது. காற்றுச் சுகத்திற்குவேண்டிய அளவு சில்லென்று வீசியது. அப்போது அவன் தனது அரசாங்க உல்லாசப் படகொன்றில் அமர்ந்து ஏரியில் உலவிவரவிரும்பித் தன் விருப்பத்தை ஏவலாளர்க்குத் தெரிவித்தான். சிறிது நேரத்தில் படகு தயாராயின. உடனே அரசனாகிய அகமதுஷா சித்தமாயிருந்தபடகில் ஏறித் தனக்கென்று இடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தான். உடனே படகு அசைந்து செல்லத் தலைப்பட்டது. அப்போது படகிலிருந்த பாடகர்கள் அரச

னுக்கு இன்பத்தையளிக்கக் கூடிய பாடல்களைப் பாடினர். முகம்மதிய வாத்தியக்காரர்கள் தங்கள் வாத்தியங்களின் மூலமாக அரசனுடைய வெற்றியைக்குறித்துக் கோஷித் தார்கள்.

அப்பொழுது இந்தியப்பாடகன் ஒருவன் இனிய குர லில் இளம் வயதினையுடைய பெண்மணி ஒருத்தியின் அழ கைப்பற்றி விசேஷவர்ணனையுடன் பாடினன். அப்பாடலைக் கேட்ட அரசனுக்கு அவள்மீது பிரியமுண்டாயிற்று. உடனே அரசன் அப்பாடகனைப்பார்த்து, 'இப்பொழுது நீ எந்தப் பெண்மணியைக்குறித்துப் பாடினையோ அந்தப் பெண்மணி எப்பொழுது எங்கு இருந்தவள்?' என்று கேட்டான்.

'அவள் இப்பொழுதும் இருக்கின்றாள். இன்னும் அவ ளுக்கு விவாகம் ஆகவில்லை. அவளுடையபெயர் லீலா என் பது. அவள்மிகவும் அழகிற்சிறந்தவள். அவள் இராஜபுத்திர தலைவராகிய பிரதாபசிம்மரின் மகளாம்' என்று கூறினன் அப்பாடகன்.

அவ்வார்த்தையைக்கேட்ட அரசன், 'ஓ, அப்படியா! அவ்வளவு அழகுவாய்ந்த அப்பெண்மணி எனக்கு மனை வியாவதே தகுதியாகும். ஆனல் நீ சொல்லியதுபோல் அவள் அவ்வளவு அழகுடையவளாயில்லாவிட்டால் உன் தலைபோய்விடும்' என்றுசொன்னன்.

சிறிதுநேரத்திற்குப் பிறகு எல்லோரும் ஏரியின் நடு வில் கட்டப்பட்டுள்ள மாளிகையை யடைந்தனர். பொழுதுவிடிந்தவுடன் அகமதுஷா தன்னிடமிருந்த ஒரு பிராமணனை வரவழைத்துப் பிரதாபசிம்மரின் மகளைப்பற் றிய எல்லாவிஷயங்களையும் அறிந்துவரும்படி யனுப்பினன். அவன்சென்று திரும்பிவந்து அன்றையதினம் ஏரியில் அப் பாடகன் சொல்லியயாவும் உண்மையேயென்றும், பிரதாப

சிம்மரின்மகள் லீலா அழகிற் சிறந்தவளே யென்றும் கூறினன்.

உடனே அரசனுக்கு லீலாவின்மீது அளவற்றபிரியம் உண்டாயிற்று.

சிறிதும் தாமதம்செய்யாமல் லீலாவைத் தனக்கு விவாகம் செய்துகொடுக்கவேண்டுமென்று தான் சொன்னதாகப் பிரதாபசிம்மரிடம் சொல்லி வரும்படி அந்தப் பிராமணனையே யனுப்பினன். அகமதுஷாவுக்கு லீலாவின்மீது ஏற்பட்டிருந்த பிரியம் இத்தகையது என்று விவரித்துச் சொல்லமுடியாது. அச்சமயத்தில் எத்தனையோ இராஜபுத்திரர்கள் பலகாரணங்களை முன்னிட்டுத் தங்கள் புத்திரிகளிற் சிலரை முகம்மதியர்களுக்கு விவாகம் செய்து கொடுத்திருந்தார்கள். ஆனல் பிரதாபசிம்மரோ இராஜபுத்திரர்களிற்சிறந்த இராஜபுத்திரர். சுயஜாதிபெருமையும் தன் நம்பிக்கையும் அவருக்கு அதிகம். அவர் தம்முடைய மகள் லீலாவை அகமதுஷா இஷ்டப்படி அவனுக்கு விவாகம் செய்துகொடுக்க ஒரு சிறிதும் சம்மதிக்கவில்லை. அவர் தம்முடைய இராஜ்ஜியத்திற் குட்பட்ட ஆகூர் என்னும் கோட்டைக்குச்சென்று தம்முடைய உறவினர்களை யெல்லாம் அங்கு வரவழைத்து அகமதுஷா தம்முடைய மகளை விரும்புவதைப்பற்றி அவர்களிடம் தெரிவித்தார். அவர்கள் பிரதாபசிம்மருடைய நோக்கத்தைத்தெரிந்துகொண்டு அவர் நோக்கப்படியே நடப்பது தங்களுக்குச் சம்மதமென்று கூறினர்கள். உடனே பிரதாபசிம்மர் தமது இஷ்டத்திற்கு விரோதமாக அகமதுஷா தமது மகளை மணந்துகொண்டுபோக வருவானயின் அவனை எதிர்ப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார்.

இவ்விஷயம் அகமதுஷாவுக்கு எட்டியது. உடனே அவன் ஆகூர்கோட்டையை எதிர்த்து லீலாவைக் கைப்

பற்றி வருவதற்காகப் பதினாயிரம்பேர் வீரர்களைத் தயார் செய்தான். செய்து, அச்சைனியங்களைத் தான் யானையின் மீது அமர்ந்தபடி, ஆகூர் கோட்டையை நோக்கி நடத்திச் சென்றான். லீலாவை அழைத்துவருவதற்காக அம்பாரி வைத்துக் கட்டப்பட்ட மற்றொரு யானையையும் அவன் அழைத்துச் சென்றான்.

இந்த நிலைமையில் அவன் தைரியமாக ஆகூர் கோட்டைக்கு அருகில்சென்று கோட்டைக்குள் போவதற்குவழி விடும்படி அங்கிருந்த காவலாளிகளிடம் சொன்னான். அப்பொழுது மின்னல்போல் ஒரு அம்பு அவன் தலைக்குமேல் வந்து அவன் அருகில்விழுந்தது. அந்த அம்பின் நுனியில் ஒருகடிதம்இருந்தது. அதை அகமதுஷா கைப்பற்றிப் பிரித்துப் பார்த்தபோது, அதில் 'இந்த அம்பை உம்முடைய தலைக்குமேல் எய்தவர்யாரோ அவர் விரும்பி யிருந்தால் இதே அம்பை உம்முடைய உடலில் செலுத்தியிருக்கக் கூடும். விகாரத்தோற்றத்தினராகிய நீரோ லீலாவை மணந்துகொள்ளத் தகுந்தவர்? சீக்கிரமாகத் திரும்பிப் போய்விடும். இல்லாவிட்டால் உமக்கு ஆபத்துநேரும்' என்று எழுதப்பட்டிருந்தது. அதேசமயத்தில் தான் கலியாணம் செய்துகொள்ள விரும்பும் ஒருபெண்ணுக்கு ஒரு இராஜபுத்திரஜாதியான் அனுப்புகிறவழக்கப்படி அகமதுஷா லீலாவுக்கு வேண்டிய கலியாண உடைகளை அனுப்பி யிருந்தான். அவ்வுடைகளை ஒரு மூட்டையாகக் கட்டி கோட்டைக்குள் ளிருந்தபடியே வெளியே வீசி யெறிந்தார்கள். தற்செயலாக அஃது அகமதுஷா ஏறியிருந்த யானையின்முன்னால் வந்து விழுந்தது. இவைகளை யெல்லாங்கண்ட அகமதுஷா கோபங்கொண்டு சண்டையை ஆரம்பிக்கும்படி தன்னுடைய சைனியங்களுக்கு உத்தரவிட்டான். சண்டையும் ஆரம்பமாயிற்று. இராஜபுத்திரர்கள் எய்யும் அம்புகளைக்

கண்டு அகமதுஷாவின் சைனியங்கள் பயந்தனர். ஆயினும் அகமதுஷா தன்னுடைய சைனியங்களுக்கு ஊக்கங் கொடுத்து அவர்களைத் திறமையாக சண்டைசெய்யும்படி தூண்டினன். அப்பொழுது ஆகூர்கோட்டையைக் காப்பதற்கு மூவாயிரம் இரஜபுத்திர வீரர்களே யிருந்தனர். அகமதுஷாவின் சைனியங்களோ பதினையிரம் யுத்தவீரர்கள் அடங்கியவை என்று சொல்லி யிருக்கிறோம். யுத்தம் மும்மரமாக நடந்துகொண்டிருந்தபோது எத்தனையோ முகம்மதிய வீரர்கள் கோட்டையின் மதிற் சுவர்மீதேறி உள்ளே குதிக்கமுயன்றனர். அவர்களையெல்லாம் இரஜபுத்திர வீரர்கள் தங்களுடைய அம்புகளினல் அடித்து வீழ்த்தினர். ஏணிகளைவைத்து உள்ளே ஏறிப்போகமுயன்றனர். திறமைசாலிகளான இரஜபுத்திரவீரர்களின் முன்னர் அவர்களுடைய தந்திரம் ஒன்றும் பலன்தரவில்லை. முகத்திற்கு முகம் நின்று சண்டைசெய்தாலன்றி ஆகூர் கோட்டைக்குள் செல்லமுடியாது என்பதை முகம்மதியவீரர்கள் அறிந்தனர். பிறகு அவர்கள் இரஜபுத்திர வீரர்களைப் பகிரங்கமாக வீராவேசத்துடன் எதிர்க்கத் தலைப்பட்டனர்.

ஆகூர் கோட்டை முகம்மதியர்களின் வசப்படுவது நிச்சயமெனத் தெரிந்தது. இரஜபுத்திரர்கள் எவ்வளவு வீரர்களாயினும் தங்களைவிட மூன்றுபங்கு அதிகமாயுள்ள முகம்மதிய வீரர்களை எவ்வாறு எதிர்ப்பது? ஆயினும் வீரசிங்கங்களாகிய இரஜபுத்திரர்கள் மூன்றுமாதம் வரையிலும் முகம்மதிய வீரர்களை எதிர்த்துநின்றனர். வெளியிலிருந்து கோட்டைக்குள் இருப்பவர்களுக்கு உணவுப் பொருள்கள் போவது தடைப்பட்டமையினல் கோட்டைக்குள்ளிருக்கும் இரஜபுத்திர யுத்தவீரர்களுக்குக் கஷ்டம் உண்டாயிற்று. அப்பொழுதாவது பிரதாபசிம்மர் தமது மகளை விவாகம் செய்து கொடுக்கிறேன் என்று ஒப்புக்கொண்

டிருந்தால் அகமதுஷா சண்டையைநிறுத்தியிருக்கக்கூடும். தம்முடையமகளை அகமதுஷா விரும்புகிறவரையில் தாம் சண்டைசெய்தே தீரவேண்டுமென்று உறுதி கொண்டார். அகமதுஷாவின் இஷ்டப்படி நடப்பதைவிட தங்கள் அரசனுடைய இஷ்டப்படி நடந்து தங்கள் உயிரைவிடுவதே மேலென்று மானிகளான இரஜபுத்திரவீரர்கள் தீர்மானித்தனர். தாங்கள் எப்படியும் இறந்துவிடுவது நிச்சயம்என்று அவர்களுக்குத் தெரிந்தது. தாங்கள் இறந்தொழிந்தால் தங்கள் புத்திரர்களும், மனைவிமார்களும் முகம்மதியவீரர்களிடம்சிக்கி மானம் அழியக்கூடும் என்று அவர்கள்எண்ணினார்கள். அதனால் உடனே ஜோஹர் என்னும் அக்கினி பிரவேசம்செய்ய ஏற்பாடாயிற்று. கோட்டைக்குள் அக்கினி வளர்க்கப்பட்டது. அக்கினியில் விழுந்து தங்கள் உயிர்களை விடுவதற்கு இரஜபுத்திர பெண்மணிகள் அனைவரும் சந்தோஷத்துடன் ஆயத்தமானார்கள். அப்பொழுது பாதி ராத்திரி, எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. இறப்பதற்கு முன் கோட்டையிலிருந்த விலையுயர்ந்த பொருள்களையும், நகைகளையும் வளர்ந்தெரியும் அக்கினியில்தள்ளி கரியாக்கினர். அதன்பிறகு முதியவர்களும் இளையவர்களுமான இரஜபுத்திர பெண்மணிகள் அனைவரும் அந்த அக்கினியில் விழுந்து தங்கள் உயிரைவிட்டனர்.

பொழுதுவிடிந்தது. இரஜபுத்திரவீரர்கள் கோபவெறி பிடித்தவர்களாய் என்றும் இல்லாதவிதமாய்ப் புலிகளைப் போல் பாய்ந்து முகம்மதிய சைனியங்களை எதிர்த்தனர். அப்பொழுது அவர்களுடைய ஜனத்தொகை இரண்டாயிரத்து ஐந்நூறுக்கு அதிகமில்லை. அவர்கள் ஒவ்வொருவருக்கும் தாங்கள் பிழைக்கக்கூடும் என்னும் நம்பிக்கையே அற்றுப்போயிற்று. பிரதாபசிம்ஹரும் அவருடைய மகனாகிய ராம்சிங் என்பவனும் சைனியங்களை நடத்தினர்.

ROJA MUTHIAH

அப்பொழுது பச்சைக்கொடி பறந்துகொண்டிருந்த அகமதுஷா இருக்கும் இடத்தைநோக்கி இராஜபுத்திர வீரர்கள் சென்றனர். பிரதாபசிம்மரும் அவருடையகுமாரர் இராமசிங்கும் மற்ற வீரர்களைப்போல் பாதசாரிகளாக நின்றே யுத்தம்செய்தனர். ஆனால் அவர்கள் இருக்கும் இடத்தை அறிந்துகொள்ளுவதற்காக அரசாங்கக்குடை பிடிக்கப்பட்டிருந்தது. அப்பொழுது இராமசிங் செய்த யுத்தத்தின் பெருமை இராஜபுத்திரஜாதியார்களின் இடையில் இன்றளவும் பரவி நிற்கிறது.

முகம்மதியவீரர்கள் இராஜபுத்திர வீரர்களைச் சுற்றிக் கவிந்துகொண்டனர். ஆயினும் இராஜபுத்திரவீரர்கள் எதிர்த்தவர்களைக் கண்டதுண்டம் செய்துகொண்டே அகமதுஷா இருக்கும் இடத்தை நெருங்கிவிட்டனர். அவர்கள் தன்னை நெருங்கிவிட்டதையறிந்த அகமதுஷா அவசரமாகத் தன்னுடைய பட்டத்துயானையின்மீது ஏறிக்கொண்டான். அப்பொழுது அவனைச் சுற்றிலும் அவனுடையவீரர்கள் அதிகமாயில்லை. அவனைக் காப்பதற்கு அவனுடையவீரர்கள் வருவதற்குச் சிறிது நேரமாகும் என்று தெரிந்தது. இராஜபுத்திரவீரர்களோ அகமதுஷாவின்மீது சரமாரிபொழிந்தனர். சாமர்த்தியம்வாய்ந்த அகமதுஷா அவைகளுக்கெல்லாம் சாமர்த்தியமாகத் தப்பித்துக் கொண்டிருந்தான். அவனுடைய மெய்க்காப்பாளர் அவனுக்கு முன்னால் இருந்து இராஜபுத்திர வீரர்களை எதிர்த்தனர். அப்பொழுது வேறு சில முகம்மதிய வீரர்களும் வந்துசேர்ந்தனர். ஆயினும் இராஜபுத்திரவீரர்கள் கொஞ்சங்கொஞ்சமாக முன்னேறினார்களேயன்றிப் பின்தங்கவில்லை. கடையாக அவர்கள் அகமதுஷா இருந்த யானையின் அருகில்வந்து விட்டனர். இச்சமயத்தில் கோபத்தீபற்றி எரிந்து கொண்டிருந்த இராமசிங்கின் மனத்தில் ஒருயுக்தி தோன்றியது. அவன் மின்னல்

போல்பாய்ந்து யானையின் கீழ்நுழைந்து தன் கையில் இருந்த குத்துவாளால் யானையின் வயிற்றோடுசேர்த்துக் கட்டப்பட்டிருக்கும், அகமதுஷா ஏறியுள்ள அம்பாரியின் கயிற்றை அறுத்துவிட்டான். அதேநிமிஷத்தில் வெட்டி சாய்க்கப்பட்ட மரம்போல் அகமதுஷா அம்பாரியோடு தரையில் விழுந்தான். அவன்தேகம் முழுதும் புழுதிபடிந்தது. உடனே இராம்சிங் அவனைக்கொல்வதற்கு அவன்மீது புலிபோல் பாய்ந்தான். அகமதுஷாவும் சமானியனல்லன். விழுந்தவுடன் கால்விநாடியும் தாமதியாமல் பொருக்கென எழுந்து தன்வாளையுருவி எதிரிகளைச் சாடினன். அவன் வாள்பிடித்துச் சண்டைசெய்வதில் கைதேர்ந்தவனாதலால் அத்தகைய ஆபத்திலும் இரஜபுத்திரர்களை எதிர்த்துத் தன் உயிரைக் காப்பாற்றிக்கொண்டிருந்தான். இவ்விஷயத்தை யறிந்த முகம்மதியவீரர்கள் விரைந்துவந்து அவனைக் காப்பாற்றலாயினர். அப்பொழுது பின்னும் பல முகம்மதிய சைனியங்கள் அங்குவந்துசேர்ந்தன. அதனால் இரஜபுத்திர வீரர்கள் பின்னும் நன்றாகமுகம்மதிய சைனியங்களுக்கிடையில் அகப்பட்டுக் கொள்ளும்படியாயிற்று. வரவர இரஜபுத்திரவீரர்களின்தொகை குறைந்துகொண்டே வந்தது. சிறுகச் சிறுக அவர்களுடைய ஜனப்பரப்பும் குறுகியது. அவர்கள் கைக்கொண்டிருந்தவாள் அனைத்தும் கூர்மழுங்கி முறிந்தன. ஓய்வின்றிச்சண்டையிட்டதனால் அவர்களுடைய கரங்களும் சலித்தன. ஆயினும் அவர்கள் தைரியத்தைக் கைவிடாமல் தங்களால் கூடியவரையில் முகம்மதிய சைனியங்களை வெட்டி வீழ்த்தினர். அதுவரையில் பிரதாபசிம்மர் பிழைத்திருந்தார். அப்பொழுது அவர்மீதுவந்து தாக்கிய ஓர் அம்பினால் அவர் அடியுண்டு தம் முன்னோர்களைப் போல் படுகளத்தில் பெருமையாகத் தம் உயிரைவிட்டார். அவர் இறந்தவுடன் அவருடையமகன் மிகுந்திருந்த சைனி

யங்களுக்குத் தலைவனாகநின்று சண்டைசெய்தான். அப்பொழுது அவனுடைய வாள்முறிந்துவிட்டது. உடனே எதிரிலிருந்த ஒரு முகம்மதியனுடையவாளை வெடுக்கென்று பிடுங்கிக்கொண்டு இராம்சிங், எதிரிகளை வீசிக்கொண்டு சென்றான். அப்பொழுது அவன் செய்த யுத்தத்தின் பெருமை சூரியர்சந்திரர் உள்ளளவும் அழியாது என்பது திண்ணம். கடைசியாக அவனும் எதிரிகளால் கொல்லப் பட்டு இறந்தான். மிகுதியிருந்த இராஜபுத்திர வீரர்களில் ஒருவர்கூடத் தப்பாமல் சண்டைசெய்து இறந்தனர். முகம்மதியர்கள் எல்லாம் 'தீன் தீன்' என்று கோஷித்தனர்.

அகமதுஷா பூரணஜயமடைந்தான். பின்னர் அவன் ஆகூர் கோட்டைக்குள் லீலாவை மணந்துகொள்ளலாம் என்னும் ஆவலுடன் நுழைந்தான் கோட்டைக்குள் எங்குப்பார்த்தாலும் பிணநாற்றமே வீசியது. பார்க்கும் இடமெல்லாம் பாழடைந்து கிடந்தது. அகமதுஷா தான் பிரயோசன மில்லா வெற்றியை அடைந்ததை முன்னிட்டு வருந்தினான்.

ஆயிரக்கணக்கான வீரர்களைப் பலி கொடுத்தும் லீலாவை அடைய முடியவில்லையேயென்று அகமதுஷா வருந்திக்கொண்டிருக்கையில் லீலா இறந்து போகவில்லையென்றும், ஆகூர்கோட்டை யழியுமுன்னரே அவளை அவளுடைய தகப்பனார் நம்பிக்கையான ஒரு ரஜபுத்திரதலைவரிடம் ஒப்படைத்து அவளைப் பாதுகாத்துவரும்படி ஏற்பாடு செய்திருக்கிறாரென்றும், அத்தலைவரிடமே அப்பொழுதும் லீலா இருக்கிறாள் என்றும் கேள்விப்பட்டான். உடனே அகமதுஷா லீலா இருக்கும் இடத்தை ஆராய்ந்து அறிந்து அவளுடைய வளர்ப்புத்தந்தையிடம் அவளைத் தனக்கு விவாகம்செய்து கொடுக்கும்படி கட்டாயப்படுத்தி

ஞன். அதற்கு லீலாவின் வளர்ப்புத்தந்தை உடன்படாமல் போருக்கு ஆயத்தமானன்.

அதையறிந்த லீலா தனக்காக மறுபடியும் ஒருவரும் தங்கள் இரத்தத்தைச் சிந்தவேண்டாமென்றும், பாதுஷா வுக்குத் தன்னைக் கலியாணம் செய்துகொள்ள விருப்ப மானல் தனக்கும் அதுவிருப்பமே என்றுங் கூறினள். கூறியதோடு நில்லாமல் தன்னுடைய விவாககாலத்தில் பாதுஷாவாகிய அகமதுஷா தரித்துக் கொள்வதற்காக அநேக உடைகளையும் அவனுக்குக் கொடுத்தனுப்பினள். தன் தகப்பனையும் சகோதரனையும் கொன்ற ஓர் அந்நியனை லீலா மணந்துகொள்ளத் துணிவுகொண்டதை முன்னிட்டு இராஜபுத்திரர்கள் தங்களுக்குள் லீலாவைப்பற்றி முணு முணுத்தனர். லீலாவின் வளர்ப்புத்தந்தைக்கும், லீலாவின் எண்ணம் பிடிக்கவில்லை யானலும் அவளுடைய இஷ்டத் திற்கு விரோதமாக அவர் நடக்கத்துணியவில்லை. கலியாண மகோற்சவம் ஏரியின் நடுவிலுள்ள பாதுஷாவின் வசந்த மாளிகையில் நடைபெற ஆயத்தம்செய்தனர். தான் லீலா வை மணந்துகொள்வதால் முகம்மதியர்களுக்கும், இந்துக் களுக்கும் ஐக்கியம் ஏற்பட்டுத் தன்னுடைய இராஜ்ஜியம் பலப்படும் என்று அகமதுஷா நினைத்தான். இனி இராஜபுத் திரர்களுக்கும், தனக்கும் விரோதம் ஏற்பட வழியில்லை யென்றும் அவன்எண்ணினன். கூடியவரையில் விவாகம் இந் துக்களின் சம்பிரதாயப்படி நிறைவேற ஏற்பாடாயிற்று. உத்தமப் பிராமணர்களுக்கும்,ஏழைகளுக்கும் வயிருற உண வளித்தனள். வெளிநாடுகளிலிருந்தும், அகமதுஷாவின் அரசாட்சிக்குட்பட்ட தேசங்களிலிருந்தும் அநேகர் விவாகத் தைப் பார்த்துப்போக வந்தனர். அகமதுஷா தன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளும் காலமாகிய விவாக தினமும் வந்தது. சுபமுகூர்த்தத்தில் அகமதுஷாவும்,

லீலாவும் கலியாணமண்டபத்தில் ஒருவர்பக்கத்தில் ஒருவர் உட்கார்ந்தனர். அக்கால வழக்கப்படி ஒருவருக்கொருவர் மாலைமாற்றிக் கொண்டனர். அப்பொழுது அகமதுஷா தனக்கு லீலா அனுப்பிய உடைகளையே அணிந்திருந்தான். அவ்வுடைகள் மிகவும் அழகு வாய்ந்தனவா யிருந்தன. லீலாவோ உயர்ந்த ஆடைகளை அணிந்து ஒரு தெய்வப் பெண்ணைப்போல் விளங்கினாள். பின்னர் முகம்மதிய வழக்கப் படியும் சில விவாகச் சடங்குகள் நிறைவேறின.

விவாகச் சடங்குகள் முடிவடைந்தவுடன் லீலா அகமதுஷாவின் கரத்தைப்பற்றிய வண்ணம் அம்மாளிகையின் வெளிப்புறத்திற்கு உல்லாசமாகச் சென்றாள். சென்றதும் அவள் அகமதுஷாவைப் பார்த்து, ‘இறைவரே! இந்தவெய்யிலில் நாம் சிறிதுநேரம் வேடிக்கையாக நிற்போம்! நம்மைப்பார்க்க விரும்புகிறவர்கள் பார்க்கட்டும்’ என்று சொன்னாள். அதற்கு அகமதுஷா இணங்கினான். அவன் கம்பீரமானத் தோற்றத்துடன் அம்மாளிகையின் வெளிப்புறங்களை உற்றுக் கவனித்தான். தான் லீலாவை மணந்து கொண்டதை முன்னிட்டு அவன் பெருமை படைத்தான். மாளிகையைச் சுற்றிலும் இருந்த ஜனங்கள் லீலாவையும், அவனையும் பார்த்தவண்ணம் தங்களுக்குள் பலவாறுபேசிக் கொண்டிருந்தனர். எவ்வளவோ துன்பப்பட்டுக் கடைசியாக லீலாவையடைந்ததனால் அதற்குமுன் தான் பட்ட துன்பங்களையெல்லாம் அவன் மறந்துவிட்டான். அப்பொழுது லீலா அவனை உற்றுப்பார்த்தாள். ஆனால் அந்தப் பார்வை அச்சமயத்தில் அவள் பார்க்கத்தகுந்த பார்வையாயில்லை.

அவள் அகமதுஷாவைப்பார்த்து, ‘இறைவரே! சென்று கொண்டிருக்கும் ஒவ்வொரு நிமிஷத்தையும் வீணாக்காமல் இன்பத்தைத் தாங்கள் அனுபவிக்கவேண்டும். மனிதர்கள்

கடவுள்செயலை மறந்து தங்களுடைய திறமையையும், தங்கள் செயலையும் பெரிதாக எண்ணுகிறார்கள். நம் மிருவருடைய அழகிய தோற்றமும், இளமையும், காதலும் ஒரு நாளிலாவது ஒருமணிநேரத்திலாவது, இப்பொழுதேயாவது அழிந்தாலும் அழியக்கூடும்' என்றாள். அதற்கு அகமதுஷா காதல் கலந்தகனிவுடன் அவளுக்கு ஏதோ சொன்னான். அவன் அவளுடையஅழகில் ஈடுபட்டுத் தேன் உண்டவண்டுபோல் மயங்கிக் கிடந்தான்.

அப்பொழுது அகமதுஷாவைப் பார்த்துக் கொண்டிருந்த ஜனங்கள் அவன் தேகத்தில் நெருப்புப்பற்றி எரிவதைக்கண்டார்கள். தாங்கள் காண்பது கனவோ நனவோ என்று எண்ணினார்கள். உண்மையிலேயே அவனுடைய தேகத்தில் நெருப்புபற்றி எரிகிறதென்று அவர்கள் உணர்ந்தார்கள். அவர்கள் உணர்ந்தது உண்மைதான். லீலா அகமதுஷாவுக்கு அனுப்பிய கலியாணஉடைகளில் எவராலும் கண்டுபிடிக்கமுடியாத ஒருவகை விஷத்தைத் தெளித்துப் பின்னர் அவ்வுடைகளை அவனுக்கு அனுப்பினாள். அவ்வுடைகளில் தெளிக்கப்பட்டிருந்த விஷத்திற்கும் சூரிய உஷ்ணத்திற்கும் சம்பந்த முண்டாகையால் அகமதுஷா வெய்யலில் வந்துநின்றதும், சூரிய உஷ்ணம் அவ்வுடைகளில் அளவுகடந்து நுழைந்து அவ்வுடைகளைப்பற்றி எரியச்செய்தது. உடைகள் பற்றிக்கொண்டதும் அகமதுஷா சிறந்த வீரனாயிருந்தும் ஏதும் செய்யமுடியாதவனாயினான். அவன் தன் உடைகளைக் கழற்றி எறிய முயன்றான். மற்றவர்கள்வந்து உதவிசெய்வதற்குமுன், அவ்வுடைகள் முழுவதும் இரண்டொரு விநாடியில், பற்றி எரிந்து போயின. அதனால் அகமதுஷா நெருப்பில் இடப்பட்ட சிறு பறவைபோல் சுருண்டு தரையில்விழுந்து தன் பிராணனைவிட்டான்.

தன்னைச் சேர்ந்தவர்களைக் கொலைசெய்த அகமது

ஷாவைப் பழிக்குப் பழி வாங்கிய லீலா அவசரமாக அவ்விடத்தைவிட்டகன்று மாளிகையின் ஓரத்திற்குச் சென்று முன்பின் பாராமல் ஏரியில் குதித்துத் தன் பிராணனை விட்டாள்.

நிமிஷநேரத்தில் நடந்தேறிய இச்சம்பவங்களைக் கண்ட இராஜபுத்திர வீரர்களும், முகம்மதிய வீரர்களும் ஒன்றுந் தோன்றாமல் திகைத்தனர். விவாகத்திற்கு வந்திருந்த பொதுஜனங்களுக்கு இங்கு நடந்தேறியவிஷயங்கள் பெரும் வியப்பைத் தந்தன. தகுந்தபடி உபசரிப்பதற்கு ஆள் இல்லாமையால் வெளியூரிலிருந்து வந்தவர்கள் தங்கள் தங்கள் வழியைப் பார்த்துக்கொண்டு போயினர். அகமதுஷா இருந்த சிம்மாசனத்தில் யார்உட்காருவது என்னும் பேச்சு உண்டாயிற்று.!

இத்தகைய விஷயங்களிலிருந்து நாம் அறிந்துகொள்ள வேண்டியவைகள் பல இருக்கின்றன. முற்காலத்தில் நமது நாட்டிலிருந்த முகம்மதியர்களும், நமது முன்னோர்களான இந்துக்களும் தங்களுக்குள் அற்ப விஷயங்களை முன்னிட்டு இக்காலத்திய சாதாரணச்சிறுவர்களும் நகைக்கும்படியான காரியங்களைச் செய்திருக்கின்றனர். இதனால்—இந்துக்களும், முகம்மதியர்களும் ஒற்றுமையின்றி முற்காலங்களில் நடந்துகொண்ட மாதிரியினால்—நாட்டில் ஒற்றுமை குறைந்து வரவர நாடு க்ஷீணிக்கத்தலைப்பட்டது. இனிவருங் காலங்களிலாவது முகம்மதியர்களும், இந்துக்களும் தங்கள் முன்னோர்களைப்போல் ஒருவரோடொருவர் மாறுபடாமல் ஒற்றுமையாய் வாழ்வார்களானால் பொதுவில் தேசத்திற்கு உண்டாகக்கூடிய நன்மை அளவிறந்தனவாகும்.

---

# பிரதாபசிம்ஹன்

சுமார் நானூறுவருடங்களுக்குமுன் நல்ல வெயிற் காலத்தில் ஒருநாள் நடுப்பகலில் ஒரு குதிரை வீரன், தன் குதிரையின்மீது, வட இந்தியாவிலுள்ள அரவலி மலையின் ஓரத்தில் உள்ள காட்டின்வழியாகச் சென்று கொண்டிருந்தான். அவன் முகத்தில் இராஜபுத்திரவீரர்களுக்கு இயற்கையாயுள்ள வீரமும் தைரியமும் காணப்பட்டன. அவன் இளம் வயதுடையவனுகக் காணப்பட்டான். அவன்பெயர் பிரதாபசிம்ஹன் என்பது. இப்பொழுதும் வட இந்தியாவில் உள்ள இராஜபுத்திரஜாதியார் பிரதாப சிம்ஹனைப்பற்றி எவ்வளவோ பெருமையாகப் பேசிக்கொள்ளுகின்றனர். கவிகள் அவனுடைய வீரதீரப் பிரதாபங்களைப்பற்றி ஏராளமாகப் பாடியிருக்கின்றனர். வேட்டையாடிக் கொடிய மிருகங்களைக்கொல்லுவதில் அவனுக்கு விருப்பம் அதிகம். அக்காரணம்பற்றியே இப்போது அவன் தன் நாட்டைவிட்டு அரவலிமலையைச் சேர்ந்த காட்டிற்கு வந்தான்.

அவன் தன்கையில் மிகவும்நீண்ட ஒருவாளாயுதத்தைப் பிடித்திருந்தான். அவன் முதுகில் வில்லும், அம்புராத் தூணியும் தொங்கிக்கொண்டிருந்தன. அவன் வெகுதூரம் அக்காட்டில்போய்க்கொண்டிருந்தான். அவன்கண்களுக்கு அதுவரையில் எத்தகைய கொடிய மிருகமும் தோன்றவில்லை. பின்னும் அவன் அக்காட்டில் சிறிதுதூரம் சென்றான். அப்போது அவன் எதிரில், நன்ருகக்கொழுத்துப் பருத்த, கரடியொன்று வந்துகொண்டிருந்தது. அதைக் கண்டவுடன் அதைக் கொல்வதற்காகப் பிரதாபசிம்ஹன்

தன் குதிரையை அதன் சமீபத்தில் வேகமாகச் செலுத்தினான். அடுத்தநிமிஷத்தில் குதிரை கரடியின் சமீபத்தில் சென்றது. அந்தோ! தெய்வாதீனமாகக் குதிரையின்கால் அருகிலிருந்த பள்ளத்தில்பட்டு இடறிற்று. இடறவே வேகமாகச்சென்ற குதிரை கீழேவிழுந்தது. பிரதாபசிம்ஹறனும் கீழேவிழுந்தான். அவன் தேகமெல்லாம் புழுதிபடிந்தது. அவன் தன்னைக்கொல்லவந்தவனென்பதை அறிந்த கரடி மூர்க்கங்கொண்டு, இதுதான் சமயமென்று, அவனைக் கடித்துக் கிழிக்க அவன்மேல் பாய்ந்தது.

அடுத்த நிமிஷத்தில் பிரதாபசிம்ஹறன் எழுந்து நின்று தன் வாளை உருவிக்கொண்டு அதைஎதிர்க்கத் தயாரானான். மிகவும் பலம்பொருந்திய மிருகமாகிய அக்கரடி சிறிதும் அஞ்சாமல் தன் பற்களைக் காட்டி உருமிக்கொண்டே அவனை நெருங்கியது. வில்லையும் அம்பையும் எடுப்பதற்கு நேரமில்லை. வாளினாலேயே அவன் அதை எதிர்க்கவேண்டியவனாயினான். அக்கரடியின்வசம் அவன் சிக்கிக்கொள்ளுவானாயின் பிறகுதப்புவது அருமைதான். அவன் கரடியையும், கரடி அவனையும் எதிர்க்க ஆரம்பித்த அதேசமயத்தில் கரடியானது பெருங்கூச்ச லிட்டுக்கொண்டே தரையில் விழுந்துவிட்டது. அதற்குமேல் அதனால் எழுந்திருக்கவும் முடியவில்லை. பின்னும் சிறிதுநேரத்தில் அக்கரடி இறந்து போயிற்று. அதைக்கண்ட பிரதாபசிம்ஹறன், 'என்ன ஆச்சரியம்! நான் இக்கரடியை என் வாளால் ஒரு வெட்டுக்கூட வெட்டவில்லை. இஃது எப்படித் தரையில் விழுந்து இறந்தது'' என்று எண்ணிக்கொண்டே அதன்அருகிற் சென்று பார்த்தான். அதன் வயிற்றில் ஓர் அம்புபாய்ந்து கிழித்திருந்தது. அந்த அம்பை அக்கரடியின்மீது எய்தவர்கள் யாராயிருக்கக்கூடுமென்று அவன் எண்ணினான். அவனுக்கு மிகவும் ஆச்சரியம் உண்டாயிற்று.

யாரோ தனக்குத்தெரியாமல் மறைந்திருந்து அக்கரடியைக் கொன்றிருக்கிறார்கள் என்று அவன் நிச்சயமாக உணர்ந்தான். உடனே அவன் அவர் யார் என்பதை அறிய அங்குமிங்குமாகச் சென்று தன்னைச் சுற்றிலும் உற்றுப் பார்த்தான். அவ்வளவே! அவனுக்குப்பெரிதும் ஆச்சரியமுண்டாயிற்று. அவன் தன் எதிரே சிறிதுதூரத்தில் ஒரு குதிரையின்மீது சுமார் பதினாறுவயதுள்ள அழகுடைய ஒரு பெண் உட்கார்ந்துகொண் டிருப்பதைக் கண்டான். அப்பெண் தன் கையில்வில்லும் அம்பும் வைத்திருந்தாள்.

மூலையில் அடைபட்டுக்கிடக்கும் ஸ்திரீகளைப்போலின்றி, அந்தப்பெண் வெளியில் உலவி தேகப்பயற்சி பெற்றிருந்தாளாதலால் அவள் தேகதிடமுடையவளா யிருந்தாள். அவள்முகத்தில் வீரக்களைதோன்றியது. கம்பீரமாக நிமிர்ந்துநிற்கும் குதிரையின்மீது அவள் ஒரு வீரக்காளியைப்போல் உட்கார்ந்துகொண்டிருந்தாள். அப்படிப்பட்ட வீரமுடைய ஒரு பெண்ணை அதுவரையில் பிரதாபசிம்ஹன் பார்த்ததே கிடையாது.

இவ்வாறு பிரதாபசிம்ஹன் அவளைப்பார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண் டிருக்கையில் அவள் தன் குதிரையைத் திருப்பி அக்காட்டில்செல்லும் ஒற்றையடிப் பாதையின் வழியே வேகமாகப் போய்விட்டாள். கரடி இறந்ததும், அவள் தோன்றிமறைந்ததும் பிரதாபசிம்ஹனுக்குக் கனவிற்கண்ட காட்சியைப்போ லிருந்தன.

பொழுதும் கொஞ்சங்கொஞ்சமாகப் போயிற்று. சூரியன் மேற்குத்திக்கில் மறையத் தலைப்பட்டான். பகல் முழுவதும் உணவின்றி வருந்தியபடியால் பிரதாபசிம்ஹனுக்குக் களைப்பு அதகமாயிற்று. 'மனிதர்கள் வசிக்கக்கூடிய இடத்திற்குப்போனல் ஏதாவது ஆகாரம் கிடைக்கும்' என்ற எண்ணத்துடன் அவன் தன் குதிரையின்மீது ஏறி முன்னே

அந்தப்பெண் சென்றவழியில் தானும்சென்றான். அவன் எண்ணம் வீணாகவில்லை. அவன் சிறிதுதூரம் அக்காட்டின் வழியே போய்க்கொண்டிருந்தான். அப்போது, சூரியனும் நன்றாகமறைந்து விட்டான். சிறிதுதூரத்தில், புதிதாகக் கட்டப்பட்ட ஒருவீடும், அவ்வீட்டிற்குள் அப்பொழுதே ஏற்றிவைக்கப்பட்ட விளக்கின் வெளிச்சமும் தோன்று வதைப் பிரதாபசிம்ஹறன் கண்டான். டாட் என்னும் பெயரினையுடைய ஆப்கானிய அதிபதியினால் துரத்தப் பட்ட அஜித்சிங் என்னும் இரஜபுத்திர சிற்றரசரொருவர் அங்குவந்து அவ்வீட்டைக் கட்டிக்கொண்டு அதில் வசித்து வருகிறாரென்பது பிரதாபசிம்ஹறனுக்கு ஏற்கனவே தெரியும்.

அதனால்பிரதாபசிம்ஹறன் நேரே தன் குதிரையைவிட் டுக்கொண்டு அந்த வீட்டிற்குட்சென்றான். அங்குச்சென்ற வுடன் அவனை அஜித்சிங் என்பவர் மரியாதையுடன் வர வேற்று உபசரித்தார். சாப்பிட்டுக் களையாறியபின்னர், தான் காட்டுக்கு வந்ததற்குக் காரணத்தையும், கரடிகொல் லப்பட்டதையும், தான் கண்ட கன்னிகையைப்பற்றியும் பிர தாபசிம்ஹறன் அஜித்சிங்கினிடம் சொன்னான்.

அவன் சொல்லியவைகளையெல்லாம் கேட்டுக் கொண் டிருந்த அஜித்சிங் பிரதாபசிம்மஹறனைப் பார்த்து, 'நீங்கள் சொல்லிய கன்னிகை வீரமுடைய என்னுடையபெண் பத்மினியைத்தவிர வேறு ஒருத்தியுமில்லை. நாங்கள் எங்க ளுடைய அழகிய மாளிகையிலிருந்து ஆப்கானியர்களால் துரத்தப்பட்ட பிறகு என்மகள் வில்லெடுத்துச் சண்டை செய்வதில் பழகி மிகவும் தேர்ச்சிப்பெற் றிருக்கின்றாள். எதேச்சையாகக் காட்டில் அவள் சென்று வேட்டையாடு வதை மிகவும் விரும்புகிறாள். அவள்மற்றஸ்திரீகளைப்போல் அரண்மனைக்குள் அடைபட்டுக்கிடப்பதில் பிரியமுடையவ

ளல்லள். அவள் அபிப்பிராயத்திற்கு விரோதமாக நான் அவளை வீட்டிற்குள் அடைத்துவைக்க விரும்பவில்லை' என்று சொன்னார்.

சொன்னதும் பிரதாபசிம்ஹறன் அவரைப்பார்த்து, 'இராஜபுத்ரஸ்திரீகள் வீரமணிகளாய் விளங்கவேண்டியது அவசியந்தான். பெண்கள் மூலையில் அடைபட்டுக் கிடக்க வேண்டுமென்பது என் விருப்பமுமல்ல. சமயத்தில் கரடியைக்கொன்று எனக்கு உதவிசெய்த தங்கள் மகள் பத்மினிக்கு எக்காலத்திலும் வேண்டிய உதவியைச்செய்ய நான் காத்துக்கொண்டிருக்கின்றேன்' என்று மிகவும் உண்மையுடனும், பிரியத்துடனும் கூறினன்.

அவ்வார்த்தைகளைக்கேட்ட அஜித்சிங் பிரதாபசிம்ஹறனைப்பார்த்து, 'நீங்கள் அவ்வாறு எங்களுக்கு உதவி செய்வீர்களென்பது எனக்குத் தெரியும். ஆனல் பத்மினியின் எண்ணம்வேறுவிதமா யிருக்கின்றது. ஆப்கானியர்களால் அபகரிக்கப்பட்ட எங்களுடைய நாட்டை மீண்டும் கைப்பற்றி எங்கள்வசம் அளிப்பவர் எவரோ அவரையே என்மகள் மணந்துகொள்ள விரும்புகின்றுள்' என்று சொன்னர்.

சொன்னதும் பிரதாபசிம்ஹறன் அவரை நோக்கி, 'இதுதானு பிரமாதமானகாரியம்! இன்றுமுதல் நான் அவ்விஷயத்தில் முயற்சிசெய்து இராஜகிரி என்னும் தங்களுடைய கோட்டையை ஆப்கானியர்களிட மிருந்து வசப்படுத்தி உங்களிடம் ஒப்புவிக்கிறேன். இல்லாவிட்டால் என்பிராணனை விடுகிறேன்' என்று சபதம்செய்தான்.

நிற்க, அஜித்சிங்கை ஊரைவிட்டுத் துரத்திய ஆப்கானிய அதிபதிக்கு இரண்டுமனைவியர் உண்டு. ஆயினும்டாட் என்னும் பெயரினையுடைய அவ்வதிபதி அழகிற்சிறந்த இராஜபுத்திர ஸ்திரீ ஒருத்தியை மணந்துகொள்ள வேண்டு

மென்று எண்ணினான். அவனுக்குத் துர்க்குணமுடைய பலர், அஜிசித்சிங்கின் குமாரத்தியாகிய நமது வீரமுள்ள பத்மினியைப்பற்றியும், அவளுடைய அழகைப்பற்றியும், பலமுறை பலவாறு பெருமையாக எடுத்துச்சொன்னார்கள். அவர்கள் சொல்லியதைக் கேட்டவுடன் அந்த ஆப்கானிய அதிபதிக்குப் பத்மினியை மணந்துகொள்ள வேண்டுமென்னும் பேராவல் உண்டாயிற்று. அதனால் அவன் பத்மினியைத் தான் கலியாணம் செய்துகொள்ள விரும்புவதாகவும், ஆகையினால் அவளை உடனே தன்னிடம் மறு பேச்சின்றி அனுப்பிவிடவேண்டுமென்றும், இல்லாவிட்டால் தானே நேரில் காட்டுக்குவந்து பத்மினியைத் தூக்கிச்செல்ல நேருமென்றும் பத்மினியின் தந்தையாகிய அஜிசித்சிங்குக்கு ஒருகடிதம் எழுதினான்.

அக்கடிதத்தைக் கண்ட அஜிசித்சிங்குக்கு உண்டான கோபத்திற்கு அளவேயில்லை. உடனே அவர் அக்கடிதத்தைக் கொண்டுவந்த வீரனுடைய தலையை வெட்டிவிடலாமா வென்றெண்ணினார். உடனே அவர் பக்கத்து அறையில் இருந்த தம்மகளைப் பார்க்கப்போனார். பத்மினியும் அக்கடிதத்தில் டாட் வரைந்துள்ள விஷயத்தைக்கேட்டு ஆறுக் கோபங்கொண்டாள். உடனே அஜிசித்சிங் தமது கையிலிருந்த கடிதத்தை கிழித்தெறிந்துவிட்டுத் தமது மகளைப் பார்த்து, 'பத்மினீ! உன்னை மணந்துகொள்ள பிரதாபசிம்ஹர் எதிர்பார்த்துக்கொண்டிருக்கையில் எவ்வித யோக்கியதையுமற்ற டாட் என்பவன் இக்கடிதத்தை எழுதியது என் மனதிற்கு வேதனையாய் இருக்கிறது,' என்று சொன்னார்.

அவர் சொல்கிறவைகளையெல்லாம் அறிவிற் சிறந்த மந்திரியைப்போல் கேட்டுக்கொண்டிருந்த பத்மினியின் மனத்தில் அப்போது ஓர் எண்ணந்தோன்றியது.

உடனே அவள் தன் தந்தையைப்பார்த்து, 'அப்பா! கடிதம் கொண்டுவந்திருக்கும் வீரனை ஒன்றும் செய்யக் கூடாது. அவன் சிறிதுநேரம் வெளியிலேயே நின்றுகொண் டிருக்கட்டும். நாம் ஏதாவது சமாசாரம் சொல்லியனுப்ப வேண்டுமென்று எண்ணுகின்றேன். என்னை விரும்புகிறவர் களில், ஒருவன் கொழுத்துப்பருத்து வயதான அந்நியன்; ஒருவர் வீரமும், இளமையும், அழகும் நிரம்பிய இனத்தார். அவ்விருவரில் யார் நமதுநாட்டை நம்மிடம் சேர்த்துவிடு கிறார்களோ பார்ப்போம். எனக்காக இராஜகிரி கோட் டையை மீண்டும் கைப்பற்றித் தருவதாகச் சொன்ன பிர தாபசிம்ஹரிடமே இந்த விஷயத்தைப்பற்றி ஆலோசித் துப் பார்ப்போம்' என்று சொன்னாள்.

அவள் இஷ்டப்படியே அவள் தந்தையார் அவளோடு பிரதாபசிம்ஹனைக்கண்டு மேற்கூறிய விஷயத்தைப்பற்றிப் பேசினார். சிறிதுநேரம் பேசியபிறகு அவர்கள்மூவரும் தங் களுக்குள் இரகசியமாகச் சிலவிஷயங்களைப்பேசி முடிவு செய்து கொண்டனர். உடனே அஜிசித்சிங் தாம் தமது மகளை கலியாணம் செய்துகொடுக்க இஷ்டப்படுவதாக வும், ஆனால் இன்னும் ஒருமாதம் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்றும், ஒருமாதத்திற்குப் பிறகு இராஜஸ்திரீ களுக்குரிய மரியாதையுடன் அவளை இராஜகிரிக்கு அனுப் புவதாகவும், அவளை மணந்துகொண்டபிறகு இராஜகிரியின் பிரதேசத்திற் பாதியையாவது தமக்குக்கொடுத்து விட வேண்டுமென்றும் ஆப்கானிய அதிபதியாகிய டாட் என் பவனுக்கு ஒருகடிதம்எழுதி அதை வெளியிற் காத்துக் கொண்டிருந்த வீரனிடம் கொடுத்து அனுப்பினார். அவ் வீரன் அக்கடிதத்தைக் கொண்டுபோய் ஆப்கானிய அதி பதியினிடம் கொடுத்தான். அவ்வதிபதி அக்கடிதத்தை ஆவலோடு பிரித்துப்பார்த்து அதில் வரையப்பட்டிருக்கும்

விஷயத்தைக்கண்டு சந்தோஷப்பட்டான். பத்மினியை மணந்துகொண்டால் போதும்என்னும் ஆவலுடன் இருக்கும் அவன் அஜிசித்சிங்கின் இஷ்டப்படி யல்லாமல் கலியாணமானவுடன் இராஜகிரி இராஜ்ஜிய முழுவதையுமே திருப்பிக் கொடுத்து விடுவதாகச் சொல்லியனுப்பினான். நிற்க,

சுமார் ஒருமாதமாயிற்று. பத்மினி தன் தந்தை இருந்த காட்டைவிட்டுத் தன் பிதுரார்ஜ்ஜித நாடாகிய இராஜகிரிகோட்டையை நோக்கி, வெண்பட்டால் திரை கட்டப்பட்ட ஒரு பல்லக்கிலேறிச் சென்றாள். அவளுக்குப் பின்னால் அவளுடைய காவலாளியைப்போல் வேஷம்புனைந்துகொண்டு பிரதாபசிம்ஹறன் குதிரையின்மீது சென்றான். அவன் தரித்திருந்த உடைகளுக்குள் சண்டைக்குரிய ஆயுதங்கள் பலவிருந்தன. பக்கத்திற்கு மூன்றாக பத்மினியின் இரண்டுபுறங்களிலும் பல்லக்குகளில், பிரதாபசிம்ஹறனின், கைதேர்ந்த போர்வீரர்கள் பத்மினியின் தோழிகளைப்போல் வேஷம்புனைந்து உட்கார்ந்து இருந்தனர். இதுவேயுமன்றி பல்லக்குத் தூக்கிச்செல்வோர் ஒவ்வொருவரும் சண்டையில் தேர்ந்த வீரர்களேயாவர். அவர்களுக்கு வேண்டிய ஆயுதங்களெல்லாம் பல்லக்குகளுள் பத்திரமாக வைக்கப்பட்டிருந்தன. பத்மினியோ வில்லும், ஏராளமான அம்பும் தன்னருகில் ஜாக்கிரதையாகவைத்துக்கொண்டிருந்தாள். அவளோடு சென்றவர்கள் அனைவரும் யுத்தத்தில் கைதேர்ந்த இரஜபுத்திரவீரர்களேயாவர். அவர்களின் மொத்தத்தொகை நாற்பத்தொன்பதாகும். அந்தவீரர்களில் மிகவும் வீரர்களாய் விளங்கியவர்கள் முப்பது பெயராகும். அவர்கள் ஒவ்வொருவரும் இரண்டு வாளாயுதங்களை வைத்துக்கொண்டிருந்தனர். இரஜபுத்திர வீரர்கள் ஒவ்வொருவரும் இவ்வாறு இரண்டு வாளாயுதங்

களை வைத்துக்கொண்டிருப்பது வழக்கந்தான்.

நாற்பத்தொன்பதுவீரர்களும், பிரதாபசிம்ஹனும், பத்மினியும் மிகத்தைரியமாக இராஜகிரி கோட்டையை நோக்கிச் சென்றனர். அவர்கள், தங்கள் வருகையைப்பற்றி எற்கனவே, டாட் என்னும் பெயரினையுடைய ஆப்கானிய தலைவனுக்குத் தெரிவித்திருந்தனர். பத்மினி முதலியோர் இராஜகிரிகோட்டைக்கு ஒருமைல் தூரத்தில் வந்துகொண்டிருந்தார்கள். அப்போது டாட் என்னும் ஆப்கானிய தலைவனும் அவனோடு இருபது வீரர்களும் குதிரைகளின்மீது உட்கார்ந்தவண்ணம் பத்மினியை எதிர்கொண்டழைக்கக் காத்துக்கொண் டிருந்தனர். டாட் மிகவும் விலையுயர்ந்த பட்டுச்சட்டை முதலிய உடைகளையும், உயர்ந்த நகைகளையும் அணிந்துக்கொண்டு, பேர்பெற்ற வாசனைத் திரவியங்களைப் பூசிக்கொண்டிருந்தான். வயதான அவனுக்குஅவன் செய்துகொண்ட அலங்காரம் கொஞ்சமும் அழகைத் தரவில்லை. அவளைச் சமீபித்தவுடன் பத்மினி திரைவழியாய் அவன் அறியாதபடி அவனைப்பார்த்தாள். அவனுடைய வயோதிகத்தோற்றத்தைக் கண்டவுடன் அவன்மீது அவளுக்கு ஏற்பட்டிருந்த அருவருப்புப் பின்னும் அதிகமாயிற்று. ஆனால், டாட் சாமானியனல்லன். கையில் கத்தி பிடித்த நாள்முதல் எத்தனையோ சண்டைகளில் ஜயம் பெற்றுக் கீர்த்திவகித்திருக்கின்றான்.

பத்மினிகூட்டத்தார் கோட்டையை நெருங்கியவுடன், கோட்டையின் கதவுகள், அவர்கள் உள்ளே செல்வதற்காகத் தாராளமாகத் திறக்கப்பட்டன. எல்லோரும்கோட்டைக்குட் சென்றனர். ஏற்கனவே செய்திருந்த ஏற்பாட்டின்படி கோட்டைக்குட் சென்றவுடன் பல்லக்குகளெல்லாம் தரையில் இறக்கிவைக்கப்பட்டன. பத்மினியோ தன்னுடைய பல்லக்கினின்றும் வில்லையும் அம்பையும் எடுத்

துக்கொண்டு வெளிவந்து பிரதாபசிம்ஹன் தயாராய்வைத் துக்கொண்டிருந்த குதிரையின்மீது ஏறிக்கொண்டான். மற்றவீரர்களெல்லாம் யுத்தகோலத்துடன் விளங்கினர். பிரதாபசிம்ஹன் அவர்களுக்குத் தலைவனாயினான். இந்திர ஜாலம்போல் திடீரென்று ஏற்பட்ட இந்தக்காட்சியைக் கண்ட டாட் மிகவும் பயந்து தன்னுடன் இருந்த வீரர்களை ஏவி பிரதாபசிம்ஹனையும், அவனுடன் இருந்தவீரர்களையும் எதிர்க்கச் சொல்லிவிட்டுக் கோட்டைக்குள் இருந்த மற்ற வீரர்களை விரைவில் ஒன்றுசேர்க்க முயன்றான். கோட்டைக் குள்ளிருந்த வீரர்களில்மிகச் சிலரே ஆப்கானியராவர். மற்றவர்களெல்லாம் அஜிசிங்கினிடத்தில் உள்ளுக்குள் அபிமானமுள்ள இந்தியவீரர்களாவர். அவர்களெல்லோ ரும் நல்ல சமயத்தில் பத்மினியோடு சேர்ந்துகொண்டு டாட் வீரர்களை எதிர்க்கலாயினர். இருகட்சியாருக்கும் சண்டைமிகப் பலமாக நடந்தது.

அப்போது பத்மினி தன்வில்லில் ஓர் அம்பைக் கோர்த்து அதை டாட் மார்பில் விடுவதற்காகக் குறிபார்த் தாள். உடனே ஸ்திரீகளுக்கு இயற்கையாயுள்ள இரக்க மென்னும் பெருங்குணம் அவள் மனத்தில் தோன்றியது. அதனால் அவள் பரிதாபப்பட்டு அந்த அம்பை அவன்மீது விடாமல் அவன் ஏறியிருந்த குதிரையின்மீது விட்டாள். நல்ல தருணத்தில் பச்சாத்தாபங்கொண்டு பத்மினி காரி யத்தைக் கைநழுவவிட்டபடியால், யுத்தம் பின்னும் வளர்வ தாயிற்று. அம்பு பாய்ந்தவுடன், நோய்பொறுக்க முடியா மல், டாட் ஏறியிருந்த குதிரை தன் எஜமானனோடு திடீ ரென்று தரையில்விழுந்தது. ஒட்டியமண்ணைத் தட்டிக் கொண்டு டாட் எழுந்து தன்னைச் சுற்றிலும் ஒரு முறை உற்றுப்பார்த்தான். இரஜபுத்திரவீரர்கள் ஆப்கானியரை ஏறக்குறைய வென்றுவிட்டார்களென்பதை யறிந்தான்.

உடனே அவனுக்கு ஓர் யோசனை தோன்றியது. அவன் வேகமாகச் சென்று தன்னுடைய ஆட்களுக்குக் கோட்டையின் கதவைமூடித் தாளிடும்படிச் சொன்னான். அவர்கள் அப்படிச் செய்திருப்பார்களாயின் கோட்டைக்குள் அகப்பட்டிருக்கும் இராஜபுத்திர வீரர்கள் எவ்வளவு சமர்த்தர்களாயினும் கூட்டில் அடைபட்ட புலிகளைப்போல் டாட் வசம் சிக்கியிருப்பார்கள், பத்மினியும் அவன் வசப்பட்டிருப்பாள். தெய்வாதீனமாக பிரதாபசிம்ஹனுக்கும், பத்மினிக்கும் உதவியாக வெளியிலிருந்து ஓடிவந்த, தேகபலமும் வீரமும்படைத்த, இராஜபுத்திரவீரர்பலர் கோட்டையின்கதவு சாத்தப்படுவதை அறிந்து வேகமாகச்சென்று கதவை மூடாதபடி தடுத்து உட்புகுந்தனர்.

இதைக்கண்ட டாட் அங்குத் தனித்துநின்ற ஒரு குதிரையின்மீதேறி பட்டணத்திற்குள் விரைவாகச் சென்றான். பிரதாபசிம்ஹன் தன்வீரர்கள் தன்னைச்சூழ ஆப்கானியர்களை எதிர்த்துக்கொண் டிருந்தான். அவனைச்சுற்றிலும் இராஜபுத்திரவீரர்களிலும் பலர் விழுந்து இறந்துகிடந்தனர். பத்மினியோ வில்லையும் அம்பையுங்கையில் பிடித்த வண்ணம் யுத்தம் செய்துகொண்டிருந்தாள். எவ்வளவுநேரம் சண்டைசெய்வது? அவளுக்குக் களைப்பு உண்டாயிற்று. அவளுக்குப் பாதுகாப்பாக அவளைச்சுற்றிலும் அநேக இராஜபுத்திர வீரர்கள்நின்று ஆப்கானியர்களை எதிர்த்துக்கொண்டிருந்தனர். பத்மினியோ தனக்கேற்பட்ட களைப்பினால் கடும்புயலில் சிக்கிய மரக்கலம்போல் தளர்வுற்றாள்.

இதற்கிடையில் பட்டணத்திற்குள் ஓடிய ஆப்கானியத் தலைவனாகிய டாட் அளவற்ற ஆப்கானிய வீரர்களோடு திரும்பிவந்து இராஜபுத்திரர்களின் தலைவனாகிய பிரதாபசிம்ஹனை எதிர்த்தான். வரவர ஆப்கானியவீரர்களின் தொகை பெருகிக்கொண்டேயிருந்தது. எதுவரினும் இராஜபுத்திர

வீரர்கள் அதை ஒரு பொருளாகமதியாமல் பின்னும் வீரத்துடனும், ஆவேசத்துடனும் ஆப்கானியவீரர்களை எதிர்த்தனர். சண்டையின் மும்மரத்தை சொல்லமுடியாது. சில மணிநேரம்வரையில் இருகட்சியாரும் வீராவேசத்துடன் போர்புரிந்தனர். ஆப்கானியரே ஜயமடைவார்களெனத் தெரிந்தது. அதைக்கண்ட பிரதாபசிம்ஹன் டாட் ஒழிந்தாலன்றி ஆப்கானியர்களின் வீரங்குன்றுதென்பதை உணர்ந்தான். உடனே அவன் தன்னை எதிர்த்துச் சண்டைசெய்துகொண்டிருந்த ஆப்கானிய தலைவனாகிய டாட் என்பவனை மிகச் சாமர்த்தியமாக, சிரமப்பட்டு, சிறைப்படுத்தினான்.

பிரதாபசிம்ஹன் எதிர்ப்பார்த்தபடியே தலைவன் சிறைப்பட்டான் என்னும் சமாசாரத்தைக் கேள்விப்பட்டவுடன் ஆப்கானிய வீரர்கள் ஊக்கங் குறைந்தவர்களாய்ச் சிதறுண்டு ஓடினர். எஞ்சினின்றவர்கள் இரஜபுத்திர வீரர்களிடம் அடைக்கலம் புகுந்தனர். இவ்வாறாகப் பிரதாபசிம்ஹன் பூரணஜயத்துடன் இராஜகிரி கோட்டையைக் கைப்பற்றினான்.

அதன்பிறகு அஜிசித்சிங்கும் வந்து சேர்ந்தார். 'அவனைக் கொல்லவேண்டாம். பிழைத்துப்போகட்டும்' என்று பத்மினி வேண்டிக்கொண்டபடியால் பிரதாபசிம்ஹன் டாட் என்னும் ஆப்கானியதலைவனை உயிருடன் ஊரை விட்டுப் போகுமாறுகூறி அனுப்பிவிட்டான்.

ஆப்கானிய தலைவனுக்கோ பத்மினியின்மேல் ஏற்பட்ட ஆசை தணியவில்லை. அவளை நேரில் பார்த்தபிறகு அவனுக்கு அவள்மீது பின்னும் அதிகப்பிரியம் ஏற்பட்டது. அதனால் தான் அடைந்த அவமானத்தையும் அவன் ஒரு பொருளாக மதிக்கவில்லை. 'என்றைக்கேனும் ஒரு நாளைக்கு நான் இவளைக்கொண்டு செல்லுகிறேன்' என்று அவன் தன்னுள் எண்ணிக்கொண்டு போனான்.

அவன் வெகுநாள் உயிருடன் இருந்தான். அவன் எவ்வளவோ முயன்றும், அவன் முயற்சி பலன் தரவில்லை. பிரதாபசிம்ஹறன் தன்வாக்குறுதிப்படி இராஜகிரி இராஜ்ஜியத்தை அஜிசித்சிங்குக்குக் கொடுத்துவிட்டான். அஜித்சிங்கும் தமது வாக்குறுதிப்படி பத்மினியைப் பிரதாபசிம்ஹறனுக்குக் கலியாணம் செய்துகொடுத்தார். ஆயினும் அதற்காகப் பிரதாபசிம்ஹறன் சந்தோஷப்படாமல் தனக்காக யுத்தத்தில் தங்கள்உயிரைவிட்ட வீரர்களைநினைத்துப் பெரிதும் வருந்தினன்.

சிலவருடங்களில் பிரதாபசிம்ஹறன் அழகிய புத்திரிகளுக்கும், வீரமுள்ள புத்திரர்களுக்கும் தலைவனாயினன். அப்புத்திரர்கள் பிற்காலத்தில் இரஜபுத்திர இராஜ்ஜியத்தை முற்றிலும் தங்கள் ஆளுகைக்குள் வைத்து மிகச் சிறப்பாக அரசாண்டு வந்தனர்.

---

# கனகரத்தினம்

அல்லது

## அநாகரிக நாடகத்தால் நேர்ந்த அவமானம்!

---

### அத்தியாயம் 1

நாடகசாலை.

**கனகரத்தினம்** சென்னையிலிருந்த ஒரு செல்வச் சீமானின் ஏகபுத்திரி. அச்சீமானின்பெயர் ஸ்ரீநிவாசர். அவர் இறந்துபோகும்போது அவருடைய திரண்ட ஆஸ்திகளை அவர் கனகரத்தினத்திற்கு உயில் (Will) எழுதி வைத்து மாண்டார். கனகரத்தினம் போலி நாகரிகத்திற் றேர்ந்தவள். பார்வைக்கு மிக அழகாகவே காணப்படுவாள். அவள் கணவன் உத்தமகுணமும், சத்தியநெறியும் வாய்ந்த ஓர் சாது. ஆனால் அவரும் செல்வத்திற் சிறந்த சீமானேயாவர். நிற்க,

ஒருதினம் கனகரத்தினம் தன் கணவனைப்பார்த்து, "இன்று விநோதரஞ்சித வித்தியாபூஷண சபையார் அல்லி அர்ஜ்ஜுனை என்னும் நாடகத்தை நடித்துக் காட்டப் போகிறார்களாம். அவர்கள் இவ்வூரில் இதுவரையில் நடத்திய நாடகங்களிலெல்லாம் இது மிக நன்றாயிருக்குமாம். நாம் இன்றைக்கு அவசியம் போய்ப் பார்க்கவேண்டும்'' என்று மொழிந்தாள். அதற்கு அவள்கணவன் சிவராஜன், கனகா! என்ன உனக்கு பித்தம்பிடித்துவிட்டது! உன் கட்டாயத்தின்மீது இதுவரையில் மேற்படி நாடகக் கம்பெனியார்களால் நடித்துக் காட்டப்பட்ட எட்டு நாடகங்களை நாமிருவ

ரும் சென்று பார்த்தோம். அவைகளில் ஒன்றேனும் என் மனதிற்கு பிடித்ததாயில்லை. நாடகத்தலைவன் தலைவியாக வந்து நடிக்கும் இருதடியர்களும் சபையில் பெண்மக்கள் இருக்கிறார்கள் என்னும் எண்ணம் ஒரு சிறிதுமின்றி அசங்கிதமான பல காமச்சுவைகள் நிரம்பிய பாட்டுகளைப்பாடுவதும், சபையிலுள்ள அவர்களைப்போன்ற யோக்கியதையுடைய—அயோக்யதையுடைய—சில தடியர்கள் அவ்விதப் பாட்டுகளைக்கேட்டு மெச்சி சந்தோஷிப்பதும்: கைதட்டுவதுமாகவே எப்போதும் அந்நாடகசாலையில் நாடகங்கள் நிகழ்கின்றனவேயன்றி உண்மையான நல்லறிவை அந்நாடகக்காரர்கள் பொதுஜனங்களுக்குப் புகட்டுவதில்லை. அத்தகையவர்கள் நடத்தும் நாடகங்களை எக்காலத்திலும் இல்லாது இப்போது நீ தவறாமல்பார்க்க விரும்புவது எனக்கு வியப்பைத் தருகின்றது! கனகா! வேண்டாம். வேறு ஒழுங்கான நாடகக்காரர்கள் இவ்வூரில்வந்து நடிக்கும் போது பார்த்துக்கொள்ளலாம்.'' எனப்பகன்றார்.

கனகரத்தினம், "ஆம். எப்போதும் நீங்கள் இப்படித் தானே! என் தந்தை இறந்தபின்னர் தாங்கள் என்னிஷ்டப்படி ஒன்றுமே செய்வதில்லை'' என்று விசனித்தாள்.

இளகிய மனதுடைய சிவராஜர் சுமார் நாற்பது வயதுடையவர்—இரண்டுகுறைய இருபத்தைந்து வயதுடைய தமது மனைவியின் இஷ்டத்திற்கு மாறாக நடப்பதற்கு இடமில்லாதவராக அன்றிரவு 'அல்லி அர்ஜ்ஜுனா' என்னும் நாடகத்தைச்சென்று காண்பதற்குச் சம்மதித்தார்.

இரவுமணி ஒன்பதாயிற்று. கனகரத்தினமும், அவள் கணவன் சிவராஜரும் உண்டு உடுத்தித் தங்களுக்குச் சொந்தமான மோட்டார்காரிலேறி விநோதரஞ்சித வித்தியாபூஷண நாடகசாலைக்குச்சென்று டிக்கட்பெற்று, முதல்

வகுப்பில் அமர்ந்தனர். வாலிபர்களின்மீது வஞ்சகவலைவீசி பரிசுத்தமான அவர்களைப் பாழ்ப்படுத்தும் தாசிகளும், பணக்கஷ்டம் இன்னதென்றறியாமல் தங்கள் முன்னோர்கள் அரிதிற் சேகரித்தபொருள்களை அழிக்கும் காளையர்களும் காமுகர்களுமே அன்று அந்நாடகசாலையில் நிறைந்திருந்தனர். நாடகமேடையின் முன்புறம் தொங்க விட்டிருந்த திரையில் அன்று இறந்துபோகவிருக்கும் வயோதிகனுக்கும், காம இச்சையை உண்டாக்கத்தக்க பல பெண்களின்—இடுப்பிற்கு மேல் துணியில்லாத பல மலையாளப் பெண்களின்—உருவங்கள் வரையப்பட்டிருந்தன.

குறித்த நேரமாயிற்று. நாடக ஆரம்பத்தைக் குறிக்கும் மணியும் ஒலித்தது. முன்புறம் தொங்கவிடப்பட்டிருந்த திரையும் சுருண்டுகொண்டே மேலே போயிற்று. நாடகபாத்திரர்களும் தோன்றி நாகரிகமாக அல்ல அநாகரிகமாக நடித்தனர். ஒவ்வொரு அங்கமும் முடிந்து அவ்வி அயர்ந்து நித்திரையிலிருக்கும்போது, அர்ஜுனன் பாம்புருவினின்றும் நீங்கிநடிக்கும் காக்ஷிதோன்றியது. அந்தக் காக்ஷியில் நாடகத்தலைவன் நடந்துகொண்டவிதம் மிகவும் அசம்பாவிதமே. அவன் பாடிய காமச்சுவைநிறம்பிய பாட்டுக்களை கற்புடைய ஸ்திரீ, புருஷர் யாவராயினும் கேட்டால் மனம் புண்படுவர். அந்நாடகசாலையில் அவ்வித பாட்டுக்களைக்கேட்டுப் பல்லோர்கள் கரகோஷம்செய்து ஆ-வாரித்தனரெனினும் சிலர் மனம் புண்பட்டன.

நாடகத் தலைவனின் பார்வையெல்லாம் கனகரத்தினத்தின்மீதிருந்தது. கனகரத்தினத்தின் பார்வையும் அங்ஙனமே நாடகத்தலைவன்மீது சென்றிருந்த தென்பதை நாம் சொல்லவேண்டியதில்லை. களங்கமற்ற அவளுடைய மனம் சகவாச தோஷத்தாலும், நாடகத்தலைவனின் அநாகரிகச் செய்கையினாலும் மாறுபடலாயிற்று.

நாடகம் சரியாக இரண்டுமணிக்கு முடிந்தது. எல்லோரும் தத்தம் இருப்பிடங்களுக்குப் போகலாயினர். தாசிகள் தங்கள் வலையிற்சிக்கிய சில காளையர்களோடு தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்றனர். சிவராஜரும் கனகரத்தினமும் தங்கள் மோட்டார்காரிலேறி தங்கள் வீட்டிற்குச் செல்லலாயினர். அப்போது சிவராஜர் கனகரத்தினத்தைப் பார்த்து "கனகா! எப்படி இருக்கிறது நாடகம்?" என்று கேட்டார்.

கனகரத்தினம்:—ஏன்! நாடகத்திற்கென்ன? மிகநன்றாகத்தா னிருந்தது.

சிவராஜர்:—என்ன ! நன்றாயிருந்ததா? இந்த ஆபாச நாடகமா? உனக்கு நன்றாயிருந்தது?

கனகரத்தினம்:—எனக்குமட்டுமா நன்றாயிருந்தது? எத்தனைபோபேர் நாடகம் நடக்கும்போது நடிகர்களின் திறமையை மெச்சிக் கைதட்டி ஆரவாரித்தனரே! அதனால் எல்லோரும் இன்று நடந்த நாடகத்தை மெச்சினார்கள் என்பது உங்களுக்குத் தெரியவில்லையா?

சிவராஜர்:—தெரியும். எத்தகைய யோக்கியதையுடையவர்கள் இன்று நடந்த நாடகத்தை மெச்சிக்கொண்டாடினார்கள் என்பது தெரியும். இன்றோடு இக்கம்பெனியாரின் நாடகத்தை மறந்துவிடு.

என்று இவ்விதம் சிவராஜர் சிறிது கடுமையாகக் கூறியவுடன் கனகரத்தினம் வேறுபக்கமாக வெறுப்புடன் தன் தலையைத் திருப்பிக்கொண்டு மௌனமுற்றாள்.

---

## அத்தியாயம் 2

### துராலோசனை

"என்னசொன்னார்? போனகாரியம் பழமா? காயா?" என்று கூனி என்னும் கிழவியைப் பார்த்துக் கேட்டாள் கனகரத்தினம்.

கூனி:—என்னபோ! நீ கொடுத்த ரூபா நான் ஒப்புக்கொண்ட வேலைக்குப் போதுமானதல்ல. அப்ப! என்ன சிரமம்! வெட்கங்கெட்ட பிழைப்பு! அந்த நாடகத் தலைவன் நாகநாதன் சாமானியனா? என்னபிகுவு செய்கின்றான். நல்ல தரகுபேரத்தை ஒப்புக்கொண்டேன்.

கனகரத்தினம்:—"என்னபாட்டி இப்படிச் சலித்துப் போகிறாயே." என்று ஒரு நூறு ரூபாய் நோட்டை அவள் கையில்வைத்து, "இன்னும் வேண்டிய ரூபாய்கள் தருகின்றேன். நீபோனகாரியம்என்ன நன்மையா தீமையா? சொல் சீக்கிரம் என்று கூறினாள்.

முன்பெற்றுக்கொண்ட இருநூறு ரூபாவோடு பின்னும் ஒருநூறு ரூபாவைக்கண்ட கிழவிக்குச் சந்தோஷ மேலிட்டுக் கனகரத்தினத்தைப்பார்த்து,'மகளே! நீ இருக்கும்வரை எனக்கென்னகுறை! ஒன்றுமில்லை. உன் மனப்படி நடந்துகொள்ளத் தவறுவேனா? நாடகத் தலைவன் நாகநாதனிடம் எப்படிப் பேசவேண்டுமோ அப்படியெல்லாம்பேசி நீகொடுத்த காகிதத்தையும் அவனிடம் கொடுத்தேன். அவன் அதைப் படித்துவிட்டு—'என்றுகூறிப் பின்னும் கிழவி ஏதோசொல்லப்புகுமுன் கனகரத்தினம் அவள் வார்த்தையை மறுத்து, "அதைப் படித்துவிட்டு—என்ன சொன்னார்?' என்று அதி ஆவலுடனும் தீவிரத்துடனும் கேட்டாள்.

கூனி:—"கனகரத்தினம், என்னடி அம்மா அவ்வளவு

அவசரப்பட்டால் நான் எப்படித்தான் கூறுகிறது!'' என்றுசொல்லி மறுபடியும் முன் கூறியவார்த்தையைத் தொடர்ந்து, "அவன் அதைப்படித்துவிட்டு சற்றுநேரம் எதைப்பற்றியோ ஆலோசித்தபிறகு "உன்னை இன்றுமாலை சரியாய் ஆறுமணிக்கு இவ்வூரிலுள்ள கயிலாசநாதர் ஆலயத்திற்கு என்னேடு வரும்படி கூறினன். தவருமல் அந்த நேரத்தில் தான் அங்கு வந்திருப்பதாகவும் சொன்னன்'' எனக்கழறினள்.

அதற்கு "பாட்டி அப்படியானல் மூன்றுமணிக்கெல்லாம் என்கணவர் புத்தூரிலுள்ள என் தங்கையைப் பார்த்து வரப்போகின்ருர். அதன்பிறகு நாமும் கோவிலுக்குப் போகிறவர்களைப்போல் கைலாசநாதர் ஆலயத்திற்குச் செல்லலாம்'' எனப்பகன்ருள்.

"ஆம். அப்படியே செய்யலாம்'' என விளம்பினள் சனகம்.

---

## அத்தியாயம் 3

### கனகரத்தினமும், நாகநாதனும்

'அப்படியானல் உன் கணவனைப்பற்றி உனக்குப் பயமில்லையா?'' என்று கேட்டான் நாகநாதன்.

"இல்லை, எனக்குப்பயமில்லை. அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. தாங்கள் பயப்படவேண்டாம். என் இஷ்டப்படி இலக்ஷரூபா பெறுமான என் ஆஸ்திகளோடு தங்களுடன்வாழ எனக்குப் பிடித்தமிருக்கும்போது என்னை தடைசெய்ய எவராலும் முடியாது. சட்டமும் எனக்கு இடங்கொடுக்கும். அஃது எனக்குத்தெரியும். என்கணவனைப்பற்றி எனக்கு அவசியம் இல்லை. தாங்கள்தான் எனக்கு வேண்டியவர்'' என்று நாகநாதனைப்பார்த்து நாணமின்றிக் கூறினள் கனகரத்தினம்.

அதற்கு நாகநாதன், 'நல்லது. உன் கணவனைப்பற்றி உனக்கு அவசியம் இல்லாவிடினும் நீ என்னோடு சேர்ந்து கொண்டால் செல்வச்சீமான்மகள் கனகரத்தினம் ஒரு நாடகக்காரனை விரும்பிச் சென்றுவிட்டாள் என்று ஊரார் உன்னைக் கேவலமாகக்கூறி ஏளனம் செய்யமாட்டார்களா? உலை வாயை மூடினாலும் ஊர்வாயை மூடமுடியுமா?' என்றான்.

"யாரைப்பற்றியும் எனக்கு அவசியமில்லை. ஊர் அபிப்பிராயம் என்ன! என் இஷ்டம்! தாங்கள்மட்டும் எப்போதும் என்னருகி லிருக்கக்கிடைத்தால் அதுவே போதுமானது!" என்றுவிளம்பினாள் வேசைக்கிணையான கனகம்.

"கண்மணீ! திரண்டசெல்வத்தோடு என்னை நாடி நீவரும்போது உன்னைவிட்டகல என்மனம் எப்படிச் சகிக்கும். உன்னை என் உயிர்போல் பாவிக்க எனக்கு யாதொரு தடையுமில்லை. நிற்க. உன்னைப்பற்றி ஊரார்கூறும் அபிப்பிராயத்தை நீ பொருட்படுத்தாவிடினும் என்னைப்பற்றி அவர்கள் ஏதேனும் குறைகூறக்கூடும். அதற்காகத்தான் நான் அஞ்சுகின்றேன்" என்று நாடகத் தலைவனான நாகநாதன் விளம்பினான்.

"அப்படியானால் அதற்கு என்னசெய்வது" என்று கேட்டாள் வேசை.

"உன்னிடம் உன் ஆஸ்திகள் ரொக்கப்பணமாக இருக்கிறதா? அல்லது வேறு எப்படி யிருக்கிறது?" என்று கேட்டான் நாகநாதன்.

"ரூபாய்களாகவும் நகைகளாகவுமே யிருக்கின்றன. நகைகளை நான் அடியோடு கொண்டுவந்துவிட முடியும். ரூபாய்கள் இவ்வூரிலுள்ள வைசிய பாங்கியின் கிளை ஆபீஸில் (Branch office) இருக்கின்றன. வேண்டும்போது வாங்கிக்கொள்ளலாம்" எனப்புகன்றாள் கனகரத்தினம்.

"நல்லது, கனகா, நான் ஒப்பந்தஞ் செய்துகொண்ட

படி இன்னும் ஒருமாதம் வரையில் இவ்வூரில் நடிக்கவேண்டியவனு யிருக்கின்றேன். அதன் பிறகு இரங்கூனுக்குப் போகப்போகின்றேன். அதற்குள் நீ பாங்கியில் இருக்கும் ரூபாய்களில் இருபதினுயிரம் வாங்கி எனக்குக் கொடுத்தாயானுல் நான் நாடகத்திற்குவேண்டிய திரைகள், உடைகள் முதலியவைகளைத் தயார் செய்துகொள்ளக்கூடும். பாக்கி ரூபாய்களைவாங்கி இவ்வூரிலுள்ள, அரு. மக. மசு. பக. செட்டியார் கடையில் கொடுத்து இரங்கூனிலுள்ள அவருடைய கடைக்கு உண்டியல் வாங்கிக்கொள். நாம் இரங்கூனுக்குப் போகும்பரியந்தம் நம்முடைய நேசப்பான்மை மிக, இரகசியமாகவே இருக்கட்டும்! நான் இப்போது கேட்ட இருபதினுயிரம் ரூபாய்களைமட்டும் இன்னும் இரண்டு மூன்றுநாள்களில் கொடுத்தாயானுல் நலமாயிருக்கும்'' என்று நாகநாதன் விளம்பினுன். அதற்குக் கனகரத்தினம், "ஆஹா! நாளையதினம் இருபதினுயிரம் ரூபா பாங்கியிலிருந்து வாங்கித்தருகிறேன். மற்றவிஷயங்களிலும் தாங்கள் கூறியபடியே நடந்துகொள்ளுகின்றேன். நம்முடைய சந்திப்பைப்பற்றி என்னுடைய வீட்டிலேயே என்கணவன் இல்லாத சமயத்தில் ஏற்பாடு செய்துகொள்ளுகின்றேன். தாங்கள்மட்டும் கூடிய சீக்கிரத்தில் இரங்கூனுக்குப் போகும் விஷயத்தைக் கவனியுங்கள்.'' என மொழிந்தாள்.

"அப்படியே ஆகட்டும்'' என்றுன் நாடகத்தலைவன்.

பின்பு ஒருவரையொருவர் விட்டுப்பிரிய மனமில்லாமல், கைலாசநாதர்கோயில் ஆயிரங்கால்மண்டபத்தின் இருளடைந்தமூலையினின்றும் பிரிந்துசென்றனர். ஐயோ! நாகரிக உலகமா இது?

---

## அத்தியாயம் 4

### நண்பர்கள்

"அடே கோவிந்து, ஓர் ஆட்டம் போடலாமா? பிடி ஆட்டம் போடலாம். எல்லோருக்கும் சம்மதந்தானே?" என்று கேட்டான் சண்முகசுந்தரம்.

"போடாபோ. பிடி,பிடி என்று கழுத்தைப்பிடிக்கின்ருய்; பிடி ஆட்டம் இங்கு ஒருவருக்குந் தெரியாது. 304 ஆடலாம் என்ன சொல்லுகிருய்?" என்ருன் மாசிலாமணி.

கோபாலன்:—அடே 304 எல்லோருக்குஞ் சம்மதந் தான் அதை ஆடலாம்."

சந்திரன்:—"எனக்கு யாராவது ஒரு சிகரட் கொடுத்தால்தான் என்னல் ஆடமுடியும். காலையிலிருந்து சிகரெட்டைக் கண்ணுல்கூடக் காணவில்லை. சிகரேட்டைப் பற்ற வைத்து இரண்டு இழுப்பு இழுத்தால்தான் ஆட்டம் அழகாய் இருக்கும்."

சண்முகசுந்தரம்:—என்னடா உன் எழவு! எப்போதும் இப்படித்தான். சிகரட் சிகரட் என்று சிகரட்பிசாசாய் இருக்கின்ருய், இந்தா அழுதுக்கொள். ஒரு சிகரட்."

சந்திரன்:—"போடாபோ! இந்தச் சிகரட்டைப் பிடித்தால் உடம்பு எதற்காகும்? கத்தரிக்கோல் மார்க் சிகரட் தான் நான் பிடிப்பது வழக்கம்.

ஜயராமன்:—"அடே அமிஞ்சியில் வந்தால் நேவிகட், த்ரீகாஸில்ஸ் சிகரட்களைக்கூடக் கேட்பான். அவன் வேண்டாம் என்ருல் என்னிடம் கொடு.

சண்முகசுந்தரம்:—"அப்பா! நீ குழந்தை யோக்கியம் பேசாதே வாயைமூடு.

கோவிந்தன்:—என்னடா இழவு, ஒரு சிகரட்டுக்கு இந்தக் கூச்சல்! சந்திரா! இந்தா ஒரு கத்திரிக்கோல் மார்க் சிகரட்டு.

சந்திரன்:—பேஷ் கோவிந்தன் என்றால் அந்தப்பேர் உனக்கே தகும். இனி ஆட்டம் ஆரம்பிக்கலாம்.

சண்முகசுந்தரம்:— "அடே ஜயராமா என்னடா போய்ப்படுத்துக்கொண்டாயே! அடே தூங்குமூஞ்சு.

சந்திரன்:—இராத்திரிக்கு நாடகம் பார்க்கப்போகிறுனும். அதற்கு இப்போதே தூங்க ஆரம்பித்து விட்டனர்.

சண்முகசுந்தரம்:—பணங்கொடுத்தா அல்லது இலவசமாகவா நாடகம் பார்க்கப்போவது?

சந்திரன்:—பணமேது இழவேது தேவூரிலிருந்து இங்குவந்து தன்னை இவன் பெரிய பணக்காரனென்று கூறிக்கொள்ளுவதோடும், மூக்குக்கண்ணுடியும் கருப்புச் சட்டையும், காலர், டையும், காலில் பூட்ஸும் (Boots) போட்டுக்கொண்டு நம்மை ஏமாற்றுகிறுன். இவன் நாடகம் பார்ப்பது அமிஞ்சியில்தான். அந்த இரகசியம் வேறு.

ஜயராமன்:—"அடே சந்திரா அதிகமாய் பேசாதே, கமலநாதனை அந்த ஆபீசிலிருந்து வெளியேற்றிவிட்டதைப் போல உன்னையும் செய்து விடுவேன்."

சந்திரன்:—அது உன்னால் முடியாது. அடே! என்ன உன்னையும் அறியாமல் பேசுகின்றாய். கமலநாதனிடம் உனக்கொரு வேலைபார்க்கும்படி தேவூரிலிருந்து அவனுக்கு நீ பலதடவைகளிலும் கடிதங்கள் எழுதினை. அவன் உன் விஷம்போன்ற எண்ணத்தை யறியாது தானிருந்த ஆபீஸிலேயே உனக்கொரு வேலைபார்த்து அழைத்துக் கொண்டான். அது யாருக்குத்தெரியாது? பிறகு நீ செய்நன்றி கொன்றவனுக அவனிடம் காரணமின்றித் துவேஷம் பாராட்டினை. அவனைப்பற்றிப் பல இடங்களிலும் தூஷித்தனை. இத்தகைய உன் முகத்தில் விழிக்கமுடியாமல் அவன் அந்த ஆபீஸிலிருந்து தானுகவே வெளியேறினனே யன்றி உலகானுபவம் தெரிந்தவன்போல் நடித்து உலகானுபவம்

ஒருசிறிதும் தெரியாத நீயோ, கமலநாதனை அந்த ஆபீஸி லிருந்து வெளியேற்றினை. மறுபடியும் அப்படிச் சொல் லாதே. அறக்கடவுள் உன் நாவை அறுக்காமல் விடாது.

சண்முகசுந்தரம்:—சந்திரா: என்ன இது வீண்வம்பு. ஜயராமன் வீண் டம்பக்காரன் என்பது எல்லோரும் அறிந்தவிஷயம். அவன் பேசுவது முன்னுக்குப்பின் முரணன வார்த்தைகளாக விருக்கும். அதையெல்லாம் பொருட்படுத்தாமல் அவனை சீர்த்திருத்தி நல்லவழியில் நடக்கச்செய்யவேண்டியதே நமது கடமை.

கோபாலன்:—எப்பொழுதும் பணம் இருந்தால் அடக் கம்வேண்டும். பிறர் குறைகூறினும் அதைப் பொறுத்து நல்லவழியில் நடக்கவேண்டும். இதை ஜயராமன் அறிவது அவசியம். கமலநாதன் புகழ்யெங்கும் பரவி நிற்கின்றது. அதற்காக செய்நன்றியை மறந்து அவன்பேரில் பொறாமை கொள்வானேன். 'ஆமைபுகுந்தவீடும் அமீனுபுகுந்தவீடும் விடிந்தாலும் விடியும். பொறாமைபுகுந்தவீடு விடியாது.' 'குன்றத்தனை இருநிதியும் பண்டக்தோராயினும் அன்றைப் பகலே அழியினு மழிவர்' என்னும் வார்த்தை ஞாபகத்தி லிருக்க வேண்டும்?

ஜயராமன்:—அடே நீங்கள் யோக்கியர்கள். நீங்கள் முதலில் யோக்கியர்களாக நடந்துகொள்ளுகிறீர்களா என் பதைக் கவனியுங்கள். இவ்வூரில் நடிக்கும் நாடகத்தலைவன் நாகநாதன் அரங்கத்திலிருக்கும்போது ஏதோ அழகாகப் பேசுகிறுன். சிவராஜரின் மனைவியாகிய கனகரத்தினம் பெண்களிடையில் பிரமாதமாகக் கற்பைப்பற்றிப் பிரசங்கம் புரிகின்றுள். இரகசியத்திலோ நாகநாதனும் கனகரத்தின மும் சேர்ந்து காமவேள் நடனசபையில் பேசிநடித்து வாழ்வதை எவர் அறிவர்! அப்படித்தான் என்னை குறை கூறும் நீங்கள் அந்தரங்கத்தில் எப்படி இருக்கின்றீர்களோ!

அதை யார்கண்டார்கள்.

சண்முகசுந்தரம்:—ஆம்; பச்சைக்கண்ணாடி போட்டுக் கொண்டு உலகைப்பார்த்தால் உலகமெல்லாம் பச்சை யாகவே தோன்றும். அதைப்போலவே நீயும் கனகரத்தின மும் நாடகக்கார நாகநாதனும் நடத்தை கெட்டவர்களா யிருந்தால் எல்லோரும் அவ்விதமே நடத்தை கெட்டவர் களா யிருப்பார்களென்பது உனது எண்ணம் போலும்!

கோவிந்தன்:—"அடே வீண்வம்பு ஏண்டா? யாராவது எக்கேடேனும் கெடட்டும். கனகரத்தினம் விஷயந்தான் ஊர்முழுவதும் சிரிக்கின்றதே! அதைப்பற்றி பேசுவா னேன்? வாருங்கள் ஒரு ஆட்டம் 304.

---

## அத்தியாயம் 5

### எஸ். எஸ். எலவங்கா

"கண்மணி! இந்த எஸ். எஸ். எலவங்கா" என்னும் கப்பல் மிகவும் அழகுடையதாக விருக்கிறது. நாம் முதல் வகுப்பு "டிக்கட்" வாங்கி இதில் இராவிட்டால் இவ்வளவு ஆனந்தத்தை அனுபவிக்கமுடியாது. பூரணச்சந்திரன் மிக நன்றாய்ப் பிரகாசிக்கின்றது. கப்பலும் கடலைப் பிளந்து கொண்டு மிகவேகமாய்ப் போகின்றது. கப்பலோட்டிகள் இன்னும் ஒரேநாளில் அதாவது இன்னும் இருபத்துநான்கு மணிநேரத்தில் கப்பல் இரங்கூன்போய்ச்சேருமென்று கூறு கிறார்கள். என்று கப்பலின் முதல்வகுப்பிலிருந்த அழகிய ஸ்பிரிங் சோபா (Spring Sofa) வின்பேரில் கனகரத்தினத் தின் அருகில் உட்கார்ந்து அவள்பேரில் உல்லாசமாய்ச் சாய்ந்துகொண்டு நாகநாதன் சொன்னான்.

"நல்லது கப்பலின் மேல்தட்டில்போய் சற்று சந்திரோ தயத்தில் உலாவலாமா" என்று கேட்டாள் கனகம். "உலா

வுவோம்'' என்றுகூறி நாகநாதன் அவளோடு கப்பலின் மேல்தளத்திற்சென்று கைகோர்த்து உலாவுகையில் அவளைப்பார்த்து, "கண்மணி கனகா! நாம் ஊரைவிட்டுப் புறபட்டு முன்னரே நமக்குள் நேசமுண்டென்பதை ஊரார் அறிந்துவிட்டதாகத் தெரிகின்றது. அதைப்பற்றி உன் கணவர்உன்னை ஒன்றுங் கேட்கவில்லையா'' என்று கேட்டான்.

கனகரத்தினம்:—கேட்டார். அதற்குநான் இப்படியெல்லாம் ஊர்வதந்தியைக் கேட்டுக்கொண்டு என்னைக் கேட்கத்தகாத கேள்விகளை யெல்லாம் கேட்டால் நான் மனம்பொறுக்கமுடியாதென்று சற்று கடிந்து கூறினேன். அதோடு அவர் 'எப்படியாவது நல்லவள்என்றபெயர்தான் வேண்டும்' என்றுகூறி வாயடங்கிவிட்டார்.

நாகநாதன்:—அதுபோகட்டும் உன் கணவன் அறியாதபடி நீ நகைகளையெல்லாம் கொண்டுவந்ததைப்பற்றி கூட நான் ஆச்சரியப்படவில்லை. பாங்கியிலிருந்த ரூபாய்களை அடியோடுவாங்கி உன்கணவன் அறியாதபடி அந்தச் செட்டிக் கடையில் கொடுத்து எப்படி உண்டியில் வாங்கிக் கொண்டாய் என்பதுதான் எனக்கு ஆச்சரியத்தைத் தருகின்றது.

கனகரத்தினம்:—அது ஒரு பிரமாதமான செய்கையல்ல. பணத்தைக்கொண்டு சாதிக்கமுடியாத காரியம் எது? "அருளிலார்க் கவ்வுலகில்லை; பொருளில்லார்க் கிவ்வுலகில்லை'' என்னும் பழமொழிப்படி தானே தற்கால உலகம் நடைபெறுகின்றது. வைசிய பாங்கிலுள்ள காஷ்கீப்பரிடம் ஒரு 500 ரூபாய்க்களைக் கொடுத்து என்பேரில் பாங்கியிலுள்ள ரூபாய்களை உடனே தரும்படி கேட்டேன். அவர் அப்படியே செய்து முடித்தார்.

அந்த ரூபாய்களை அரு. மக. மசு. பக. கடையில்

கொடுத்துத் தலைமை குமஸ்தாவுக்கு ஒரு நூறு ரூபாய்களை நிவேதனம்செய்து இரங்கூனிலுள்ள அவர்களுடைய விலாஸக் கடைக்கு உண்டியில் தரும்படிக்கேட்டேன். அங்கும் இரகசியமாகவே காரியம் நடந்து உண்டியில் கைக்கு வந்தது. இதுதான் இரகசியம் இது ஒரு பிரமாதமான செய்கையென்று நான் எண்ணவில்லை.

நாகநாதன்:—உன் சமர்த்தே சமர்த்து. போகட்டும் கனகா! உன் கணவனைப்பற்றித்தான் நான் சிறிது கவலைப் படுகின்றேன். அவர் நிலைமை எப்படி இருக்கின்றதோ ?

கனகரத்தினம்:—என் இஷ்டத்திற்குப் பிடித்த மில்லாமலே என்னை விவாகம் செய்துகொண்ட அவன் ஞாபகம் எனக்கு வேண்டாம். அவனு எனக்குக்கணவன்? தாங்கள் தான். மாட்டுக்குக் கழுத்தில் கயிறுகட்டுவதுபோல் என் கழுத்தில் தாலி என்னும் ஒரு கயிற்றைக் கட்டிவிட்டதினுலேயே அவன் எனது கணவனுய்விட முடியாது. என் உள்ளன்பு உங்களைப்பற்றி நிற்கின்றது. நீங்கள்தான் என் கணவர்! என் காதலர்!

பிறகு காமம் கலந்தவார்த்தைகளை இருவரும் வெட்கமென்பது மருந்துக்குமின்றிப் பேசி அலுத்துக் கீழே கப்பலிலுள்ள தங்கள் ஜாகைக்குச் சென்றனர்.

---

## அத்தியாயம் 6

### தற்கொலை

முன் அத்தியாயத்தில் நடந்த சம்பவத்திற்குப் பிறகு சரியாகப் பன்னிரண்டுமாதங்கள் சென்றன. எஸ்.எஸ். எட்வாளு என்னும் கப்பல் சென்னை துறைமுகத்தை நோக்கி, சென்னைக்கும் இரங்கூனுக்கும் இடையே கடலில் ஓடிக் கொண்டிருந்தது. அப்போது ஆகாயத்தில் சந்திரனில்லாமையால் எங்கும் கன்னங்கரேலென்று சமுத்திரஜலம்

பார்ப்பதற்குப் பயங்கரமாகக்காணப்பட்டது. தண்ணீரைக் கப்பல் பிளந்து செல்லும் சப்தம் காதை அடைத்தது. அப்போது இரவு மணி பத்திருக்கும். கப்பலில் கப்பலோட்டிகளில் அந்த சமயம் அலுவல் பார்க்கவேண்டியவர்கள் தவிர மற்றவர்கள் அயர்ந்து நித்திரையி லிருந்தனர். அப்போது கப்பலின் இரண்டாவது வகுப்பு மேற்றளத்தில் தன்னை எவரும் பார்க்கமுடியாத மறைவான ஓரிடத்தில் ஒருஸ்திரீ உட்கார்ந்துகொண்டிருந்தாள். அவள் கனகரத்தினம் என்பதைச் சொல்லாமலே வாசகர்களே யூகித்தறியக்கூடும்.

அவள் "ஆ! என்னுடைய நிலைமை இப்படியாகுமென்று நான் கனவிலும் கருதவில்லை. செல்வத்திற் சிறந்த ஸ்ரீநிவாசருக்குப் புத்திரியாகப்பிறந்து கல்வியறிவிலும் சிறந்த குணத்திலும் இன்னும் பல எழில் நலங்களிலும் சிறந்து விளங்கிய சிவராஜரை மணந்தேன். புத்தியற்ற கர்வமுற்ற பணக்காரி என்னும் அகம்பாவமுள்ள என்னுடைய துர்க்குணத்தால் பசுப்போன்ற எனதுகணவரை இகழ்ந்து அவரை அதிகாரத்தோரணையில் பேசி இகழ்ந்து ஒரு நாடகக் காரனை நம்பிக்கெட்டேன். என் கணவர் எனக்குக்கூறிய நல்லுரைகளை அப்போது கர்வம் பிடித்து இகழ்ந்தேன். எவரால் ஒருத்தி கழுத்தில் நல்லொழுக்கமுடைய பெரியோர், பரிசுத்தமான அக்கினி, முழுமுதற் கடவுள் இவர்களின் முன்னிலையில் அவர்கள் சம்மதத்துடன் தாலி, (மங்கல்யம்) கட்டப்படுகின்றதோ அவருக்கு விரோதமாக அத்தாலியை அணிந்துகொண்டவள் நடந்து கொள்வாளானல் அவளை அவள் அணிந்துகொண் டிருக்கும் தெய்வீகசக்தியையுடைய தாலியே கொடிய விரோதியாய் நின்று ஒறுக்கும்என்பதை அறியாமல் அந்த நாடகக்காரன் முன்னிலையில் நான் என்கழுத்தில் என்கணவரால் கட்டப்பட்ட தாலியை வெறுங்கயிறென்று இகழ்ந்தேன்.

பரிசுத்தமான களங்கமற்ற எனதுகணவரை அவன் இவன் என்று மரியாதையின்றிப் பேசினேன். அதன் பலனைக் கண்டுவிட்டேன். "அரசன் அன்று கொல்லும்; தெய்வம் நின்றுகொல்லும்" என்னும் பழமொழிப்படி ஒரேவருடத்தில் என் துர்நடத்தைக்குத் தக்ககூலி தெய்வம் கொடுத்துவிட்டது! நான் தெய்வத்தை நொந்துகொள்ளமுடியாது. செய்த வினையிருக்கத் தெய்வத்தை நொந்துகொண்டால் மென்மேலும் கர்மமேயாம்.

"அந்த துஷ்டன் நாகநாதனின் நாடக நடிப்பிலும் காமாந்தகாரமான பாடல்களிலும் மயங்கி அவனுடைய நாடகத்தை என்கணவன் பேச்சையும் கேளாது நாடோறும் சென்றுபார்த்து அவன்பால் என் மனதைச்செலுத்தி அவனோடு இரங்கூனுக்கு ஓடினேன். அந்தப்பாவியோ என்னிடம் இருந்த ரூபாய்கள் கரையும்வரையில் என்னைக் கண்ணே! பெண்மணியே! காதற்களஞ்சியமே! வற்றாதத் திரவியமே! வளர்பிறையே! வானோர்போற்றும் தெள்ளமுதே! தேனே! என்தெவிட்டாத தீங்கனியே! என்று புகழ்ந்து என்னைப் பொன்போல் போற்றினன். "கேடு வரும்பின்னே மதிகெட்டுவரும்முன்னே" என்பதை அறியாத நான் அவன் வார்த்தையில் மயங்கி என்னிடமிருந்த பொருள்களையெல்லாம் இழந்து வெறுங்கையளாயினேன். அந்தச்சண்டாளன் என்கைவரண்டதை அறிந்து எனக்கும் தெரியாது தன் நாடகக்கம்பெனியோடு சிங்கப்பூர் போய்ச்சேர்ந்தான். பிறகு என்வயிற்றுப் பிழைப்புக்கு வேறுவழியில்லை. அதுபற்றி நான் படித்தவளென்று பல சபைகளிற் பலபேருக்கு உபதேசம் செய்து நடத்தைகெட்ட நான் இரங்கூனிலுள்ள அரு. மக. மசு. பக. கடையின் சொந்தக்காரன் பிரியத்திற்குட்பட்டு மானங்கெட்டேன் அவன் என் பேரிலிருந்தபிரியம் தீர்ந்தவுடன் என்னை எட்டியும்பாராமல்

ஒழிந்தான். பிறகு பலவிதத்திலும் மானங்கெட்டு தாசியினுங் கேடுகெட்டதாசியாகிய நான் என் கணவரிடம் வந்து அறியாமற்செய்த பெரும்பிழைகளைப் பொறுத்தருளுமாறு கெஞ்சிக் கேட்டுக்கொண்டால் ஜீவகாருண்யமே ஒருருவாக வந்த அவர் என்னைத் தமது திரண்ட ஆஸ்திகளில் கொஞ்சம் கொடுத்து எங்கேனும் தனியேசென்று வாழும்படி கூறி ஆதரிப்பார் என்று எண்ணி நான் இரங்கூனிலிருந்து இந்தக் கப்பலில் பிரயாணமானேன். இப்போது இக்கப்பலில் எனக்குக் கிடைத்த ஒரு பழயபத்திரிகையில் என்கணவர் சிலமாதங்களுக்குமுன் இறந்துவிட்டதாக எழுதப்பட்டிருப்பதைக்கண்டேன். அந்தோகெட்டேன். இனிநான் எங்குச் சென்று யாரை அண்டிப்பிழைப்பேன். சிலகாலங்களுக்கு முன் சென்னையில் வக்கீல் கைலாசநாதனின் மனைவி கமலவேணி காந்தீபனோடுகூடி கெட்டகதையை நான் அறிந்தவளாயிருந்தும் நான் என் புத்தியைக் கெட்டவழியில் உபயோகப்படுத்தி இக்கதிக்குள்ளானேன்.

"தெய்வம் தொழாள் கொழுநற் றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."

தெய்வவணக்கம் ஒரு சிறிதுமில்லாதவளாயினும் தன் கணவனைக் கடவுளாக மதித்து வணங்குகிற உத்தமி பெய் என்று கூறியமாத்திரத்தில் மழைபெய்யும். என்னும்பொய்யாப் புலவரின் வார்த்தையை அறிந்தும் அலக்ஷியம் செய்தமையால் எனக்கு இக்கதிவாய்த்தது. கணவனுடன் கானகம்சென்ற தமயந்தி, கணவனுக்காக எமனுடன் வாதாடிய சாவித்திரி, கணவன் மனங்கோணாது நடந்து கொண்ட நளாயினி முதலிய இன்னும் பல கற்புக்கரசிகளின் சரிதத்தைப் படித்தும், நான் முறைதவறினமையால் இக்கெதி வாய்த்தது. இதற்கெல்லாம் காரணம் புண்ணியோத்தமரான என் கணவரின் வார்த்தையை அலட்சியம் செய்து

நாகநாதனின் நாடகத்தைப் பலதடவைகளிலும் போய்ப் பார்த்தமையேயாம். அந்தோ உத்தமமான பரிசுத்த முடைய, தெளிந்த நல்லறிவுடைய கணவன்மார்களுடைய நற்போதனைகளை மீறி நடக்கும் பெண்களெல்லாம் 'என் கதியை' அடைவர் என்பது உண்மை!

"ஐயோ! சமுத்திராதேவி! இனிநான் இந்தக்கப்பலிற் சென்று கரைசேரப்பிரியப்படவில்லை. நான் முன்னர் என் கணவனோடு வசித்த ஊருக்கேனும் வேறு எவ்விடத்திற் கேனும் சென்றால் பின்னும் எனக்கு விளைவது அவமானமேயாகும். கடவுளே! என் மனசாட்சி என்னைக் கொல்லுகின்றது! தங்களிடம் நான் இறந்துபோகுமுன் மன்னிப்புக் கேட்க என் மனம் இடம் தரவில்லை. பொல்லாப் புழு மலிந்து துர்நாற்றம் வீசத்தகுந்த இந்த உடம்பின் பஞ்சேந்திரிய சேஷ்டைகளுக்கு மனம்போனபடி இடங்கொடுத்து கெட்டேன். இப்போது நான் சதமென்று நம்பின நாடகக்காரனெங்கே? 'பேதமை என்பது மாதர்க் கணிகலம்' என்னும் வார்த்தைக்கு நான்தான் இலக்கியமானேன். இப்போது விரிந்து பரந்துள்ள இந்தச் சமுத்திரத்தின் நடுவே நான் தனியளானேன்" என்று கூறி, கனகரத்தினம் கலகலவென்று கண்ணீருதிர்த்தாள். அவள் எவ்வளவு கொடியவளாய் இருந்திருந்தபோதிலும், அவள் கொடிய செய்கைகளையறிந்த கன்மனமுடையவர்கள்கூட அந்த நிலையில் அவளைக் காண்பார்களாயின் அவள் செய்த கொடிய செய்கைகள் அனைத்தையும் மறந்து மனம் உருகி நிற்பரென்பது திண்ணம்.

பின்னும் கனகரத்தினம் பெருமூச்செறிந்து, "இனி தாமதிப்பதிற் பிரயோசனமில்லை. கப்பலிலுள்ள எவரேனும் கண்டுவிட்டால் என் எண்ணம் நிறைவேறாமற் போய்விடும்" என்று சொல்லி, பின்னும் வாடிய முகத்

துடன் கண்ணீரை வடியவிட்டு ஆகாயத்தை நோக்கி, "எங்கு நிறைந்த ஏகநாதனே! இறைவனே! கடவுளே! யான் செய்த பிழைகள் கோடியிருப்பினும் பொறுத்தருள் வீர்களா? சமுத்திராதேவீ! நானும் உன்போல் பெண் தான். என் குற்றத்தைப்பொறுத்து என்னை ஏற்றுக்கொள். ஆ! என் கதி-என் நிலைமை-இப்படியோ இருந்தது! உலகி லுள்ள சகோதரிகளே! என் கதியைப் பார்த்தேனும் நீங் கள் நல்ல வழியில் நடவுங்கள்" என்று சொல்லிக்கொண்டே திடீரென்று ஒருவருமறியாவண்ணம் கப்பலிலிருந்து கண் கலங்கி கடலிற் குதித்து நீரில் மறைந்தாள். அந்தோ பரிதாபம்!

பரிதாபகரமான இக்கதை ஸ்திரீகள் ஒவ்வொருவரும் நந்நிலைமையிலிருந்து தீயவழியிற் புகுவரேல், படாதபாடு பட்டு முடிவில் மடிவர் என்னும் அரியதொரு கருத்தைக் கொண்டு முடிகின்றது.

---

# தீரமுள்ள வீரன்

இந்தியாவிலும், அதன் சார்பாயுள்ள வெளிநாடுகளிலும் முற்காலத்தில் பல வேறு மதத்தைச் சேர்ந்த பல அரசர்கள் அரசாண்டு வந்தார்கள் என்பது பிரசித்தமன்றோ? அவ்வாறு ஆண்டுவந்தவர்களில் மிகவும் சிறப்பு வாய்ந்து விளங்கியவர்கள் மொகலாயரே யாவர். மற்ற அரசர்களிடம் பல வீரர்கள் விளங்கியதைப் போலவே மொகலாயர்களிடத்திலும் நிகரற்ற பலவீரர்கள் இருந்தனர். அதனால்தான் மொகலாய வமிசத்தார் நெடுங்காலம் வரையில் ஏறக்குறைய இந்தியா முழுவதிலும் தங்கள் ஆட்சியைச் செலுத்திக் கொண்டிருந்தனர். நிற்க,

1526 - ஆம் வருடம், ஆப்கானிஸ்தானத்திலுள்ள அஜ்ரத் என்னும் தனி இராஜ்ஜியத்தில் ஒரு மொகலாய சிற்றரசர் அரசாண்டுகொண்டிருந்தார். அவருக்கு மகா வீரனை முக்கராப்கான் என்னும் பெயரினையுடைய தம்பி ஒருவன் இருந்தான். அவன் சிலகாலம் வரையில் ஏதோ வேலையாக வேறு ஊருக்குச் சென்றிருந்தான்.

வேற்றூருக்குச் சென்றிருந்த முக்கராப்கான் வேனிற் காலத்தில் தன் குதிரைமீதேறி வேறு ஆறு வீரர்கள் தன்னைச் சூழ்ந்து வர, அஜ்ரத் கோட்டையை நோக்கிச் சவாரி போனான். அவனும் அவன் வீரர்களும் இடைவழியில் எங்கும் தங்கவுமில்லை; இளைப்பாறவுமில்லை. அவர்கள் ஒரே வேகமாகச் சென்று அஜ்ரத் கோட்டையை நெருங்கினர். அக்கோட்டை அமைதியாகவும், நிச்சப்தமாகவும் விளங்கியது. சந்தோஷத்தினால் அக்கோட்டையிலுள்ளவர்கள்

அமைதியாக வாழ்ந்துகொண் டிருக்கின்றார்களா ? இல்லே; இல்லே.

முக்கராப்கான் கோட்டைவாயிலே யடைந்தான். கதவுகளெல்லாம் தூள் தூளாக உடைபட்டுக் கிடந்தன. கோட்டையின் பலபாகங்கள் அழிவுற்றுக் காணப்பட்டன. காண்பனவெல்லாம் அலங்கோலமாகக் கிடந்தன. இவைகளைக் கண்ட முக்கராப்கான் திடுக்கிட்டவனுகக் கோபாவேசத்துடன் கர்ஜ்ஜனைசெய்து தன் குதிரையை விட்டுக் கீழிறங்கி, வாளே உருவி கையிற் பிடித்தவண்ணம் கோட்டைக்குள் இருந்த அரண்மனைக்குட் சென்றான். அவனுடைய வீரர்கள் வெளியில் நின்றுகொண்டிருந்தனர். அரண்மனைக்குள் இருந்த பொருள்களெல்லாம் சின்னபின்னமாக்கப்பட்டுக் கிடந்தன. அதுமட்டுமா ? அவன் பார்க்குமிடங்களிலெல்லாம் பிணங்களே காணப்பட்டன. இதுமட்டுமன்று. பொக்கிஷப் பெட்டியும், ஆபரணப் பெட்டிகளும் சின்னபின்னமாக உடைபட்டு அதிலிருந்த பொருள்கள் கொள்ளையடிக்கப்பட்டிருந்தன. தரையின்மீது ஸ்திரீகளும், புருஷர்களும், குழந்தைகளும் இரத்தத்தில் உயிரற்றுக்கிடந்தனர். அரண்மனையின் மேல்மாடியில் அன்புள்ள தாதிகளும்,முக்கராப்கானின் சகோதரனுடைய மனைவியும், அவள் பக்கத்தில் அவளுடைய குழந்தையும் இறந்துகிடந்தனர். இறந்துகிடக்கும் முக்கராப்கானின் சகோதரனுடைய மனைவியின் கையில் ஒரு குத்து வாள் இருந்தது. அதனால் அவள் தற்கொலை செய்துகொண்டாளென்றே தோன்றியது. அவள் அவ்வாறு தற்கொலை செய்துகொள்ளவேண்டிய காரணமென்ன ? அவள் அணிந்துகொண்டிருந்த ஆபரணங்கள் ஒன்றுங் காணப்படவில்லை. அவளுடைய கைகளிலும், காதுகளிலும் காயமிருந்தது. அதனால் அவ்வாபரணங்கள் குரூரமாக அபகரிக்கப்பட் டிருக்கவேண்டு

மென்று தோன்றியது. இக்கோரமான காட்சியைக் கண்ட முக்கராப்கான் காரணந்தெரியாது பித்தம் பிடித்தவனைப் போலானான். என்ன செய்கிறதென்றே அவனுக்குத் தோன்றவில்லை. உற்ற விஷயத்தை உரைப்பவர் அங்கொருவருமில்லைபோலும்!

வெகுகாலமாக அவர்களுடைய குடும்பத்தைநேசித்து அவர்கள் அரண்மனையிலேயே இருந்துவரும் மகமதிய சந்யாசியொருவர் சற்று பிரக்ஞை தவறிய நிலையில் அங்கொரு மூலையில் உட்கார்ந்துகொண்டிருந்தார். அவருடைய வலது கைகளிலிருந்த விரல்களில் மூன்று வெட்டப்பட்டுக் கிடந்தன. அன்றியும், அவர் தேகத்தில் சில இடங்களில் காயங்கள் காணப்பட்டன. அதிகமென்ன? அவர் இறக்குந் தருணத்திலிருந்தார் என்றே சொல்லவேண்டும். ஆயினும் அவர் விரும்பினால் இன்னும் இரண்டொரு நிமிடம் வரையில் அங்கு நடந்த விஷயங்களை அவரால் சொல்லக் கூடும்.

தெய்வாதீனமாக அச்சந்யாசியை முக்கராப்கான் கண்டான். அவரை நெருங்கி நடந்த விஷயங்களென்னவென்று கேட்டான்.

உடனே அவர் அவனைப் பார்த்து, "நல்ல தருணத்தில் நீர் வந்துசேர்ந்தீர். இன்னும் சிறிதுநேரம் தாமதித்து வந்திருப்பீராயின் ஒன்றையும் உயிரோடு பார்த்திருக்க முடியாது. நமது சகோதரர் உங்களுடைய கொடிய விரோதியாகிய அந்த அரசனோடு சண்டைசெய்து மடிந்தார். அவருடைய சைனியங்களெல்லாம் கொல்லப்பட்டன. பகையரசன் என்னசெய்வானோ வென்றெண்ணி, ஊரிலுள்ள ஜனங்களெல்லாம் உயிர் பிழைக்க ஓடிவிட்டனர். இவ்விஷயத்தை நமது நாட்டைச் சேர்ந்த மலைகளிலுள்ள மன்சூர் என்னும் கள்வர் தலைவன் கேள்விப்

பட்டுத் தன் கொடிய கூட்டத்தாரோடு கோட்டைக்குள் வந்தான். கோட்டையில் உள்ள அரண்மனை ஸ்திரீகளுக்குப் பாதுகாப்பாக இருந்த வீரர்கள் அவர்களை எதிர்த்தனர். கொள்ளைக் கூட்டத்தாரின் தொகை எண்ணிக்கையில் அதிகமாயிருந்தபடியினால், வீரர்கள் அனைவரும் நிர்வகிக்கமுடியாமல் சண்டைசெய்து இறந்தனர். பின்னர் அவர்களை எதிர்த்த அரண்மனையிலுள்ள ஆண் பெண் எல்லோரையும் தயை தாட்சண்யமின்றி அக்கொடியவர்கள் கொன்றனர். அரண்மனைப் பொக்கிஷத்தை அடியோடு கொள்ளைகொண்டனர்; ஆபரணங்களை அபகரித்தனர். அவைகளுக்காகமட்டும் அவர்கள் வந்தவர்களாகத் தோன்றவில்லை. பரம்பரையாக உங்கள் வம்சத்தாரிடம் இருந்துவரும் விலைமதிக்கமுடியாத மாணிக்கக் கல்லை அபகரிக்கவே அவர்கள் வந்தார்களெனத் தெரிந்தது. அந்த மாணிக்கக் கல்லை அவர்கள் அபகரிக்கப் போகிறார்களென்பதை யறிந்த உங்களுடைய அண்ணியார் அதை என்வசம் கொடுத்து நீங்கள் வந்தால் உங்களிடம் கொடுத்து விடும்படிக் கூறிவிட்டு, திருடர்கள் தம்மை என்ன செய்வார்களோவென்று பயந்து, தம்முடைய குத்துவாளால் நான் தடுத்தும் கேளாமல் தம்மைத் தாமே குத்திக்கொண்டு இறந்தார்கள். சிறிதுநேரத்திற்கெல்லாம் வாளை வீசிக்கொண்டு கள்வர்கள் இங்கு வந்தனர். அவர்கள் வீசிய வாளொன்று என் கைவிரல்களைத் துண்டித்தது. நான் இறந்தவன்போல் கீழேவிழுந்துவிட்டேன். சந்நியாசியாகிய என்னைக் கொல்லமாட்டார்களென்று உங்களுடைய அண்ணியார் எண்ணினார்கள். ஆனால் நான் இறந்தவனைப் போல் தரையில் விழாமல் இருந்திருப்பேனாயின் அக்கள்வர்கள் என்னையும் கொன்றிருப்பார்களென்பது நிச்சயம். கள்வர்கள் மாணிக்கத்தைத் தேடிப் பார்த்துவிட்டுப்போய்

விட்டார்கள். இதற்குமேல் என்னால் பேசமுடியாது. இதோ என் உயிர் போகப்போகிறது. இதைப்பிடியுங்கள்'' என்று சொல்லிக்கொண்டே அச்சந்யாசி தமது இடது கையில் இருந்த மாணிக்கத்தை முக்கராப்கான் கையில் கொடுத்தார். அவ்வளவே! அச்சந்யாசியின் கண்கள் சுழன்றன; உரை தடுமாறின. தரையில் விழுந்தார். சிறிது நேரத்தில் யாவும் அடங்கிவிட்டன.

உடனே முக்கராப்கான் விலைமதிக்கமுடியாத அந்த மாணிக்கக் கல்லைத் தன் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டு அரண்மனைக்கு வெளியில் வந்தான். அங்கு ஐந்து குதிரைவீரர்களே யிருந்தனர். "ஆறுவது குதிரைவீரன் எங்கே'' என்று முக்கராப்கான் அவர்களைக் கேட்டான்.

அதற்கு அவர்கள் அவனைப் பார்த்து, "அவன் உங்களைத் தொடர்ந்து அரண்மனைக்குள் வந்தானே! நீங்கள் அவனைப் பார்க்கவில்லையா?'' என்று சொல்லிப் பின்னும் அவனைப் பார்த்து, "அவன் உங்களோடுதான்—உங்கள் பின்னால்தான்—அரண்மனைக்குள் வந்தான். நீங்கள் வருவதற்குச் சற்று முன்னால் இங்குவந்து அவசரமாகப் போய் வரவேண்டுமென்று சொல்லிவிட்டுத் தன் குதிரையின்மீதேறி காற்றினும் கடியவேகத்துடன் இதோ தோன்றும் மலைகளை நோக்கிச் சென்றான். நீங்கள்தான் அவனை ஏதோ வேலையாக அனுப்பியிருக்கக்கூடும் என்று நாங்கள் எண்ணிக்கொண்டிருந்தோம்'' என்று கூறினார்கள்.

கூறியவுடன் அக்குதிரை வீரன் துரோகி என்பதையும், படுமோசக்கார னென்பதையும் முக்கராப்கான் அறிந்துகொண்டான். உடனே அவன் பட்டணத்திலிருந்த சில மனிதர்களை வரவழைத்து, "சகோதரர்களே! நான் உடனே சில காரியமாக இவ்விடத்தைவிட்டுப் போகவேண்டியதாயிருக்கிறது. நீங்கள் தயைசெய்து அரண்மனையில்

உள்ள பிரேதங்களை எடுத்து அடக்கம்செய்து விடுங்கள்'' என்று சொன்னான்.

இராஜவிசுவாசமுடைய அக்குடிகள் அவன் சொல்லிய படி நடப்பதாக ஒப்புக்கொண்டார்கள்.

உடனே முக்கராப்கான் தன்னோடு இருந்த ஐந்து வீரர்களையும் சிறிதுநேரத்திற்குள் பிரயாணத்திற்குத் தயா ராயிருக்கும்படி சொன்னான். நிற்க.

இனி, முக்கராப்கானுக்குத் துரோகம்செய்த அவ னுடைய ஆறுவது போர்வீரன் எப்படியானான் என்பதைக் கவனிப்போம். முக்கராப்கான் கோட்டையின் அரண் மனைக்குட் சென்றபோது, அவனுடைய ஆறுவது போர் வீரன், இரகசியமாக அவனைப் பின்தொடர்ந்து சென்றான். சென்றவன், முக்கராப்கானுக்குத் தெரியாதபடி அவனுக் கும், அவனுடைய குலகுருவுக்கும் நடந்த சம்பாஷணை களைக் கவனித்துக்கொண்டிருந்தான். கடைசியாக அச்சந் யாசி முக்கராப்கான் வசம் மாணிக்கக் கல்லைக் கொடுத் ததையும் பார்த்துக்கொண்டிருந்தான்.

உடனே அந்த மாணிக்கக் கல்லைத் தான் அடைய வேண்டுமென்னும் உணர்ச்சி அந்தப் போர்வீரனுக்கு உண் டாயிற்று. அவன் என்னசெய்கிறதென்று ஆலோசித்தான். அவனுடைய நன்மைக்கோ தீமைக்கோ அவன் மனத்தில் ஓர் எண்ணந் தோன்றியது. தோன்றியதும், அவன் அவ் விடத்தைவிட்டு வெளியிற்சென்று தன் குதிரைமீதேறி நேரே எதிரில் தோன்றிய மலைகளுக் கோடி, அங்கு அலைந்து திரிந்து மான்சூர் என்னும் கள்வர் தலைவனைக் கண்டான். மான்சூர் என்னும் கள்வர் தலைவன் ஆப்கானி யன். அவன் அகண்ட மார்பும், நீண்ட கரங்களும், உரம் பெற்ற தேகமும், கெம்பீரமான பார்வையும் உடையவ னாகக் காணப்பட்டான். அவன் பலமும் வீரமும் நிரம்பிய

ஒரு குதிரையின்மீது உட்கார்ந்திருந்தான். அவனைச் சுற்றிலும் கள்வர்கள் சூழ்ந்திருந்தனர். முக்கராப்கானின் ஆறுவது வீரன் கள்வர்களைக் கண்டவுடன் அவர்களை நெருங்கினன். நெருங்கி அவர்கள் தலைவனிடம் சில விஷயங்களைச் சொல்லவேண்டுமென வுரைத்தான். அவர்கள் அவனைத் தங்கள் தலைவனை மான்சூரிடம் அழைத்துப் போனர்கள்.

போனதும் மான்சூர் அவனைப் பார்த்து, 'வந்த காரியம் என்ன?' வென்று கேட்டான்.

கேட்டதும், ஆறுவது வீரன், "கள்வர் தலைவனே! அந்தக் கோட்டையின் மாணிக்கக் கல் யாரிடமிருக்கிறதென்பது எனக்குத் தெரியும். அதை நான் பெறுவதற்கு நீயும் உன்னுடைய துணைவர்களும் உதவிசெய்தால் உங்களுக்கு ஐந்நூறு தங்க நாணயங்களைக் கொடுக்கிறேன்" என்று சொன்னன்.

சொன்னதும், கள்வர் தலைவன் அவனைப் பார்த்து, "மிகவுஞ் சிறந்த அந்த மாணிக்கக் கல்லை நீர் அடைய நாங்கள் துணைசெய்வதற்குப் பிரதியாக நீர் எங்களுக்குக் கொடுக்கும் தங்க நாணயங்கள் போதா" என்று சொன்னன்.

"அப்படியானல் அந்த மாணிக்கக் கல்லை நீ எடுத்துக் கொள். அஃது இருக்கும் இடத்தை நான் சொல்லுவதற்காக நீ எனக்கு ஆயிரம் தங்க நாணயங்களைக் கொடுத்துவிடு" என்று சொன்னன் போர்வீரன்.

துரோகியாகிய போர்வீரனுக்கும், கள்வர் தலைவனுக்கும் வெகுநேரம் வரையில் பேரம் நடந்தேறியது. கடைசியாக அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்கள். உடனே கள்வர் தலைவன் தன்னுடைய சட்டைப்பையிலிருந்து நூறு தங்க நாணயங்களை எடுத்து துரோகியாகிய ஆறுவது

போர்வீரனிடங் கொடுத்து, "இதை நீர் வைத்துக்கொள்ளும். மாணிக்கக் கல் எங்கள் கைவசப்பட்டவுடன் பாக்கித் தங்க நாணயங்களைக் கொடுத்துவிடுகிறேன்" என்று சொன்னான்.

உடனே போர்வீரன் அவனை நோக்கி, "அந்த மாணிக்கக் கல் அஜ்ரத் கோட்டையின் இளவரசனை முக்கராப்கானின் வசம் இருக்கிறது" என்று சொன்னான்.

அவ்வார்த்தையைக் கேட்டுச் சந்தோஷப்படுபவனைப் போற் கள்வர் தலைவன் வீரனைப் பார்த்து, 'நீர் இந்த இரகசியத்தைச் சொல்லியதற்காக நான் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட ஆயிரம் தங்க நாணயங்கள் போதாது. இன்னும் ஆயிரம் பொன் தருகிறேன். அந்த விதப்படி இன்னும் நூறு பொன் முன்னதாகத் தருகிறேன் பெற்றுக்கொள்ளும்" என்று சொல்லிக்கொண்டே தன் கையைத் தன் பின்புறம் கொண்டுபோனான்.

அடுத்த நிமிஷத்தில் அக்கள்வர் தலைவன் ஆறுவது வீரனைப் பார்த்து, "நீர் இரகசியத்தை என்னிடம் சொல்லியதற்காக நான் உமக்கு முன்னால் நூறு பொன் நாணயங்களைக் கொடுத்திருக்கிறேன். உம்முடைய எஜமானுக்குத் துரோகமாக நீர் நடந்துகொண்டதை முன்னிட்டு, உமக்கு மற்றொரு வெகுமதியும் கொடுக்கப்போகின்றேன்" என்று சொல்லித் தன் ஆட்களைப் பார்த்து, "உண்மையை வெளியிடும் துரோகிகளின் கதி இப்படித்தான் ஆகும்" என்று சொல்லிக்கொண்டே, தன் இடுப்பின்புறம் தொங்கிக்கொண்டிருந்த கோடாரியை எடுத்து ஆறுவது போர்வீரன் தலைமேல் ஓங்கி அடித்தான்.

உடனே அவ்வீரன் அலறிக்கொண்டு தரையில்வீழ்ந்து பிராணனை விட்டான். துரோகியாகிய அவன் பிரேதத்தைக் கழுகுகளும், காக்கைகளும் பிடுங்கித் தின்னும்படியாக

அதை அப்படியே விட்டுவிட்டு, தன் ஆட்களோடு அஜ்ரத் கோட்டையை நோக்கிச் சென்றான் கள்வர் தலைவன்.

அப்பொழுது இறந்தவர்களை அடக்கஞ் செய்யும் விதத்தைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்த முக்கராப்கான் மலையடிவாரத்திலிருந்து தன்னை நோக்கி அநேகக் கள்வர்கள் குதிரைகளின்மீது ஏறி ஓடிவருவதைக் கண்டான். அவன் மிகவும் புத்திசாலியாகையால் உண்மையை ஒரு நிமிஷத்தில் அறிந்துகொண்டான். ஆறாவது போர்வீரன் தன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டான் என்பதையும் அவன் உணர்ந்தான். உடனே அவன் தன் குதிரைமீது ஏறிக்கொண்டு, தன்னுடைய ஐந்துவீரர்களையும் அவர்களுடைய குதிரைகளின்மீது ஏறிக்கொள்ளச் சொன்னான். அவர்கள் கள்வர் கையில் அகப்படாமல் இருப்பதற்காக அக்கோட்டையை விட்டுப் புறப்பட்டார்கள்.

கோட்டையைவிட்டுப் புறப்பட்ட முக்கராப்கான் தன் வீரர்களோடு தென்புறத்தை நோக்கி ஓடினான். தெற்கு நோக்கி ஓடினால் தனக்கு அதிர்ஷ்டம் இருந்தால் அப்பொழுது காபூலில் பிரசித்திப்பெற்றிருந்த பேபரின் உதவியைப் பெறலாமென்பது அவன் கருத்து. கள்வர்கள் தங்களை நெருங்குவதற்குமுன் அவர்கள் எதிரிலிருந்த மலையின் கணவாயில் நுழைந்து விட்டார்கள். அவர்கள் நுழைந்து சிறிதுதூரம் சென்றதும், கள்வர்களும் அவர்களைத் தொடர்ந்து சென்று கணவாயில் நுழைந்தார்கள்.

கள்வர் தலைவன் ஏறியிருந்த குதிரை மிகவும் வீரமுடையதாகையால் கள்வர் தலைவன் தன்னுடன் இருப்பவர்களை விட்டு வெகுதூரம் முன்னால் வந்துவிட்டான். யாருக்கு நன்மையுண்டாகும் என்று சொல்லமுடியாமலிருந்தது. இத்தருணத்தில் முக்கராப்கானின் போர்வீரர்களில் ஒருவன் ஏறியிருந்த குதிரை கால் இடறி விழுந்து

விட்டது. போர்வீரனும் அதோடு கீழே விழுந்தான். மற்றவர்கள் அவனுக்காகக் காத்திருக்க முடியாமல் ஓடிவிட்டார்கள். பின்னால் வந்த கள்வர்கள் விழுந்துகிடக்கும் போர்வீரனைப் பார்த்து, அவனிடத்தில் மாணிக்கக் கல் இல்லையென்று தெரியுமாகையால், அவனை ஒன்றுஞ் செய்யாமல் பின்னும் முக்கராப்கானையும் அவனுடன் செல்லும் மற்ற வீரர்களையும் தொடர்ந்து சென்றனர்.

பின்னும் சிறிதுநேரத்தில் முக்கராப்கானும், அவன் வீரர்களும், அவர்களைத் தொடர்ந்து செல்லும் கள்வர்களும் கணவாயைக் கடந்து தென்புறச் சமவெளியை யடைந்தனர். சமவெளியை யடைந்தவுடன் முக்கராப்கான் தன்னுடன் இருந்த தன் வீரர்களைத் தனித்தனியே பிரிந்து சென்று உயிர்பிழைக்கும்படி கட்டளையிட்டான். அப்படிச் செய்வதுதான் தானும் தன்னைச் சேர்ந்தவர்களும் தப்புவதற்குத் தக்க வழியென அவன் கண்டான். முக்கராப்கானோ உயர்ந்த ஜாதிக் குதிரையின்மீது ஏறியிருக்கின்றான். அவனைத் தொடரும் கள்வர் தலைவன் ஏறியிருக்கும் குதிரையோ, அவன் குதிரைக்கு ஒரு சிறிதும் ஈடாகாது. முக்கராப்கான் உத்திரவுபடி அவனுடைய வீரர்கள் அவனை விட்டுப் பிரிந்து தனித்தனியே சென்றனர். அப்பொழுதும் கள்வர் தலைவன் முக்கராப்கானையே தொடர்ந்து சென்றான். அதனால் முக்ராப்கான் கள்வர் தலைவன் தன்னைத் தொடர்ந்து வரும் காரணம் இன்னதென்று அறிந்துகொண்டான். கள்வர் தலைவன் குதிரையோ மிகவும் வேகமாகத் தன்னைத் தொடர்ந்து வருவதை முக்கராப்கான் அறிந்தான்.

அறிந்ததும், முக்கராப்கான், ஜாக்கிரதையாக உட்கார்ந்துகொண்டு குதிரையின் கடிவாளத்தை விட்டுவிட்டான். கடிவாளம் விடப்படவே அவன் ஏறியிருந்த குதிரை

யானது காற்றினும் கடிய வேகத்துடன் மின்னலைப்போலப் பாய்ந்தது. கள்வர் தலைவன் குதிரையும் ஒருவாறு அக்குதிரையைப் பின்தொடர்ந்தே வந்தது. இவ்வாறு சிறிது நேரம் ஓடியபிறகு நிலைமை முற்றிலும் மாறுபட்டுவிட்டது. சூரியன் மேற்குக் கடலில் சிறிது சிறிதாக மறையத் தலைப்பட்டான்.

முக்கராப்கான் குதிரையைத் தொடர்ந்துவரும் கள்வர் தலைவனுடைய குதிரை மிகவும் வேகமாக வந்துகொண்டிருந்தபடியினால், கள்வர் தலைவனுடைய ஆட்கள் ஏறியிருந்த குதிரைகள் சாதாரணமானவைகள் ஆதலால், அவர்கள் வெகு தூரத்தில் பின்தங்கி விட்டனர். இரண்டொரு கள்வர்கள்மட்டும் அந்திகால சூரியன் வெளிச்சத்தில் வெகு தூரத்தில் மாசுபோல் காணப்பட்டனர்.

எப்படியாயினும் முக்கராப்கான் ஏறியிருந்த குதிரையே வேகமாகச் சென்றுவிடும் என்று தீர்மானிக்கவேண்டியதாயிருந்தது. கள்வர் தலைவனுடைய குதிரையோ, அவனுடைய பாரமான தேகத்தை வெகுநேரம் வரையில் தாங்கியவண்ணம் ஓடமுடியாமல் சலிப்புற்றது.

அதைக்கண்ட கள்வர் தலைவன் தான் அணிந்து கொண்டிருந்த யுத்தவீரர்களுக்குரிய இரும்பு முகமூடி இரும்புச் சட்டை முதலியவைகளைக் கழற்றி எறிந்துவிட்டான். எப்படியாயினும் முக்கராப்கானைத் தான் விடாமல் பிடிக்கவேண்டுமென்பதே அவனுடைய முழுநோக்கமாயிருந்தது.

தன்னுடைய விரோதிகளில் ஒருவனே தன்னைப் பின்தொடர்ந்து வருகிறான் என்பதை அறிந்துகொண்டான் முக்கராப்கான். காற்றினும் கடிய வேகத்துடன் செல்லும் தன் குதிரையின்மீதிருந்தபடியே பின்னால் திரும்பித் தன்னைத் தொடர்ந்து வருபவனை எதிர்க்க வேண்டுமென்று

எண்ணினன். உடனே திரும்பி தன் கையிலிருந்த வில்லை யும் அம்பையுமெடுத்து கள்வர் தலைவன்மீது குறி பார்த்து ஒரு அம்பை விட்டான். மார் கவசம் இல்லாமையினல் கள்வர் தலைவன் அந்த அம்பு தன்மீது பட்டால் தனக்குத் தீமையுண்டாகும் என்றெண்ணிக்குதிரையின்மீது கவிழ்ந்து படுத்துக்கொண்டான். அதனல் அந்த அம்பு அவன்மீது படாமல் அவன் ஏறிவந்த குதிரையைத் தாக்கியது. உடனே அக்குதிரை தத்தளித்து தரையில் விழுந்துவிட் டது. அதன்மீதிருந்த கள்வர் தலைவனும் இறந்தவனைப் போல் தரையில் விழுந்து மௌனமாயிருந்தான். மிகவும் திறமைவாய்ந்த முக்கராப்கானேடு தந்திரத்தாலன்றி வேறு வழியில் அச்சமயம் சண்டையிட முடியாதென்பதை அறிந்தே அக்கள்வர் தலைவன் அவ்வாறு செய்தான்.

உடனே முக்கராப்கான் விழுந்த கள்வர் தலைவன் அரு கிற்சென்று அவனை உற்றுப் பார்த்தான். யானைபோல் பலம் வாய்ந்த கள்வர் தலைவன் அதுதான் சமயமென்று அம்பு பாய்ச்சலைப்போல் தன் கையை நீட்டி முக்கராப் கானின் கச்சைப்பட்டையை உடும்புப் பிடியாகப் பிடித் துக்கொண்டான்.

இப்பொழுது நிலைமை முற்றிலும் மாறிவிட்டது. முக்கராப்கான் வீரமுடையவனயினும் சிறியஉருவம் வாய்ந் தவன். கள்வர் தலைவனே திடகாத்திரமுடைய இராட்ச தன். அதனல் அக்கள்வர் தலைவன் தன்வசம் சிக்கிய முக்க ராப்கானை ஒரு பொம்மையைப்போல் குலுக்கினன். ஆனல் முக்கராப்கான் தைரியத்தை இழக்காமல் தன் னிடையிலிருந்த குத்துவாளை எடுத்து கள்வர் தலைவனின் தேகத்தின் பல இடங்களிலும் குத்தினன். குத்தவே கள் வர் தலைவன் குதித்தெழுந்து தன் உடைவாளை உருவிக் கொண்டு முக்கராப்கானை எதிர்த்தான். இருவருக்கும்

நேரம் வரையில் சண்டை நடந்தது. அச்சண்டையில் ஒரு நிமிஷம் கள்வர் தலைவன் ஜயமடையக்கூடுமென்றும், மறு நிமிஷம் முக்ராப்கான் ஜயமடையக்கூடுமென்றும் தோன்றியது. ஜயாபஜயம் யார் பக்ஷம் உண்டாகக்கூடுமென்று உறுதியாகச் சொல்லமுடியவில்லை. இவ்வாறு சண்டையிட்டுக்கொண்டிருந்தால் கள்வர் தலைவனின் ஆட்கள் நிச்சயம் வந்து தன்னை எதிர்ப்பார்கள் என்று முக்ராப்கான் நினைத்தான். அவ்வளவே! முக்ராப்கான் மிகவும் கோபாவேசத்தோடு போராடி, தன் வாளை கள்வர் தலைவனின் இருதயத்திற்குள் சமயம் பார்த்துச் சொருகினான். குபு குபுவென்று இரத்தம் ஆறாய்ப் பெருகியது. கள்வர் தலைவன் அலறிக்கொண்டே தரையில் விழுந்து பிராணனை விட்டான்.

இதற்குள் நன்றாய் இருட்டிவிட்டது. முக்ராப்கான் மிகவும் தளர்வடைந்தான். அப்பொழுது தூரத்தில் கள்வர்கள் வருகிற சப்தம் அவனுக்குக் கேட்டது. ஆகையினால் அவன் உடனே புறப்பட்டுச் சிறிதுதூரம் சென்று எங்கேயாவது ஓரிடத்தில் தங்கி இரவுப்பொழுதைப் போக்க எண்ணினான். எண்ணியபடியே அவன் சிறிதுதூரம்சென்று வழியைவிட்டு விலகி கூப்பிடுதூரம் போனபிறகு அங்கொரு மரத்தின்கீழ் குதிரையின் சேணத்தைத் தலைக்கு உயரமாக வைத்துக்கொண்டு படுத்துறங்கலானான்.

மறுநாட் காலை சூரியன் தக தகவென்று உதயமானான். பட்சிகளெல்லாம் இனிமையாகப் பாடின. மலையினின்றும் பள்ளத்தாக்குகளில் வழிந்தோடும் தண்ணீரானது சூரியனுடைய பிரதிபிம்பத்தினால் வானவில்போல் பலவித நிறங்களுடன் தோன்றியது. முக்ராப்கான் நித்திரையினின்றும் விழித்தெழுந்து தன் விதியை நினைத்துக் கொண்டிருந்தான். அவன் இருந்த இடத்திற்குச் சமீபத்

தில்தான் ஆப்கானிய அதிபதியாகிய தோஸ்து மகமதுவின் மகோன்னத மாளிகை இருந்தது. அந்த மாளிகையின் பின்புற வாயற்படியின் ஓரத்தில் இருக்கும் ஒரு மரத்தின் கீழ்தான் முக்ராப்கான் உட்கார்ந்துகொண் டிருந்தான். நிற்க,

மேற்கூறிய தோஸ்து மகமதின் மாளிகைக்குள் அவனுடைய ஏகபுத்திரியாகிய ஜூலீகா என்பவள் தன் தோழியர் இருவரோடு உல்லாசமாக உலவிக்கொண் டிருந்தாள். அவள் தோட்டத்தின் பின்புறம் வந்ததும் கதவைத் திறந்து வெளியில் உள்ள இயற்கை அழகுகளைப் பார்க்கவேண்டுமென்று ஆசைப்பட்டாள். உடனே அவள் தன் எண்ணத்தைத் தன் தோழிமாருக்குச் சொன்னாள். முதலில் அவர்கள் அவ்வாறு செய்வதற்கு உடன்படாவிட்டாலும் கடைசியாக அவள் விருப்பத்திற்கிணங்கி, தோட்டத்தின் வெளிவாயிற்படிக் கதவைத் திறந்தனர். அடுத்த நிமிஷத்தில் ஜூலீகா வாயிற்படியின்மீது நின்றவண்ணம் தன் எதிரே தக தகவென்று உதயமாகும் சூரியனையும், மற்றுமுள்ள இயற்கை அழகுகளையும் ஆனந்தத்துடன் பார்த்தாள். அப்பொழுது அங்கு உட்கார்ந்து கொண்டிருந்த முக்ராப்கான் ஒரு கனைப்புக் கனைத்துக்கொண்டு தான் இருந்த இடத்திலிருந்து எழுந்தான். அவனைக் கண்டவுடன் ஜூலீகா அவசரமாகத் தன் தலைமீது விலகியிருந்த உடையை இழுத்து முகத்தை மறைத்தாள். அக்காலத்தில் பெண்களை ஆசிர்வதிக்கும் வழக்கப்படி முக்ராப்கான் அவளைப் பார்த்து, 'நன்மையுண்டாகக் கடவது' என்று சொன்னான். சொன்னதும் அவள் தன்னை அறியாமலே 'உங்களுக்கும் கடவுள் கிருபையும் நன்மையும் உண்டாகக் கடவது' என்று கூறிக்கொண்டே மாளிகைக்குள் போய் விட்டாள்.

அவள் சென்றவுடன் அவளை எப்படியாவது மணந்து கொள்ளவேண்டுமென்று முக்ராப்கான் நினைத்தான். தங்கும் இடமின்றி தேசாந்திரியாகத் திரியும் இவன் ஒரு தேசத்தின் அதிபதியின் மகளை மணந்து கொள்ளுவது எப்படி? பலவிதமான எண்ணத்துடன் தன்னிடமிருக்கும் மாணிக்கக் கல்லை பத்திரமாக வைத்துக்கொண்டு முக்ராப்கான் அவ்விடத்தை விட்டகன்றான். அகன்று ஆப்கானிய அதிபதியாகிய தோஸ்து மகமதை நேரிற் சந்தித்து தங்களுக்கும் தங்கள் தேசத்திற்கும் நேர்ந்த கதியைப்பற்றிச் சொன்னான். தோஸ்து மகமதுக்கும் முக்ராப்கானின் குடும்பத்தாருக்கும் ஏற்கனவே அதிக சினேகம் உண்டு. அதனால் முக்ராப்கான் கூறிய விஷயங்களைக் கேட்டவுடன் தோஸ்து மகமது மிகவும் வருந்தி, முக்ராப்கானை விருந்தாளியாகத் தன் மாளிகையில் வைத்துக்கொண்டான். தன்னிடமிருந்த மாணிக்கக் கல்லை முக்ராப்கான் தோஸ்து மகமதுக்குக் கொடுத்துவிட்டான். பின்னும் சிலநாட்கள் சென்றன. தோஸ்து மகமது முக்ராப்கானின் எண்ணத்தையறிந்துகொண்டு அவன் எண்ணப்படியே தன் மகளை அவனுக்குக் கலியாணம் செய்துகொடுத்தான். நிற்க,

அப்பொழுது மகா தைரியசாலியாகிய பேபர் இந்துஸ்தானத்தில் ஜயக்கொடி நாட்டிக்கொண்டிருந்தார். அவரோடு தான் சேர்ந்துகொண்டால் தன்னுடைய பழைய நிலைமையையடையலாம் என்று முக்ராப்கான் நினைத்தான். உடனே அவன் தன் கருத்தைத் தன் மாமனாராகிய தோஸ்து மகமதுவுக்குத் தெரிவித்தான். உடனே தோஸ்து மகமது அவனுக்கு ஐந்துலட்சரூபாய்கள் மதிப்புள்ள தங்க நாணயங்களைக் கொடுத்தான். அத்திரவியத்தைக் கொண்டு முக்ராப்கான் ஆயிரங்குதிரைவீரர்களைச் சேர்த்துக்கொண்டு போய் பேபரோடு கலந்துகொண்டான். பிறகு அவன்

பேபருக்குத் துணையாய் நின்று, பானிபட், சிக்ரீ முதலிய யுத்தங்களில் வீரத்துடன் ஜயம் பெற்றான். பேபர் அவனுக்கு பெரிய பட்டங்களையும், தான் ஜயித்த நாடுகளின் ஒரு பாகத்தையும் கொடுத்தார். பின்னர் முக்ராப்கான் தன் தமையனைப் போரில் வென்ற அரசனை எதிர்த்து, ஜயமடைந்து பழையபடி அஜ்ரக் கோட்டைக்கு அதிபதியானான். அக்கோட்டையில் அவனும், அழகிற் சிறந்த அவன் மனைவியாகிய ஜுலீகாவும் வெகுகாலம் வரையில் இன்பமுற்று வாழ்ந்திருந்தனர்.

---

# வேதவதி

## அல்லது

## "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்"

---

### அத்தியாயம் 1

### விஜயநாதரின் கடிதம்

'எல்லாம் வல்ல கடவுளின் வல்லமையை யாரே அறிவர். அவர்தம் ஆணைக்கு அடங்கியே கரையின்றிக் கட்டுண்டு நிற்கின்றேன்' என்று கூறுவனபோல் சமுத்திரத்தினின்றெழும் அலைகளாலும், வெள்ளியைப் பொடியாக்கி உதிர்த்தாற்போல் அச்சமுத்திரக் கரையினோரத்தில் உள்ள வெள்ளியமணல்களாலும், சிற்சில இடங்களில் உள்ள சிற்சில நன்னீர்தடாகங்களாலும், மா, கொய்யா, நாரத்தை, பேரிமுதலிய பழந்தருந் தருக்களாலும், அநேகவித அழகியபுஷ்பச்செடிகளாலும், இன்னும்பல அலங்கார இயற்கை அழகுகளாலும் அலங்கரிக்கப்பெற்றுக் கன்னியாகுமரி கடற்கரையோரத்தில் பொய்யூர் என்னும் ஓர் அழகியசிற்றூர் இருக்கின்றது. இவ்வூர் சுகத்திற்கு ஏற்றதொரு சிறு கிராமமாகும். பக்கத்திலுள்ள பட்டினவாசங்களிலிருக்கும் தனவந்தர்களும் தங்கள் சுகத்திற்காக இக்கிராமத்தில் சில பங்களாக்கள் அமைத்து அதில் கோடைக் காலத்திற்சென்று வசித்துத் திரும்புவதுமுண்டு. நிற்க, இத்தகைய அழகுபொருந்திய கிராமத்தில்தான் நமது கதையும் ஆரம்பமாகின்றது.

ஒருநாள்மாலை சுமார் மணி ஐந்தரை இருக்கும். ஆடம்பரமின்றிச் சாதாரணமாக நாட்டுஓடுகளைக்கொண்டு வேயப்பட்ட கூரையையுடைய ஒரு வீட்டிற்குள் உள்ள ஓர் அறையில் ஒரு வாலிபன்—சுமார் இரண்டுகுறைய இருபத்து ஐந்துவயதும், மாநிறமும், அதிகம் மெலிந்திராத நடுத்தர தேகமும், நடுத்தரமான உயரமும் வாய்ந்த ஒரு வாலிபன்—சாதாரண நாற்காலி ஒன்றில் அமர்ந்து தனக்கு எதிரில் இருந்த அழுக்கடைந்துள்ள பழைய மேஜையின்மீது தனது வலக்கரத்தையூன்றி அக்கரத்தினால் தனது கன்னத்தை தாங்கிக்கொண்டு எதைப்பற்றியோ ஆலோசிக்கலானான். அவனுடைய மேஜையின்மீது ஒரே பக்கத்தில் எழுதப்பட்ட சில காகிதங்களும், இன்னும் எழுதவேண்டியதற்காக சில காகிதங்களும் இருந்ததோடு மையினால் நிரப்பப்பெற்ற ஒரு மைக்கூடும் அழுக்கடைந்த ஒரு எழுதுகோலு மிருந்தன. தரையில் சில ஆங்கில நாவல்களும், தமிழ்க்கதைகளும் கிடந்ததோடும் மேனாட்டுப் புலவர்களால் இயற்றப்பெற்ற சில அரியபெரிய நூல்களும், நமது பண்டைநாட் புலவர்களா லாக்கப்பெற்ற பல அரிய செந்தமிழ்ப் புத்தகங்களும் ஆங்கு ஒரு அலமாரியில் வைக்கப்பட்டிருந்தன. இன்னும் அவ்வறைக்குள் இருந்த ஆஸ்திகள் படுப்பதற்கு ஒருபாயும், வெளிச்சத்திற்காக மேனாட்டாரால் செய்யப்பட்டதான ஒரு விளக்குமேயாம். நிற்க,

மேற்குறித்த வாலிபன், வெகுநேரம் அசைவற்று எதைப்பற்றியோ ஆலோசித்துக்கொண் டிருந்தவன், "என்னசெய்வது? இக்காலத்தில் காமாந்தகாரப் பதங்களைக்கொண்டு வரையப்பட்ட கதைப்புத்தகங்களே கடைகளில் மலிந்துகிடக்கின்றன. நவநவமான கருத்துக்களை விதவிதமாய் அமைத்து, உலகில் நிகழும் அரியபெரிய ரகசியங்களை அற்புதமாய்க்காட்டி, படிப்பவர்கள் தேர்ந்த

உலகானுபவம் நிறம்பப்பெற்றவர்களாகும்படி எழுதப் படும்கதைகள் இக்காலத்தில் அதிகமாக பொது ஜனங் களால் விரும்பப்படுவதைக் காணேம். சிற்றின்பச்சுவை சொட்டச் சொட்ட எழுதப்படும் காமாந்தகாரம் நிறம் பிய கதைகளே விற்கின்றன. இதற்குக் காரணம் நம் மக்களிடம் உண்மை அறிவும், போதியஞான மில்லாமை யேயாம். பாமரஜனங்களின் விருப்பத்திற் கேற்றவாறு பதிப்பாசிரியர்களும், நாவலாசிரியர்களிடம்கூறிச் சிற்றின் பச்சுவை நிறம்பிய கதைகளையே எழுதுவித்து வெளியிட்டு பொருள் சம்பாதிக்கின்றனர். அந்தோ! இதுபெரிதும் பாவம்! பதிப்பாசிரியர்களின் முறைதவறிய கருத்துக்குட் பட்டு அவர்கள்கூறுகிறபடி கதைகளை எழுதிக்கொடுக்கும் சில கதாசிரியர்கள் மதிகாளென்னே? எழுதும் வன்மை வாய்ந்தவர்கள் ஜனங்களை நல்வழிக்குத் திருப்பவேண்டி அதற்கேற்றவாறு எழுதவேண்டுமேயன்றி ஜனங்களின் முறைதவறிய அபிப்பிராயத்திற்கிணங்கி—சிறிது பொரு ளுக்காக—கண்டபடி கதை எழுதுவதென்பது பெரிதும் பேதமைத்தனமாகும். ஆம்: என்னுடைய அபிப்பிராயத் தைக் கேட்பவர்கள்யார்? அநாகரிகமானமுறையில் எழுதப் படும் புத்தகங்கள் அதிகமாக விற்பதனல் அதனைப் பிரசுரம் செய்கிறவருக்கும், எழுதுகிறவருக்கும் ஊதியம் அதிக மாகிறது. என்னைப்போல் உண்மைச் சீர்திருத்தங்களுக் கான விஷயங்களையே கதையாக அமைத்து எவரேனும் எழுதினல் அக்கதைகளைப் பிரசுரகர்த்தர்கள் விரும்பு வதைக்காணேம். வயிற்றின்கொடுமையாலோ பணவாசை யாலோ ஒழுங்கீனமான கருத்துக்களுடனே—பணம் வந் தால் போதுமென்ற எண்ணத்துடனே—சிலர் தமிழ்க் கதைகளை எழுத வாரம்பித்திருக்கின்றனர். "கள்விற்றுக் கலகாசு சம்பாதிப்பதினும் அமிர்தம்விற்று அரைக்காசு

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR-623 106

சம்பாதிப்பதுமேல்'' என்னும் விஷயத்தை இந்நவீன கிரந்த கர்த்தர்களிற் சிலர் அறிவதில்லைபோலும். இவர்களால் தமிழ்மொழிக்கும், தமிழ்நாட்டிக்கும், தமிழ்நாவல்களுக்கும் அகௌரவமேயன்றி கௌரவமுண்டாவதில்லை'' என்றுகூறி அவ்வாலிபன் ஏதோஒன்று ஞாபகத்திற்குவந்தவனாக "சுந்தரம்! சுந்தரம்!'' என்று இரண்டுமுறைக் கூப்பிட்டான்.

உடனே வேலையாளாகிய ஒருசிறுவன் அவ்வறைக்குள் ஓடிவந்து அவனிடம் அவன்விலாசத்துக்கு அன்று தபாலில்வந்த ஐந்தாறுகடிதங்களைக் கொடுத்துவிட்டு, "என்ன? ஏன் அழைத்தீர்கள்?'' என்று கேட்டான்.

உடனே அவ்வாலிபன், "கடிதம் ஏதாவது வந்ததா என்று கேட்பதற்காகத்தான் அழைத்தேன்'' என்று கூறி தன்னிடம் அச்சிறுவன் கொடுத்த கடிதங்களை அவனிடம் காண்பித்து, "இக்கடிதங்கள் எப்போதுவந்தன'' என்று கேட்டான்.

அதற்கு அச்சிறுவன், "இன்றுமாலை தாங்கள் வெளியிற் சென்றிருந்த சமயம் வந்தன'' என்று கூறினான்.

"சரி நீ போகலாம்'' என்றுகூறிச் சிறுவனை அனுப்பிவிட்டு அவ்வாலிபன் அக்கடிதங்களில் ஒன்றைப்பிரித்து வாசிக்கலானான். அதில் பின் வருமாறு வரையப்பட்டிருந்தது.

## கடிதம்

விஜயநாதர் ஆநந்தபுரி
ஆனந்தபுரி ஜமீன்தார் "ஆனந்தநிலையம்"
20—3—**

"விவேகத்திற்சிறந்த வேதநாதரே! தங்களால் எழுதப்பட்டுச்சென்னையிலுள்ள 'சூளை விநாயகம் அண்டு கம்பெனி' வெளியிடப்பட்ட 'அக்பர்காலத்தில் நடந்த அதிசயசம்

பவம்' 'கலாவதி' 'ஜயகாந்தம்' 'கமலவதனம்' 'இருட்டறையில் இருந்த இரகசியக்கடிதம்' என்னும் பெயர்களையுடைய புத்தகங்களை நானும், எனது அருமைக்குமாரி வேதவதியும் மிக்க ஆர்வத்துடன் படித்து முடித்தோம். ஒவ்வொரு கதையும் மிக எளியதும் கம்பீரமானதுமான செந்தமிழ் நடையில் இலௌகீகவிஷயத்தின் இரகசிய விஷயங்கள் உள்ளது உள்ளவாறே எழுதியிருப்பதானது எங்கள் மனதை ஆநந்தக்கடலிலாழ்த்திவிட்டது. தங்களை முன்பின் அறியாத நான் இவ்விதம் தங்கள் விலாசத்தைத் தங்களுடைய பிரசுரகர்த்தர் மூலமாகக் கேட்டறிந்து எழுதியதானது தங்களை முகஸ்துதி செய்வதற்காகவன்று. உண்மையிலேயே தமிழ்நாட்டில் தமிழ்க்கதை எழுதுகிறவர்களெல்லோரினும் தங்களுடைய கதை எழுதும் திறமையே புகழத்தக்கதாகும். நான் ஆநந்தபுரியில் அகத்தியர் கலாசாலையில் படித்துக்கொண் டிருந்தபோது—ஏழு வருடங்களுக்குமுன்—வேதநாதர் என்னும் ஒரு வாலிபரை நான் அறிவேன். அவர்தாமோ இந்த 'நவீன நூலாசிரியராகிய வேதநாதர்' என்று எனது குமாரி சந்தேகிக்கின்றாள் என்பதையும் இங்குநான் குறிக்கின்றதோடுந் தங்களைப்போன்ற இன்னும் சில கல்வியாளர்கள் தோன்றித் தமிழில் கதை எழுதத் தொடங்குவார்களேயாயின் அச்செய்கை நாட்டிற்கு நன்மை பயப்பதாகும் என்றும் கூறுகிறேன். தங்கள் முயற்சி மேன்மேலும் பெருகும்படி இறைவன் கருணை புரிவானாக.

தங்களை நேரில்காண விரும்பும்

**விஜயநாதர்''**

இவ்விதம் வரையப்பட்டிருந்த கடிதத்தைப்படித்தவுடன் வேதநாதன் எதைப்பற்றியோ சிறிதுநேரம் சிந்தித்துவிட்டுப் பின்னும் நான்குகடிதங்களைப் பிரித்துப்

பார்த்தான். அவைகளெல்லாம் தன்னுடைய நண்பர்களிட மிருந்து தன்னுடைய கதை எழுதும் திறமையினைப் புகழ்ந்து அனுப்பப்பட்டதாயிருந்தன. முடிவில் எஞ்சிநின்ற ஒரு கடிதத்தையும் பிரித்து வாசிக்கலானான். அதில் பின்வருமாறு வரையப்பட்டிருந்தது.

கடிதம்

விநாயகம் அண்டு கம்பெனி — சூளை
புத்தகவியாபாரிகள் — சென்னை
20—3—**

"அன்புள்ள ஐயா"

தங்கள் கடிதம் கிடைத்து விஷயத்தை அறிந்து கொண்டோம். தங்களால் எழுதப்பட்ட—எழுதப்படும்—கதைகள் லோகோபகாரமான கருத்துக்களையுடையனவா யிருக்கின்றன வென்பதில் ஐயமின்று. சிறிது ஊதியமே வரினும் தங்களைப்போன்றவர்களால் எழுதப்படும்உண்மை இலட்சணங்கள்வாய்ந்த கதைகளையே நாங்கள் வெளியிட விரும்பியுள்ளோம் என்பது தங்களுக்குத் தெரியாதவிஷய மல்லவே! 'அக்பர்காலத்தில் நடந்தஅதிசய சம்பவம்' முதலான தங்களுடைய கதைகள் சிலவற்றை நாங்கள் வெளியிட்டதும் உலகநன்மையைக் கருதியேயாம் நிற்க.

அப்புத்தகங்களின் முதற்பதிப்பே இன்னும் விலையாகாமலிருப்பதனால் தாங்கள் எழுதியபடி தங்களால் தற்சமயம் எழுதப்படும் 'நீலாம்பிகை' என்னும் பிரதியை நாங்கள் தற்சமயம் ஏற்றுக்கொள்ள அசக்தரா யிருக்கின்றோமென் பதை விசனத்துடன் வரைகின்றோம். தங்களால் எழுதப்படும் கதைகள் மிக நேர்த்தியானதாயினும்,பாமரஜனங்கள் அதன் அருமையை அறியாது அசம்பாவிதமானவார்த்தைகளைக்கொண்டு அலங்கரிக்கப்பட்ட நாவல்களையேவாங்கி

வாசிக்கின்றனர். இது தாங்கள் அறியாததல்ல. இப்போ தில்லாவிடினும், கூடியசீக்கிரத்தில் தங்களால் எழுதப்படும் கையெழுத்துப்பிரதியை நாங்கள் வாங்கிக் கொள்ளுகிறோம்.

தங்கள் உண்மையுள்ள

விநாயகம் அண்டு கம்பெனியார்"

இவ்விதம் எழுதப்பட்டிருந்த விஷயத்தை வாசித்த வுடன், 'ஆம்' உலகம் அப்படித்தான் இருக்கிறது; 'தாராச சாங்கம்' சௌந்திரவல்லியம்மாள் தாரையாகவந்து சந்திர னுக்கு நிர்வாண உடையுடன் எண்ணெய் தேய்க்கின்றாள்' என்ற நோட்டீசைக் கண்டுவிட்டால், அன்றுநாடகக்கொட் டகையில் கும்பல்அதிகந்தான் அவ்விதமின்றி 'இன்ன விடத்தில் இன்னார்' 'நமதுவாழ்நாட்களின்பயன்' 'நமது கடமை' என்னும் இதுபோன்ற இன்னும் பலவிஷயங்களைப் பிரசங்கம்புரிகின்றார்' என்றுகூறினால் அதற்குச்செவிசாய்ப் பவர் ஒருவருமில்லை. அப்படித்தான் இருக்கிறது எல்லா விஷயங்களிலும் உலகின்நிலைமை" என்றுகூறி கையிலிருந்த கடிதத்தையும் இன்னும் விஜயநாதர் எழுதிய கடிதத்தையும் தவிர மற்றக்கடிதங்களையும் மேஜைக்குள் வைத்துவிட்டு விஜயநாதரிடமிருந்துவந்த கடிதத்தை பலமுறைப் படித் தான். ஏதேதோ எண்ணினான். "என்னால் எழுதப்பட்ட புத்தகங்களைக் குறித்து அநேக நல்லபிப்பிராயங்கள் பல கல்விஅறிவு நிறம்பிய கனவான்களிடமிருந்து எனக்கு வந் திருக்கின்றனவாயினும் இப்போது விஜயநாதர் எழுதியிருக் கும் நல்லபிப்பிராயக் கடிதத்திற்கு நான்பதில் எழுதவேண் டியமுறையில் அக்கடிதம் எழுதப்பட்டிருக்கிறது. அவரு டையபுத்திரி வேதவதி! தனக்குப்பழக்கமுள்ள வேதநாதன் நான்தானோ என்று சந்தேகிக்கிறதாக அவர் எழுதியிருப்ப தால் அதற்குநான் பதிலெழுதவேண்டியது அவசியமே

யாகும். என்னை நேரிற்கண்டால் அவள் சந்தேகிக்க முடியாது. என்னைப்போல் பெயருடையவர்கள் எத்தனையோ பெயர் இருக்கக்கூடுமல்லவா? அதைப்பற்றி தான் அவளுக்குச்சந்தேகம். சரி; இதற்கெல்லாம் நாளைய தினம் காலையில் பதில் எழுதுகிறேன்'' என்றுகூறி தான் ஏற்கனவே எழுதி நிறுத்தியிருந்த 'நீலாம்பிகை' என்னும் கதையைப் பின்னும் தொடர்ந்து எழுதலானான்.

---

## அத்தியாயம் 2

### சென்றகாலத்தின்செய்தியும் வேதவதியின் கடிதமும்

வேதநாதனுடைய தந்தை ஆநந்தபுரி சப்கலெக்டர் ஆபீசில் தலைமை குமஸ்தாவாயிருந்து நாகபட்டினம் சப் கலெக்டர் ஆபீசுக்குத் தலைமைக் குமஸ்தாவாக மாற்றப் பட்டுச் சில வருடகாலம் வேலைபார்த்துக் கொண்டிருந்து இப்போதுதான் சமீபகாலத்தில் அகாலமரணத்திற்குள் ளானார். அவருடைய ஏகபுத்திரியாகிய 'இராஜம்' அவர் இறந்த மறுமாதம் எவரும் பரிதபிக்கத்தக்க விதமாய் ஏதோ ஒருவித ஜுரத்தினால் மடிந்தாள். இப்போது வேத நாதனின்—தன் தந்தைக்கு ஏகபுத்திரனாகிய வேதநாதன்— தன் தந்தையும் சகோதரியும் இறந்தபிறகு தான் ஒருவ ரிடத்திலும் ஊழியஞ்செய்ய விரும்பாமல் தந்தையால் தனக்குச் சேகரித்துவைக்கப்பட்ட ரூபா ஐயாயிரத்தையும் வைத்துக்கொண்டு பட்டினவாசம் பிடிக்காமையால் பொய் யூர் என்னும் சிறு கிராமத்தில் ஒரு சாதாரண வீட்டை விலைக்கு வாங்கி அதில் தன் தாயோடு வசித்துக்கொண் டிருக்கின்றான். ஒருவரிடத்திலும் அவன் வேலைசெய்ய விரும்பாமையினால் அவன் பிழைப்புக்கு வழிவேண்டுமே அதற்காகவும்—பெரும்பான்மையும் உலோகோப காரத்

திற்காகவும்—தொழுது உண்பதினும் உண்பது உழுது உயர்வென்று ஔவைக் கூறியிருக்கின்றாளாயினும், நமது வேதநாதன் உழுது உண்பதிலும் எழுதி உண்பதே உயர்வெனவெண்ணி பொது நன்மையைக் கருதிக் கதை—நாவல்—எழுதும் தொழிலை ஆரம்பித்து அநேகங் கதைகளை எழுதி வெளியிட்டிருக்கின்றான். அவன் எழுதும் கதைகள் ஒவ்வொன்றும் உயர்ந்தகருத்தும், அரியபெரிய கொள்கைகளும் உடையனவாகும். அவன் இதுவரையில் எழுதியுள்ளகதைகள் ஐந்தேயாயினும் அவைகளால் தமிழ் நாட்டில் அவனுக்கேற்பட்டிருக்கும் புகழும் கீர்த்தியும் அதிகமாகும். வேதநாதன் என்றவுடன் எல்லோரும் அவனைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் பாண்டியத்தியம் பெற்ற ஒரு கதாசிரியன் என்பர். அதனால்தான் கல்வியாளர்கள் அவன் கதைகளைப்புகழ்ந்து கூறுகின்றனர். நிற்க, மேற்கூறியகதை எழுதும்தொழிலில் மாதம் ஒன்றுக்கு ஐம்பது ரூபா ஊதியம்வரும். அதை வைத்துக்கொண்டு வேதநாதன் கௌரவமாகத் தன் தாயாரோடு தான் காலங் கழித்துக்கொண்டு வருகிறான். நிற்க.

ஆநந்தபுரியில் வேதநாதனின்தந்தை இருந்தகாலத்திலேயே வேதநாதன் அவ்வூரிலிருக்கும் நேஷனல் காலேஜில் சேர்ந்து வாசித்து பீ. ஏ. முதல்தரப் பரீட்சையில் தேறி அதற்குமேல் வாசிக்கப் பொருளுதவியில்லாமையால் அவ்வளவோடு தன் கல்வியைமுடித்துக்கொண்டான். அவன் பீ. ஏ. வகுப்பில் வாசித்துக்கொண்டிருக்கையில் காலஞ்சென்ற அவனுடைய தங்கை 'இராஜம்' என்பவள் அகஸ்தியர் கலாசாலையில் இப்போது ஸ்கூல் பைனல் என்று அழைக்கப்படும் மெட்ரிக்குலேஷனில் வாசித்துக்கொண்டிருந்தாள். அப்போது, அக்கலாசாலையில் ஜமீன்தார் விஜயநாதரின் குமாரத்தியாகிய வேதவதியும் இராஜத்

தோடு வாசித்தவளாவள். இராஜமும் வேதவதியும் நெருங்கிய சிநேகிதைகள். உடல் இரண்டு உயிர் ஒன்று என்றே அவர்களிருவரையும் கூறுதல்வேண்டும். வேதவதியின் நிலைமைக்கு இராஜத்தின் நிலைமை பொருள் விஷயத்தில் மிகத் தாழ்ந்ததேயாயினும் அதற்காக வேதவதி கர்வமடையவில்லை. அன்றியும் அவளைத்தவிர வேறு சந்ததிகளும் விஜயநாதருக்குக் கிடையாது. அப்படியிருந்தும் அவள்—வேதவதி—கர்வமென்பது மருந்துக்குமின்றித் தான் ஒரு செல்வத்திற்சிறந்த சீமானின் புத்திரி என்னும் ஆடம்பரமுமின்றி ஏழைமுதல் பணக்காரர் வரையில் எல்லோரையும் அதிக மரியாதையுடன் நேசிக்கும் குணமுடையவள். இத்தகைய பெண்மணி—ஆசார சீர்திருத்தக்காரர்களிலொருவராகிய விஜயநாதரின் கண்மணியாகிய வேதவதி—தான் கலாசாலைக்கு மோட்டார்வண்டியில் செல்லும்போது இராஜத்தின் வீட்டிற்குச்சென்று அவளை உடன் அழைத்தே செல்வாள். வீட்டிற்கு வரும்போதும் இராஜத்தை அவளுடைய வீட்டில்விட்டுத்தான் தன் தந்தையின் ஆனந்தநிலையம் என்னும் அழகுள்ள மாளிகைக்குச் செல்வாள். ஓய்வுநாட்களில் அவள் அதிக நேரத்தை இராஜத்தின் வீட்டில் போக்குவது வழக்கம். இராஜமும் வேதவதியும் தங்கள் பாடங்களைப் படிக்கும்போது தெரியாதவைகளை யெல்லாம் வேதநாதனிடம் கேட்டுத் தெரிந்து கொள்வர். இப்படி இரண்டு வருஷகாலம் வேதவதி இராஜத்தின் குடும்பத்தாரோடு பழகி இருந்தாள். அதன்பிறகு இராஜத்தின் குடும்பத்தார் நாகபட்டிணம் சென்றுவிட்ட பின்னர் அவ்வளவு அதிகமாக ஒருவருக்கொருவர் நெருங்கிப்பழக இடமில்லாமற்போயிற்று. இது நிற்க, முன் அத்தியாயத்தில் கூறிய அன்று மறுதினம் வேதநாதன் அதிகாலையில் படுக்கையை விட்டெழுந்து காலைக்கடன்களை

முடித்துக்கொண்டு ஆகாரம் புசித்துவிட்டு விஜயநாதரின் கடிதத்திற்குப் பதிலெழுத ஆரம்பித்தான். அச்சமயம் வெளியில் தபால்காரன் தன்னை அழைக்கும் சப்தத்தைக் கேட்டு வெளியிற்சென்று தனக்காக தபாற்காரன்கொடுத்த ஒரு கடிதத்தை வாங்கிக்கொண்டு தன்னறைக்குட்சென்று அதைப்பிரித்து வாசிக்க ஆரம்பித்தான். அது பின் வருமாறு.

## கடிதம்

வேதவதி
ஆனந்தபுரி ஜமீன்தார்
விஜயநாதரின் புத்திரி

ஆனந்தபுரி
"ஆனந்தநிலையம்"
21—3—**

"பிரசித்திபெற்ற நாவலாசிரியராகிய வேதநாதருக்கு ஆனந்தபுரி ஜமீன்தாரின் புத்திரியாகிய வேதவதி எழுதும் விஷயங்களாவன.

தாங்கள் எனக்குப் பழக்கமுள்ளவர்களா யிருக்க வேண்டுமென நம்புகிறேன். ஆனால் நிச்சயமாய்க் கூறுவதற்கில்லை. ஏனெனில் வேதநாதர் என்னும் பெயருடன் எத்தனையோபேர் நமது தமிழ்நாட்டில் இருக்கலாமன்றோ? எந்த வேதநாதரை நான் அறிவேனோ அவர் தாங்கள் தாமோ என்று நான் சந்தேகிக்கின்றமையினால் தாங்கள் அச்சந்தேகம் என்மனதினின்றும் ஒழியும்வண்ணம் பதில் எழுதும்படி கேட்டுக்கொள்ளுகின்றேன். இக்கருத்துடனேயே இதற்குமுன் எனது தந்தையாரும் தங்களுக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கின்றார் என்பதையுங்கூறி இக்கடிதத்தை முடிக்கின்றேன். சிரமத்திற்குமன்னிக்கவும்.

தங்கள்பதிலை எதிர்பார்க்கும்
"வேதவதி"

என்று எழுதியிருந்தது. இவ்வாறு வரையப்பட்டிருந்த கடிதத்தை வாசித்து முடித்தவுடன் வேதநாதன் புன்சிரிப்

புற்று இரண்டு கடிதங்களெழுதி ஒன்றை வேதவதியின் விலாசத்திற்கும் மற்றொன்றை விஜயநாதரின் விலாசத்துக்கும், தபாலில் அனுப்பியதோடும், வேதவதிக்கு, தன்னால் எழுதப்பட்ட புத்தகங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொன்றெடுத்துக் கட்டுக்கட்டித் தபாலில் அனுப்பினான். அதேபோல் அவள் தந்தையாகிய விஜயநாதருக்கும் அனுப்ப அவன் மறந்தானல்லன்.

---

## அத்தியாயம் 5

### இராஜேந்திரனும் இராஜாமணியும்

ஆனந்தபுரியில் அங்கஜத்தெரு என்றொருதெரு உண்டு. அத்தெருவில் பெரும்பான்மையும் பொருளைக்கருதி தங்கள் தேகத்தை விற்கும் தாசிகளே வசிக்கின்றனர். அத்தெருவிலுள்ள ஓர் அழகிய சிறுமாடி வீட்டின் கதவை இரவு எட்டுமணிக்கு ஒரு வாலிபன்—சுமார் இருபத்து ஐந்துவயதும் சாதாரண அழகும் உடைய ஒரு வாலிபன்—தட்டினான்.

உடனே உள்ளிருந்து "யார்?" என்று ஒரு கேள்வி உண்டாயிற்று.

"நான்தான் இராஜேந்திரன்" என்று வெளியில்நின்ற வாலிபன் கூறினான்.

"உடனே கதவுதிறக்கப்பட்டது. இராஜேந்திரன் உட்புகுந்தவுடன் கதவைத்திறந்தபெண்மணி கதவைத்தாளிட்டுக்கொண்டு, வந்தவனோடு ஒன்றும்பேசாமலே வீட்டின் கூடத்தில் இருந்த ஒரு சோபாவின்மீது உட்கார்ந்து எதைப்பற்றியோ சிந்தித்தாள். அவ்வீட்டிற்குள் சில விளக்குகள் பகல்போல் எரிந்துகொண்டிருந்தன.

தன்னோடு ஒன்றும்பேசாமல் மௌனமாயிருந்த அந்த

ஸ்திரீயை—ஒழுக்கமற்ற நடையுடைய பெண்களுக்குரிய அதாவது தாசிகளுக்குரிய அழகில் சிறந்து சுமார் இருபது வயதுடன் விளங்கும் அந்த ஸ்திரீயை—நோக்கி, "என்ன இராஜாமணி!—என்ன என்மீது கோபம்? என்றுமில்லாத விதமாக இன்று இருக்கின்றாயே! உனக்கு என்னகுறை ஏற்பட்டது? சொல். நான் அக்குறையைப் பூர்த்திசெய்கின்றேன். நான் இருக்கும்போது நீ கவலைப்படவேண்டியதற்குக் காரணம் என்ன?" என்று படபடவென்று, கேட்டான் இராஜேந்திரன்.

"ஆமாம்; நான் எனக்கு ஏற்பட்டிருந்த குறைகளில் எத்தனையோ உம்மிடம் கூறியிருந்தேன். அவைகளில் எதை நீர் பூர்த்திசெய்துவிட்டீர்? சொல்லுமே பார்ப்போம். தாசிவீட்டிற்குப் போவதற்கு ஆசையிருந்தால் ஆயிற்றா? அதற்குத்தக்க அந்தஸ்துவேண்டாவோ! உம்மை ஒரு பெரிய மனிதனாகப்பாவித்து என்னை விரும்பிய புலியூர் மிட்டாதாரர் புத்திரர் புவனேந்திரனை வெறுத்தேன். நீர் என்னவோ ஆதியில் எனக்குப் பத்து இலட்சம் ரூபா ஆஸ்திபுண்டென்றும், உன்னை என்னுயிரினும் மேலாகப் பார்க்கிறேனென்றும் கூறினீர். உமது மாயமொழியில் நான் மயங்கினேன். இப்போது தெரிகிறது; உம்முடைய வள்ளல்தன்மை! நீர் உமது குடும்பத்துக்கே ஒரு பிள்ளை தானே! எனக்கு என்ன பேருதவிசெய்தாலும் உம்மையார் கேட்கப்போகின்றார்கள் ? உமக்கு உண்மையில் மனமிருந்தால்தானே என்பேரில்! உமக்கு மனமிருந்தாலும் உம்முடைய ஆஸ்தி எவ்வளவோ அதை யார் அறிவார்கள்? என்னவோ நான் ஏமாந்து உமதுவார்த்தையை நம்பிக்கெட்டேன். "முற்காலத்திலிருந்த தாசிகள் தங்களை நேசிக்கிறவர்களை வஞ்சித்துவந்தார்கள். இக்காலத்து தாசிகளோ தம்மைப்போன்ற மேதாவிகளால் வஞ்சிக்கப் படுகின்ற

ளர்'' என்பது என்விஷயத்தில் பலித்துவிட்டது'' என்று வாய் ஓயாமல் சலிப்புற்றவள்போல் கூறினாள் தாசியாகிய இராஜாமணி.

அவள் இவ்விதம் கூறியவுடன் இராஜேந்திரன் அவளைப்பார்த்து, "இராஜம்! நீ என்னை நான் உன்னைவஞ்சித்து விட்டதாகக் கூறுவது ஒருபோதும் சரியன்று. என் மனசாட்சி அறிய நான் உன்னை வஞ்சித்தவனல்லன். அது உனது மனசாட்சிக்குத் தெரியும். என் தந்தை இருந்த காலத்தில் நான் உன்னை நேசித்தேன். அப்போது என்தந்தைக்குப் பத்துலட்சம் ரூபாய்கள் இருந்ததென்பதை ஊரார் அறிவர். அவர் இறந்தவுடன் பத்துலட்சரூபாய்கள் என் கைக்கு வருமென்று எண்ணினேன். 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும்' என்னும் பழமொழிப்படி என் தந்தை இறந்ததும் 'செத்தால்தெரியும் செட்டியார்வாழ்வு' என்றபடி அவருடைய ஊழல்கள் வெளியாயின. அவர் இரகசியத்தில் எட்டு இலட்சம்ரூபாய்கள் கடன்பட்டிருந்தாரெனத் தெரியவந்தது. அக்கடன்காரர்கள் அக்கடனுக்காக எட்டு இலட்சம் ரூபாய்கள் பெறும்படியான எங்களுடைய சொத்துக்களைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டனர். எஞ்சி நின்ற இரண்டு இலட்சம் ரூபாய்களையும் நான் என்வசப்படுத்திக்கொண்டேன்'' என்று வாய் ஓயாமற்கூறி பின்னும் அவளைப்பார்த்து, "இச்சமாசாரங்களெல்லாம் நீ அறியாதவையன்றே! அன்றியும் உன்னைத்தான் என்ன குறைவுபடுத்திவிட்டேன். நீ வாடகைக்குக் குடியிருந்த இந்த வீட்டை உன்பெயருக்கு இருபதினாயிரம் ரூபாயுக்கு நான்வாங்கிக் கொடுக்கவில்லையா? வயிர அட்டிகை, வயிரக்கம்மல், வயிரம் பதித்த வளையல், இன்னும் சில வயிரத்தாலாய நகைகளையும் ஏறக்குறைய ரூபா எண்பதினாயிரம் கொடுத்து வாங்கித்

தரவில்லையா? உன்னுடைய சாப்பாட்டுச் செலவுக்காக மாதம் ரூபா நூறு கொடுக்கின்றேன், இதற்குமேல் நீ என்னை என்னச்செய்யச் சொல்லுகின்றாய்? என் நிலைமைக்கு இதற்குமேல் செய்வதெப்படி?'' என்று கேள்வியும் பதிலுமாகப் பலவிஷயங்களைக் கூறினான்.

இவ்விதம் இராஜேந்திரன் கூறியவுடன் அவனைப் பார்த்து, "நீர்சொல்வதும் ஒருவாறு ஒப்புக்கொள்ளவேண்டியதா யிருப்பினும், இப்படி நீர் ஒருவித வரும்படிக்கும் வழி இல்லாமல் இருக்கும் பணத்தைச் செலவழித்துக் கொண்டிருந்தால் எவ்வளவுகாலம் நீர் என்னுடைய வீட்டிற்குவர யோக்கியதை யுடையவரா யிருப்பீர்?'' என்று வெறுப்புடன் கேட்டாள் தாசியாகிய இராஜாமணி.

"நீ என்னை யார் என்று எண்ணிக்கொண்டனை? உனக்கு மாதம் ஒருநூறு ரூபா கொடுக்க எனக்குக் கதியில்லாமலாபோகும்?'' என்று ஆச்சர்யத்துடன் கேட்டான் இராஜேந்திரன்.

"இப்படிச் செலவுசெய்தால் உம்மிடம் இப்போதிருக்கும் ரூபாய்களைக்கொண்டு இன்னும் இரண்டுவருஷங்களைக் கூட கழிக்கமுடியாதே! அப்போதென்ன செய்வீர்? என்பதுதான் என்கேள்வி'' என்று கூறினாள் கணிகை.

"இஃது ஒரு பெரிய சந்தேகமாக உன்மனதிலேற்பட்டதுதான் எனக்கு ஆச்சர்யமாயிருக்கிறது. எனக்குஏராளமான பொருள் கிடைக்க ஒரு வழி யேற்பட்டிருக்கின்றது!'' என்று கூறினான் இராஜேந்திரன்.

"அஃதென்ன! மனோராஜ்யமா? கனவா? அதென்ன வழி?'' என்று கேட்டாள் தாசிகுலத்துதித்த தையல்.

"கனவல்ல, மனோராஜ்ஜியமல்ல; உண்மை விஷயந்தான். என் மாமன்—என் தாயோடுபிறந்தவர்—விஜயநாதர்—இவ்வூர் ஜமீன்தாரர்—''என்றுகூறி தொடர்ந்து

"அவருடைய குமாரி வேதவதியை நான் மணம் செய்து கொள்ளத் தக்க ஏற்பாடுகளைச்செய்து அவளை எப்படி யேனும் மணம் முடித்துகொள்ள உத்தேசித்துள்ளேன். அவளை நான் விவாகஞ் செய்துகொண்டபின் அவள் தகப் பனுக்கு அவள் ஒரே குழந்தையாதலால் அவருடைய சொத்து அவளையே சாரும். அப்போது அச்சொத்தை நான் தாராளமாகச் செலவிடவும் வழியுண்டாகும். அப் போது மாதம்ரூபா நூறு உனக்குக்கொடுப்பது எனக்குப் பிரமாதமல்லவே!" என்று தாசி கூறியதுபோல் மனோராஜ் ஜியத்துடன் கூறினான் இராஜேந்திரன்.

இவன் இப்படிக் கூறியவுடன், "இவன் மடையன். ஏதோ தனவந்தருக்குக்குழந்தையாகப் பிறந்துவிட்டானே யன்றி உண்மை அறிவு ஒருசிறிதும் இவனுக்குக்காணோம், இன்னும் இரண்டுமாதத்துக்குள் எப்படியும் இவனிடம் உள்ள பாக்கிப்பொருளையும் நமது குலத்தொழிலுக்குரிய சாகசவித்தையால் பறித்துக்கொண்டு இவனை அனுப்பி விடவேண்டும். ஆள்மட்டும் அழகன்தான்; அதிலென்ன குறைச்சல்! இந்த மூஞ்சியைக்கண்டு ஜமீன்தாரன் மகள் இஷ்டப்படுவது மறுபிறப்பில்கூட இல்லை என்று கூறலாம். இவன் என்னமோ பிரமாதமாக எண்ணி மகிழ்கின்றான். இனி நான் இவனை நம்புவதிற் பயனில்லை. புலியூர் மிட்டா தார் மகன் தலையைத்தடவவே வழிதேடவேண்டும்" என்று தன்னுள் எண்ணிக்கொண்டு இராஜேந்திரனைப்பார்த்து, "நீங்கள் கடைசியாகச் சொல்லிய யோசனை என்னவோ சரி தான். அது போகட்டும். நான் கட்டிக்கொள்ளப் புடவை சுத்தமாகக்கிடையாது. அதிகவிலையில் இல்லாவிடினும் 500 ரூபாய்கள் பெறும்படியாவது நான்கு சேலைவாங்கித் தரும் படி கேட்டேனே! தாங்கள் இரண்டேனும் வாங்கிக் கொடுக்கலாகாதா? என்னைப்போல் தாசிகளெல்லாம் எவ்

வளவோ உயர்ந்த சேலைகளைக் கட்டிக்கொண்டு கோயில் குளங்களுக்குப்போகிறார்கள். அவர்களோடுசெல்ல எனக்கு வெட்கமாயிருக்கின்றது. நீங்கள் என்வீட்டுக்குவந்து செல்வது எல்லாத் தாசிகளுக்கும் நன்றாகத்தெரியும். அதனால் அவர்கள் உங்களைத்தான் அகௌரவமாக நினைப்பார்கள். இவைகளை எல்லாம் நினைத்தேன், எனக்கு என்னை அறியாமலே அழுகையும் ஆத்திரமும் உண்டாயிற்று. அழுதுவிட்டேன். அச்சமயத்தில் தாங்களும் வந்துவிட்டீர்கள்'' என்று கூறினாள் மகா மாயக்கள்ளியாகிய தாசி.

அவள்கூறிய அத்தனைவார்த்தைகளையும் வேதவாக்கியமாகக்கருதிய இராஜேந்திரன் அவளைப்பார்த்து, "இதற்குத்தானா நீ இப்படி வருந்துகின்றாய்! நான்கு சேலைகள் சுமார் 2000 ரூபாய்களில் வாங்கி வீட்டில் வைத்திருக்கின்றேன். நாளையதினம் உன் தாயாரை அனுப்பு; அல்லது நானே கொண்டு வருகிறேன்'' என்று உண்மையைக் கூறினான்.

"அன்பரே! தங்களுக்கு என்பேரில் ஏற்பட்டுள்ள இத்தகைய அன்பை மறந்து நான் ஏதோ உளறிவிட்டமைக்கு மன்னிக்கவேண்டும். இத்தகைய உதவிகளைத் தாங்கள் எனக்குச் செய்யாமல் வேறுயார் செய்யப்போகின்றார்கள்!'' என்று வெகு சமர்த்தாகக் கூறினாள் தாசி.

"கண்மணீ! இது ஒரு பெரிய உதவியா? கடவுள் வேதவதியை எனக்கு மனைவியாக்கி வைக்கட்டும். அப்போது நான் உனக்கு என்னென்னவோ நன்மைகளைச் செய்ய உத்தேசித்திருக்கிறேன்'' என்று இராஜேந்திரன் கூறிக்கொண்டிருக்கையிலேயே இராஜாமணி பின்னும் அவன் தன்னுடையவலையில் நன்றாகச் சிக்குமாறு "அன்பரே! தாங்கள் என்பேரில் கொண்டிருக்கும் அன்புக்கு இதைவிட நான் வேறு என்ன கைம்மாறு செய்யமுடியும்?'' என்று கூறி அப்படியே திடீரென அவன்மேற் சாய்ந்தாள்.

## அத்தியாயம் 4

### பிரியமில்லாத சம்பாஷணை

வேதவதி! நீ என்னை விவாகஞ்செய்து கொள்வாயானால் சர்க்கரைப்பந்தலில் தேன்மாரிப் பொழிந்தார்ப்போலன்றோ இருக்கும். நீயோ மெட்ரிக்குலேஷன்வரையில் வாசித்திருக்கின்றாய். நானும் அப்படியே. நீயோ இருபது வயது இன்னும் சரியாக நிறம்பப் பெறாதவள். என்வயதும் இருபத்து ஐந்துதானாகிறது. உன் அழகும் என் அழகும் ஏறக்குறைய பொருத்தமா யிருக்கிறது. ஆனால் நீ ஒரு ஜமீன்தாரரின் புத்திரி; நானோ ஒரு தனவந்தனின் புத்திரன். இவ்வளவுதானே நம்மிருவருக்குள்ளும் வித்தியாசம்? வேறு எனக்கு என்னகுறைவு?'' என்று சில விஷயங்களைக் கூறி முடிவில் ஒரு கேள்வியைக்கேட்டான் வேதவதியின் அத்தைமகனாகிய இராஜேந்திரன்.

"ஆம்; உமக்கு எல்லாம் சரியாக இருக்கிறதே! அதற்கு என்ன குறைச்சல்? என்று கேட்கின்றீர்போலும்—'' என்று கூறி வேதவதி இன்னும் ஏதோ கூறப் புகுமுன் அவள் வார்த்தையை இடைமறுத்து "என்ன! எனக்கு அழகில்லையா? அறிவில்லையா? ஒழுங்கில்லையா? எனக்கு என்னகுறை?'' என்று சில கேள்விகளைக் கேட்டான் இராஜேந்திரன்.

"ஆகா! இராஜேந்திரரே! உம்முடைய நிறத்தை மறைத்துக்கொள்ள நீர் என்னவர்ணம் பூசிக்கொண்டாலும் முடியாது. பூசியவர்ணம் எத்தனைநாளைக்கு நிற்கும். வர்ணம் கலைந்தவுடன் நிறம் வெளிப்பட்டுவிடாதா? அதுபோல் உம்முடைய இரகசிய துர்நடத்தைகளை நீர் மறைத்து வைத்துக்கொண்டுதானிருக்கின்றீர்—இன்னமும்மறைத்து வைக்கத்தான் பார்க்கின்றீர். உம்முடைய கபடவர்ணம்

கலைந்துவிட்டது. உம்முடைய மோசம் வெளியாகிவிட்டது. உமக்குத் தெரியாத தாசிவீடுகளும், உமக்குக் கொடுக்கல் வாங்கல் இல்லாத சீமைச் சாராயக்கடைகளும் கிடையா வென்று ஊரார் கூறுவதை நானும் என் தந்தையும் அறியாதவர்களல்லர். என் தந்தை என்னவோ நமது சகோதரியின் மைந்தனாயிற்றே என்று நீ இங்கு வருவதைக்குறித்து ஒன்றும் சொல்ல முடியாதவராயிருக்கின்றார். அந்த மரியாதையை நீர் அறிந்துகொள்ளவும், காப்பாற்றவும் வகையின்றி இங்கு—இவ்வீட்டிற்கு—தாராளமாக வருவது மின்றி என்னை யோசனையின்றி விவாகம் செய்துகொள்ளும்படி அஞ்சா நெஞ்சம்படைத்து வற்புறுத்தவும் துணிந்துவிட்டாய். ஏன் என்னை மணந்துகொண்டால் தாராளமாக இன்னும் பத்து சீமைச்சாராயக் கடைகளுக்கும், இன்னும் எண்ணிறந்த தாசி வீடுகளுக்கும் தாராளமாகச்செல்ல பணம் கிடைக்குமெனக்கருதினீரோ? என்னை மணம் செய்துகொள்ளும்படி சாகசஞ்செய்து ஏமாற்ற வந்தனையோ? நீர் ஆண்பிள்ளை என்கிற ஒருவிஷயத்தைத் தவிர வேறு உமக்கு மரியாதைத் தரக்கூடிய கௌரவமொன்றும் உம்மிடம் இல்லாதபடியால் உம்மை மதித்து உமக்குப் பதில் கூறுவது கூட எனக்கழகன்று. ஆகையால் நீர் இனி இங்குநின்று ஏதும் பேசாமல் போய்விடுவதே உசிதம்'' என்று கூறி மறுபடியும், "ஏன் இங்கு நின்றுகொண்டிருக்கின்றீர்? ஒரு பெண்ணாகப் பிறந்தவள் இங்ஙனம் கூறியும் ஒரு ஆண்மகன் அவள் எதிரில் நின்றுகொண்டிருப்பதானது வெட்கங்கெட்டச் செய்கையல்லவா'' என்று இராஜேந்திரனைப்பார்த்துத் தனது அழகிய முகத்தில் கோபக்குறிதோன்றக் கூறினாள் வேதவதி.

அவள் கூறியவார்த்தைகளைக் கேட்டவுடன் கோபாவேசத்துடன் "இன்னமொருமுறை—ஒருவார்த்தை—

கேட்கின்றேன். முடிவாகக்கூறிவிடு. நீ என்னை மணந்து கொள்ள விரும்பவில்லையா?'' என்று கேட்டான் இராஜேந்திரன்.

இவ்வார்த்தையைக் கேட்டவுடன் பின்னும் கோபம் மேலிட, "உம்மை மணந்துகொள்ள நான் விரும்புவது எப்போதுமில்லை'' என்று கண்டிப்பாகக்கூறினாள் ஜமீன்தார் விஜயநாதரின் புத்திரியாகிய வேதவதி.

இவ்வார்த்தையைக் கேட்டவுடன் இராஜேந்திரன் தான் ஏதேதோ எண்ணிக்கட்டிய மனக்கோட்டையெல்லாம் வெறுங்கோட்டையாக நெஞ்சம் புழுங்கி வேதவதியைப்பார்த்து, "நான் ஆண்பிள்ளையானால் பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்று பதிலளித்துவிட்டு அவ்விடத்தை விட்டகன்றான்.

அவன் வார்த்தையைக் கிஞ்சிற்றும் இலட்சியம் செய்யாமல் தன் காரியத்தைக் கவனிக்கச்சென்றாள் வேதவதி.

ஜமீன்தாரரின் புத்திரியாகிய வேதவதி கண்ணியமான அழகும், மிக ஆழ்ந்த அறிவும், தேர்ந்த கல்வியும், விசாலித்த நோக்கமும், உண்மை நாகரிகமும் வாய்ந்தவள். ஜமீன் காரியங்கள் பெரும்பான்மையும் அவளுடைய கவனத்திலேயே செம்மையாக நடைபெறுகின்றன. இன்னும் பலவிஷயங்களில் அவள் தனது தந்தைக்குப் பேருபகாரியாக இருக்கின்றமையாலும், அவள் தந்தைக்கு அவள் ஒரே சந்ததி யாகையாலும் அவள் இஷ்டப்படி தான் அவள் தந்தையும் ஆனந்தபுரி ஜமீன்தாரருமாகிய விஜயநாதர் நடப்பது வழக்கம். ஆகையால் அவளுடைய விவாகவிஷயத்திலும் அவர் அவளுடைய இஷ்டப்படிதான் நடப்பார் என்பதில் யாதொரு ஆட்சேபனையுமில்லை.

---

## அத்தியாயம் 5

### தந்தையு மகளும்

நான் எண்ணியவாறு என்னுடன் கல்வி பயின்றவளாகிய இராஜத்தின் தமையனாகத்தான் இருப்பார் நாவலாசிரியராகிய வேதநாதர் என்று எப்படிக் கூறுவது! என்னவோ இன்றையதினம் அவரிடம்—நாவலாசிரியராகிய வேதநாதரிடம்—இருந்து கடிதம்வருமென்று நினைக்கின்றேன். அதைப்பார்த்தால் உண்மை யாதென விளங்கிவிடும். இராஜத்தின் குடும்பத்தார் இங்கிருந்து நாகபட்டினம் சென்றவுடன் அவர்களைப்பற்றி அடிக்கடி அறிந்துகொள்ள முடியாமற்போயினும், நான் இராஜத்தின் தமையனையும் இராஜத்தையும் மறந்தவளன்று. சில மாதங்களுக்குமுன் நான் இராஜத்தின் தந்தைக்கு எழுதிய கடிதம்—இராஜத்தின் தந்தை இறந்துவிட்டதாகவும் அவர் குடும்பத்தார்களில் எவரும் முன்னிருந்த இடத்தில் இல்லையென்றும்—திரும்பிவந்துவிட்டது. இராஜமும் இறந்துவிட்டாளென்று நாகையிலிருந்துவந்த என் சிநேகிதை ஒருத்தி எனக்குக் கூறினாள். பரிதாபம். இப்போது இராஜத்தின் தமையனாகிய வேதநாதரும், அவர் தாயாரும் எங்கு இருக்கின்றார்களென்பதே தெரியவில்லை. அவர்கள் இருக்குமிடம் தெரிந்தால் என் கவலை ஒழியும். அவருடைய—வேதநாதருடைய—அழகும், ஆழ்ந்த அறிவும், உயரிய கல்வித்திறனும் ஏழுவருடங்களுக்கு முன்னரே அவர் இவ்வூரில் இருக்கும்போதே என்மனதைக் கவர்ந்தன. அவர் உண்மையில் உத்தமர், சாது. அவர் எனக்குண்டாயிருந்தபிரியம்—உண்டாகும்பிரியம் இம்மட்டன்று. அத்தகைய குணவானைக் கருதும் யான் கேவலம் தாசிலோலனாகிய இராஜேந்திரனையா விரும்புவேன்! ஒருபோது

மில்லை—'' என்று இவ்விதமாக ஆனந்த நிலையத்தின் மேன் மாடியிலுள்ள தனது வாசகசாலையில் (Reeding Room) அழகியநாற்காலி ஒன்றில் அமர்ந்து வேதவதி தன்னுள் ஆலோசித்துக்கொண்டிருக்கையில் அந்த ஆனந்த நிலையத்தின் சொந்தக்காரரும், வேதவதியின் தந்தையாருமாகிய விஜயநாதர் அன்று தபாலில் தமக்கொன்றும் தமது குமாரத்தி வேதவதிக்கொன்றுமாக வந்த இரண்டு பார்சல்களையும், இரண்டுகடிதங்களையும் எடுத்துக்கொண்டுவந்து வேதவதியிடம் கொடுத்து முதலில் தமக்குவந்த கடிதத்தைப் பிரித்து வாசிக்கும்படி வேதவதிக்குக்கட்டளை இட்டுத் தாம்வேதவதியின் அருகில் ஒரு நாற்காலியில் அமர்ந்தார். அவள் அவர் கட்டளைப்படி அவருக்குவந்த கடிதத்தையே முதலில் பிரித்து வாசிக்கலானாள். அது பின்வருமாறு:

### கடிதம்

போய்யூர்
''க்ஷேமம்: 23—3—**

ஆனந்தபுரி ஜமீன்தாரர் அவர்கள் திவ்விய சமுகத்திற்கு நாவலாசிரியனான வேதநாதன் அன்புடன் எழுதும் விஷயமாவது:—

தங்கள் அன்பார்ந்த கடிதம் கிடைத்தது. கல்வி கேள்விகளிற் சிறந்தவர்கள் நிற்கும் இடத்தின் ஒரு மூலையிற்கூட ஒதுங்கி நிற்பதற்கும் ஒரு சிறிதும் யோக்கியதையற்ற என்னை நீங்கள் புகழ்ந்து எழுதியிருப்பதற்கு நான் எவ்விதமாகப் பதிலெழுதுவதென்பதே எனக்குத் தெரியவில்லை.

தங்கள் அருமைக்குமாரி சௌ. வேதவதி தனக்குத் தெரிந்தவள்தானோ நான் என்று சந்தேகப்படுவதாக எழுதியிருந்தீர்கள். அவர்கள் அவ்விதம் சந்தேகப்பட வேண்டியதில்லை. தங்கள் குமாரி எந்த வேதநாதனை அறி

வார்களோ அந்த வேதநாதன் நான்தான். தங்கள் குமாரியிடம் கூறுங்கள். வேறு விசேஷமில்லை.

என்றும் தங்கள் குடும்பக்ஷேமத்தை விரும்பும்

வேதநாதன்"

இவ்விதம் வரையப்பட்டிருந்த கடிதத்தைப் படித்து முடித்தவுடன் வேதவதி தனக்குவந்த கடிதத்தையும் பிரித்து வாசிக்கலானாள். அது பின்வருமாறு.

போய்யூர்

க்ஷேமம் 23—3—**

ஆநந்தபுரி ஜமீன்தாரரின் புத்திரி சௌ. வேதவதிக்கு நாவலாசிரியன் வேதநாதன் எழுதுவது:—

தங்களுடைய அன்பார்ந்தகடிதம் கிடைத்தது. தாங்கள் என்னைத் தங்களுக்குப் பழக்கமுள்ளவனோ என்று சந்தேகிப்பதாகத் தங்களுடைய கடிதத்தால் விளங்குகின்றது. தாங்கள் ஆநந்தபுரி அகஸ்தியர் கலாசாலையில் இராஜம் என்னும் பெயரினையுடைய எந்தப் பெண்மணியுடன் ஒருங்கே கல்விபயின்றீர்களோ அந்தப் பெண்மணியின் சகோதரன் நான்தான். அதாவது தாங்கள் இதற்கு முன் எந்தவேதநாதனை அறிவீர்களோ அந்த வேதநாதன் நானே. வேறு விசேஷமில்லை.

தங்கள் சுகத்தை விரும்பும்

வேதநாதன்"

இவ்விரண்டு கடிதங்களையும் படித்து முடித்தவுடன் விஜயநாதர் வேதவதியைப்பார்த்து, "இவ்விரண்டு கடிதங்களும் மிகச்சுருக்கமாகவும், அழகாகவும் வரையப்பட்டிருக்கின்றனவல்லவா?" என்று கேட்டார்.

அதற்கவள் சிரித்துக்கொண்டே 'ஆம்' என்று பதில் கூறி அங்கிருந்த இரண்டு கட்டு பார்சல்களையும் பிரிக்கும்படி தனதுவேலைக்காரன் ஒருவனிடம் கூறினாள்.

அருகிலிருந்த வேலைக்காரன் அந்த இரண்டு கட்டு பார்சல்களையும் தனித்தனியே பிரித்துவைத்தான். அதில் இருந்தவைகளெல்லாம் வெறும் புத்தகங்களேயாம்.

வேதவதி தனக்குரிய கட்டில் இருந்த புத்தகங்கள் ஒவ்வொன்றையும் எடுத்துப்பார்த்தாள். விஜயநாதரும் அப்படியே தமக்குரிய கட்டிலிருந்து ஒவ்வொரு புத்தகமாக எடுத்து கவனித்தார். அப்புத்தகங்களொவ்வொன்றிலும் முறையே, "வேதவதிக்கும், விஜயநாதருக்கும் இதன் ஆசிரியனுகிய வேதநாதனுல் இது அன்புடன் ஞாபகார்த்தத்தின்பொருட்டு அளிக்கப்பட்டதாகும்" என்று வரையப்பட்டிருந்தது. அப்புத்தகங்களில் இப்படி எழுதப்பட்டிருந்ததைக் கண்டவுடன் விஜயநாதருக்கும், வேதவதிக்கும் மட்டற்றமகிழ்ச்சி உண்டாயிற்று. ஏன்? கற்றாரைக் கற்றாரே காமுறுவர் அன்றோ? அதனுல்தான்.

புத்தகங்களெல்லாவற்றையும் பார்வை இட்டானதும் விஜயநாதர் வேதவதியைப்பார்த்து, 'தற்காலம் வெளிவந்துள்ள தமிழ் நாவல்களெல்லாவற்றிலும் மிகச் சிறந்தது வேதநாதருடையதேயாம்" என்று கூறினர். "ஆம், அதிலும் தடையென்ன!" என்று ஆச்சர்யத்துடன் கூறினுள் வேதவதி.

"ஆம்; போதுமான ஆங்கிலக்கல்வியும், நிறைந்ததமிழ் பாஷா ஞானமும், போதுமான சமயோசித அறிவும் உடையவர்களால் எழுதப்படும் கதைகளெல்லாம் நன்ருகத்தானிருக்கும்" என்று கூறி மீண்டும், "இத்தகைய அறிவும் ஆற்றலும் வாய்ந்த நாவலாசிரியர் வேதநாதரை நான் தற்சமயம் நேரில் காணவிரும்புகின்றேன். நாம் கடிதம் எழுதினுல் அவர் வந்து என்னைக் காண்பாரா?" என்றுகேட்டார் விஜயநாதர்.

"கடிதம் எழுதினுல் வருவார். அதிற் சந்தேகமில்லை

ஆயினும் காரணமின்றித் தற்சமயம் அவரை வரவழைப்பதி லும், வருகிறவாரம் நடைபெறப்போகும் எனது பிறந்த தினக் கொண்டாட்டத்தன்று அவரை வரவழைப்போ மாயின் மிக நன்றாயிருக்கும்.'' "ஆம்; அதுதான் சரியான யோசனை. ஆயினும் அதற்கு இன்றே அச்சடித்து—எனது பிறந்தநாட் கொண்டாட்டத்திற்கென அச்சடித்து—வைக் கப்பட் டிருக்கும் அழைப்புக்கடிதங்களி லொன்றை வேத நாதர் விலாசத்திற்கு அனுப்பிவிடுவோமாயின் அவர் தவ ருது என் பிறந்ததினக் கொண்டாட்டத்தன்று இங்கு வரு வார் என்பது திண்ணம்'' என்று கூறினாள் விவேகவதியாம் வேதவதி.

"சரி; அப்படியே செய்கின்றேன்'' என்று கூறி அவ் விடம்விட்டகன்றார் விஜயநாதர்.

கற்றுவல்ல வேதநாதனை வேதவதி காதலிக்காம லில்லை. அதை ஒருவாறு விஜயநாதர்—புத்தி கூர்மையுள்ள விஜயநாதர்—அறிந்துகொண் டிருக்கின்றா ரென்பதும் உண்மையே. அவர் வேதவதியின் இஷ்டத்திற்கு மாறாக நடப்பதே இல்லை. வேதநாதனும் பொருள்—இன்றைக் கிருந்து நாளை அழியும் பொருள்—ஒன்றைத்தவிர வேத வதியைப்பார்க்கினும் வேறெவ்வகையினும் தாழ்ந்தவ னன்று. இதை வாசகர்களும் ஆமோதிப்பார்களென்று எண்ணுகின்றேன்.

---

## அத்தியாயம் 6

### 18 ஆவது ஆண்டு நிறைவு

வேதவதியின் 18 ஆவது வயதும் பூர்த்தியாயிற்று. அன்றுதினம் விஜயநாதரின் ஆநந்தநிலையம் என்னும் மாளிகை அழகுடன் ஜ்வலித்தது. பற்பல ஜமீன்தாரர்

களும், கனவான்களும், சீமாட்டிகளும், பெண்மணிகளும் குழுமி இருந்தனர். ஆண்டுநிறைவு கொண்டாட்டமும் நிறைவேறியது. கொண்டாட்டத்திற்கென ஏற்படுத்தப் பட்ட தஞ்சை தியாகராஜ பாகவதர் காலட்சேபம், திருச்சி கோவிந்தசாமிப் பிள்ளை பிடில், தக்ஷிணாமூர்த்தி மிருதங் கம், அழகநம்பி மிருதங்கம், கஞ்சராகட்டை மாமுண்டியா பிள்ளை, நாகசுரம் நாகை வேணுகோபாலன், கோடைபிடி தருமன் டவுல், பூச்சியங்கார் வாய்ப்பாட்டு, பல்லடம் சஞ் சீவிராவ் புள்ளாங்குழல், நாகோஜிராவ் புள்ளாங்குழல், மேலட்டூர் கிருஷ்ணய்யர் பிடில், வீணை சேஷண்ணு, முத லிய இன்னும் பலரின் சங்கீதக் கச்சேரிகளும், பெண்களுள் சென்னை சரஸ்வதிபாய், பெங்களூர் நாகரத்னம், திருச் செந்தூர் சண்முகவடிவு, கோலார் நாகரத்னம், காஞ்சீ புரம் தனக்கோட்டியும் தன் தங்கையும், சென்னை வன ஜாட்சி, திருவாரூர் பாப்பா, காலஞ்சென்ற கோயம்புத் தூர்தாய், சேலம் கோதாவரி முதலிய இன்னுஞ் சிலரின் பாட்டுக் கச்சேரிகளும், ஆட்டக் கச்சேரிகளும் ஒன்றின் பின் ஒன்றாக நடந்துகொண் டிருக்கின்றன. விஜயநாதரின் மாளிகை அன்று ஆநந்தமாயிருந்தது. ஆண்டு நிறைவின் கொண்டாட்டத்திற்கு வந்தவர்கள் ஒருவரும் அப்புறம் இப்புறம் அசையாமல் கதைகளையும், கச்சேரிகளையும் கவ னித்துக்கொண்டிருந்தனர். சாதாரணமாக மற்றவர்களைப் போலவே விஜயநாதரால் அழைக்கப்பட்டு வந்திருக்கும் வேதநாதன்மட்டும் அங்கு நடைபெறும் சங்கீதக்கச்சேரி களைச் சிறிதுநேரம் கவனித்திருந்துவிட்டு, தனக்கென விடப்பட்டிருக்கும் ஆநந்தநிலையத்தின் மேன்மாடியிலுள்ள ஓர் அறைக்குட்சென்று அங்கிருந்த கம்பராமாயணத்தை எடுத்து அப்புத்தகத்தைத் திறந்தான். திறந்தவுடன் இரா மர் சீதையை முதன்முதல் காணும் இடம் அவன் கண்

னுக்குத் தென்பட்டது. சீதையைக் கண்டவுடன் இராம னின் மனத்தெழும் எண்ணங்களையும், இராமனைக் கண்ட வுடன் சீதையின் மனத்தெழும் எண்ணங்களையும் அருட் புலவராம் கம்பர் அழகான பாக்களில் அமைத்து பாடி யிருக்கும் திறமையை உன்னி உன்னி புகழ்ந்தான். 'ஆ! உண்மைக்காதலின் உயர்வைப்பற்றிக் கம்பர் எவ்வளவு உருக்கமாகப்பாடி இருக்கின்றார். உண்மைக்காதலின் உயர்வே! உயர்வு! உண்மைக்காதலனும் காதலியும் இவ்வுல கில் ஒன்றாகச் சேர்க்கப்படுவார்களாயின் அதனினும் அவர் கள் பெறுவதோர் இன்பம் பிறிதின்று'' இப்படி வேத நாதன் வாய்விட்டுத் தன்னுள் தானே பேசிக்கொண்டிருக் கையில் ஆடம்பரமின்றி சில நகைகளாலும் அழகிய ஒரு பட்டுப் புடவையினாலும் இயற்கையிற்பெற்ற அழகோடு செயற்கை அழகும் மிகுந்து விளங்கப்பெற்ற வேதவதி வேத நாதன் பின்புறமாக அவன் அறியாதபடிவந்து நின்று அவன் பேசுவதைக் கவனிக்கலானாள்.

வேதநாதன் மீண்டும் தன் வார்த்தையைத்தொடர்ந்து, "உண்மை அன்பு! ஆ, மனமொத்த நட்பு! இரண்டு உட லும் ஒருயிருமாகத் தோன்றத்தக்க உண்மைக்காதல்! உடைய தலைவனையும், தலைவியையும் காண்பதரிதன்றோ? வேதவதி—விஜயநாதரின் புத்திரி—ஜமீன்தாரரின் மகள்— என்னை இன்றுகாலையில் தெய்வச்செயலாய் இரண்டொரு முறை பார்க்க நேர்ந்தபோதும் அன்று அவள் என்னோடு பேசியபோதும் எனது நாவல்களைப்பற்றித் தன் தந்தை யின்முன் பேசிய வார்த்தையினாலும் அவள் பார்த்த பார் வையினாலும் என்பேரில் அவளுக்கு ஒருவிதப் பிரியம்— ஏன்—பிரியமென்று சொல்வானேன்! அன்பு! காதல்—உண் மைப்பிரியம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகின்றது. பரம ஏழையாகிய என்னை வேதவதி விரும்புவது அருமையினும்

அருமையே! ஆ! இக்காலத்திற் பெண்மக்களிற் சிலர்—படித்தபெண்மணிகளிலும் சிலர்—தனவந்தனையே அவன் கல்வியறிவு ஒருசிறிதும் வாய்க்கப்பெறாதவனாயினும்சரியே, அவனையே மணஞ் செய்துகொள்ள எண்ணுகின்றனர்! ஆனால் வேதவதி "கற்றாரைக்கற்றாரே காமுறுவர்" என்னும் ஆன்றோர் வார்த்தைக்கொப்ப என்னை விரும்பியது என்னுடைய நற்காலமேயாம் ஆ! வேதவதி! நீ என்னை விரும்புவது போலவே நான் உன்னை விரும்புகின்றேன். ஆனால், வேதவதி! உன்னை நான் ஜமீன்தாரரின்புத்திரி, திரண்டசெல்வங்களுக்குரியவள் என்கின்ற நிலையில் விரும்பவில்லை. கல்வியிற் றேர்ந்தவள் என்கின்ற நிலையில்வைத்து விரும்புகின்றேன். வேதவதி! நீ மட்டும் கல்வியறிவும் உண்மையன்பும் இல்லா திருந்திருப்பாயாயின் உன்னை நான் நேசிக்கப் போகின்றதில்லை. சில மூடப்புருஷர்கள் ஒரு பெண் எத்தனை விகாரமாகவும், ஒழுக்கம், உண்மை நாகரிகம், கல்வி முதலியன இல்லாதிருப்பினும் அவள் திரண்ட செல்வத்திற் குரிய சீமாட்டியா யிருப்பின் அவள் பாதத்திற்கு ஊழியஞ் செய்தாயினும் அவளுடைய செல்வத்திற்காக அவளை மணஞ்செய்துகொள்ள விரும்புகின்றனர்! அந்தோ! இத்தகைய இழிகுணத்துடன் நான் வேதவதியை விரும்பவில்லை—ஆனால் அவளுடைய கல்வி நலங்களைக் கருதியே அவளை விரும்புகின்றேன். ஆனால் அவள் தரித்திரநிலையிலிருக்கும் என்னை, பணத்தைக்கருதியே ஒருவரை ஒருவர் நட்பாடிவாழும் இக்காலத்தில், விரும்புவது ஆச்சர்யத்தினும் ஆச்சரியமே. ஆனால் நான் இவ்வளவுதூரம் எண்ணியது வீண் மனோராஜ்யமாகப் போய்விடுமேயாயின் என் வாழ்நாள் பிரயோசனமற்றதாகும். வேதவதியை நான் தனிமையில் ஒரு முறையேனும் சந்திப்பேனாயின் அவளுக்கு என்மீது பிரியமுண்டா? இல்லையா என்பதைக்

கேட்டு அறிந்து கொள்ளுவேன். நான் இச்சமயத்தில் அவளைத் தனிமையிற் காணமுடியுமோ வென்னும் சந்தேகம் அதிகமாயிருக்கின்றது'' என்று வேதநாதன் பேசுகையில், "என்னைத் தாங்கள் காணமுடியுமோ வென்று சந்தேகப்பட வேண்டாம். கேவலம் என்னைப்போன்ற பெண்மணியைத் தனிமையில் தங்களைப்போன்ற அறிவாளிகள் காணமுடியாதென்றால் பின் யார்தான் காண்பார்கள்—'' என்று கூறிக்கொண்டே வேதவதி வேதநாதன் முன்னிலையில் வந்துநின்றாள்.

அவள், தனக்குத் தெரியாதபடி தான் வாய்விட்டுப் பேசிய யாவையும் கவனித்துக்கொண்டிருந்தாள் என்பதை அறிந்துகொண்ட வேதநாதன் திடுக்கிட்டவனாக வேதவதியைநோக்கி அங்கிருந்த நாற்காலியொன்றில் கட்டாயப் படுத்தி அவளை உட்காரும்படி செய்து அவளைப்பார்த்து, "நான் இப்போது வாய்விட்டுப் பேசிக்கொண்டிருந்த வார்த்தைகளில் பல பிழைகள், ஏற்பட்டிருக்கக்கூடும். அதற்காகத் தாங்கள் என்னை மன்னிக்கும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்று கூறினான்.

வேதவதி புன்சிரிப்புடன் அவன் முகத்தைநோக்கி, "நான் தங்களை மன்னிப்பதற்கான பிழையுள்ள விஷயங்கள் ஒன்றும் சற்றுமுன் தாங்கள் பேசிய வார்த்தைகளிற் காணப்படவில்லையே'' என்று கூறி, "தாங்கள் எப்படி என்னைத் தனிமையிற்காண விரும்பினீர்களோ அப்படியே யானும் தங்களைத் தனிமையிற் காணவிரும்பினேன்'' என்று கூறினாள்.

"ஏன்?'' என்று ஒரே வார்த்தையில் ஒரு கேள்வியை நிகழ்த்தினான் வேதநாதன்.

"ஏன் என்பதற்குப்பதில் நான் கூறவும் வேண்டுமோ? காலஞ்சென்ற தங்கள் சகோதரியின் குணத்தைப்

பற்றித் தாங்கள் என் தந்தையின் முன்னிலையில் இன்று காலையிற் கூறிக்கொண்டிருந்தபோது வேதவதியை எனக்கு நெடுநாளாகவே தெரியுமென்றும், வேதவதி உண்மையான நற்குணம் வாய்ந்தவளென்றும் கூறினீர்கள். அப்போது எனது தந்தை 'வேதவதி தங்களைப்பார்க்க விரும்பினள்' என்று கூறிப் பின்னும் ஏதோ மொழிந்து வார்த்தையை முடிக்க வில்லையா?" என்று சில விஷயங்களைக்கூறி முடிவில் ஒரு கேள்வியுடன் வார்த்தையை முடித்தாள் வித்தியாவதியாம் வேதவதி.

"ஆம்; அவர் கூறியது உண்மையே. நீ என்னைப் பார்க்க விரும்பியது எதற்காக?" என்று கேட்டான் வேதநாதன்.

"தாங்கள் என்னை தனிமையில்பார்க்க விரும்பியது எதற்காக?" என்று கேட்டாள் வேதவதி.

வேதநாதன் இக்கேள்விக்குப் பதில் கூறாமல் மௌனமுற்றான்.

அவன் மௌனமுற்றதையறிந்த வேதவதி அவனை நோக்கி, "வேதநாதரே! அன்பரே! என்பிரியரே—இவ்விதம் நான் தங்களை அழைப்பதைப்பற்றித் தாங்கள் என்னை மன்னிக்கவேண்டும். தாங்கள் இவ்வூரில் பல வருடங்களுக்குமுன் தங்கள் தந்தையோடும், தங்கையோடும் வசித்துக்கொண்டிருந்தபோதே தங்களுக்கும் எனக்கும் மிகுந்த நேசமுண்டென்பதை தாங்கள் அறியாதவர்களன்றே! அதுமுதற்கொண்டு நான் தங்களையே என் ஞாபகத்தில் வைத்துப் படிப்பில் புத்தியைச் செலுத்திக்கொண்டிருந்தேன். நான் கலாசாலையை விட்டபின்பு தங்களைக் காணவேண்டுமென்று முயற்சித்தேன். அம் முயற்சி பலனடையாவிடினும் உண்மை அன்புடையவர்களை எப்போதேனும் இறைவன் சேர்த்துவைப்பார் என்பதற்கிணங்க,

தங்களால் எழுதிப் பிரசுரம் செய்யப்பட்ட அழகிய கருத்துக்களுடன் கூடிய கதைகளை வாசித்தவுடன் அக்கதைகளின் பதிப்பாசிரியர் மூலமாகத் தங்கள் விலாசத்தை அறிந்து தங்களுக்குக் கடிதம் எழுதினேன்! உண்மையில் தங்களைக் காணவேண்டுமென்னும் பேராவல் எனக்குஉதித்ததனையிலேயே என் பிறந்ததினக் கொண்டாட்டத்தை ஒரு காரணமாக வைத்துக்கொண்டு என் தந்தையின் மூலமாகத் தங்களுக்கு அழைப்புக்கடிதம் அனுப்பினேன்! அன்பரே! எனக்குத் தங்கள்பேரில் பிரியம், அன்பு, காதல் உண்டோ, இல்லையோஎன்பதை அறியவே தாங்கள் என்னை தனிமையில்பார்க்க விரும்பினீர்களென்பதை நான் அறிந்துகொண்டேன். இப்போது நான் கூறுவதே உண்மையான, நிச்சயமான வார்த்தை என்பதை அறியுங்கள். பிரியரே, நான் உங்களைக் கல்வியிலும், அழகிலும், புத்தியிலும் சிறந்த வேதநாதரென்னும் சிறந்ததொரு பெயரினையுடைய உங்களைக் காதலிக்கின்றேன்—நேசிக்கின்றேன்—விரும்புகின்றேன்—இனி இவ்வெண்ணத்தினின்றும் நான் மாறமுடியாது. எவ்வளவு இடையூறுகள், துன்பங்கள், கஷ்டங்கள் ஏற்பட்டபோதிலும் தங்களைக் காதலிப்பதினின்றும், நேசிப்பதினின்றும் விலகேன். அரசகுமாரனே, கல்வியிலும், ஒழுக்கத்திலும், அறிவிலும்சிறந்த அரசகுமாரனே இனி என்னை மணக்கவிரும்பினும் நான் தங்களையன்றி அவனை ஒரு துரும்புபோல் மதிப்பேன். வேதநாதரே! தாங்கள் என்கருத்துக்குட்படுவீர்களென்றே நம்புகின்றேன். என் கருத்துக்கு விரோதமாக எவ்வித வார்த்தைகளையும் தாங்கள் கூறமாட்டீர்களென்றும் நினைக்கின்றேன். அன்பரே! இவ்விஷயத்தில் தங்கள் கருத்தை எனக்குச் சீக்கிரமாகக் கூறுவீர்களென்று எதிர்பார்க்கின்றேன்'' என்று மடமடவென்று அன்பின் பெருக்காலேற்பட்ட

ஆர்வத்தால் கூறினாள்.

"வேதவதி! நான் எவ்விஷயத்தை உன்னிடத்தினின்றும் கேட்டறிந்துகொள்ள வேண்டுமென்று நினைத்தேனோ அதையே நீ கூறிவிட்டனை! பரம ஏழையாகிய என்னை மணந்துகொள்ளும் விஷயத்தில் உனக்குச் சம்மதம்—பிரியம்—ஏற்பட்டது" அருமையினும் அருமையன்றோ!" என்று ஆச்சரியத்துடன் கூறினான் வேதநாதன்.

"அன்பரே! பிரியரே! தாங்கள் தங்களை ஏழை என்று கூறிக்கொள்ளுவது எவ்வாற்றானும் பொருந்தாது. "கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம்சிறப்பு" என்றும், 'கல்வியினுங்கில்லை சிற்றுயிர்க்குற்றதுணை' என்றும் ஆன்றோர் திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றனரன்றோ? கல்விலாதார்க்கு எவ்வளவு பொருள்தான் இருப்பினுமென்ன? அப்பொருள் யாதுகாரணம்பற்றியேனும் ஒழிந்து, அழிந்துவிடுமாயின் அதன் பின்னர் அவர்கள் செய்வதியாது? அவர்கள் நிலைமை மிகக் கஷ்டமாய் முடியுமன்றோ? கற்றார்க்கு எத்துணை கஷ்டம்வரினும் அவர்கள் தம் வரையிலாவது ஜீவனம் செய்ய சக்தியுடையவர்களா யிருப்பார்களேயன்றிக் கல்லாத தனவந்தனைப்போல் அழிந்து ஒழிந்துபோய்விடமாட்டார்கள். தனவந்தனை, அவனுடைய ஊரில் அவனை அறிந்த ஒரு சிலரே மதிப்பரேயன்றி மற்றநாட்டினர் இலகுவில் அவனை மதித்துவிடமாட்டார்கள். கற்றவர்களுக்கோ அவ்விதமின்று. அவர்கள் எந்நாட்டிற்குச் செல்லினும் அவர்களுடைய கல்வியானது ஆங்குள்ளோர் பலரையும் அவர்களுக்கு ஊழியக்காரர்களாகக் கூடச்செய்துவிடுமெனில், பின்னர் அவர்களுடைய பெருமையைக் கூறுவானேன்! ஆகையால் எனதுயிர்க்காதலரே! தாங்கள் தங்களை 'ஏழை' என்று கூறாதீர்கள் என்று வேதவதி வேதநாதனைப் பார்த்துக் கூறினாள்.

அதற்குவேதநாதன் அவளைப்பார்த்து, "வேதவதி! காதலி! நீ உரைப்பவைகள் யாவும் உண்மையே. உலகம் அப்படி இல்லையே! தற்கால உலகம் பணத்தில்தானே தாண்டவமாடுகின்றது. கல்வியையும், குணத்தையும் கவனிப்பவர்கள் ஒருவருமில்லையே" என்று கூறினன்.

அதற்கு வேதவதி "அன்பரே!" உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" யாதலால் உயர்ந்தோர் எனப்படும் அறிவாளர்கள் கல்வியையும்,கல்வியுடையாரையும் பொருட்படுத்துவார்களேயன்றிக் கல்வியறிவற்ற தனவந்தர்களைப் பொருட்படுத்தார். ஆகையால் அத்தகைவரின் நன்மதிப்பு உங்களுக்கு உண்டாகுவது—உண்டாயிருப்பது உண்மை—சாதாரண மக்கள்தாம் பணமுடையாரை கௌரவிப்பார்கள். அவர்களுடைய கௌரவம் நமக்குவேண்டாம் "ஆகையால் தங்களுக்கு அது விஷயத்திற் கவலை என்ன" என்று கூறினள்.

"வேதவதி, கண்மணீ! நான் முடிவாகக் கூறிவிடுகிறேன். உன்னை மணந்துகொள்ள எனக்கு மனபூர்வமாகப் பிரியமுண்டு. ஆயினும், உன்னை ஒரு தனவந்தரின் புத்திரி என்று எண்ணி மணந்துகொள்ளப் பிரியமில்லை. உன்னைக் 'கல்வியிற்றேர்ந்த கட்டழகி' என்னும் காரணம் பற்றியே மணந்துகொள்ள என்மனம் அவாவுகின்றது. அந்த நிலையிலேயே உன்மனமும் என்னை விரும்பி நிற்கின்றது. ஆயினும் நம்மிருவருக்கும் விவாகம்முடிந்தவுடன் நீ உன் தந்தைக்கு ஏக புத்திரியாதலால் அவர் ஆஸ்தி அனைத்திற்கும் நீயே உரியவள் என்னும் காரணம்பற்றியே உன்னை நான் வஞ்சித்து மணந்துகொண்டதாகப் பலருங் கூறநேரும். ஆகையால் நீ என்னை மணந்துகொண்ட பின்னும் நான் எனது முயற்சியில் சம்பாதித்து ஜீவனம்செய்ய விரும்புவேனேயன்றி உனக்கு உரிமையான பொருள்களைக்

கொண்டு காலங்கழிக்கமாட்டேன். இது உனக்குச் சம்மத மானல் நான் உன்னை விவாகஞ் செய்துகொள்ளுகிறேன்'' என்று கூறினன் நாவலாசிரியனுகிய வேதநாதன்.

"காதலா! தாங்கள் அறிவிலார் ஏதோ கூறுவர். என்று அஞ்சுவது எதற்கு? அறிவற்றவர் எதற்கும் வீண் வார்த்தை கூறி அபவாதமே சொல்வர். அதற்கு நீங்கள் செவி சாய்ப்பது எதற்கு! வேண்டுமானல் உங்கள் இஷ்டப் படியே செய்யலாம். ஆயினும் நான் தங்களுக்குரியவளான போது எனக்குரிமையான பொருள்கள்யாவும் தங்க ளுடையதே யன்றோ? ஆகையால் எனக்குரிய ஆஸ்திகள் தங்களுக்குரியதென்று கூறத்தடையென்ன?'' என்று சில வார்த்தைகளைக்கூறி ஒரு கேள்வியைக் கேட்டாள் ஜமீன் தார் விஜயநாதரின் புத்திரியாகிய வேதவதி.

அதற்குப் பிரசித்திப்பெற்ற நாவலாசிரியனுகிய வேத நாதன் அவளைப்பார்த்து "கண்மணீ! வேதா! நீ யாது கூறி னும் சரியே; நான் உன்னை மணந்துகொள்ளவேண்டும்'' என்கின்ற பிரியம் உனக்கு உண்டாயின் நான் எனதுவாழ் நாள் முழுவதும் எனது முயற்சியால்வரும் ஊதியத்தைக் கொண்டே வாழ விரும்புகின்றேன். உன் தந்தையின் காலத்திற்குப்பிறகு அவருடைய ஆஸ்திகளிருந்து உனக்கு வரும் வருமானத்தை வேண்டுமானல் நீ தரும விஷயங் களில் செலவிட்டுக்கொள்'' என்று கூறினன்.

"சரி; தங்கள் இஷ்டப்படியே செய்யலாம்'' என்று கூறித் தாங்கள் எவ்விதமாகத் தம்முடைய ஜீவனத்திற்கு வழிதேடப் போகிறீர்கள்? என்று கேட்டாள் வேதவதி.

"கௌரவமான வழிதான்—கதை எழுதி—அறிவைப் புகட்டும் உண்மையில் ஒரு சிறிதும் பிறழாத நாவல்க ளெழுதி அதனல்வரும் வருமானத்தைக்கொண்டு வாழ்வ தோடும் புகழையும் கீர்த்தியையும் அடைவேன்'' என்று

கூறி, "அன்றியும் சென்னையில் உள்ள 'இராஜதானிக்கலா சாலைக்குப் பி.ஏ. பட்டம்பெற்ற ஓர் உயர்தரத் தமிழ்ப்போத காசிரியர் தேவையென்றும் மாதச் சம்பளம் ரூபா 150 என்றும் ஒரு பத்திரிகையிற் பிரசுரித்திருக்கக் கண்டேன். அதற்கும் முயற்சிசெய்திருக்கின்றேன். அநேகமாக அச் சௌரவ உத்தியோகம் எனக்கே கிடைக்கும். இவைகளினல் நாமிருவரும் கௌரவமாகவும், கண்ணியமாகவும் வாழக்கூடுமன்றோ?" என்று கூறினன் வேதநாதன்.

வேதநாதன் இப்படிக்கூறியவுடன், வேதவதி அவனை அன்பு சொட்டும் பார்வையுடன் கூர்ந்துநோக்கி, "அன்பரே! இத்தகைய உத்தமகுணம்வாய்ந்த மனிதர்களைக் காண்பது அருமையினும் அருமையன்றோ" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

அதற்கவன் "ஆம்: உத்தமகுணங்கள் வாய்ந்தவர்களைக்காண்பது அருமையினும் அருமையே. உத்தமகுணம் வாய்ந்தவர்களில் நான் ஒருவனென்று நீ கருதுவாயாயின் அத்தகைய கௌரவத்தன்மைக்கு நான் உரியவனன்று" என்பதைமட்டும் கூறுகின்றேன் என்று கூறினன் வேதநாதன்.

அவன் இவ்வண்ணம் கூறியவுடன் அவனுடைய உத்தமகுணத்திற்காகத் தன்னையேயன்றி தனக்குரிய வேறு எப்பொருளையும் அவனுக்கு அடிமைப்படுத்தினலும் தகும் என்று எண்ணிக்கொண்டே வேதநாதனிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு தன் தந்தை இடத்திற்குச் சென்றாள் வேதவதி.

வேதவதியின் பிறந்தநாள் கொண்டாட்டம் வெகு விமரிசையாகவே நடந்தேறியது. அக்கொண்டாட்டத்திற்கு வந்திருந்தவர்களில் வேதநாதனைத் தவிர எல்லோரும் போய்விட்டனர்.

வேதநாதனும், வேதவதியும் ஒருவரை ஒருவர் மன மொத்துக் காதலித்திருப்பதை அறிந்த விஜயநாதர் மட்டற்ற மகிழ்ச்சியை அடைந்தவராய் அவர்களிருவருக்கும் மணமுடிக்க வேண்டியவிஷயத்தில் கவனஞ் செலுத்துவாராயினர்.

சென்னை இராஜதானி கலாசாலை உயர்தரத் தமிழ்ப் போதகாசிரியர்வேலையைவந்து ஒப்புக்கொள்ளும்படி வேதநாதனுக்கு உத்தரவுவந்தது. அவன் வேதவதியிடத்திலும், விஜயநாதரிடத்திலும் உத்தரவுபெற்றுக்கொண்டு சென்னைக்குச்சென்று இராஜதானி கலாசாலையில் தமிழ்ப் போதகாசிரியர் வேலையை ஒப்புக்கொண்டான். சில தினங்களுக்குப்பிறகு அவன் தன்னுடைய தாயையும் சென்னைக்கு வரவழைத்துக்கொண்டான். பொய்யூரிலுள்ள அவனுடைய சொத்துக்கள்யாவும் சென்னைக்குக் கொண்டு வரப்பட்டன.

* * *

* * *

சிலமாதங்களாயின. சித்திரைமாதம் பத்தாம் தேதி நல்ல சுபமுகூர்த்தத்தில் வேதநாதனுக்கும், வேதவதிக்கும் மிக விமரிசையுடன் விவாகம் நடந்தேறிய தென்பதோடு இக்கதையை எல்லாம்வல்ல இறைவனின் அருளால் முடிக்கின்றோம்.

---

# விஜயநகரத்தின் அழிவு

முற்காலத்தில் பிஜப்பூர், விஜய நகரம் என்னும் பெயர்களையுடைய இரண்டு இராஜ்ஜியங்கள் நமது தேசத்தில் சிறந்து விளங்கின. பிஜப்பூர், விஜயநகரம் என்னும் இரண்டு பெயரும் ஜயம் என்னும் ஒரே பொருளைக் கொண்டனவாகும். பிஜப்பூர் முகம்மதிய மன்னர்களாலும், விஜயநகரம் இந்துமத அரசர்களாலும் ஆளப்பட்டு வந்தன. இப்பொழுது அவ்விரு ஊர்களும் அழிவுற்றிருக்கின்றன. அவைகளைப் பார்க்கும்போது அவைகள் ஒரு காலத்தில் மகோன்னத நிலைமையி லிருந்தவைகளெனச் சொல்லாமலே தெரியும். பிஜப்பூரிலுள்ள பகுதி யொன்றைப் பார்க்குந்தோறும் அக்காலத்திய சிற்பிகளின் பெருமையைப்பற்றி வியந்து பேசவேண்டி யிருக்கிறது. விஜய நகரத்திலுள்ள சிவன்கோவிலும், கிருஷ்ணனுடைய ஆலயமும், இராமர் கோவிலும் இன்னும் மற்றுமுள்ள தேவாலயங்களும் பார்ப்போருக்குப் பிரமிப்பை உண்டாக்குகின்றன. நிற்க,

1564-ஆம் வருஷம் போருக்குரிய தோற்றத்துடன் விளங்கிய போர்வீரன் ஒருவன் குதிரைமீதேறி பிஜப்பூர் இராஜ்ஜியத்தின் தலைநகரின் தென்மேற்காகச் சென்று கொண்டிருந்தான். சென்றவன் ஆங்காங்குள்ள பல அருமையான கட்டடங்களைப் பார்த்துக்கொண்டே சென்றான். அவன் இந்தியாவுக்கு அப்பாலுள்ள துருக்கி தேசத்தின் தலை நகராகிய கான்ஸ்டான்டி நோபிலைச் சேர்ந்தவன். அவன் பலதேசங்களைப் பார்த்தவனாயினும், பிஜப்பூர் வளங்களைக்கண்டு அவன் பிரமிக்காமல் இல்லை.

ROJA MUTHIAH

அவ்வாறு அவன் சென்று கொண்டிருந்தபோது ஜனங்கள் திரள் திரளாக ஓரிடத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். அதற்குக்காரணம் என்னவென்று அவன் விசாரித்ததிலிருந்து அவ்வூர் அரசராகிய அலி அடில்ஷா என்பவருக்கும், ஆமது நகரத்து அரசராகிய ஹூசேன் நைஜாம்ஷாவின் குமாரத்தியாகிய சாந்த்பீபீ என்னும் இளவரசிக்கும் விவாகம் நிறைவேறியதை முன்னிட்டு அவ்வூர் அரசராகிய அலி அடில்ஷா என்பவர் அன்று பிற்பகலில் தமது இராஜமாளிகைக்கு எதிரில் விநோத விளையாட்டுகளை நடத்தப்போகிறார்களென்றும், அவ்விளையாட்டுகளில் போர்வீரர்களின் திறமையை அறியக்கூடிய விஷயமும் நடைபெறும் என்றும், அவைகளைப் பார்க்கவே ஜனங்கள் திரள் திரளாகப் போகிறார்களென்றும் நமது துருக்கிய போர்வீரன் அறிந்தான். பந்தயத்தில் வீரத்தனம் படைத்த போர்வீரனை அரசர் தமது மெய்க்காப்பாளனாக வைத்துக்கொள்ளப் போகிறார் என்றும் கேள்விப்பட்டான். கேள்விப்பட்டதும் பிஜப்பூர் அரசனை அறிமுகம் செய்துகொள்வதற்கு இதைவிட வேறு சமயம் வாய்க்காதெனு அப்போர் வீரன் அறிந்துகொண்டான். ஆகையினால், தான் அந்த விநோத விளையாட்டுகளிற் கலந்து தன்னுடைய வீரத்தனத்தைக்காட்டி அரசனுடைய ஆதரவைப் பெறவேண்டுமெனத் தீர்மானித்தான்.

இத்தகைய போர்வீரனுடைய பெயர் யூசுப்கான் என்பது. அவன் துர் அதிர்ஷ்டவசமாய் துருக்கியிலிருந்து கிறிஸ்தவ மதத்தைச் சார்ந்தவர்களால் சிறை செய்யப்பட்டுப் போர்த்துக்கல் தேசத்துக்கப்பல் வியாபாரிகளுக்கு அடிமையாக விற்கப்பட்டான். அவன் விற்கப்பட்ட அன்றையதினமே அவனை வாங்கிய கப்பல் வியாபாரி அவனோடு இந்தியாவுக்குப் பிரயாணமானன். அப்

பொழுது கப்பலில் கடற்கொள்ளைக் காரர்களை எதிர்ப்ப தற்குப் பலவீரர்கள் தயாராயிருந்தார்கள். அவர்களில் தன்னையும் ஒருவனாகச் சேர்த்துக்கொள்ளும்படி யூசுப்கான் கேட்டுக்கொண்டான் அவர்களும் அவன் வேண்டுகோளுக் கிரங்கினர். நாள் பல சென்ற பின்னர் அக்கப்பல் இந்தியாவின் கரையை அடைந்தது. அப்பொழுது திடீரென கடற்கொள்ளைக்காரர்கள் தோன்றி அக்கப்பலை எதிர்த்தனர். சண்டை இருகட்சியாருக்குள்ளும் பலமாக நடந்தது. கப்பல் கடற் கொள்ளைக்காரரிடம் சிக்கிவிடும்போல் தோன்றியது. ஆயினும் மற்றவர்களைவிட யூசுப்கான் செய்த சண்டையின் பயனால் கடற் கொள்ளைக்காரர்கள் தோல்வியுற்று ஓடினர். யூசுப்கான் செய்த நன்மைக்காக அவனை அடிமை கொண்ட கப்பல் வியாபாரி கோவாவுக்குச் சென்றவுடன் அவனுடைய அடிமைத்தனத்தை நீக்கி அவனைச் சுயேச்சையுடையவனாக்கி, அவனுக்கு வேண்டிய உபசரணைகளைச்செய்து ஒரு பெருந்தொகையை இனாமாகக் கொடுத்து இன்னும்பல நன்மைகளைச் செய்வதாகவும் சொன்னான். ஆயினும் யூசுப்கான் அதுவரையில் தனக்குக் கிடைத்த நன்மையேபோதும் என்றும்,இனி தன்னைத்தன் னிஷ்டப்படி செல்லவிடவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டான். உடனே கப்பல் வியாபாரி அதற்குச் சம்மதித்து அவன் இஷ்டப்படி அவனை அவன் விரும்பும் இடத்திற்குப் போகச்செய்தான். யூசுப்கான் சந்தோஷத்துடன் அவ் விடத்தை விட்டகன்று,கோவாநகருக்குட்சென்று, தனக்கு கப்பல்வியாபாரி கொடுத்தப் பெருந்தொகையைக்கொண்டு போர் வீரர்களுக்குரிய ஆயுதங்களையும், உடைகளையும் வாங்கிக் கொண்டதோடும் எல்லாவகையிலும் சிறந்த ஒரு குதிரையையும் வாங்கிக்கொண்டான். அதே சமயத்தில் அவன் பிஜப்பூர் இராஜ்ஜியத்திற்கும் விஜயநகர இராஜ்ஜியத்திற்கும்

ஒரு பெரும்போர் நடக்கப் போகிறதெனக் கேள்விப்பட்டான். உடனே அவன் கோவாவில் நிற்காமல் பீஜப்பூருக்கு வந்து சேர்ந்தான். அப்பொழுதுதான் பீஜப்பூர் அரசருக்கு விவாகம் நிறைவேறி அவ்வரசர் விநோத விளையாட்டுகளை நடத்தத்தீர்மானித்திருந்தார். இதை நாம் முன்னரே சொல்லி யிருக்கின்றோம். நிற்க.

யூசுப்கான் பந்தய விளையாட்டில் தானும் கலந்து கொள்ளவேண்டும் என்பதை தெரிவிக்க வேண்டியவர்களிடம் தெரிவித்தான். பந்தய விளையாட்டு நடைபெற பின்னும் சிறிது நேரம் செல்லும் என்றுகூறி அரண்மனையைச் சார்ந்த உத்தியோகஸ்தர்கள் அதுவரையில் அவன் தங்கியிருக்க ஓர் இடங்கொடுத்து அவனைக் கௌரவித்ததோடும் அவன் ஏறிவந்த குதிரையையும், குதிரை லாயத்திற்கு அனுப்பி அதற்கு வேண்டியவனவற்றைச் செய்ய ஏற்பாடும் செய்தனர்.

பந்தய விளையாட்டுகள் நடைபெறப்போகும் இடத்தைச் சுற்றிலும் இலட்சக் கணக்கான ஜனங்கள் கூடியிருந்தனர். அநேகர் தங்க இடம் இல்லாமல் காக்கைகளைப் போல மரங்களில் தொத்திக் கொண்டிருந்தனர். காலம் கொஞ்சங் கொஞ்சமாகச் சென்று பந்தய விளையாட்டு நேரமும் வந்தது. அரசரும் அவர் குடும்பத்தாரும் பலபெரும் பிரபுக்களும் அவர் அவர்களுக்குரிய இடத்தில் வந்து அமர்ந்தனர். யாவும் ஒழுங்காக நடைபெற்ற பின்னர் பந்தய விளையாட்டுகள் ஆரம்பிக்கப்பட்டன. முதலில் பலவிதமான மிருகங்கள் ஒன்றோடொன்று சண்டையிடுங்காட்சி நடைபெற்றன. இக்காட்சி சிலமணி நேரங்கள் வரையில் நடைபெற்ற பின்னர் மல்யுத்தம் செய்வதில் தேர்ச்சி பெற்றவர்களான இந்தியர்களும், ஆப்பிரிக்காதேசத்தவரும் ஒருவரோடொருவர் ஜதை ஜதையாக மல்யுத்தம்

செய்யலாயினர். வெற்றியையும், தோல்வியையும் பார்த்துச் சொல்வதற்கு உண்மையுடைய மத்தியஸ்தர்கள் பலர் ஏற்படுத்தப் பட்டனர்.

பின்னும் சிறிது நேரத்தில் மல்யுத்தம் முடிவு பெற்றது. பின்னர் யானையோடு போர்வீரன் ஒருவன் குதிரைமீதேறி சண்டைசெய்யும் காட்சி நடைபெற்றது. அக்காட்சிதான் எல்லாவற்றிலும் ஆச்சரியம், பயங்கரம், முதலியன நிரம்பியதாயிருந்தது. போர்வீரன் யானையோடு எதிர்த்துப் பலமுறை ஆபத்திற்குட்பட்டுத் தன்னுடைய திறமையினால் தப்பி முடிவில் ஜயம் பெற்றான். அரசரும், ஏனையோரும் அவனைப்புகழ்ந்து கௌரவித்தனர். அஃதோடு சிரமபரிகாரம் செய்து கொள்வதற்காக எல்லோருக்கும் சிறிது ஓய்வு கொடுக்கப்பட்டது. அந்த ஓய்வு நேரத்தில் அநேகர் இருந்த இடத்தை விட்டு வெளியிற் சென்றனர். பலர் இருந்த இடத்தை விட்டு வெளியிற் செல்லாமலே தங்கியிருந்தனர். வெளியிற் சென்றவர்களில் யூசுப்கானும் ஒருவனாவான். அவன் அரசரால் அன்னியர்களுக்கென்று ஏற்படுத்தப்பட்ட இடத்தில் தங்கிக்குளித்துச்சிறிதளவு ஆகாரம் உட்கொண்டு சிரமபரிகாரம் செய்து கொண்டான். பிறகு குறித்த நேரத்தில் தனக்குரிய ஆடைகளை யணிந்து கொண்டு வாளாயுதத்தைக் கையில் பிடித்தவண்ணம் விநோத விளையாட்டுகள் நடைபெறும் இடத்திற்குச்சென்று தன்னுடைய ஆசனத்தில் அமர்ந்து தன்னுடைய திறமையைக் காட்டக்கூடிய நேரம் எப்பொழுது வரும் என்று எதிர்பார்த்திருந்தான்..

மறுபடியும் முன்போல் எல்லோரும் வந்து கூடினர். அப்பொழுது போர்வீரர்கள் ஒருவரோடொருவர் சண்டை செய்யும் காட்சியைத் தொடங்கவேண்டுமென்று ஏற்பாடாயிற்று. அப்போருக்கு ஐம்பது வீரர்கள் தயாராயினர் அவர்கள் அனைவரையும் ஒருவரோடொருவர் பொருதவிட்

டுப் பொழுதைப்போக்கிக் கொண்டிருப்பதைவிட அவர்களில் தேர்ந்தவர்களைத் தெரிந்தெடுத்து அவர்களை மட்டும் ஒருவரோடொருவர் எதிர்க்குமாறு செய்யவேண்டுமென்று தீர்மானித்தனர். ஐம்பது வீரர்களிற் சிறந்தவர்களைத் தெரிந்தெடுப்பது எப்படி? வளையமொன்றைத் திறந்த வெளியின் மத்தியில் கட்டித் தொங்கவிட்டு விடவேண்டும்; அந்த வளையத்தைத் தன்குதிரைமீது ஏறிக்காற்றினுங்கடிய வேகத்துடன் சென்றவண்ணம் நான்குமுறை, ஒவ்வொருமுறையிலும் தவறாமல், எந்தக்குதிரை வீரன் தன் ஈட்டிமுனையில் எடுத்துச் செல்லுகிறானோ அவனே பின்னர்ப் பந்தயச் சண்டையில் நிற்பதற்குத் தகுதியுடையவனாவான் என்று தீர்மானமாயிற்று. அத்தீர்மானத்தை எல்லோரும் ஒப்புக்கொண்டனர். நமது போர்வீரனாகிய யூசுப்கானும் அதை ஒப்புக்கொண்டான். பின்னர் மேற்கூறியவாறே யாவும் நடைபெற்றன. ஐம்பது பெயரில் நான்குபெயரே மேற்கூறிய முறைப்படி நடந்து ஜயம் பெற்றனர். அவர்களில் முதன்மையானவன் நமது போர் வீரனாகிய யூசுப்கான்; இரண்டாவன் சையத்ஹாஸன்; மூன்றாவன் முன் யானையோடு சண்டைசெய்து ஜயம் பெற்ற போர்வீரன்; நான்காவன் அக்பர் சமஸ்தானத்தில் பிரசித்திபெற்ற ஒரு வீரன்.

இந்த நான்கு பெயருமே ஒருவரோடொருவர் யுத்தம் செய்து ஜயம் பெறவேண்டுமெனத் தீர்மானமாயிற்று. பந்தயச் சண்டையின் நிபந்தனைகளின்படி அவர்கள் ஒருவரோடொருவர் சண்டை செய்கிறார்களா என்பதைக் கவனிப்பதற்காகப் பல ஜாதியார்களிலிருந்தும் திறமைவாய்ந்த சிலர் மத்தியஸ்தர்களாக நியமிக்கப்பட்டனர். சண்டையிடுவோர் தங்களுடைய ஈட்டியைத்தவிர வேறொன்றையும் உபயோகப் படுத்தக்கூடாது என்னும் நிபந்தனை முக்கிய

மானதாகக் கொள்ளப்பட்டது.

முதன் முதல் யானையோடு எதிர்த்து ஜெயம் பெற்ற போர்வீரனுக்கும், சையத் ஹாஸன் என்பவனுக்கும் சண்டை நேர்ந்தது. சண்டை வெகுநேரம் பல விதமாக நடைபெற்றது. கடைசியாக சையத் ஹாஸன் ஜயம் பெற்றான். பிறகு யூசுப்கானுக்கும், அக்பர் சமஸ்தானத்துப் போர்வீரனுக்கும் யுத்தம் தொடங்கியது. சிறிதுநேரம் வரையில் சண்டை நடந்து கொண்டிருந்தது. திடீர் திடீரென்று யூசுப்கான் சாமர்த்தியமாகச் செலுத்திய ஈட்டியின் வேகத்தை தாங்க முடியாமல் அக்பர் சமஸ்தானத்து வீரன் குதிரையினின்றும் கீழே விழுந்து விட்டான். உடனே யூசுப்கான் தன் குதிரையைவிட்டுக் கீழிறங்கி தன்னால் அடியுண்டு கீழேவிழுந்த அக்பர் சமஸ்தானத்து வீரனை எடுத்து உபசரித்தான். அவன் உயர் குணத்தைக் கண்ட அனைவரும் அவனைப் புகழ்ந்தனர்.

பின்னர் ஜயம் பெற்றவர்களான சையத்ஹாஸனுக்கும் யூசுப்கானுக்கும் சண்டை தொடங்கியது. இச்சண்டை தான் மிகவும் கவனிக்கத்தகுந்தது. இரண்டு சிறந்த வீரர்கள் ஒருவரை யொருவர் எதிர்க்கும் காட்சி எவ்வாறிருந்திருக்கும் என்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ? ஜனங்களுடைய எண்ணமெல்லாம் யூசுப்கானே ஜயம் அடைய வேண்டுமென்று இருந்தது. அப்பொழுது யூசுப்கான் வைத்திருந்த கேடயமானது பழுதுபட்டிருந்த படியால் அங்கிருந்தவனும், சற்றுமுன் யூசுப்கானால் தோற்கடிக்கப்பட்டவனுமான அக்பர் சமஸ்தானத்து வீரன் யூசுப்கானுக்கு முன் வந்து தன் கேடயத்தை அவனிடங் கொடுத்து அதை வைத்துக்கொண்டு சண்டைசெய்யுமாறு சொன்னான். தன்னால் தோற்கடிக்கப்பட்ட மொகலாயன் தருணத்தில் தனக்குச்செய்த உதவியை யூசுப்கான் பிற்காலத்தில் தன்

வாழ் நாளில் ஒரு நாளும் மறக்கவேயில்லை. அதனால் அவ்விருவருக்குள்ளும் நெருங்கிய நேசம் உண்டாயிற்று. நிற்க,

சையத் ஹாஸனும், யூசுப்கானும் ஒருவரோடொருவர் சண்டையிடத் தங்கள் ஈட்டியை நீட்டியவண்ணம் குதிரை மீது தயராய் இருந்தார்கள். மத்தியஸ்தர்கள் அவர்களுக்கு எச்சரிக்கை செய்து யுத்த வீரர்கள் இருவர்களும் தயாராயிருக்கும் சமயம் கண்டு சண்டையிடலாம் என்று கூறினார்கள். உடனே யுத்தம் இரண்டு சிங்கங்கள் ஒன்றையொன்று எதிர்ப்பதுபோல் ஆரம்பமாயிற்று. ஆனால் இச்சண்டை வெகு நேரம் நடைபெறவில்லை. ஆயினும் சிறிதுநேரத்திற்குள் காண்போர் மனம் கலங்கும்படி யுத்தம் செய்து முடிவில் யூசுப்கானே வெற்றி பெற்றான். அதுமுதற்கொண்டு சையத் ஹாஸனுக்கு யூசுப்கான்மீது மாறாத பகைமை ஏற்பட்டது. ஆனால் அப்பகையை அவன் வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை.

அன்றைய தினமே வீரதீரனை யூசுப்கான் பிஜப்பூர் அரசனுடைய மெய்க்காப்பாளர்களின் தலைவனாக நியமிக்கப்பட்டான். தன்னுடைய வீரத்திற்கேற்ற பதவியை அரசன் தனக்குக் கொடுத்ததற்காக யூசுப்கான் மிகவும் மனமகிழ்ந்தான். வீரர் அனைவரும் யூசுப்கானின் வீரத்தனத்தைக் கண்டு மகிழ்ந்தனர்.

அப்பொழுதுதான் விஜயநகர இந்து அரசர்கள் மிகவும் சிறப்புற்றிருந்தனர். அவர்களுடைய வல்லமையினால் அவர்களுடைய இராஜ்ஜியத்தைச் சுற்றிலுமிருந்த மகம்மதிய இராஜ்ஜியங்களை அவர்கள் தலையெடுக்காவாறு செய்து வந்தனர். விஜய நகர ராஜ்ஜியம் இவ்விஷயம் நடந்த காலத்தில் இராமராஜா என்பவரால் மகோன்னத நிலைமையிலிருந்தது. பிஜப்பூர் அரசன் தற்சமயம் ஆமது நகரத்து இளவரசியை மணந்துகொண்ட காரணத்தினால் மிகவும் ஜனக்கட்டு உடை

பவனாயினான். அதனால் பிஜப்பூர் அரசன் அலி அடில்ஷா என்பவன் அமது நகரத்துச் சைனியங்களைத் தனக்குத் துணையாகக்கொண்டு விஜயநகரத்து அரசராகிய இராமராஜர் மீது தீவிரமாகப் படையெடுக்கலானான். அவ்வாறு அவன் படை யெடுத்தபோது கோலகொண்டா, பீகார் முதலிய நாடுகளின் அரசர்களும் தங்கள் சைனியங்களோடு பிஜப்பூர் அரசனுக்கு உதவி செய்ய முன் வந்தனர். இராமராஜரை ஜயிப்பதைவிட தென்னிந்தியா முழுவதும் முகம்மதிய மதத்தை நிலைநாட்ட வேண்டுமென்பதே அவர்களுடைய முக்கிய அபிப்பிராயம். அன்றியும் ஜயமடைந்தால் உலகத்தில் உள்ள செல்வம் பொருந்திய பட்டணங்களிலொன்றாகிய விஜயநகரத்தின் செல்வத்தில் தங்களுக்கும் பங்கு கிடைக்கும் என்பது அவர்களுக்குத் தெரியும்.

சண்டை செய்வதற்கு வேண்டிய விஷயங்களெல்லாம் மிக விரைவாக நடந்து கொண்டிருக்கையில் பிஜப்பூர் அரசன் தன்னைச்சேர்ந்தவர்களை ஒருங்கு சேர்ந்து விஜயநகரத்தை எவ்வாறு எளிதில் வெல்லலாம் என்பதைப் பற்றி ஆலோசிக்கலானான். வெகுநேரம் ஆலோசனை நடைபெற்றது. கடைசியாக விஜயநகர ராஜ்ஜியத்தின் மீது படையெடுத்துச் செல்வதற்குமுன் அவ்விராஜ்ஜியத்தில் விஷயம் எவ்வாறு நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. என்பதை அறிந்து வருவது நலமாகும் என்று தீர்மானித்தனர். தீர்மானப்படி விஜயநகர இராஜ்ஜியத்திற்கு இரகசியமாக யார் சென்று அங்கு நடக்கும் விஷயங்களை அறிந்து வரக்கூடும் என்ற கேள்வி உண்டாயிற்று.

"சையத் ஹாசனை அனுப்பலாம். அவன் மிகவும் நம்பிக்கையானவன். ஆனால் அவனுக்கு அன்று நடந்த சண்டையில் உண்டான காயம் இன்னும் ஆறாமல் இருக்கின்றது" என்று ஒருவர் சொன்னார்.

அதைக்கேட்ட மற்ருெருவர், 'அவன் சுகமாயிருந்தாலும் விஜய நகரத்திற்குள் அவன் நுழையக்கூடாது. அவன் உருவமே அவன் நம்மைச்சார்ந்தவன் என்பதைக் காட்டி விடும்' என்று கூறினர்.

இவற்றை யெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த யூசுப்கான் எல்லோருக்கும் முன் வந்து, 'அப்படியானல் என்னை விஜயநகரத்திற்கு அனுப்புங்கள். நான் சென்று உளவறிந்து வருகிறேன். துருக்கி தேசத்தவனுகிய என்னை அங்குள்ளார் எவருக்கும் தெரிந்திராது. அன்றியும் விஜயநகரராஜ்ஜியம் நம்மால் அழிபடுவதற்குமுன் அந்நாட்டு வளப்பங்களைப் பார்த்துவர நான் பெரிதும் விரும்புகிறேன்' என்று சொன்னன்.

அவன் வார்த்தையைக்கேட்ட அனைவரும் அவனை அனுப்புவதைப்பற்றிச் சிறிதுநேரம் தங்களுக்குள் ஆலோசித்தனர். அவனையே அனுப்பத் தீர்மானித்தனர். அவனை அனுப்புவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்யலாயினர். யூசுப்கான் தான் ஒரு வயதான துருக்கிய நகை வியாபாரியைப்போல் விஜயநகரத்திற்குள் செல்லவேண்டுமென்றும், அவ்வாறு சென்ருல்தான் அங்குள்ளார் தன்னைச் சந்தேகிக்கமாட்டார்களென்றும் சொன்னன். சொல்லி அவன் நரைத்துப்போன உரோமத்தால் செய்யப்பட்ட தாடிமீசை முதலியவைகளின் உதவியால் தன் தோற்றத்தை அறுபது வயது சென்ற ஒரு கிழவனுடைய தோற்றத்தைப்போல் ஆக்கிக்கொண்டான். ஆபத்து நேருமாயின் உபயோகிப்பதற்காகக் குத்துவாள் ஒன்றையும், கைத்துப்பாக்கி ஒன்றையும் தன் உடைக்குள் மறைத்து வைத்துக்கொண்டான். வழியில் திருடர்கள் எதிர்த்தால் அவர்களைச் சங்கரிப்பதற்காக வைத்திருப்பது போல் பார்ப்பவர்கள் எண்ணுமாறு ஒரு வாளாயுதத்தை வெளிப்படையாக வைத்துக் கொண்

டான். அக்காலத்திய வியாபாரிகள் திருடர்கள் எதிர்ப் பட்டால் அவர்களை எதிர்ப்பதற்காக ஒவ்வொருவரும் ஒவ் வொரு வாள் வைத்துக் கொண்டிருப்பது வழக்கந்தான். அவன் புனைந்துகொண்ட வேஷத்திற்கு ஏற்றவாறு—அவன் வியாபாரியாக நடிப்பதற்கு உதவியாய்—அநேக விலையுயர்ந்த வைரங்களையும், பலவித நவரத்தினங்களையும், விலையுயர்ந்த நகைகளையும் ஐரோப்பா கண்டத்து விசித்தி ரப் பொருள்களாகிய கைக்கடிகாரம் முதலியவைகளையும் அரசனாகிய அலிஅடில்ஷா அவனிடம் கொடுத்தான்.

அவைகளை எல்லாம் எடுத்துக்கொண்டு யூசுப்கான் சிங்கத்தினுடைய குகையை நோக்கிச் செல்லும் சிறுகுழந் தையைப்போல் விஜயநகரத்தை நோக்கிச் சென்றான். வழி யில் குறிப்பிடத்தகுந்த சம்பவம் ஒன்றும் ஏற்படவில்லை. பிஜப்பூருக்கும், விஜயநகரத்திற்கும் அக்காலத்தில் அடிக்கடி சண்டை நடந்துகொண்டிருந்த படியினால் கள்வர்கள் திருடு வதைவிடச் சேனா வீரர்களாய்ச் சேர்ந்திருப்பது கௌரவம் எனக்கருதித் திருட்டுத்தொழிலை விடுத்துச் சேனாவீரர்களா யிருந்தனர். அதனால் அக்காலத்தில் பிஜப்பூருக்கும், விஜய நகரத்திற்கும் இடையில் கள்வர்களின் உபத்திரவம் அநேக மாயிருந்ததில்லை யென்றே சொல்லலாம். நாள் பல சென்றன.

யூசுப்கான் விஜயநகர கோட்டை வாயிலையடைந்தான். அன்னிய தேசத்து வியாபாரிகளுக்கு அந்நாட்டரசர் மிக வும் மரியாதை கொடுப்பது வழக்கம். அதனால் யூசுப்கான் அக்கோட்டைக்குள் செல்வது சுலபமாயிருந்தது. அவன் அக்கோட்டை வாயிலையடைந்ததும் வாயிற்றலைவன் அவனை உண்மையில் ஒரு துருக்கி நகை வியாபாரியென நம்பி அங் கிருந்த ஒரு ஏவலாளனிடம் யூசுப்கானை இராஜமாளிகைக்கு அழைத்துச்செல்லுமாறு கட்டளையிட்டான்.

யூசுப்கான் தன்னை யழைத்துச் செல்லும் ஆளோடு துங்கபத்திரா நதியைக்கடந்து விஜயநகரத்தின் விசித்திர விநோதங்களைப் பார்த்தவண்ணம் சென்றான். எங்குப் பார்த்தாலும் ஜனங்கள் சந்தோஷ முகத்துடன் விளங்குவதையும், வியாபாரங்கள் ஆங்காங்குச் செழிப்பாக நடைபெறுவதையும், மாட கூடங்கள் ஆகாயமளாவி நிற்பதையும் கண்டு பிரமித்தான். அவன் பார்க்கும் இடமெல்லாம் வானளாவிய கோபுரங்களையுடைய கோவில்களும், வேறு பல கட்டடங்களும் நிறைந்திருப்பதைக் கண்டான். இன்னும் அவன் கண்ட பல விஷயங்களைக் கொண்டு அந்நகரத்தில் செல்வ ஊற்றுப்பெருக்கெடுத்து ஓடுகிறது என்த்தீர்மானித்தான். ஆயினும் குபேரன் பட்டணத்திலும் கோவணாண்டி உண்டு என்பதற்கேற்ப ஆங்காங்குச் சில எளியவர்களின் குடிசைகளையும் கண்டான். இவ்வாறு பல காட்சிகளைக் கண்டவண்ணம் யூசுப்கான் இரண்டு மூன்று மைல் தூரம் சென்றான். அப்பொழுது அவன் கண்ணைக்கவரும் காட்சியுடன் வானளாவிய மதில்களுடன் கூடிய இராஜ மாளிகையைக் கண்டான். மதிற்சுவர்கள் எல்லாம் கருங் கற்களால் கட்டப்பட்டு எதிரிகளால் தகர்க்க முடியாதவாறு இருந்தன. மாளிகைக்குட் செல்வதற்குமுன் ஐந்து பிரதானவாயில்கள் இருந்தன. ‘அவ்வாயில்களி லெல்லாம் ஆயுதந்தரித்த போர் வீரர்கள் காவல் இருந்தனர். நடுப் பகலில் சூரிய உஷ்ணத்தைத் தணிப்பதற்காக ஆங்காங்கு பல நீர் ஊற்றுகளும், செடி கொடிகளும் காணப்பட்டன. கடைசியாக ஏவலாளர்கள் யூசுப்கானை, அரசருடைய ஏகாந்த மண்டபத்திற்கு அழைத்துச்சென்றனர். உடனே வயோதிகனை நாருக்கி நகை வியாபாரி யொருவன் வந்திருக்கின் றான் என்ற செய்தி அரசனுக்கு எட்டியது. நகைவியாபாரிகளைப்பார்த்தா அவர்களிட முள்ள அருமையான

பொருள்களைக்கண்டு மகிழ்வதில் இராமராஜருக்குப் பிரியம் அதிகம்.

'அந்த வியாபாதிக நகை வியாபாரி நமது அந்தப்புர ஸ்திரீகளின் ஏகாந்த மண்டபத்திற்கு வரட்டும்; நான் ராணி சரஸ்வதியோடு அங்கு வந்து அவனிடம் இருக்கும் பொருள்களைப் பார்க்கின்றேன்.' என்று இராமராஜர் கூறினர்.

பின்னும் சிறிது நேரத்திற்குள் யூசுப்கான் அந்தப்புர ஸ்திரிகளின் ஏகாந்த மண்டபத்திற்கு அழைத்துச் செல்லப் பட்டான். அம்மண்டபம் இந்திய சிற்பிகளின் திறமையைக் காட்டுவதற்கு ஓர் அறிகுறியாய் விளங்கியது. தூண்கள் நிறுத்தப்பட்டிருப்பதையும், அதில் உள்ள கண் கவரும் காட்சிகளையுங்கண்ட யூசுப்கான் பெரிதும் வியப்பெய்தினன். ஆங்காங்குச் சிறு சிறு நிலைக்கண்ணாடிகள் அத்தூண்களில் பதிக்கப்பெற்றிருந்தன. அக்கட்டட முழுவதும் தந்தத்தால் நிருமாணிக்கப்பட்டதுபோல் விளங்கியது. அக் கட்டடத்தில் சுவர்களெல்லாம் வானவில்லைப்போல் பலவித நிறங்களுடன் ஜொலித்தன.

யூசுப்கான் அங்குச்சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் இராமராஜர் தமது மனைவியோடு அங்கு வந்து சேர்ந்தார். அழகிற் சிறந்த நான்கு தோழிப் பெண்கள் இராமராஜருக்கும் அவர் மனைவிக்கும் மயில் விசிறியால் விசிறியவண்ணம் அவர்களைத் தொடர்ந்து அங்கு வந்தனர். இராமராஜர் அங்குவந்தவுடன் யூசுப்கான் மிகவும் மரியாதையாக அவருக்குத் தலைவணங்கினன். அப்பொழுது இராமராஜரும் அவர் மனைவியும் உடுத்தியிருந்த உடைகளாலும், அணிந்திருந்த ஆபரணங்களாலும் அவர் செல்வத்தின் தலைமை ஸ்தானத்தில் வீற்றிருக்கிறரென்பதை யூசுப்கான் அறிந்து கொண்டான். இராமராஜர் நடுத்தரமான வயதும், அழகிய

தோற்றமும் வாய்ந்தவராயிருந்தார். அவர் முகப்பார்வையிலிருந்து அவர் ஒரு பெரிய வீரர் என்பதை எவரும் எளிதில் சொல்லிவிடுவர். கடைசியாக அரசருடைய இஷ்டப்படி யூசுப்கான் தான் கொண்டுவந்த பொருள்களையெல்லாம் அவர்களுக்குக் காட்டினன். உண்மையான வியாபாரியைப்போல் யூசுப்கானல் பேசமுடியவில்லை. ஆயினும் அவனுடைய பாஷை அரசருக்கும் தெரியாமையினல் அவனை ஒருவரும் சந்தேகிக்க வில்லை. ஆயினும் அவன் பாஷையை யறிந்த பெண்மணி ஒருத்தி அங்கிருந்தாள்.

அரசி சரஸ்வதியாரின் தோழிப்பெண்கள் நால்வரில் ஒருத்தி சுமார் பதினைந்து வயதும், நல்ல கட்டழகும் வாய்ந்தவளாயிருந்தாள். அவள் ஒரு துருக்கிய போர் வீரனுடைய மகள். அப்போர் வீரன் தன் மகளோடும், மனைவியோடும் துருக்கி தேசத்திலிருந்து இந்தியாவுக்கு வந்து அகமது நகரத்து அரசரான ஹூஸேன் நைஜாம் ஷா என்பவரிடம் உத்தியோகத்தில் அமர்ந்திருந்தான். அவனை அகமது நகரத்து அரசர் தமது இராஜ்ஜியத்திற்குட்பட்ட ஒரு கோட்டையின் அதிகாரியாக நியமித்திருந்தார். அக்கோட்டையை விஜயநகரத்தரசர் திடீரெனத்தாக்கி அதைத் தம் வசப்படுத்தினர். அப்பொழுது அத்துருக்கிய யுத்த வீரன் கொல்லப்பட்டான். அதைஅறிந்த அவன் மனைவி தற்கொலை செய்து கொண்டாள். திக்கற்ற குழந்தையாகிய அவனுடைய மகள் அயாஷாவை விஜயநகரத்தரசர் தமது அரண்மனைக்குக் கொண்டுவந்து அவள் பேரழகைக்கண்டு அவளைத் தமது மனைவியின் முக்கிய தோழிகளில் ஒருத்தியாக இருக்கச் செய்தார். நிற்க.

தற்சமயம் இராமராஜருடைய மனைவி சரஸ்வதியோடு நான்கு தோழிப்பெண்கள் வந்தார்களென்று முன்னமே சொல்லியிருக்கிறேமல்லவா! அவர்களில் ஒருத்தியே

துருக்கி போர் வீரனுடைய மகளாகிய அயாஷா என்பவள். அவள் யூசுப்கானைத் தன்னுடைய நாட்டு உண்மையான நகை வியாபாரியென்று நம்பினாள். அதனால் அவள் மனம் குதூகலித்தது. அவன் மூலமாகத் தான் மறுபடியும் தனது நாட்டை யடையலாம் என்று எண்ணினாள். வந்திருப்பவன் உண்மையில் இன்னானென்பதை அவள் அறிவாளாயின் அப்பொழுது அவள் பின்னும் அதிக சந்தோஷப்படுவாள் என்பது திண்ணம். ஆனால் அவள் யூசுப்கானை ஒரு வியாபாரியென்றே தீர்மானித்தாள். அவள் விருப்பப்படி யூசுப்கான் அவளை அவளுடைய நாட்டிற்குக் கொண்டு போகமுடியுமா? அயாஷாவுக்கு யூசுப்கானோடு பேசவேண்டுமென்னும் எண்ணம் உதித்தது. ஆயினும் அவள் எல்லோர் முன்னிலையிலும் எவ்வாறு பேசுவது? யூசுப்கான் சொல்லும் விஷயம் அரசி சரஸ்வதிக்கும் ஏனையோருக்கும் விளங்கவில்லை. அதனால் அரசியர் அயாஷாவைப்பார்த்து, 'உனக்குத் துருக்கி பாஷை தெரியுமல்லவா? இதோ இந்த வியாபாரியினிடமிருக்கும் கோமேதகக் கல் பதித்த இந்த நகை இவனுக்கு எப்படி வந்தது? இதன் விலையென்ன என்று இவனைக்கேள்?' என்று சொன்னாள்.

அரசியார் கட்டளைப்படி அயாஷா யூசுப்கானிடம் சென்று சிறிதுநேரம் துருக்கி பாஷையில் கேள்வியும் பதிலுமாகப் பேசிக்கொண்டிருந்தாள். பிறகு அவள் அரசியாரிடம் வந்து, 'அந்தக் கோமேதகக்கல் பதித்த நகை இத்தாலி தேசத்திலிருந்து தனக்குக் கிடைத்ததாகவும், அது நீரோ என்னும் பெயரினையுடைய ரோமாபுரி சக்கிரவர்த்தி ஒருவரிடம் இருந்ததென்றும் நகை வியாபாரி சொல்லுகிறான்' என்று சொல்லி மீண்டும் அவள் அரசியாரைப் பார்த்து, 'அதன் விலை ஒரு லட்சம் ரூபாய் என்றும், ஆனால் அதை அவன் தாங்கள் அங்கீகரித்துக் கொளவீர்களானல்

தங்களுக்கு வெகுமதியாகக் கொடுக்க இஷ்டப்படுகிறான்' என்றும் கூறினாள்.

அதன்பிறகு அரசியாருக்கும் நகை வியாபாரிக்கும் அயாஷாவின் மூலமாக அந்நகையைக்குறித்துச் சில வார்த்தைகள் நடந்தேறின. பின்னர் அரசியார் யூசுப்கானின் இஷ்டப்படி அந்நகையை வெகுமதியாகப் பெற்றுக் கொண்டார்.

பின்னர் யூசுப்கான் அவ்விடத்தை விட்டுச் செல்லுகையில் அவன் அருகில் நின்று கொண்டிருந்த அயாஷா தன் சொந்த பாஷையில், 'வியாபாரியே! உம்முடைய நகைகள் விலையுயர்ந்தனவே! இன்றிரவு நீர் இவ்வூரிலுள்ள பெரிய கோவிலின் வாயிற்படியில் வந்திருப்பீரானால் அதைவிட உயர்ந்தபொருள் ஒன்றைப் பெறுவீர்.' என்று அவனுக்கு மட்டும்கேட்கும்படி சொல்லிவிட்டுத் தன்னிடத்தையடைந்தாள். யூசப்கான் அரசரும் அரசியும் வாங்கிக் கொண்ட நகைகளை அவர்களிடங் கொடுத்துவிட்டுச் செல்லும்போது அரசர் அவனைப்பார்த்து, 'பிஜப்பூர் இராஜ்ஜியத்தோடு சமீபத்தில் யுத்தம் செய்ய நேரிடும். யுத்தம் முடிந்த பிறகு நீர் மறுபடியும் உம்மிடம் இருக்கும் நகைகளை இங்கு வியாபாரத்திற்குக் கொண்டு வரலாம்' என்று சொன்னார்.

யூசுப்கான் இராமராஜரால் தனக்குத் தங்கியிருப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்ட வீட்டையடைந்தவுடன் ஆச்சரியப்படும் விதமாக பெரிய கோவிலின் வாயிற்படியில் இன்றிரவு வரவேண்டுமென்று அயாஷா சொல்லிய வார்த்தை அவன் நினைவிற்குவந்தது. அவ்வார்த்தையின் கருத்து என்னவென்று அவன் எண்ணி எண்ணி ஆச்சரியப்பட்டான். அப்பெண்மணி யார்? அவள் விஜயநகரராஜ்ஜியத்தில் வந்திருக்கவேண்டிய காரணமென்ன. அவள் துருக்கி தேசத்துப்பெண்ணென்பதில் சந்தேகமில்லை. அவள் இங்கு

எப்படிவந்தாள்?' இவ்வாறு யூசுப்கான் பலவாறு சிந்தித்தான். அவனுக்கு முடிவு ஒன்றுந்தோன்றவில்லை. கடைசியாக அப்பெண்மணியின் இஷ்டப்படி அன்றிரவு அவ்வூர் பெரிய கோவிலின் வாயிற்படியருகிற் சென்று பார்க்க வேண்டுமெனத் தீர்மானித்தான்.

அன்றிரவு பாதிராத்திரிக்கு சற்றுமுன்னல் யூசுப்கான் தான் இருந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டு வெளியிற் சென்றான். ஏற்கனவே அவன் அவ்வூரிலுள்ள சிவன் கோயிலேயே பெரியகோயில் என்பது வழக்கமென்பதையும் அக்கோயில் இருக்கும் இடத்திற்குப் போகும்மார்க்கம் இன்னதென்பதையும் தந்திரமாக விசாரித்து அறிந்திருந்தாலுதலின் அக்கோயிலேநோக்கி நடந்தான். அவன் தான் போகும் இடங்களிலெல்லாம் யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளே தயாரா யிருப்பதைக்கண்டான். ஏராளமான காலாட்படைகளும், குதிரைப்படைகளும், யானேப்படைகளும், பீரங்கிப்படைகளும் யுத்தத்திற்குத் தயாராயிருப்பதை அவன் எளிதில் தெரிந்துகொண்டான். நிசப்தம் குடிகொண்டிருந்த அவ்விரவில் ஆங்காங்கு யுத்தகளவாடங்கள் செய்யும் உலேக்கூடங்களிலிருந்து உண்டாகும் ஓசையானது ஆகாயத்தைக் கிழித்துச்சென்றது. இவைகளேயெல்லாம் நன்றாகக் கவனித்துக்கொண்டே யூசுப்கான் சிவன்கோயிலின் வெளிவாயிற்படியை யடைந்தான்.—அடைந்ததும் அங்கிருந்த ஒரு கருங்கல்லின்மீது அமர்ந்து தன்னே அங்கு எதற்காக அந்தப்பெண்மணி வரச்சொன்னுள் என்பதைப்பற்றி ஆலோசிக்கலானுன். அவ்விடத்தில் எல்லாவிதமான சப்தமும் இன்றி நிசப்தம் குடிகொண்டிருந்தது. காற்றினல் மரங்கள் தள்ளாடிவிழும் கிழவனேப்போல் தத்தளித்துக்கொண்டிருந்தன. யூசுப்கான் ஆலோசனேயோடு தன் கண்ணுக்குத் தெரிந்தவரையில் அக்கோயிலின்

வனப்பைப் பார்த்துக்கொண்டிருந்தான். அக்கோயிலின் உயரம் சுமார் இருநூறடி உயரம் உடையதாயும், விசித்திர வேலைப்பாட்டுடன் கூடியதாயும் காணப்பட்டது. அக் கோயிலின் எதிரில் செய்துவைக்கப்பட்டிருந்த நந்தி ஒரு பெரியயானையினும் பெரியதா யிருந்தது. அக்கோயிலின் பல பாகங்களிலும் கைதேர்ந்த சிற்பிகளால் செய்யப்பட்ட அனேக விசித்திரப் பிரதமைகள் காணப்பட்டன. இவை களையெல்லாங்கண்ட யூசுப்கான் மனம் திருப்தியடையாமல் அப்பெண்மணி சொல்லிய வார்த்தையையே நினைத்துக் கொண்டிருந்தது.

இவ்வாறு அவன் வெகுநேரம் காத்துக்கொண்டிருக்க வில்லை. அவன் இருந்த இடத்திற்குச் சிறிதுதூரத்திலிருந்த ஒருமரத்தின்கீழ் ஒரு இளம்பெண் இன்பமானகுரலெடுத்து அங்கு வருமாறு அழைப்பதை அவன் திடீரென உணர்ந் தான். அவள் அழைப்பதற்காக உபயோகப்படுத்திய பாஷையிலிருந்து அவளே அன்றையதினம் அரசருடைய அரண்மனையில் தான் கண்டபெண் எனத் தீர்மானித் தான். உடனே அவன் எழுந்து அப்பெண் இருந்த இடத் திற்குச் சென்றான். அங்குச் சென்றவுடன் அசைந்தாடும் பூங்கொடிபோல் அந்தத்துருக்கியப்பெண் அங்கு நிற்ப தை யூசுப்கான் கண்டான். யூசுப்கானைக் கண்டவுடன் அப் பெண்மணி வெட்கத்தினால் வாய்திறக்க முடியாமல் மௌன முற்றாள். எவ்வளவுநேரம் அவ்வாறு இருக்க முடியும்.

கடைசியாக அவள் தன் எண்ணத்தை விரைவில்வெளி யிட்டுச்சொல்ல வேண்டுமெனக்கருதி, 'என் தாய் நாட்டில் பிறந்தவரே! துருக்கிதேசத்தாரே! நான் வெட்கத்தை விட்டு இவ்வாறு தனிமையில் உங்களைச் சந்திக்க நேர்ந் தமைக்காக நீங்கள் என்மீது குறைகூறவேண்டாம். நான் என்னசெய்வேன்? சந்தர்ப்பம் அவ்வாறு இருக்கிறது. என்

தந்தையும் தாயாரும் இறப்பதற்குக்காரணமா யிருந்த ஒரு அந்நிய அரசனுடைய மாளிகையில் சென்ற பன்னிரண்டு மாதங்களாகத் தங்கியிருப்பது எனக்கே வெட்கமாயிருக்கிறது. நான் நரகலோகத்தில் இருப்பவளைப்போல் துன்பப்பட்டுக்கொண்டிருக்கிறேன். நான் இதுவரையில் ஆதரவற்றுத் தவித்துக்கொண்டிருந்தேன். இன்று பகலில் துருக்கிபாஷைபேசும் முகம்மதியராகிய உம்மைக் கண்டவுடன் உம்மால் நான் இவ்விடத்தைவிட்டு என் தேசத்தை யடையலாமென்று சந்தோஷப்பட்டேன். நான் இங்கு இருந்தால், இருந்தும் இறந்தவளாவேன். நான் இவ்வாறு நாணத்தைவிட்டு உம்மோடு பேசுவதற்காக நீர் என்னை மன்னித்து என்னை என்னுடைய நாடாகிய துருக்கிதேசத்திற்காவது, பிஜப்பூரைப்போன்ற முகம்மதிய இராஜ்ஜியங்களுக்காவது கொண்டுசெல்லவேண்டும். என்னசொல்லுகிறீர்?' என்று கேட்டாள்.

அவள் சொல்லிய வார்த்தைகளையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த யூசுப்கான் சிறிதுநேரம் மௌனமாயிருந்து பிறகு அவளைப்பார்த்து, 'பெண்மணீ! முன்பின் பழக்கம் இல்லாத உன்னிடத்தில் நான் என் உயிரை ஒப்படைக்கின்றேன். நீ நினைத்துக்கொண்டிருக்கிறபடி நான் ஒரு வியாபாரியல்ல; நான் ஒரு போர்வீரன். விஜயநகரத்தின் சைனிய பலத்தையும் மற்றுமுள்ள விஷயங்களையும் அறிந்து போகப் பிஜப்பூர் முகம்மதிய அரசரால் அனுப்பப்பட்டு இங்குவந்தேன். இங்குள்ளவர்களுக்கு நான் இன்னாரென்பது தெரியுமாயின் எனக்கு மரணம் சம்பவிப்பதுநிச்சயம். நான் நாடிவந்த காரியங்களைப்பற்றிப் பலவிஷயங்களை அறிந்துகொண்டு போவேனாயின், என்னுடைய அரசருக்கும் முகம்மதிய சமூகத்திற்கும் நன்மையுண்டாகக்கூடும். நாளையதினம் இரவிற்குள் நான் எல்லாவிஷயங்களையும்

அறிந்துகொள்ளக் கூடுமென்று நினைக்கிறேன். மறுநாட் காலையில் நான் விஜயநகரைவிட்டுப் புறப்படுவேன். உன் முயற்சியினால் நீ இங்கிருந்து தப்பித்துக்கொள்ளக் கூடுமாயின் இதோ சமீபத்திலுள்ள துங்கபத்திராநதியின் கற்பாலத்திற்குஅப்பால் ஒருமைல் தூரத்தில் வேலைக்காரச் சிறுவனைப்போல் வேடம்பூண்டு வந்திரு. உன்னை எப்படியாவது நான் பிஜப்பூர் அரண்மனையிற் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன். இன்றேல் உன்னைக் காப்பாற்றும் நிமித்தம் என் உயிரை விடுகிறேன்' என்று சொன்னான்.

'நல்லது. அப்படியேயாகட்டும், என்னிடத்தில் உள்ள நகைகளெல்லாவற்றையும் கேட்டாலும் கோட்டைக்காவலனுக்கு இலஞ்சமாகக் கொடுத்துவிட்டு நான் நாளை மறுதினம் காலையில் கோட்டையைவிட்டு வெளியேறி உங்களை நீங்கள் குறிப்பிட்ட இடமாகிய பிஜப்பூரில் செல்லும்வழியில் சந்திக்கின்றேன்' என்று சொல்லி அவ்விடத்தை விட்டுச்செல்லப் புறப்பட்டவள் மீண்டும் அவனைப்பார்த்து, நீங்கள் விரும்புகிறபடி நான் யுத்தசம்பந்தமான விஷயங்கள் ஒன்றையும் தெரிந்துசொல்ல முடியாவிட்டால் நீங்கள் எனக்கு உதவமாட்டீர்களா? நான் நேற்றையதினம் இராமராஜரும் அவருடைய மனைவியும் பேசியதை உற்றுக்கேட்டுக்கொண்டிருந்தேன். இராமராஜர் முகம்மதிய சைனியங்களைத் தம்மால் தொலைத்துவிடமுடியுமென்று பெருமைபேசிக் கொண்டிருந்தார், என்று சொல்லி அவள் திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டவளைப்போல யூசுப்கானை நோக்கி 'உங்களுடைய பிஜப்பூர் சைனியத்தில் அபிசீனியர் ஜாதியைச்சேர்ந்த சையத்—சையத் அவன்பெயரை நான் மறந்துவிட்டேன்—' என்றுசொல்லி மயங்கினாள்.

'சையத் ஹாஸன்! அவனைப்பற்றி என்ன?' என்று கேட்டான் யூசுப்கான்.

'ஆம், அவன்பெயர் சையத் ஹாஸன்தான், இப்பொழுதுதான் அது என் நினைவிற்குவந்தது. அவன் ஒரு நம்பிக்கைத்துரோகி. அவன் பிஜப்பூர் சைனியங்களைத் துங்கபத்திராநதியைக் கடந்து செல்லும் மார்க்கத்தில் கொண்டுவருவதாகவும், ஆயிரம்பீரங்கிகளைத்தயாராகவைத்திருந்து அச்சைனியங்களை நாசம்செய்து விடுக்கும்படிக்கும் இராமராஜரிடம் சொல்லி யிருக்கின்றானும். இராமராஜர் அதற்குப் பதிலாக அவனுக்கு அளவிடமுடியாத தொகையைக் கொடுக்கச் சம்மதித்திருக்கிறாராம். இது தவிர எனக்கு யுத்த சம்பந்தமாக யாதொரு இரகசியமும் தெரியாது' என்று சொன்னாள்.

சொன்னதும் யூசுப்கான் அவளைப்பார்த்து, 'பெண்மணி! நீ இப்பொழுதுகூறிய இரகசியம் மிகவும் முக்கியமானதுதான். பிஜப்பூர் இராஜியத்திற்கே பெருத்த நன்மையைச் செய்யக்கூடிய இரகசியத்தையே நீ இப்பொழுது சொன்னாய். நீசொல்லிய இந்த இரகசியத்திற்காகப் பிஜப்பூர் அரசர் உன்னைக் கௌரவப்படுத்துவார். நான் சொல்லியபடி நாளை மறுதினம் காலையில் பிஜப்பூருக்குப்போகும் வழியில் நான் குறிப்பிட்ட இடத்தில் என்னைச் சந்திக்க மறவாதே' என்றான்.

அடுத்தநிமிஷத்தில் அயாஷா அவ்விடத்தை விட்டு அகன்றாள்.

யூசுப்கானும் தான் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றான். சென்றதுதான் தாமதம். அவன் எதிர்பாராத வண்ணம் விஜயநகர போலீஸ் காரர்கள் அவன் முன்னால் திடீரெனத்தோன்றி அவனைக் கைதுசெய்து காவற்கூடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்தனர். காரணம் என்ன?

கோமேதகக் கல்பதித்த நகையொன்றை யூசுப்கான் அரசி சரஸ்வதிக்குப் பரிசிலாகக் கொடுத்தான் அல்லவா?

அந்தநகையை அரண்மனையின் பொக்கிஷதாரன் பார்க்கும் படி நேர்ந்தது. உடனே அவன் இராமராஜரிடம் தான் அந்த நகையை அதற்குமுன் பிஜப்பூர் அரண்மனையில் பார்த்ததாகக் கூறினன். அவ்வளவே! இராமராஜருக்கு யூசுப்கான் எதற்காக விஜயநகரத்திற்கு வந்தான் என்பது விளங்கிவிட்டது. உடனே அவர் அரசாங்கப்போலீஸ் அதிகாரியை வரவழைத்து யூசுப்கானைக் கைதுசெய்துகொன்று விடும்படி கட்டளையிட்டார். பிறகு அவர், அப்பொழுது அவனைக் கொல்லவேண்டாம் என்றும், பிஜப்பூர் இராஜ்ஜியத்தோடு செய்யப்போகும் சண்டைமுடிந்தவுடன் அச் சண்டையில் கைதியாகும் பிஜப்பூர் வீரர்களோடு அவனையுங் கொன்றுவிடலாமென்றும், இப்பொழுது அவனைச் சிறைக் கூடத்தில் வைத்துவையுங்கள் என்றும் கட்டளையிட்டார். அவர் கட்டளைப்படியே யூசுப்கான் சிறைக்கூடம் சேர்ந்த தோடும், அவனுடைய முடிவு எப்படியாகப் போகிறதென் பதையும் அவனுக்கு அங்கிருந்தவர்கள் சொன்னார்கள்.

யூசுப்கான் சிறைசெய்யப்பட்ட பத்தாவதுநாள் இரண்டுலட்சம் சைனியங்கள் கிருஷ்ணாநதியின் இருபக்கங் களிலும் நிறைந்திருந்தன. அவைகளில் ஒரு பகுதி பிஜப் பூரைச்சார்ந்தது. மற்றொருபகுதி விஜயநகரத்தைச் சார்ந் தது. கிருஷ்ணாநதியின் தென்கரையில் விஜயநகர சைனியங் கள் இருந்தன. எதிர்கரையில் பிஜப்பூர் சைனியங்கள் வந்துகொண்டிருந்தன. விஜயநகர சைனியங்கள் தூரப் பார்வைக்குத்தெரியாதபடி நிறுத்திவைக்கப்பட்டிருந்தன. எல்லாப் பீரங்கிகளும் சொன்னமாத்திரத்தில் சுடுவதற் கானவழியில் தயாராயிருந்தன. விஜயநகர வீரர்கள் எந்த இடத்தில் பீரங்கிகளைத் தயாராய்வைத்துக்கொண்டிருந்தார் களோ அந்த இடத்திற்கு நேரேதான் பிஜப்பூர் சைனியங் களை நடத்திவருவதாகச் சையத்ஹாஸன் இராமராஜருக்கு

வாக்குறுதி செய்திருந்தான். அவன் தான் வாக்குறுதி கொடுத்திருந்த வண்ணமே, பிஜப்பூர் சைனியங்களை துரோகசிந்தையுடன் நடத்திக்கொண்டிருந்தான். தான் நடத்திச்செல்லும் வழிதான் சிறந்ததென்றும், அவ்வழியில் எதிரிகள் இல்லையென்று தனக்குத்தெரியும் என்றும் அவன் சொன்னான். பிஜப்பூர் சைனியங்களை எமலோகத்திற்கு அழைத்துக் கொண்டு போகிறவனைப்போல சையத் ஹாஸன் அழைத்துச்சென்றான். அவ்வாறு அவன் செல்லுகையில் யூசுப்கானுடைய சினேகனும், அக்பர் சமஸ்தானத்தைச் சேர்ந்தவனுமாகிய மொகலாயவீரனும் அவனோடு இருந்தான். ஆனால் சையத் ஹாஸனுடைய வஞ்சகமனத்தைப்பற்றி அவன் சிறிதும் அறிந்தவனல்லன். எந்த நிமிஷத்தில் பிஜப்பூர் சைனியங்கள் மடியுமோ என்று எதிர்ப் பார்க்கவேண்டியிருந்தது.

குறித்த இடம் கொஞ்சதூரந்தான் இருந்தது. அப்பொழுது அவர்களுக்கு எதிரில் அபாயத்திற் கறிகுறியான கூச்சல் இட்டுக்கொண்டு குதிரைவீரன் ஒருவன் காற்றிலும் கடியவேகத்துடன் அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தான் அவன் யார்? அவன்தான் யூசுப்கான். அவன் சமயத்தில் வந்திராவிட்டால் ஆயிரக்கணக்கான பிஜப்பூர் சைனியங்களின் கதி என்னவாகும் என்பது அவனுக்குத் தெரியும். சிறிதுநேரத்தில் அவன் பிஜப்பூர் சைனியங்களுக்கு அருகில் வந்து சேர்ந்தான். அவனை இன்னாரென்று எல்லோரும் அறிந்துகொண்டார்கள்.

“சமயத்தில் என்னை இங்கு கொண்டுவந்து சேர்த்த கடவுளுக்கு நான் வந்தனம் செலுத்துகிறேன்” என்று சொன்னான் யூசுப்கான்.

அப்பொழுது அவனைச் சிறிதும் இலட்சியம் செய்யாமல் சையத் ஹாசன் சைனியங்களை மேலும் தான் குறிப்

பிட்ட இடத்தை நோக்கிச் செலுத்தலானான்.

அதைக்கண்ட யூசப்கான் கோபாவேசங் கொண்டவனாய் அவனைப்பார்த்து, 'அடே அபிவிருத்தியை கெடுத்து நீ நடத்திச்செல்லும் சைனியங்களை வந்தவழியே திரும்பி போகச்செய். இல்லாவிட்டால் நம்பிக்கை துரோகத்திற்காக உன்னை இவ்விடமே கொல்வேன்' என்று சொன்னான்.

அவன் வார்த்தையைக்கேட்ட சையத் ஹாஸன் சற்று ஆச்சரியமுற்றபோதிலும் அதை வெளிக்குக்காட்டிக் கொள்ளாமல் அவனைப்பார்த்து, 'எனக்குக் கட்டளையிடுவதற்கு நீயார்? என்னுடைய சைனியங்களுக்குள் கலகத்தை உண்டாக்கவே நீ இங்கு வந்திருக்கிறாய் என நான் நினைக்கின்றேன்' என்று சொன்னான்.

சொல்லிக்கொண்டே அவன் தன் வாளை உருவிக் கொண்டு தன்னுடைய இரகசியம் வெளியாகுமுன் யூசப்கானைக் கொன்றுவிட எத்தனித்தான். ஆனால் அருக்கிவீரனாகிய யூசப்கான் அவனைவிட அதிகத்திறமைவாய்ந்தவன். அவன் தன்னிடமிருந்த கைதுப்பாக்கியை எடுத்துச் சையத் ஹாஸனின் இருதயத்தை நோக்கிச் சுட்டுக் குதிரை மீதிருந்த அவனைக் கீழே வீழ்த்தினான்.

அச்சமயத்தில் யூசப்கானின் சிநேகனாகிய மொகலாய வீரன் அங்கில்லாமல் போயிருந்தால் யூசப்கானின் கதி அதோகதியா யிருக்கும். உண்மையையறியாத பிஜப்பூர் வீரர்கள் தங்கள் தலைவனாகிய சையத் ஹாசனைக் கொன்ற யூசப்கானைப்பழிக்குப்பழி வாங்கத்தீர்மானித்தனர். மொகலாயவீரன் அவர்களுடைய வீரத்தனத்தையடக்கி அவர்களைப்பார்த்து, 'நாம் யூசப்கானை நமது அரசரிடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து நடந்தவிஷயத்தைச் சொல்ல வேண்டுமேயன்றி நாம் ஒன்றும்செய்யக் கூடாது' என்று சொன்னான்.

அவன் சொற்படியே பலர்கூடி யூசுப்கானை பிஜப்பூர் அரசராகிய அலி அடில்ஷா முன்னர்க் கொண்டுபோய் அத்தி நடந்தவிஷயத்தைச் சொன்னார்கள். சொன்னதும் யூசப்கான் தான் விஜயநகரத்திற்குச் சென்றதுமுதல் கைதியாக்கப்பட்டது வரையில் நடந்த எல்லாவிஷயங்களையும் விவரமாகச் சொன்னான்.

சிறையிலிருந்த யூசுப்கான் எப்படித்தப்பி வெளியில் வந்தான். அவன் சிறையாக்கப்பட்ட விஷயத்தை அங்கிருந்த அயாஷா அப்பொழுதே உணர்ந்தாள். என்ன செய்வதென்று அவளுக்குத் தோன்றவில்லை. ஒருவாரமாயிற்று. முகம்மதியனும் ஜயில்காவலாளியுமாகிய ஒருவனை அவள்கண்டு அவனுக்குத் தன் நகைகளிற் சிலவற்றை இலஞ்சமாகக்கொடுத்து யூசுப்கானை எப்படியாவது தப்பிப்போகச் செய்யுமாறுகேட்டுக்கொண்டாள். அம்மகமதியன் ஒரு இந்திய அரசனிடத்தில் உத்தியோகமா யிருந்தபோதிலும், சுயஜாதி அபிமானத்தை முன்னிட்டு அயாஷாவின் இஷ்டப்படி சந்தர்ப்பம் கிடைத்தபோது யூசுப்கானை ஒருவருமறியாதபடி சிறையினின்றும் விடுதலை செய்ததோடும், யூசுப்கானுக்கு உதவியாக சிறந்த குதிரையொன்றும் கைதுப்பாக்கி வாள்முதலியவைகளையும் கொடுத்து ஜாக்கிரதையாக அவனை விஜயநகர ராஜ்ஜியத்திற்கு வெளியில் அனுப்பினான். அவ்வாறு அவன் வெளியிற்செல்லுகையில் அரசனாவது தகுந்த வீரர்களாவது அங்கில்லாமையினால் தப்பிச்செல்வது அவனுக்கு எளிதாயிருந்தது. அவ்வாறு அவன் தப்பிச்செல்லாம லிருந்திருப்பானாயின் பிஜப்பூர் இராஜ்ஜியம் அழிந்திருக்கும் என்பது திண்ணம்.

இவ்விஷயங்களையெல்லாம் யூசுப்கான் சொல்லிமுடித்ததும் எல்லோரும் ஆச்சரியமடைந்து சையத் ஹாஸனின் துரோகசிந்தனைக்காக அவனை வெறுத்தார்கள். சையத்ஹா

ஸன் இறந்தவிஷயம் வெகுசீக்கிரத்தில் இராம இராஜருக்கு எட்டியது. தாம் எதிர்பார்த்திருந்த ஒருபெரும் விஷயம் தவறிப்போனதனால் இராமராஜருக்குச் சிறிதுகஷ்டம் உண்டாயிற்று. ஆயினும் அவர் தமது சைனியங்களை ஆற்றுக்கு அக்கரையில் நடத்திச்சென்று எதிரிகளோடு யுத்தம் செய்யத் தீர்மானித்தார்.

பிஜப்பூர் அரசரின் ஏவலினால் அவருடைய ஆட்கள் கொலைசெய்யப்பட்ட சையத்ஹஸனுடைய உடைகளைப் பிரித்துப்பார்த்ததிலிருந்து இராமராஜருக்கும் அவனுக்கும் நடந்திருந்த இரகசிய விஷயங்கள் வெளியாயின. அவனுடைய துரோகசிந்தனையை முன்னிட்டு அவன் பிரேதத்தைக் கழுகு முதலிய பட்சிகள் பிடுங்கித்தின்னும்படி புதைக்காமல் விட்டுப்போனார்கள். பிறகு பிஜப்பூர் சைனியங்களுக்கு யூசுப்கான் தலைவனாக நியமிக்கப்பட்டான்.

விஜயநகரப் பீரங்கிப்படைகள் விரைவாக முன்னுக்குச்சென்று தங்கள் பீரங்கிகளை உபயோகப்படுத்தியும் யாதொருபயனும் உண்டாகவில்லை. இராமராஜருக்கோ முகம்மதிய சைனியங்களை ஆற்றைத்தாண்டி வரவிடக்கூடாதென்னும் எண்ணம் உறுதியாக விருந்தது. அதற்காக வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் அவர் தீவிரமாகச்செய்து முடித்தார். ஆயினும் முகம்மதிய சைனியங்கள் பாதிபிரவில் வேறுவழியாக ஆற்றைக்கடந்து திரள்திரளாக வந்து விஜயநகர சைனியங்களை எதிர்க்க ஆரம்பித்தனர். தம்மால் தடுக்கமுடியாவண்ணம் ஆற்றைக்கடந்துவந்த முகம்மதிய சைனியங்களைத் தமது முழுசைனியபலத்தையுங் கொண்டு இராமராஜர் எதிர்க்க ஆரம்பித்தார். அந்த மகாயுத்தம் 1565 ஆம் வருஷம் ஜனவரி மீ 25 உ காலையில் ஆரம்பமாயிற்று. அந்த யுத்தத்தைதான் தலைக்கோட்டையுத்தம் என்று நாம் சரித்திரத்தில் வாசித்திருக்கிறோம். அதைப்

போன்றயுத்தம் சரித்திரத்திற் குட்பட்டகாலத்தில் இந்தியாவில் முன்னும் பின்னும் நடந்ததேயில்லை. யுத்தமானது இருதிறத்தாருக்கும் ஜயா அபஜயமின்றி வெகுநேரம் வரையில் நடந்துகொண்டிருந்தது. விஜயநகர சைனியங்கள் மழைபோல் பீரங்கிக்குண்டுகளைப் பிஜப்பூர்சைனியங்களின் மீது இறைத்தன. அதனுல் தளராத வலிவிணையுடைய பிஜப்பூர் சைனியங்கள் தளர்வுற்று நிலைகலங்கின. கைதேர்ந்த விஜயநகர குதிரைப்படைகளும் தங்கள் முழுத் திறமையையும் காட்டி யுத்தம்செய்தன.

எது எப்படியாயினும் யூசுப்கான் அஞ்சாநெஞ்சத்துடன் கூடியவரையில் தன்னுடைய சைனியங்களை, யானைமீதிருந்தவண்ணம் தம்முடையசேனைகளை நடத்திக் கொண்டிருக்கும் இராமராஜரைநோக்கிச் செலுத்திக் கொண்டிருந்தான். ஜயமடைந்தாலும்சரியே; அபஜயம் அடைந்தாலும்சரியே; இராமராஜர் அன்றைய பொழுதிற்குள் ஒருகை பார்த்துவிடவேண்டும் என்று தீர்மானித்தார். அவர் தன்னைச் சிறையில்வைத்த காரணத்தினுல் அவர்மீது அவனுக்குத் தனிப்பகை ஏற்பட்டிருந்தது. இந்தியவீரர்களோ நிமிஷத்திற்கு நிமிஷம் முன்னேறி முகம்மதிய சைனியங்களை அழித்துக்கொண்டிருந்தனர். சிறந்த வீரனுன யூசுப்கான் சைனியங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் கொடுத்துக்கொண்டே இராம இராஜரைக் கொல்ல வேண்டும் என்னும் எண்ணத்துடன் சிறிது சிறிதாக அவர் இருக்கும் பட்டத்துயானையைநோக்கிச் சென்றுகொண்டிருந்தான். இராமராஜரும் மிகத்தீவிரமாக யுத்தம் செய்தார். ஆனுல் தமக்குமுன்னுல் எதிரிகளுடைய சைனியம் மிகத்தீவிரமாக முன்னேறிவருவதைக் கண்டார். சுற்றுப்புறங்களில் தம்முடைய சைனியங்கள் அளவற்ற ஜயத்துடன் போர்செய்வதை அவர் கவனிக்கவில்லை. அத

ஞல், தம்முன்ஞல் வருகிற முகம்மதிய சைனியங்களைக் கண்டு முகம்மதியர்களே அதிக வெற்றிபெறுவதாகத் தவருன அபிப்பிராயம்கொண்டார். அதனுல் அவர் மனம் திடுக்கிட்டது. உடனே வீரத்தை அடியோடு கைவிட்டு யானையைவிட்டுக் கீழிறங்கி பல்லக்கிலேறிஞர். பல்லக்குத் தூக்குவோர் எக்காரணம் பற்றியோ பல்லக்கைத் தூக்க மறுத்தனர். உடனே இராமராஜர் ஒரு குதிரைமீது ஏறிஞர். அவரைச் சுற்றிலுமிருந்த அவருடையவீரர்கள் யானை மீது அவா காணுமற்போகவே ஒன்றுந்தோன்ருது மிரட்சியடைந்தனர். அதனுல் அவர்களுடைய வீராவேசம் குறைந்தது. அச்சமயம் அவர் இருமருங்கிலும் இருந்த ஆயிரக் கணக்கான யானைவீரர் இவ்விஷயம் தெரியாமல் மயங்கலாயினர். யூசுப்கானே காரியத்தின்மேல் கண் என்றபடி இராமராஜருடைய ஒவ்வொரு செய்கையையும் கவனித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது அவன் இராமராஜர் இருந்த இடத்திலிருந்து வெகுதூரத்தில் இல்லை. உடனே யூசுப்கான் தன் முழுவல்லமையையுங்கொண்டு தன் சைனியங்களை இராமராஜருக்குச் சமீபத்தில் நடத்திச்சென்று தன்கையிலிருந்தவாளால் இராமராஜருடைய சிரத்தை வெட்டி நிலத்தில் வீழ்த்திஞன். நிலத்தில் விழுந்த இராமராஜருடைய தலையை முகம்மதியவீரன் ஒருவன் விரைந்தெடுத்துத் தன் நீண்ட ஈட்டிமுனையில் சேர்த்துத் தன்னுடைய சைனியங்களுக்கும், விஜயநகர சைனியங்களுக்கும் தெரியும்படி மேலேதூக்கிப் பிடித்தான். தங்கள் அரசருடைய தலையைக்கண்ட விஜயநகரத்துச் சைனியங்கள் திகிலடைந்து வீரமிழந்து எதிரிகளால் அழிவுற்றுப் பின்வாங்கி ஓடலாயினர்.

பின்னர், பிஜப்பூர் முகம்மதிய சைனியங்கள் வீராவேசத்துடன் விஜயநகரக் கோட்டைக்குள்புகுந்து முதன்

முதலாக அங்கிருந்த அரியவேலைப்பாட்மைந்த கோயில் களை இடித்துக் கொள்ளையடித்து நகரைச் சின்னபின்னப் படுத்தினர். இவ்வாருக விஜயநகர ராஜ்ஜியம்—எவராலும் பிடிபடாதெனச் செல்வத்திற் தலைசிறந்து விளங்கிய விஜய நகர ராஜ்ஜியம்—அழிவெய்தி தன் பெருமையை இழந்து முகம்மதியர்களின் வசப்பட்டது.

இத்தகைய சந்தர்ப்பத்திலும் யூசுப்கான் அழகிற் சிறந்த பெண்மணியாகிய அயாஷாவை மறக்கவேயில்லை. அரண்மனைக்குட்புகுந்து அவளைத் தன் வசப்படுத்திக் கொண்டான். இராமராஜருடைய மனைவியார் சரஸ்வதி என்பார் தமது கணவர் இறந்தார் என்பதைக் கேட்ட வுடன் தமது உயிரை மாய்த்துக்கொண்டார்.

பின்னும் சிலதினங்களில் வெற்றிபெற்ருேர் அனைவ ரும் பிஜப்பூர் இராஜ்ஜியத்தை யடைந்தனர். யூசுப்கான் பிஜப்பூர் இராஜ்ஜியத்திற்குச் செய்த பேருதவியை முன் னிட்டு அரசகுடும்பத்தைச் சேர்ந்த பெண்மணி யொருத் தியை விவாகம் செய்துகொள்ளும்படி பிஜப்பூர் அரசரே கூறினர். பேராசைகொண்டு தான் அரச குடும்பத்துதித்த ஓர் அழகிய பெண்மணியை மணந்துகொள்வதைக்காட்டி னும் உண்மைக்காதலால் மனம் ஒன்றுபட்டுள்ள அயா ஷாவை—தன்னுயிரைக்காப்பாற்றும்பொருட்டுத் தன்னைப் பிஜப்பூர் சிறையினின்றும் வெளியேற்றிய அயாஷாவை— மணந்துகொள்ளத் தீர்மானித்து அரசனுத்திரவு பெற்றுத் தான் தீர்மானித்தபடியே அயாஷாவை மணந்துகொண் டான். பின்னும் அவன் பிஜப்பூர் சமஸ்தானத்தில் சில காலம் வரையில் உழைத்துப் பெரும்பதவியைப் பெற்ருன். ஆனல் அவன் தன் ஜன்மபூமியாகிய துருக்கிதேசத்தை ஒருநாளும் மறந்தவனன்று. பத்துப்பன்னிரண்டு வருட காலம் பிஜப்பூர் சமஸ்தானத்தில் இருந்து உழைத்து நற்

பெயர் எடுத்தபிறகு தான் தன்மனைவியோடும் மக்களோடும் துருக்கிதேசம் போய்ச் சேர்ந்தான். அயாஷா தான் மீண்டும் தன் ஜன்மபூமியைப்பார்க்க நேரிட்டதைக்குறித்து மனமகிழ் வெய்தினாள். அடிமையாக இந்தியாவுக்கு வந்த யூசுப்கான் அரசரால் வழிகூட்டியனுப்பப்பட்டுத் தன் நாட்டையடைந்தான். முயற்சியும், அறிவும் உடையவர்கள் முன்னேற்றமடைவது திண்ணமே!

---

# இரண்டு வீரர்கள்

சம்பாநதியினுல் ஒருபுறம் சூழப்பட்ட நாககிரி யென்னும் இராஜ்ஜியம் ஒன்று முற்காலத்தில் வடஇந்தியாவில் இருந்தது. அவ்விராஜ்ஜியத்தின் பிரதானபட்டணமாகிய நாககிரி நாற்புறமும் உயர்ந்தமதில்களால் சூழப்பட்டிருந்தது. அதில் இருந்த கோட்டைக்குள் வேறொரு கோட்டையமைத்து அதில் அரசன் வசித்துக்கொண்டிருந்தான். அரசனுடையமாளிகை ஆற்றின் ஓரமாக இருந்த மதிற் சுவரைச் சேர்ந்தாற்போல் அமைக்கப்பட்டிருந்தது. ஆனல் உட்புறம் இருந்தசுவர்கள் வெளியிலிருந்து எதிரிகளால் அழிக்கமுடியாதவண்ணம் பலமாக கட்டப்பட்டிருந்தன. கோட்டையின் வெளிச்சுவருக்கு உட்புறத்தில் இராஜஸ்திரீகள் வசிக்கும்மாளிகை அமைக்கப்பட் டிருந்தது. கோட்டைக்குவெளியில் கண்ணுக்கினிய காட்சிகளைத் தரக்கூடிய மலைத்தொகுதிகள் நிறைந்திருந்தன.

சுமார் நானூறு வருடங்களுக்குமுன் கோடைக்காலமாகிய மேமாதத்தின் இறுதியில் ஒருநாள் நள்ளிரவில் அரசனுடைய குமாரியாகிய கமலவதி என்பவள் தன் மாளிகையின் உப்பரிகையில் இருந்தபடியே ஆற்றுப்புறமாக கோட்டையின் வெளியில் உற்றுப்பார்த்தாள். அவள் அவ்வாறு பார்த்ததற்குக் காரணம் ஒன்றுமில்லை. ஆயினும்கோட்டையின் வெளிப்புறச்சுவருக்கு வெளியில் ஆங்காங்கு வெளிச்சம் தோன்றுவதை அவள் கண்டாள். ஒருவாறு அது என்னவாயிருக்கக்கூடும் என்று அவள் எண்ணினுள். ஆயினும் அவள் அதை ஒருமுக்கிய சம்பவமாகக் கருதாமல்

மறுபடியும் படுக்கைக்குச் சென்றுவிட்டாள்.

அவள் அவ்வாறுசெய்யாமல் தான் கண்டதை உடனே தன் தந்தையாருக்குத் தெரிவித்திருப்பாளானால் அவள் தன்னையும் தன் தந்தையையும் கோட்டையில் இருப்பவர்களையும் எதிர்பாராத ஆபத்திலிருந்து காப்பாற்றி யிருக்கலாம்.

கமலவதி கண்டவெளிச்சத்திற்குக் காரணம் என்ன? முகம்மதிய யுத்தவீரர்கள் கோட்டைக்குள் நுழைவதற்காக அங்கு வந்திருந்தனர். அவர்கள் வழிதெரிந்து போவதற்காக வைத்திருந்த வெளிச்சமே கமலவதி கண்டதாகும். கோட்டையின் மதிற்சுவரின்மீது ஏறுவதற்காகச் சில ஏணிகள் அவர்கள் வசம் இருந்தன. அவர்கள் அக்கோட்டைக்குள்ளிருக்கும் ஸ்ரீகிருஷ்ணனுடைய ஆலயத்தில் ஏராளமான நகைகள் இருப்பதைக் கேள்விப்பட்டு அவைகளைக் கொள்ளையடித்துப் போவதற்காகவே அங்கு வந்தனர். ஆனால் அவர்களுடைய தலைவனும், இளம் வயதினையுடையவனுமான பாத்ஜங் என்பவன் தன் கீழ் இருப்பவர்களைப் போல் கோவிலிலுள்ள நகைகளைக்கொள்ளையடித்துப் போக வேண்டும் என்னும் நோக்கத்தோடுமட்டும் வந்தவனல்ல, அவன் இராஜபுதனம் முழுவதும் புகழ்ந்துபேசும் கமலவதியையும் கைப்பற்றிப் போகவேண்டும் என்னும் நோக்கம் உடையவனாயிருந்தான். கமலவதி தனக்குக் கிடைத்துவிடுவாளானால் தான் கைப்பற்றும் எல்லாப்பொருள்களையும் தன்னுடன் வருகிறவர்களுக்குக் கொடுத்துவிடுவதாகவும் சொல்லியிருந்தான்.

அவனைச் சேர்ந்தவர்களான யுத்தவீரர்களும் அவனும் ஒருவரும் தங்களைப் பாராதவண்ணம் மறைந்துசென்று கோட்டையின் மதிற்சுவரை நெருங்கியவண்ணம் இருந்தனர். அப்பொழுது அவ்வழியாகத் தங்கள் புலன்களை

நோக்கிச் சென்றுகொண்டிருந்த உழவர்கள் சிலர் அவர்களைப் பார்த்துவிட்டனர். அதையறிந்த அவர்கள் உழவர்களை விட்டுவிட்டால் அவர்கள் ஊருக்குள் புகுந்து தங்கள் வருகையைப்பற்றி எச்சரிக்கை செய்துவிடுவார்கள் என நினைத்து அவர்களைப்பிடித்து நாககிரிகோட்டைக்கு முதற் பலிகொடுத்தனர். பிறகு அவர்கள் வேண்டியஅளவு ஆகாரம் முதலியவைகளை உட்கொண்டு தாங்கள் எண்ணிவந்த காரியத்தை முடிக்கத் தயாரானார்கள். ஒவ்வொரு நிமிஷமும்அவர்களுக்கு ஒரு யுகம்போல் தோன்றியது. கோட்டைக்குள் நுழைவதற்குமுன் தங்களை யாராவது பார்த்துவிடுவார்களாயின், தாங்கள் எண்ணிவந்த காரியம் நிறைவேறாது என்று அவர்கள் நினைத்தார்கள். உடனே பாத்ஜங் தன்னுடைய இருக்கையினின்றும் எழுந்து ஏணிகளை மதிற்சுவரின்மீது சாய்த்து நிறுத்தச்சொன்னான்.

அப்பொழுது காரிருள் எங்கும் சூழ்ந்துகொண்டிருந்தது. ஒருவர்முகம் ஒருவருக்கு நன்றாகத் தெரியவில்லை. இருள் அதிகமா யிருந்தபடியினால் அவர்கள் தாங்கள் எண்ணிவந்த காரியத்தைச் செய்வதற்கு சுலப சாத்தியமாய் இருந்தது. எல்லாருக்கும் முன்னால் தலைவனாகிய பாத்ஜங் ஏணியின் வழியாக மதிற்சுவரின் உச்சியிலேறி உட்கார்ந்தான். அவனைத்தொடர்ந்து மற்றவீரர்களும் ஏறினர். உடனே அவர்கள் ஏணிகளை உட்புறமாக இறக்கி அதன் வழியாக உள்ளிறங்கி அங்கிருந்த காவலாளிகளை வெட்டி வீழ்த்தினர். இதற்கிடையில் அவனைத் தொடர்ந்துவந்த இரண்டாயிரம் வீரர்களும் கோட்டைக்குள்வந்து சேர்ந்தனர். கேடயம் ஈட்டி முதலியவைகளால் உண்டான சப்தத்தைக்கேட்டுக் கோட்டைக்குள் உறங்கிக்கொண்டிருந்தவர்கள் எல்லாம் விழித்துக்கொண்டார்கள். இராஜபுத்திரர்கள் அனைவரும் விழித்துக்கொண்டு ஓடிவந்தனர். இளவயதினை

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET

யுடையவர் கேடயத்தையும் வாளையுங் கைக்கொண்டனர். யுத்தத்தில் தேர்ச்சிபெற்றவர்களோ முழு ஆயுதபாணிகளாக வந்தனர். இராஜபுத்திரர்களுக்கும் பாத்ஜங்கின் வீரர்களுக்கும் சண்டைநடந்தது. முகம்மதிய வீரர்கள் எண்ணிக்கையில் குறைந்தவர்களா யிருந்தபோதிலும் இராஜபுத்திரர்களைப் பிரமாதமாக எதிர்த்தனர். அதனால் இரபுத்திர வீரர்கள் பலபக்கங்களிலும் சிதறி ஓடினர். இராஜபுத்திரவீரர்களிற் சிலர் குறுகிய படிக்கட்டுகளின் வழியாக அரண்மனை ஸ்திரீகளிருக்கும் இடத்திற்குச்சென்று அவர்களைப் பாதுகாக்கலாயினர். பிறகு முகம்மதியவீரர்கள் தர்பார்நடக்கும் இடத்திற்குச் சென்றனர். அங்கு எங்குபார்த்தாலும் நிலைக்கண்ணாடிகள் பதிக்கப்பெற்றிருந்தமையால் அவைகளில் அவர்களுடைய உருவங்கள் பிரதிபலித்தன. தரையில் பதிக்கப்பெற்றிருந்த வெள்ளை சலவைக்கற்களின் மீது யுத்த வீரர்களின் இரத்தம் சிந்தினபிறகு அவர்கள் கோயிலுக்குள் நுழைந்து வழக்கம்போல் தங்கள்வேலையை ஆரம்பித்தனர். முதலில் பலியானவர்கள் பிராமணகுருக்களேயாவர். பாத்ஜங்கின் கூட்டத்தார்களில் ஒருபகுதியார் அரண்மனை ஸ்திரீகள் இருந்த இடத்திற்குச் சென்றனர்; ஆனால் அங்கு அவர்களுடையதிறமை பலன் அளிக்கவில்லை. அங்கிருந்த இராம்சிங் என்னும் பெயரினையுடைய இராஜபுத்திரவீரன் அங்குவந்த முகம்மதியவீரர்களைப் பலமாகஎதிர்த்து அவர்களைச் சிதறி ஓடச்செய்தான். அச்சமயத்தில் தன்னுடைய வீரர்கள் தான் நிற்கும் இடத்திற்கு வந்துசேரும்படி பாத்ஜங் குறிப்பொலி நிகழ்த்தினான். உடனே எல்லோரும் அவர்கள் இருந்த இடத்திற்குச் சென்றனர். கொள்ளைப் பொருள்களோடு அவர்கள் ஏணியின்மீதேறி வந்தவழியாக ஓடிவிடத் தீர்மானித்தனர். அரசஸ்திரீகள் இருக்கும் இடத்தில்மட்டும் அவர்கள் அபஜயப்பட்டார்களேயன்றி மற்ற

இடங்களிலெல்லாம் அவர்களுக்குப் பூரணஜயந்தான். கிருஷ்ணன் கோயிலில் இருந்தநகைகள் அனைத்தும் அவர்கள் கைவசப்பட்டன. பார்ஜங் தான் நாடிவந்த கமலவதியின் முகத்தைக்கூட தன்னால் பார்க்க முடியவில்லையே யென்று ஏங்கினான். கமலவதியிருந்த இடத்தைச் சுற்றிலும் இருபதுவீரர்கள் உருவியவாளுடன் காவலாகநின்றனர். வெகுவிரைவில் ஊர்முழுதும் இருந்த இராஜபுத்திரர்களுக்கிடையில் அரண்மனையில் நடக்கும்விஷயம் அதிதீவிரமாகப் பரவியது. அவர்கள் எல்லோரும் பெருத்தகூட்டமாக ஆயுதபாணிகளாக வெளிவந்தனர். கமலவதியைத் தான் பார்க்க முடியாவிட்டாலும் தன்னுடையவீரர்களைத் தப்பிப்போகுமாறு செய்வதே சிறப்பென பார்ஜங் நினைத்தான். உடனே அவர்களைஎல்லாம் ஏணியின்வழியாக ஓடிப்போகுமாறு அவர்களுக்குச் சொன்னான். அவர்கள் எல்லோரும் ஏணிகள் இருந்த இடத்திற்குச் சென்றனர். ஏணிகளெல்லாம் ஆற்றில்வீசி எறியப்பட்டிருந்தன. ஏணிஇருந்த இடங்களில் இராஜபுத்திரவீரர்கள பெருந்தொகையினராய் உருவியவாளுடன் நின்று கொண்டிருந்தனர். திரும்பிப்போகவும் முகம்மதிய வீரர்களால் முடியவில்லை. யுத்தம் செய்வதைத் தவிர வேறுவழியில்லாததை அவர்கள் அறிந்தனர். ஊரிலுள்ள ஜனங்கள் எல்லோரும் தங்களை எதிர்க்கமுன்வந்திருப்பதை அவர்கள் அறிந்தனர். கைதேர்ந்த இராஜபுத்திரபட்டாளம் ஒன்று கோட்டைக்குமுன்வந்து நின்றது. ஆனால் அரண்மனைக்குள் முகம்மதியவீரர்களே நிறைந்திருந்தனர். அரண்மனை ஸ்திரீகள் இருக்கும் இடத்தில் இருந்த இராஜபுத்திரவீரர்கள் முகம்மதியர்களை உள்ளே போகவிடாமல் மிகத் திறமையாகப் பாதுகாத்துவந்தனர். அவர்களுக்குத் தலைவனயிருந்த இராம்சிங் என்பவன் அச்சமயம் காட்டிய வீரம் வியக்கத்தக்கதே. ஆயினும் முகம்மதிய வீரர்கள் வீரா

வேசங்கொண்டு எதிர்க்கத் துணிந்துவிடுவார்களானல் அவர்கள் நிச்சயமாக ஸ்திரீகள் இருக்கும் அந்தப்புரத்திற்குப்போகக்கூடும்; அதையறிந்த கமலவதியின் தந்தை சமாதான சம்பந்தமாக ஒருகடிதம் எழுதி அக்கடிதத்தைத் தூதுவன் மூலமாகப் பாத்ஜங்குக்கு அனுப்பினன். அக்கடிதத்தில் பாத்ஜங் தம்முடையவசத்தில் சிக்கியிருப்பதாகவும், யாதொருநிபந்தனையும் இல்லாமல் அவன் தம்மிடம் சரணம் அடைவதாயிருந்தால் அவனையும் அவன் சேனைகளையும் விட்டுவிடுவதாகவும் கமலவதியின் தகப்பனர் எழுதியிருந்தார். ஆனல் இவ்வாறு எழுதியதிலிருந்து பாத்ஜங் தெளிவாக ஒருவிஷயத்தைத் தெரிந்துகொண்டான். தங்களுடைய ஸ்திரிகள் ஆபத்தான நிலைமையில் இருக்கிறார்களென்பதை யறிந்தே கமலவதியின் தந்தை இக்கடிதத்தை எழுதியிருக்கிறார் என்று பாத்ஜங் தீர்மானித்துக் கொண்டான். தான் தீவிரமாக எதிர்த்தால் அரண்மனை ஸ்திரிகள் இருக்கும் அந்தப்புரத்திற்குப்போகத் தன்னல் முடியும் என்பதை அவன் அறிந்தான். இத்தகைய நிலையில் தான் தகுந்தபடி கமலவதியின் தந்தையிடம் நடந்துகொள்ள வேண்டும் என்றும் தீர்மானித்தான். ஆகையினல் யாதொரு நிபந்தனையுமின்றி அவன் கீழ்ப்படிய எண்ணவில்லை. அதனல் அவன் தூதுவனைப்பார்த்து, நீசென்று உன்னுடைய அரசனிடம் இவ்வாறுசொல். நிபந்தனையின்றி கீழ்ப்படிய நான் சம்மதிக்கவில்லை. நான் யுத்தத்தை நிறுத்தவேண்டுமானல் நாங்கள் கைப்பற்றிய பொருள்களோடு அரசருடைய மகள் கமலவதியையும் என்னுடன் அழைத்துக்கொண்டுபோக உங்கள் அரசர் சம்மதிக்க வேண்டும்—இல்லாவிட்டால் நான் சண்டையை நிறுத்த முடியாது. என்னுடைய வீரர்கள் எண்ணிக்கையில் குறைந்திருக்கிறார்களென்று எண்ணவேண்டாமென்றும், இன்

றும் ஆயிரக்கணக்கான வீரர்கள் இவ்வூரை நோக்கி வழி யில் வந்துகொண் டிருக்கிறார்களென்றும் உன்னுடைய அரசரிடம் சொல் என்றுகூறிப் பின்னும் அவன் அத் தூதுவனைப் பார்த்து, 'என்னுடைய சேனைகள் யாவும் வந்துசேர்ந்தவுடன் உங்களுடைய நாககிரிகோட்டை என் வசப்படுவது திண்ணம். இன்னொருவிஷயம் சொல்லு கிறேன்கேள். உங்களுடைய சைனியங்களுக்குள் யுத்தமே வேண்டியதில்லை. யாராவது ஒரு இராஜபுத்திரவீரனை என் னோடு யுத்தம்புரிய ஏற்பாடு செய்யச்சொல். அவனும் நானும் தனித்தனியுத்தம் செய்கிறோம். அதில்நான் வெற்றி யடைந்துவிட்டால் நாங்கள் கைப்பற்றிய பொருள்களோடு கமலவதியையும் உடன் அழைத்துக்கொண்டு போவேன். தோல்வியுற்றாலோ கமலவதியைப்பற்றிய நினைவே யில்லா மற் போய்விடுவேன். இவைகளை எல்லாம் மறவாமல் உன் னுடைய அரசரிடம் விவரமாகச் சொல்' என்றான்.

பிறகு அத்தூதுவன் கமலவதியின் தந்தையாரிடம் சென்று உற்றவிஷயங்களை உரைத்தான். தனிச்சண்டை செய்வதைப்பற்றி நான் நீ என்று தங்களுக்குள் இராஜபுத் திரவீரர்கள் சச்சரவிட ஆரம்பித்தனர். இராஜபுத்திரவீரர்க ளில் சிறந்துவிளங்கிய ஒவ்வொருவீரனும் தானே பாத்ஜங் கோடு எதிர்த்து நாககிரி கோட்டையின் கௌரவத்தைக் காப்பாற்ற எண்ணினன். ஆனால் ஒருசமயம் பாத்ஜங் ஜய மடைவானாயினும் அவன் கமலவதியை அழைத்துச் செல் வதில் ஒருவருக்கும் சம்மதமில்லை. அந்த ஒரு நிபந்தனையை மட்டும் நீக்கிவிடவேண்டும் என்றும் இன்றேல், எல்லோ ரும் சேர்ந்து சண்டையிடவேண்டியதுதான் என்றும் இராஜ புத்திரர்கள் ஆர்ப்பரித்தனர். அந்த எண்ணத்திலிருந்து அவர்கள் ஒரு சிறிதும் தங்கள் அபிப்பிராயத்தை மாற்றச் சம்மதிக்கவில்லை. அதனால் பாத்ஜங் அவர்கள் இஷ்டப்படி

இணங்க கடைசியாகத் தனியுத்தம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்தேறின. பாத்ஜங் ஜயமடைவானாயின் அவன் தான் கைப்பற்றிய பொருள்களோடும் போருக்குரிய கருவிகளோடும் தன்னூருக்குப் போவதென்றும், தோல்வியடைவானாயின் அவனும் அவனுடைய வீரர்களும் போருக்குரிய ஆயுதங்களையும் கைப்பற்றிய பொருள்களையும் கொடுத்துவிட்டுப் போய்விடவேண்டும் என்றும் தீர்மானமாயிற்று. தனியுத்தம் செய்யவேண்டிய முறையைப் பற்றியும் பேசித்தீர்மானித்தனர்.

பிறகு பாத்ஜங்கோடு யுத்தம்செய்யக்கூடிய போர் வீரன் யார் என்பதைப்பற்றிப் பேச்சுநடந்தது. ஒவ்வொரு இரஜபுத்திரத்தலைவனும் யுத்தம் செய்வதாக முன்வந்து நின்றான். கடைசியாக அரண்மனை ஸ்திரிகள் இருந்த இடத்தில் மிக ஜாக்கிரதையாகக் காவல்புரிந்த இராம்சிங் என்பவனே பாத்ஜங்கோடு யுத்தம்செய்ய வேண்டுமெனத் தீர்மானமாயிற்று. அதற்கு இராம்சிங் அளவற்ற ஆனந்தத்துடன் ஒப்புக்கொண்டான்.

சண்டை சமமான இடத்தில் நின்று வாளுங்கேடயமும் கைக்கொண்டு செய்யவேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. முகம்மதிய வீரர்களெல்லோரும் சண்டையைக் கவனிக்க அரண்மனைவாயிலின் முன்னர் நின்றனர். அவர்களுக்கு எதிர்ப்புறத்தில் நாககிரிஜனங்கள் கூடியிருந்தனர். மற்றொருபுறத்தில் நாககிரி அரசர் அதிக ஆடம்பரத்துடன் வீற்றிருந்தார். அரண்மனை ஸ்திரிகளோ எதிரிலிருந்த மாளிகையின் மேன்மாடியில் திரைமறைவில் இருந்தவண்ணம் கீழ்நடக்கும் விஷயங்களைக் கவனிக்கலாயினர்.

அப்பொழுது பாத்ஜங் தன்னுடைய போர்வீரர்களையெல்லாம் ஒழுங்காக நிற்கும்படி சொல்லிக்கொண்டிருந்தான். அப்பொழுது காற்றினுங் கடியவேகத்துடன் அம்

பொன்றவந்த பாத்ஜங்கின் மார்பை மறைத்துநின்ற இரும்பினால் செய்யப்பட்ட கவசத்தின்மீதுபட்டு உட்புக முடியாமல் கூர்மழுங்கிக் கீழேவிழுந்தது. அதைக்கண்ட முகம்மதிய வீரர்கள் தங்கள் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். அவர்கள் எதிர்த்தால் அவர்களை எதிர்ப்பதற்கு இரஜபுத்திரவீரர்களும் தயாரானார்கள். அதைக்கண்ட பாத்ஜங் தன் கூட்டத்தாரின் கோபாவேசத்தை யடக்கி அவர்களை அமரிக்கையாயிருக்கச்செய்தான். பிறகு அவன் பெருங்குரலெடுத்து எல்லோரையும்பார்த்து, 'இரஜபுத்திரவீரர்கள் தங்கள் உயிர் போவதாயிருந்தாலும் மறைந்திருந்து இத்தகைய அதிச்செயலைச்செய்ய உடன்படமாட்டார்கள். அஃது எனக்கு நன்ருகத்தெரியும். கமலவதியே இந்த அம்பை என்மீது எய்ததாக நான் நினைக்கின்றேன். அதைப்பற்றியும் அவசியமில்லை. கமலவதி என்மீது கொண்டுள்ள பிரியத்தைக் காட்டுவதற்காகவே இந்த அம்பை என்மீது எய்ததாக நான் நினைக்கின்றேன். நல்லது. நான் தனியுத்தம் செய்யப் போகிறபடியால் எல்லோரும் அமரிக்கையாய் இருங்கள் என்று கூறினன்.

உடனே இருகட்சிவீரர்களும் தத்தத் இடத்தில் ஒழுங்குடன் இருந்தனர் தனியுத்தம் ஆரம்பிக்கும் இடத்தில் பாத்ஜங்கும், இராமசிங்கும் வந்துநின்றனர். அவர்கள் ஒருவர்க்கொருவர் தாழ்ந்தவர்களல்லர் என்பது அவர்களுக்குத்தெரியும். இராம்சிங் இரும்புக்கம்பிகளால் பின்னப்பட்டசட்டை, காற்சட்டைமுதலியவைகளையும், மார்பில் இருப்புக் கவசம் முதலியவைகளையும் தரித்திருந்தான், அவன் கையில் வைத்திருந்த இருப்புக்கேடயத்தின் முன்புறத்தில் சுமார் அறையடி நீளமுள்ள சிறிய ஈட்டியும் பதிக்கப்பட்டிருந்தது அதனல் அக்கேடயம், எதிரியினுடைய

வெட்டைத் தடுப்பதற்குமட்டுமேயல்லால் எதிரியைக் குத்துவதற்கும் உபயோகமாயிருந்தது. அவன் கையில்பிடித்திருந்தவாள் மிகவும் வேலைப்பாடுடையதாயும், அழுத்தம் உடையதாயும் இருந்தது. அவன்முகமோ வீரகளை நிறைந்திருந்தது. பாத்ஜங்கும் இவ்வாறே உடைகளையும் ஆயுதங்களையும் உடையவனயிருந்தான். ஆனல் அவனுடைய கேடயத்தின் முன்புறத்தில் சிறிய ஈட்டி பதிப்பிக்கப் பெற்றில்லை.

கடைசியாக மத்தியஸ்தர்களின் முன்னிலையில் யுத்த நிபந்தனைக்குட்பட்டு பாத்ஜங்கும் இராமசிங்கும் ஒருவரையொருவர் எதிர்க்கலாயினர். சண்டை மிகப் பிரமாதமாக நடக்கலாயிற்று. இரண்டு சிங்கங்கள் ஒன்றையொன்று எதிர்ப்பதைப்போல் இருந்ததேயன்றி இரண்டு மனிதர்கள் ஒருவரையொருவர் எதிர்ப்பதாகத் தோன்றவில்லை. இவ்வாறு சண்டையிட்டுக்கொண்டிருக்கையில் பாத்ஜங் காலிடறித் தத்தளிக்கும் சமயத்தில் இராம்சிங்கின் கேடயத்தின் முன்னல் இருந்த சிறிய ஈட்டி பாத்ஜங்கின் கழுத்தின் ஒருபுறம் குத்தியது. அதனல் பாத்ஜங்கின் கழுத்திலிருந்து இரத்தம் பெருகியது. இரத்தத்தைக்கண்ட பாத்ஜங் பின்னும் அதிக வீராவேசங்கொண்டு இராம்சிங்கை எதிர்த்தான். பின்னும் சில நிமிஷநேரம் சண்டை வெகு மும்முரமாக நடந்தது. அச்சண்டையில் இராம்சிங் சற்று அயர்ந்த சமயம்பார்த்து பாத்ஜங் தன்னுடைய வாளால் அவனுடைய மண்டையில் அடித்தான். அவ்வடியைத் தாங்கமுடியாமல் இராம்சிங் மூர்ச்சையடைந்து தரையில் விழுந்துவிட்டான். ஆகவே வெற்றி பாத்ஜங்கினுடையதாயிற்று. ஆயினும் இராம்சிங் அடைந்ததோல்வியைக் கேவலமான தோல்வியாக எவரும் கருதவில்லை.

எப்படியேனும் பாத்ஜங்கே ஜயமடைந்தானென்று சொல்லப்பட்டபடியால் அவன் தான் கைபற்றிய பொருள்களோடும், ஆயுதங்களோடும் தன் சேனைகளை அழைத்துக் கொண்டு நிபந்தனையின்படி தன் ஊருக்குப் போய்ச் சேர்ந்தான்.

கமலவதி இராம்சிங்கையே விவாகம் செய்துகொள்ள விரும்பியபடியாலும், அவனும் வீரரிற்சிறந்தவீரனுதலாலும் கமலவதியின் தந்தை கமலவதியை இராம்சிங்குக்கே விவாகம் செய்துகொடுத்தார்.

---

# அமிர்தசாகரி

அல்லது

# கொள்ளைக் கள்வனின் குலக்கொழுந்து

## அத்தியாயம் 1

### வாலிபனின் வழிப்பிரயாணம்

நமது கதையானது ஆங்கிலேயர் இந்தியாவைத் தங்கள் வசப்படுத்திய சில நூறு வருடங்களுக்கு முன் நடந்ததாகும்.

ஒருநாள் மாலை சுமார் மணி ஐந்தரை இருக்கும்—ஓர் அழகிய வாலிபன் அழகிய வெண்ணிறக்குதிரை ஒன்றின் மீது இந்திர புரியின் மலைச்சாரலின் வழியே போகும் ஒரு பெரிய சாலைமார்க்கமாகப் போய்க்கொண்டிருந்தான். அவன் பார்வைக்கு மிகக் கம்பீரமாகத் தோன்றினான். அவன் வயது ஒன்று அல்லது இரண்டுகுறைய இருபத்து ஐந்து என்னலாம். அவனுடைய தங்கத் தகடுபோன்ற தேக காந்தியும், அரும்பி வளரும் மீசையும், புன் சிரிப்புக் குடி கொண்டவாயும், பரந்த நெற்றியும், கருணையே குடி கொண்ட அவனது கரிய விழிகளையுடைய கண்களும், இரு விழிகளுக்கு மேலுள்ள வேப்பிலைபோன்ற அழகிய புருவங்களும், விசாலித்த மார்பும், நீண்டகரங்களும், அதிகம்பருத்தும் அதிகம்மெலிந்துமிராமல் நடுத்தர அமைப்புள்ள தேக

வளமும் அவனைக் காண்போர் உள்ளத்தைக் கவ்ருமென் பதற் கையமில்லை. இத்தகைய வனப்பமைந்த அவ்வாலிபன் அக்காலத்திற்குரிய போர்த்தொழில் புரியும் பட்டாளத்தில் உயர்ந்த உத்தியோகத்திலிருப்பவர்கள் உடுத்து மாதிரியான உடையை உடுத்தி யிருந்தான். அவ்வுடையானது அவனுடைய கம்பீரமான தோற்றத்தைப் பின்னும் கம்பீரப் படுத்திற்று. உண்மையில் அவன் ஆண்மக்களெல்லோரினும் மிக்க அழகுடையவனா யிருந்தானென்று கூறுவது மிகையாகாது.

சூரியன் உலகத்திலுள்ள பல கொடியவர்களின் கொடுஞ் செய்கைகளுக்கு ஆற்றாது கோபித்துச் செல்பவன்போல் மேற்றிசை முழுவதும் செவந்ததோற்றத்தை உண்டாக்கி மலைவாயில் நுழைந்தான். எங்கும் கரிய இருள் சூழத்தலைப்பட்டது. இதைக்கண்ட அவ்வாலிபன், "என்ன இது! நான் காந்திபுரியிலுள்ள எனது தந்தையைக் கண்டுவர அமிர்தபுரியிலிருந்து சென்றபோது பன்னிரண்டு மணி நேரத்தில் என்னுடைய பிரயாணம் முடிவடைந்துவிட்டது. இப்போது காந்தி புரியிலிருந்து நான் அமிர்த புரிக்குப் போகப் புறப்பட்டு பன்னிரண்டுமணி நேரமாயிற்று. இன்னும் அமர்தபுரியின் எல்லையைக்கூடக் காணவில்லை" என்று கூறித் தன்னைச் சுற்றிலும் ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டு, "இல்லை; நான் வழிதவறி வந்து விட்டதாகத் தெரிகிறது. நான் காந்திபுரிக்குப் போகும்போது வழியில் ஒரு பெரிய நதியையும் ஒரு சிறு கால்வாயையும் கடந்து சென்றேன். அது இப்போதுதான் எனது ஞாபகத்திற்கு வருகிறது. இதற்கிடையில் அதாவது இப்போது நான் வந்த வழியில் இதுவரையிலும் ஒரு நதியையாவது கால்வாயையாவது காணவில்லை. இத்தகைய காரணத்தால் நான் வழி தவறிச் செல்கின்றேனென்பதிற் சந்தேகமில்லை. இப்போது

நான் செல்லும் மார்க்கம் மிகவும் ஒழுங்கினமா யிருப்ப தோடும் இம்மார்க்கம் எங்குச்செல்கின்றது என்றும் எனக்குத் தெரியவில்லை'' என்று கூறி அவ்வாலிபன் தன் குதிரையை நிறுத்தி "வந்தவழியே திரும்பிப் போகலாமா'' வென்று ஆலோசித்தான். அவன் வந்த வழியில் இது காறும் அவன் ஒரு சிறு கிராமத்தையாவது காணவில்லையாதலால் 'இன்னும் கொஞ்சதூரம் போவோம். ஏதாவதோர் சிற்றூராவது சிறு கிராமமாவது தென்பட்டால் அங்குத் தங்கிப் பொழுதுவிடிந்தவுடன் வந்தவழியே மீண்டும் செல்வோம்' என்று எண்ணி அவ்வாலிபன் தன் குதிரையை மிக வேகமாக முன்னமே போய்க்கொண்டிருந்த திசையை நோக்கி நடத்தினான்.

காலைமுதல் ஓடிக்கொண்டிருக்கிறபடியால் குதிரைக்கு வேகமாக ஓட முடியவில்லை. இருண்டநேரமாகையால் மேடு பள்ளங்களில் இடறிக்கொண்டும் நடக்கச் சக்தியற்றும் சென்றுகொண்டிருந்தது. பிறகு அரைமணி நேரமானவுடன் அவ்வாலிபன் போய்க்கொண்டிருக்கும் வழியானது மிகவும் குறுகி ஒரு கொடிவழியாயிற்று. அவ்வழியே அவன் பின்னும் அரைமணி நேரம் பிரயாணம் செய்தான். அவ்வழியானது ஒரு பெரிய "கொலைக்காடு'' என்னும் ஆரணியத்திற்குட் சென்றது. அவ்வழியில் மற்றொரு வழியும் வந்து கலப்பதைக் கண்டான் அவ்வாலிபன். அவ்வழியைக்கண்ட அவ்வாலிபன் "ஆ! நான் அதிர்ஷ்டசாலிதான்! இதோ இவ்வழியோடு வந்து கலக்கும் இவ்வழியாகத்தான் நான் காந்திபுரிக்குச் சென்றேன். இப்போது— இவ்வழியின் மற்றொரு பக்கமாய் இவ்வரணியத்தினூடே செல்லும், நான் போய்க்கொண்டிருக்கும் இந்த வழியாகச் செல்வேனாயின் அமிர்தபுரிக்குப் போய்ச் சேருவேனென்பதில் ஐயமில்லை. இதுவரையில் நான் வழிதெரியாமல்

வேறு வழியாக வந்துகொண்டிருந்தேன். ஆயினும் பரவாயில்லை'' என்று கூறிக்கொண்டே அவன் தான் சென்றுகொண்டிருந்த அமிர்தபுரிக்குப்போகும் அவ்வழியாகச் செல்வானுயினன். சந்திரன் வானத்தில் பிரகாசித்துக்கொண்டிருந்தான். இரவு மணி ஒன்பதாயிற்று. அதற்குமேல் அவ்வாலிபன் ஏறிச்செல்லும் குதிரையும் நடப்பதாயில்லை. அவனுக்கும் சிரமம் அதிகமென்று சொல்லவேண்டியதில்லை. அதனேடு அவனுக்குப் பசியும் மேலிட்டது. அதனுல் அவன் பின்னும் அதிகக் களைப்படைந்தான்.

அப்படியிருந்தும் அவன் தன்னுடைய கட்டாயத்தின்மீது தன் குதிரையைப் பின்னும் சில நேரம் நடத்தி அவ்வழியைக் கடந்து அப்புறஞ் செல்வானுயினன். அங்கு இடிந்துபோன சத்திரம் ஒன்றிருக்கக் கண்டான். அதைக் கண்டவுடன் அவன் "இச்சத்திரத்தில் இன்றிரவு பொழுதைக்கழித்துப் பொழுது விடிந்தவுடன் பிரயாணம் செய்வதே உத்தமம்'' என்றெண்ணிக்கொண்டு குதிரையை விட்டிறங்கி அதைத் தட்டிக்கொடுத்து அங்கிருந்த ஒரு மரத்தில் கட்டிவிட்டு, தான் தன்னிடத்திலிருந்த ஆகாரத்தையும் தண்ணீரையுமெடுத்து ஆகாரத்தைப் புசித்துத் தண்ணீரைப் பருகிய பின்பு தன்னிடத்திலிருந்த ஒரு துணியை மடித்துத் தலைக்குயரமாக வைத்துக்கொண்டு பிரயாணம் செய்துவந்த களைப்பினுல் அயர்ந்து நித்திரை போய்விட்டான். கோடைக்காலமாகையால் வீசும் காற்றும் இன்பத்தைத் தரத்தக்கதாயிருந்தது. குதிரையோ நீளமான கயிற்றில் தாராளமாகவிட்டுக் கட்டப்பட்டிருந்தபடியால் தரையில் செழிப்பாக வளர்ந்திருந்த புற்களைச் சிறிது நேரம் மேய்ந்து படுத்துறங்கலாயிற்று.

---

## அத்தியாயம் 2

### கொள்ளைக் கள்வர்கள்

மேற்குறித்த அவ்வாலிபன் படுத்துறங்கும் சத்திரமானது "கள்வர்சத்திரம்" என்று பலராலும் அழைக்கப்படுவதாகவும், அச்சத்திரமானது வழிப்போக்கர்களின் நன்மையைக்கருதி ஓரிந்திய அரசரால் கட்டப்பட்டதாகவும் கூறுவர். ஆயினும் அச்சத்திரத்தில் இரவில்தங்கும் எவரும் தங்கள் பிராணனுக்குப் பெரும்பான்மையும் அபாயத்தைத் தேடிக்கொள்ளாவிடினும் தங்கள் கையில் மடியில் இருக்கும் பொருளைக் கள்வர்களிடம் ஒப்புவிக்காம லிருப்பதில்லை, அதனால்தான் அச்சத்திரத்திற்குக் கள்வர் சத்திரமெனப் பெயர்வந்தது. மேற்குறித்த வாலிபன் சற்று முன் கடந்து வந்த காட்டில் அநேக கள்வர்கள் உண்டு. அவர்கள் கொள்ளைத்தொழிலில் பேர்போனவர்க ளாயினும், கொலைத் தொழிலிலும் அதற்குமேல் பேர்போனவர்களே யாவர். அக்கள்வர்கள் அநேகரில் முக்கியமானவர்கள் அக்காட்டிலுள்ள "கொள்ளைக் கள்வர்" 'என்னும் ஐம்பது பெயருடைய கூட்டத்தினரேயாவர். அவர்கள் சிறிதும் மனமிரக்கமற்றவர்கள். எப்பொழுதும் கொள்ளையும் கொலையுமே புரியவேண்டுமென்பது அவர்களின் பிரதான நோக்கமாகும். அவர்களுக்கு "வீரவசு" என்னும் பெயரினையுடைய ஒரு தலைவனுண்டு. அவன் மிகவும் பலசாலி, பழிக்குப் பழி வாங்குவதில் கருத்துடையவன். அவனுக்கு எப்பொழுதும் காட்டில் வேட்டையாடி மான் மரை முதலியவைகளைக்கொன்று அவைகளின் இறைச்சிகளை நெய்யில் பதம்பட வேகவைத்து உண்பதும், மது குடித்து மகிழ்வதும் முக்கிய தொழிலாகும். அவன் கீழுள்ள நாற்பத்தொன்பது கள்வர்களும் அவன் ஏவல்கேட்டே நடப்பர்.

அவன் என்ன செய்யச் சொல்லினும் செய்யத்தவருர். சில சமயங்களில் அவனோடு வேட்டையாடி மகிழ்வார்கள். சில சமயங்களில் அவனோடு கொள்ளையடித்துவரச் செல்வர். இப்படியாக அக்கொள்ளைக் கள்வர்களும் அவர்களின் தலைவனாகிய வீரவசுவும் தங்கள் காலத்தைக் கழித்து வருவதோடு அக்காட்டிலிருக்கும் தங்கள் தேவதையாகிய காளிக்கு வருஷம் ஒருமுறை திருவிழாவின்போது ஒரு நரபலி கொடுப்பது வழக்கம். அதற்காக அவர்கள் நகரங்களினுடையவும், கிராமங்களினுடையவும் வயற்புறங்களுக்குச் சென்று தன்னந்தனியே செல்லும் குடியானவர்களி லெவரையேனும் பதிவிருந்து பிடித்து அவர்கள் கூச்சலிடாவண்ணம் வாயில் துணியை அடைத்து அவர்களைத் தூக்கிக் கொண்டு போய்த் திருவிழாவன்று காளிமுன் பலி இடுவது வழக்கம். நிற்க,

மேற்குறித்த அவ்வாலிபன் அக்கள்வர் சத்திரத்தில் படுத்துத் தன்னை யறியாமலே அயர்ந்து நித்திரையிலாழ்ந்தானென்று முன்னமே கூறியுள்ளோம். அவன் நித்திரையிலாழ்ந்த இரண்டுமணி நேரத்திற்குப் பின் அச்சத்திரத்தின் கிழக்கே கூப்பிடு தூரத்தில் ஐந்து, ஆறு தீவர்த்தி வெளிச்சங்கள் தோன்றின. அங்குச் சுமார் முப்பது கள்வர்களுமிருந்தனர். அவர்கள் "கொள்ளைக்கள்வர்" களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்களென்பது நாம் கூறாமலே வாசகர்களுக்குத் தெரிந்திருக்கலாம்.

அக்கள்வர்களி லொருவன் மற்றவர்களைப் பார்த்து "அடே! இண்ணிக்கி நம்ப யாரு முகத்தில் முழிச்சமோ தெரியிலடா" என்று கூறினன்.

உடனே மற்றொருவன் "யாரு முகத்தில் முழிச்சா என்னடா! நம்ப சுரங்கத்திலே இருந்துவரச் சொல்ல நம்ப எசமா மவள் அமிர்தசாகரி நம் எதிர வரலியாடா" என்று

கூறினன்.

உடனே வேறொருவன் "அக்காண்டா! நம்ப அமிர்த சாகரி முகத்தில் முழுச்சி வெளியே புறப்பட்டா நம்ப செய்பிர காரியம் ஜயமாத்தாண்டா ஆவும். இன்னைக்கு என்னமோ இப்படி ஆயிபோச்சி" என்று கூறினன்.

உடனே இருளன் என்னும் ஒரு திருடன் அவர்க ளெல்லோரையும் பார்த்து, "அடே அண்ணமார்களே! நம்ப கொல தெய்வத்துக்குப் பூஜைபோட இன்னம் நாலு நாள்- ஆமாம் நாலுநாளுதான் இருக்குது. நம்ப எசமான் வீரவசு பூஜைபோட்டுத் திருநாள் நடத்தர அண்ணக்கி ஒரு ஆளே வழக்கம்போல பலிகொடுக்கணும் முண்ணு நம்மகிட்ட சொல்லி அதுக்காக யாரணு ஒருத்தனெ புடிச்சாரச்சொன் ஞரு. நம்ப சுரங்கத்திலே இருந்து சாய்ங்காலம் புறப்பட்டு இன்னேரமட்டும் எத்தனியோ கழனிகாட்டுகளிலே சுத் திப் பார்த்தோம். ஒரு மனுசனெயாவது பாக்கமுடியில. ஒரு குடியானவ கிடியானவ ஒருத்தனேயும் காணம். நம்ப என்ன பண்ரது. நம்ப எந்தவருஷத்திலேயும் இப்படி ஆளுக்காகப் புறப்பட்டுச் சும்மாபோனது கிடையாது. நம்ப சுரங்கத்தைவிட்டு வரச்சொல்லக்கூட சகுனம் நல்ல சகுனமா அமிர்தசாகரி எதுருலேவந்தாள். அப்படி இருந் தும் கூட இப்படி ஆச்சு. என்னமோ நம்ப ஆத்தா காளிக்கு இஷ்டம் இருந்தா யாராச்சும் ஆப்புடுவான்; இல்லாமபோனு நம்ப என்னபண்றது" என்று கூறினன்.

இதைக் கேட்டவுடன் சங்கிலி என்னும் ஒரு திருடன் எல்லோரையும் "பார்த்து என்னுங்கடா; நாம்ப இப்படி சும்மா போனேமண்ணு நம்ப எசமான் வீரவசு ரொம்ப, ரொம்ப கோவிச்சுக்குவாரு. எப்படிண்ணலு பாத்து ஒரு ஆளெ புடிச்சிகினு தாண்டாபோவணும்" என்று கூறினன்.

சங்கிலி என்னும் திருடன் இங்ஙனம் கூறியவுடன் சங்

லி கருப்பன் என்னும் திருடன் எல்லோரையும் பார்த்து, "சங்கிலி சொன்னது சரிதாண்டா. நம்ப சொம்மா போன மண்ணு நண்ணு இருக்காது" என்று கூறி ஏதோ சிறிது நேரம் யோசனை செய்து மறுபடியும் அவர்களைப் பார்த்து, "அடே, அதோ இருக்குதே சத்திரம் அங்கேபோய் இராத் திரிக்கு படுத்திருப்போம். யாருண்ணு வழிபோக்கருங்க வந்தாங்கண்ணு புடிச்சிக்கினு போவோம். அப்படி வராத பூட்டா பொழுது வெடிஞ்சதும் கிராமத்துங்களுக்குப் போய் ஆடு மாடுங்களை மேச்சலுக்கு ஓட்டியாரர பசங்கள் யாரையானும் புடிச்சிக்கினுப் போகலாம்" என்று கூறி னன்.

அவன் இவ்விதம் கூறியதைக் கேட்டவுடன் மற்றத்திரு டர்கள் அவன் வார்த்தைப்படி நடப்பதே உசிதமெனக் கருதி எல்லோரும் புறப்பட்டுச் சங்கிலிகறுப்பன் குறிப் பிட்ட வழிப்பிரயாணியாகிய வாலிபன் படுத்துறங்கும் சத் திரத்தை நோக்கிச் சென்றனர். சத்திரத்தைச் சமீபித்த வுடன் அங்கு ஒரு மரத்திற் கட்டப்பட்டிருந்த குதிரை யைக்கண்ட ஒருவன் எல்லோரையும் பார்த்து, "அடே! கூவாதே இருங்கடா! இங்கேதான் நில்லுங்கடா" எனக்கூறி அவர்களெல்லோரையும் சத்தமிடா வண்ணம் தடுத்து அங்கேயே நிறுத்தி அவர்களெல்லோருக்கும் தான் கண்ட வாலிபனுடைய குதிரையைக்காட்டி, "அதோ பாருங்கடா அந்தக்குருதையை! யாரோ ஒருத்தன் வழிப்போக்கன் குதி ரையை மரத்தில் கட்டிபுட்டுச் சத்திரத்திலே தூங்கறுப்பல தெரிகிறது. அவன் தூங்குகிறுனே முழுச்சுக்குணு இருக்கி ருனே என்னமோ ஒண்ணும் தெரியல. நம்ப யாருணு ஒருத்தர் வழிப்போக்கராட்டம் போய்ப் பார்த்துட்டு வந்தா அப்புறம் மத்தசங்கதியைச் செய்யலாம்" என்று கூறினன்.

உடனே அவன் வார்த்தைக்கிணங்கி இருளன் தான் போய்ப்பார்த்து வருவதாகத் திருடர்களிடம் கூறிவிட்டு வழிப்பிரயாணியைப்போல் நடித்துக்கொண்டு சத்திரத்தை யடைந்தான்.

சத்திரத்திற்குச் சென்ற அவன் கால்மணி நேரத்திற்குள் திரும்பிவந்து மற்றத் திருடர்களைப் பார்த்து, "அடே! நம்ம ரொம்ப ஜாக்கிரதையா வேலையை முடிக்கணும். அங்கே ஒருத்தன் படுத்துக்கிணு தூங்குறான். அவனைப் பார்த்தா சண்டையிலே பேர்போன சிப்பாயாட்டம் தெரியுது. அவன் கையிலே ஒரு பெரிய கத்தி (வாள்) ஒண்ணு வைச்சிங்கிறான். நம்ம அவனை அவன் முழிச்சிக்கிணு இருக்கச் சொல்ல புடிக்க முடியாது. அவன் முகத்தைப் பார்த்தா அவன்ரொம்ப, ரொம்ப சண்டையிலே பேர்போனவனுட்டம் தெரியுது. நம்ப கூச்சல் போடாத மெதுவா போய் அவன் காலையும் கையையும் கட்டித் தூக்கிக்கிணு போவலாம்" என்று கூறினன்.

அவ்வார்த்தைக் கிணங்கி கள்வர்களெல்லோரும் கலவரமின்றி அதிகத் தைரியத்துடன் சிறிதும் சப்தம் செய்யாமல் வாலிபன் படுத்துறங்கும் இடத்திற்குச் சென்று, அவனை உற்றுநோக்கினர். அந்தோ! அவ்வாலிபன் பகலெல்லாம் பிரயாணம் செய்த களைப்பினுல் கிஞ்சிற்றும் பிரக்ஞை இன்றி உறங்கிக்கொண்டிருந்தான். அன்றியும் அவன் தேகம் வழிப்பிரயாணம் வந்த அலுப்பினுல் சோர்வற்றுத் தளர்ந்திருந்தது. கள்வர்கள் கிஞ்சிற்றும் தாமதியாமல் பத்துப் பெயர் பலமாக அவனை அழுத்திப் பிடித்துக்கொண்டனர். மற்றவர்களிற் பலர் அவன் கைகளையும் கால்களையும் தனித்தனி ஒன்றேடொன்று சேர்த்துக் கட்டிவிட்டனர். இவ்விஷயங்களெல்லாம் ஒரு நிமிஷ நேரத்தில் நடந்தேறியபடியால் வழிப்போக்கனுகிய வாலி

பன் தற்காப்புக்காக ஏதுஞ் செய்துகொள்ள முடியாதவ னாயினான்.

அவன் கைகளையும், கால்களையும் கட்டியபின்பு அவ்வாலிபன் கலவரத்துடன் விழித்தான். அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. பேய்களோவென்று எண்ணினான். தூக்க மயக்கத்தினால் நடப்பவையெல்லாம் அவனுக்குக் கனவுபோல் தோன்றின. பிறகு நன்றாய் நிதானித்துப் பார்த்தான். தன் கைகளும் கால்களும் கட்டப்பட்டிருப்பதையும் தன்னைச் சுற்றிலும் பலர் நின்றுகொண்டிருப்பதையும், கண்டான். அவர்கள் கள்வர்களென்பதை அறிந்துகொண்டான். எண்ணாதவைகளை எல்லாம் எண்ணினான். தன் கைக்கட்டையும் கால்கட்டையும் அறுத்துக் கொள்ள முயற்சித்தான். அதைக்கண்ட கள்வர்களிற் பலர் அவனைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு தங்களிடமிருந்த பலமான மெல்லிய கயிற்றால் அவன் கைகளை அவனுடைய உடலோடு சேர்த்து நன்றாய் இருக்கிக் கட்டிவிட்டனர். அதனால் அவன் எவ்வளவு பலசாலியாயிருந்தும் யாதும் செய்ய முடியாமல் வருந்தினான். முடிவில் அவன் வருத்தத்துடன் அக்கள்வர்களைப் பார்த்து, "நீங்கள் யார்? வழிப்போக்கனாகிய என்னை இவ்வாறு வருத்தவேண்டிய காரணம் யாது?" என்று கல்லும் கரையும்படியான மெல்லிய குரலில் கூறினான்.

அவ்வழகிய போர்வீரனாகிய வாலிபன் சிறையிலகப்பட்ட சிங்கம்போல் சினமழிந்து இரக்கத்துடன் கேட்ட இக்கேள்விக்குக் கள்வர்கள் ஒன்றும் பதில் கூறாது அவன் கூச்சலிடா வண்ணம் அவன் வாயைத் துணியால் அடைத்து அவனைத் தூக்கிக்கொண்டு அவனுடைய குதிரையையும் உடன்கொண்டு கொலைக் காட்டிலுள்ள தங்களுடைய சுரங்கத்திலிருக்கும் ஜெயில் போன்ற ஒரு அறைக்குச் சென்று

அங்கு அவனை அவனுடைய கைகால்களின் கட்டுகளை அவிழ்த்துவிட்டு அவ்வறையின் இருப்புக் கம்பிகளால் வாயற்கதவைப் பூட்டிக்கொண்டு வெளியிற்சென்று இவ் விஷயத்தை வீரவசுவுக்குக் கூறிவிட்டு அங்குத் தயாரா யிருந்த பல மாமிசங்களாகிய ஆகாரத்தைப் புசித்துவிட்டு நித்திரையி லாழ்ந்தனர். கள்வர்கள் நமது வாலிபனை அவ் வறைக்குள் அடைத்துச் செல்லும்போது அக்கள்வர்களி லொருவனிடமிருந்து இரும்புச் சாவி ஒன்று அவ்வறைக் குள் தரையில் விழுந்துவிட்டது. அக்கள்வன் அதை யறியா மலே போய்விட்டானாயினும் நமது வாலிபன் அச்சாவியை எடுத்து அங்கோர் மூலையில் வைத்துவிட்டு எதைப் பற்றியோ சிந்திக்கலானான். வாசகர்கள் "நமது வாலிபனை அவ்வரையில் விட்டுக் கை கால்களை அவிழ்த்துவிட்ட போது அவன் அவர்களை எதிர்த்திருக்கக் கூடாதா என்று நினைக்கலாம். ஆனால் வாலிபன் நிராயுதபாணியாகவும், கள் வர்கள் வேல், ஈட்டி, வாள் முதலிய இன்னும் பல கொலைத் தொழிலுக்குரிய கருவிகளுடன் இருந்தமையாலும் அவன் அவர்களை எதிர்க்க முடியாதென்பதை அறிந்தே மௌ னமா யிருக்கலானான் என்பதை இங்குக் கூறுகிறேன்.

---

## அத்தியாயம் 3

### எதிர்ப்பாராத பல விஷயங்கள்

கொள்ளைக் கள்வர்களுக்குத் தலைவனாகிய வீரவசுவின் வாசஸ்தலமாகிய சுரங்கம் தரையின்கீழ் பதினைந்து அல் லது இருபது அடி ஆழத்தில் கட்டப்பட் டிருக்கின்றது. அச்சுரங்கத்திற்குள் போகவும் வெளியில் வரவும் பலவழி கள் இருக்கின்றன. பழக்கமானவர்களன்றி வேறு எவரும் அதற்குள் செல்லமுடியாது. அவ்வழியில் ஒன்றையேனும்

அன்னியர் எவராவது கண்டுபிடித்து உட்புகுவது அசாத்தியம். அச்சுரங்கம் அறுபது அடி அகலமும், நூறு அடி நீளமுமுள்ளது. அநேக இரகசிய விஷயங்களும் அச்சுரங்கத்தில் இருப்பதாகத் தெரிகின்றன. மேலிருக்கும் பூமி இடிந்து விழாதபடி ஆங்காங்கே பற்பல கருங்கற்றூண்கள் தாங்கிக்கொண்டிருந்ததோடும், எக்காரணம் கொண்டும் அச்சுரங்கம் இடிந்து வீழாதபடி மிகத் திறமையாகக் கட்டப்பட்டிருந்தது. அதற்குள் பற்பல அறைகள் மிக அழகுடன் விளங்கின. தரையில் இரத்தினக் கம்பளிகள் விரிக்கப்பட்டும், பலவிளக்குகள் எரிந்துகொண்டும் இருந்தன. ஆங்காங்குள்ள அறைகளின் அழகை எழுத எம்மால் முடியாது. உண்மையில் அது கள்வர்களின் வாசஸ்தலமாயிருந்தும் ஒரு அழகிய பங்களாவின் உட்புறம்போல் அச்சுரங்கம் விளங்கியது. அநாகரிகமான அக்கள்வர்களுக்கு அச்சுரங்கத்தை அத்தனை நாகரிகமாக வைத்துக்கொள்ளத் தெரியாதாயினும், அச்சுரங்கம் அத்தனை நாகரிகமாக விளங்குவதற்குக் காரணம் யாராயிருக்கலா மென்பதைப் போகப்போக அறிவோம். நிற்க.

அச்சுரங்கத்திலுள்ள அறைகளொன்றில் அடைக்கப்பட்ட நமது வாலிபன் பகல்போல பிரகாசிக்கும் விளக்கின் வெளிச்சத்தால் அவ்வறைமுழுமையும் உற்றுநோக்கினான். அவ்வறையின் நாற்புறமும் உள்ள சுவர்கள் கருங்கற்களால் கட்டப்பட்டிருந்தன. மேற்புறமும் அம்மாதிரியாகவே கட்டப்பட்டிருந்தது. கற்களில் இடைவெளித் தோன்றாது ஒரே கல்லால் கட்டப்பட்டதுபோல்; அவ்வறையின் சுவர்களும் அவ்வறையின் மேற்புறமும் விளங்கின. சுவர்களோ மழமழ வென்று அழகாக இருந்தன. தரையின்மேல் அழகிய இரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்டுப் பார்வைக்கு இனிமையாயிருந்தது. இவைகளையெல்லாம் நமது வாலி

பன் கவனித்தான். அவனுக்கு ஒன்றும் புலப்படவில்லை. அவன் தன்னுடைய சட்டையின் உட்புறத்திலிருந்த தனக்கு தனது அரசனிடமிருந்து வந்ததாகிய ஒருகடிதத்தை எடுத்து வாசிக்கலானான். அதிற் பின் வருமாறு வரையப்பட்டிருந்தது.

அமிர்தபுரி.
சித்திரைமாதம் 10-ஆம் தேதி.

"உபசேனாதிபதி அரசகேசரிக்கு அமிர்தபுரி அரசராகிய இராஜசிம்ஹரின் உத்திரவுபடி அரசரின் பிரதிநிதியாகிய ஜயசீலர் எழுதும் விஷயங்களாவன:—தன்மீது விருப்பமில்லாத நமது அரசரின் புதல்வியாகிய விஜயாளைத் தனக்கு மணம்செய்துகொடுக்கவில்லை என்னும் காரணம் பற்றிச் சுவர்ணபுரி அரசனாகிய சித்திரசேனன் நமதரசரின் மீது படையெடுத்து வந்திருக்கின்றான். யுத்தமும் ஆரம்பமாயிற்று. இச்சந்தர்ப்பத்தில் நமது அரசகுமாரி விஜயளின் உண்மைக்காதலரான சித்திரபுரி அரசராகிய இராஜசிம்ஹர் நமக்கு உதவிசெய்ய முடியாவண்ணம் அவரது பழைய விரோதியாகிய சர்தார்சிங் என்னும் சிற்றரசன் சித்திர சேனனுடைய தூண்டுதலின்மீது இராஜசிம்ஹரின் தேசத்தின் மீது படையெடுத்துச் சென்று அவரோடு கொடும்போர் புரிந்துகொண்டிருக்கின்றான். நமது அரசரின் அரியநண்பராகிய பிருதிவிராஜரும் நமக்கு இச்சமயம் உதவிசெய்ய முடியாவண்ணம் அவரோடு மகமத்கோரி யுத்தம் செய்துகொண்டிருக்கின்றான். இவ்வாறாக நமக்குத் தற்சமயம் பலவழிகளிலும் உதவியின்றி இருக்கின்றமையாலும், நமது எதிரி நாம் எதிர்பாராதவண்ணம் திடீரென்று நமது நாட்டின்மீது படையெடுத்து வந்திருக்கின்றமையாலும் தாங்கள் தங்களுடைய உத்தியோகத்தைத் திரும்பவந்து பெற்றுக்கொள்வதற்கு இன்னும் பல தினங்

களிருப்பினும் ஆபத்தை அறிந்து உடனே வந்து தங்கள் உத்தியோகத்தை ஒப்புக்கொள்ளும்படி அரசர் அன்புடன் கூறுகின்றார்.

இங்ஙனம்:

அரசர் இராஜசிம்ஹரின் உத்திரவுபடி

பிரதிநிதி ஜயசீலர்.''

என்று எழுதப்பட்டு அரசனுடைய அடையாளக் குறியும் இடப்பட்டிருந்தது. இவ்வாறு எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் பன்முறையும் நமது வாலிபனாகிய அரசகேசரி வாசித்தான். அவன் அக்கடிதத்தை வாசிக்குந்தோறும் அவன் மனதெழுந்த ஆவேசத்திற்களவில்லை. என்னசெய்வான் பாவம்! உண்மையில் அவன் மிகப் பலசாலிதான்! வீரம்பொருந்திய ஆண்சிங்கத்தை அயர்ந்த சமயம்பார்த்துப் பிடித்துக் கூட்டில் அடைப்பதுபோல் அமிர்தபுரி அரசராகிய இராஜசிம்ஹரின் உபசேனாதிபதியாம் அரசகேசரியையும்பாவிகளாகிய கள்வர்கள் வஞ்சித்தனர். அரசகேசரி என்னென்னவோ எண்ணினான். "ஆ! இதுவும் இறைவனின் திருக்கூத்தேயாம். அமிர்தபுரி அரசரிடமிருந்து எனக்குக் கடிதம் வந்து இன்றோடு மூன்றுதினங்களாகின்றன. எனது தந்தையாரின் தேக அசௌக்கியத்தால் கடிதம் வந்த அன்றே புறப்பட முடியாமற்போனேன். ஆயினுமென்! புறப்பட்டவுடன் வழி தவறாது சென்றிருப்பேனாயின் இன்று நண்பகலிலேயே அமிர்தபுரிக்குச் சென்றிருப்பேன். இதுவரையில் என்னைக் காணாமையால் எனது அரசர் என்னை இராஜத்துரோகி என்று எண்ணினரோ அல்லது எனக்காக யாராவது ஒரு போர்வீரனை காந்திபுரியிலுள்ள எனது தந்தையின் இருப்பிடத்திற்கு அனுப்பி அங்கு நான் இல்லாமையை உணர்ந்து போருக்குப் பயந்து

எங்கேயோ போய்விட்டான் என்று எண்ணுகின்றனரோ? என்னவோ எல்லாம் கடவுள் செயலேயாம். உண்மையாகவே என்னைத்தேடி ஒரு போர்வீரன் எனது தந்தையிடம் சென்று இருப்பானாயின் எனது தந்தை என்னைப்பற்றி ஏதேது எண்ணித் துக்கிக்கின்றனரோ? பெரிதும் அசௌக்கியமுற்றிருந்த அவருடைய தேக நிலைமை இந்நேரம் யாதாயிருக்கின்றதோ அறியேன். ஆ! கடவுளே! எனது அரசரின் நிலைமை இதுவரையில் யாதாயிற்றோ? உண்மையிலேயே சித்திர சேனனுக்குள்ள சேனைகளில் இரண்டில் ஒரு பங்கு சைனியங்கள் கூட எனது அரசருக்குக்கிடையா. அதோடு அவன்—சித்திர சேனன்—எதிர்பாராத வண்ணம் எனது அரசர் இராஜ சிம்ஹர்மீது யுத்தத்திற்கு வந்திருக்கிறான். இத்தகைய காரணங்களினால் இன்னேரம் எனது அரசரின் நிலைமையும், அவர் தம் அருமைக் குமாரியாம் விஜயாளின் நிலைமையும் எவ்வாறாயிற்றோ? இச்சமயத்தில் பிரிதிவிராஜனும், ராஜ சிம்ஹரும் தங்களைத் தற்காத்துக்கொள்வதை விட்டு எனது அரசருக்கு உதவுவார்களென்று நான் ஒரு சிறிதும் எண்ணவில்லை. அவர்கள் தான் என்ன செய்வார்கள் பாவம்! அவர்களின் நிலைமையும் எப்படி இருக்கின்றதோ? அதை ஈசனே அறிவர். நான் உபசேனாதிபதி—சீ! இச்சமயத்தில் எனது அரசரின் ஆபத்திற்குதவாத நானோ உபசேனாதிபதி! அந்தோ! நான் இனி என்செய்வது. இக்கள்வர்கள் என்னை வஞ்சித்துவிட்டனர். இனி ஒரு முறை நான் இவ்விடத்தினின்றும் தெய்வகிருபையால் வெளியேறுவனாயின் இக்கள்வர்களை ஒரே நிமிஷத்தில் கருவறுத்து விடுவேனென்பது திண்ணம். இச்சமயம் நான் அஜாக்கிரதையினால் இக்கள்வர்களிடம் அகப்பட்டுக் கொண்டதைப்பற்றி எனக்கே வெட்கமாயிருக்கின்றது. இதைப்பற்றி எவரிடத்திலாவது கூறினும் அது பெரி

தும் வெட்கமாகும். நான் இங்கிருந்து தப்பிச்செல்வது முடியாதகாரியமென்றே நினைக்கின்றேன். அப்படித் தப்பிச்செல்லினும் "இந்நாள்வரை நீ எங்கு சென்றிருந்தாய்?" என்று எனது அரசர் கேட்பாராயின் உண்மையைக் கூறத்தான் வேண்டும். இன்றேல் அவர் நான் காலதாமதமாகச் சென்று அவரைக் கண்டதற்கு அவர் என்னை ஆக்கினை செய்தலும் கூடும்! என் கதி எப்படியேனும் ஆகட்டும். ஆ! கடவுளே! எனது அரசனுக்குப் பூரண ஜயத்தைத் தருவாயாக" என்று இவ்வாறு அரச கேசரி தன்னுள் கூறிக் கொண்டே தானிருக்கும் அறையின் தரையைக் கூர்ந்து கவனித்தான். அத்தரையின் ஓரிடத்தில் இரத்தின கம்பளத்தின் கீழ் சற்று மேடாகத் தோன்றிற்று.

உடனே அவன் இரத்தின கம்பளத்தை எடுத்துவிட்டு மேடாக இருந்த இடத்தை நோக்கினான். நோக்கியவுடன் அவன் ஆச்சரியப்படும்படியாக அவ்விடத்தில் தரைக்கு மேல் சற்று உயரத்தில் ஒரு கெஜ அகலமும் ஒன்றரை கெஜ நீளமுமுள்ள ஒரு பெட்டிபோல் மரப்பலகையால் செய்யப்பட்டு அதன் மேற்புறம் ஒரு கனத்த பலகையினால் மூடப்பட்டு அதற்குப் பூட்டுமிடப்பட்டிருந்தது. இதைக்கண்ட அரசகேசரி 'இது என்னவாய் இருக்கக்கூடும்" என்று ஆலோசித்து முடிவில் அதைத்திறக்க அவன் தன்னாலானவரை முயன்றான்; முடியவில்லை. முடிவில் அவனுக்குச் சற்று முன் கள்வனொருவனிடமிருந்து தவறி தன்னிடம் கிடைத்த ஒரு சாவியின் நினைவு தோன்றியது. உடனே அவன் அதை தான் வைத்திருந்த மூலையினின்றும் எடுத்து அதன் மேல்மூடியிலுள்ள பூட்டிலிட்டுத் திறந்தான். நன்மைக்கோ தீமைக்கோ அப்பூட்டும் திறந்து கொண்டது. பிறகு அரசகேசரி அம்மூடியைத் திறந்ததும் அது ஒரு சுரங்க வாயிலாகத் தோன்றியது. இதைக்கண்டவுடன்

அவன் 'இவ்வழி எங்குச் செல்லுகின்றதோ' என்று சிந்தித்தான். 'ஒரு சமயம் இவ்வழி இச்சுரங்கத்தின் வெளியே போவதாயிருப்பினும் இருக்கும்' என்றுஎண்ணி வெளிச்சமில்லாமல் ஒரே இருளாக இருந்த அவ்வழியே போக அவன் ஒரு சிறிதும் அஞ்சாது அவ்வழியி லிறங்கினன். அவ்வழியானது கொஞ்சதூரம் வரை படிப்படியாகக் கீழிறங்கி பிறகு மறுபடியும் படிப்படியாக மேலேறிச் சென்றது. பின்னும் சிறிது தூரம் அரசகேசரி அச்சமின்றி சென்றான். அவன் தலையில் ஏதோ 'திட்'டென்று பட்டது. அவன் அதை கையால் தடவிப் பார்த்தான். உடனே அங்கோர் பலகையால் அவ்வழி அதற்குமேல் போகவொட்டாமல் மூடி வெளிப்புறத்தில் பூட்டப்பட்டிருப்பதாக அறிந்து கொண்டு இந்தக் கதவைத் திறந்துவிட்டால் இவ்வழி இச்சுரங்கத்தின் வெளியே போகவேண்டும்; அல்லது இச்சுரங்கத்தின் மற்றோரிடத்திற்குச் செல்வதா யிருக்கவேண்டும்'' என்று கூறி "இவ்வழியானது இச் சுரங்கத்திற்கு வெளியே போவதாயிருந்தால் இப்போதே எனது வலிமையினால் இம்மரப் பலகையைப் பிளந்து செல்லக்கூடும். அவ்விதமின்றி இவ்வழியானது இச்சுரங்கத்தின் மற்றோரிடத்திற்குப் போவதாயிருந்து அங்கு எவரேனும் கள்வர்கள் ஆயுதபாணிகளாக இருப்பார்களாயின் நிராயுதபாணியாகிய என் கதி என்னவாகும்'' என்று தன்னுள் எண்ணுகையில் அந்த பலகையாலாய மூடியின் மேற்புறம் யாரோ ஒரு ஸ்திரீயும், புருஷனும் பேசும் சப்தம் அவன் காதிற்கெட்டியது. அப் பலகையிலிருந்த ஒரு சிறு துவாரத்தில் தன் காதைவைத்து அவன் அவர்கள் பேசுவதைக் கவனித்தான். அவன் செவியில் பின்வரும் விஷயங்கள் கேட்கலாயின.

அச்சுரங்க வழியின் மேற்புறத்திருந்த புருஷன் ஸ்திரீயை நோக்கி, "நான் பலமுறை கெஞ்சிக்கேட்டுக்கொண்

டும் நீ எனது இஷ்டத்திற்கிணங்காமையால் நான் உன்னிடம் உனக்கு இஷ்டமில்லாவிடினும், பலவந்தமாக எனது எண்ணத்தைப் பூர்த்திசெய்துகொள்வதே முறை" என்று கூறினன்.

அதற்கு அந்த யுவதி, 'அரசரே! நீர் உமதுமேல் கிஞ்சிற்றும் அன்பில்லாத ஒரு பேதைப்பெண்ணை இப்படி இச்சுரங்கத்திற் கொண்டுவந்து வைத்துக்கொண்டு இம்சிப்பது தருமமாகாது. ஒரு நாட்டை நீதியுடன் அரசு செலுத்த வேண்டிய அரசராகிய நீர் இத்தகைய இழிதொழிலைச் செய்ய உடன்பட்டது மகாபாதகமாகும். பெண்ணென்ருல் பேயுமிரங்குமே! நீர் அபலையாகிய என்பேரில் இத்தனை வஞ்சகம்கொள்வது தெய்வத்திற்குச் சம்மதியாகுமா?" என்று கழறினள்.

"நீ என்ன கூறினும் அவையெல்லாம் எனக்கு செவிடன் காதில் சங்கு ஊதியது போலாம்: நீ என் இஷ்டத்திற்குடன் படுகின்ருயா இல்லையா? இல்லையானல் உன்னை நான் ஒரு முறையேனும் என் இஷ்டத்திற் குட்படுத்தி பிறகு உன்னைக் கொன்றுவிட்டு நேற்று நண்பகலோடு தன் நாடு முழுமையும் என்வச மிழந்து என்னிடம் சிறைப்பட்டிருக்கும் உனது தந்தையையும் கொன்றுவிடுவேனென்பது உண்மை. இச் சுரங்கத்தில் உனக்கு யாரும் உதவி செய்ய முடியாதென்பதை நீ நன்ருக அறிந்தே இருக்கின்கின்ருய். ஆகையால் மறுபடியும் கேட்கின்றேன். நீ என்ன கூறுகின்ருய்?" என்று கேட்டான் அரசன்.

அதற்கு அந்தப் பெண்மணி "அரசரே! மறுபடியும் தாங்கள் என்னைக் கேட்கவேண்டியது யாதுளது? என்னையும் என் தந்தையாரையும் தாங்கள் இரட்சித்தாலும் சரி; அல்லது கொன்றுவிடினும் சரி; நான் என்மனதிற்கியைந்த ஒருவர்பேரில் கொண்டகாதலைத் தங்களிடம் திருப்புவது

கூடாமையாகும். ஆதலின் தாங்கள் என்னைத் தங்களுடைய அருமைச் சகோதரியாகப் பாவித்து எனது நன்மையை நாடும்படி தங்கள் இருபாதங்களிலும் நமஸ்கரித்துக் கேட்டுக்கொள்கிறேன்'' என்று கூறி வாய் மூடுமுன் அவன் அப்பெண்மணியின் வார்த்தையைத் தடுத்து "நான் ஒரு போதும் உன்னுடைய வார்த்தைக்குச் செவிகொடேன். இதோபார்'' என்று கூறியவுடன் "ஐயோ! கடவுளே! ஆ! இறைவனே! இம்மகாபாவி என்னைப் பங்கப்படுத்த நெருங்குகிறானே! என்செய்வேன்! இச்சமயத்தில் எனக்குதவுவார் இல்லையோ!'' எனப் பலவாறாக அப்பெண்மணி கூக்குரலிடுவதை யறிந்த அரசகேசரி அவ்விதம் கூக்குரலிடுபவள் தனது அரசன் புதல்வி விஜயாள் என்பதையும், அவளை இம்சிப்பவன் சுவர்ணபுரி அரசனாகிய சித்திரசேனனென்பதையும் அறிந்து கண்மூடித்திறக்குமுன் தன் தலைக்குமேலிருந்த சுரங்கவாயிலைத் தன் முதுகால் இடித்துடைத் தெரிந்து மேலேறி அங்கு விஜயாளின் வலக்கரத்தை இடக்கரத்தால் பற்றி அவள் இடக்கரத்தைத் தன் வலக்கரத்தால் பற்றப் போகும் சமயத்திலிருந்த சுவர்ணபுரி அரசனாகிய சித்திரசேனன் முதுகில் தன் பலங் கொண்டமட்டும் இரண்டு குத்துக்கொடுத்துப் பரபர வென்று அவன் கையைப் பிடித்திழுத்து அவன் கன்னங்களிரண்டிலும் பளபள வென்று ஐந்தாறு அறைகள் கொடுத்தான். நாம் எழுதுவதற்கு இத்தனை வரிகள் வளர்ந்தனவே யன்றி மேற்கூறிய விஷயங்கள் ஒரு நிமிஷத்தில் நடந்தேறியபடியால் சித்திரசேனன் திடீரென்று எதிர்பாராதவண்ணம் நேர்ந்த இச்சம்பவத்தால் சற்று மயங்கினனாயினும் அவனும் சாமான்யனல்லவாகையால் சற்று நிதானித்து, நமது அரசகேசரியை எதிர்க்கலானான். அரச கேசரிக்கும், அவனுக்கும் ஐந்து நிமிஷ நேரம் கொடுமையான சண்டை நடந்தது. முடிவில்

'சத்தியமே வெல்லும்' என்னும் பழமொழிக்கிணங்க அரசகேசரி சித்திரசேனனைத் தூக்கித் தலைகீழாக பூமியில் பலமாக மோதினன். உடனே சித்திரசேனனுடைய மண்டை பிளந்து அவனுடைய மூக்கிலும் வாயிலும் இரத்தம் ஆறுகப் பெருகத் தலைப்பட்டது. அவனும் அலறவாரம்பித்தான். உடனே அரசகேசரி அவன் கூச்சலிடாவண்ணம் அவனுடையவாயில் துணியை அடைத்து அவன் கைகளையும் கால்களையும் கயிற்றால்கட்டி உருட்டி விட்டு அங்கு ஒருபுறம் அடங்கி ஒடுங்கி நிற்கும் விஜயாளை நோக்கினன்.

மேற்கண்ட சம்பவங்கள் நடந்தது அச்சுரங்கத்தின் மற்றோர் இடமாகுமென்பதை வாசகர்கள் அறிவார்களாக.

தன்னைப்பார்த்த அரசகேசரி தனது பிதாவின் உபசேனதிபதி என்பதை அறிந்துகொண்ட விஜயாள் அடியற்றபனைபோல் அவன் அடிகளில் விழுந்து "அண்ணு! தாங்கள் தற்சமயம் தோன்றி இத்தகைய உதவியைச் செய்திராவிடில் என் கதி அதோகதியாயிருக்கும்" என்று அவள் கூறும்போதே தன் சகோதரியினும் பன்மடங்கு அதிகமாக மதித்துள்ள அவளைத்தரையினின்றும் எடுத்து அவள் கண்களினின்றொழுகும் கண்ணீரைத் துடைத்து "அம்மணீ! வருத்தப்படாதீர்கள். எல்லாம் ஊழ்வினையின் பயனேயன்றி வேறன்று. நன்மைசெய்தாருக்கு நன்மையும், தீமை செய்தாருக்குத் தீமையும் எப்பொழுதாவது ஒரு காலத்தில் நேரிடாமற் போகாதாகையால் இனி தாங்கள் வருத்தப் படவேண்டாம்" என்று கூறி அவளுடைய துக்கத்தைப் போக்கி மறுபடியும் அவளைப்பார்த்து, "அம்மணீ! அமிர்தபுரியின் அரண்மனையில் இருந்த தாங்கள் இங்கு எப்படி வந்தீர்கள்?" என்றுகேட்டான்.

அதற்கு அவள் கைகால்கள் கட்டுண்டு பிரக்ஞையின்றித் தரையில் கிடக்கும் சித்திரசேனனைச் சுட்டி "இப்

படுபாவி தாங்கள் என் பிதாவிடம் உத்திரவுபெற்றுத் தங்கள் தந்தையைப் பார்க்கச் சென்றிருந்த சமயமறிந்து என் பிதாவுக்கு, 'தாங்கள் தங்கள் புத்திரியை எனக்கு மணம் செய்துகொடுக்க விரும்பாமையாலும் அவள் சித்திரபுரி அரசனாகிய இராஜசிம்ஹனை மணந்துகொள்ள விரும்புகிறா ளென்று கூறுகிறபடியாலும் நான் நாளையதினம் தங்கள் பேரில் படையெடுத்து வந்து தங்களை யுத்தத்தில் ஜயம் பெற்றுத் தங்கள் புத்திரியை அவள் சம்மதிக்காவிடி னும் கைப்பற்றிச் செல்கின்றேன்' என்று ஒரு கடிதம் எழுதி என் தந்தைக்கு அனுப்பினான். என் தந்தை என்ன செய்வதென்று தோன்றாது என்னைப் பல்லக்கிலேற்றி இர கசியமாக சில யுத்த வீரர்களுடன் பிரிதிவி ராஜனுடைய மனைவியிடம் சென்றிருக்கும்படி கூறியனுப்பினார். நான் அவ்விதமே அந்த யுத்தவீரர்களோடு பிரிதிவிபுரம் போய்க் கொண்டிருப்பதை இந்தச் சித்திரசேனன் எப்படியோ அறிந்து நடுவழியில் சில யுத்தவீரர்களுடன் வந்து என்னை மடக்கி என்னோடிருந்த யுத்தவீரர்களைக் கொன்றுவிட்டு என்னைத் தன்னால் இரட்சிக்கப்படும் கொள்ளைத் தொழிலி லும் கொலைத்தொழிலிலும் பேர்போன கொள்ளைக் கள் வர்களுடையதான இச்சுரங்கத்தில் நேற்றைய முதல் தினம் கள்வர்களின் காவலில் கொண்டுவந்து வைத்துவிட்டு வெளிச்சென்றவன் இன்றுமாலை இங்குவந்தான், வந்தவன் என் தந்தையையும், அவர் நாட்டையும் கைப்பற்றி விட்ட தாகவும் கூறுவதோடு இனி எனது காதலர் இராஜ சிம்ஹ ரையும் ஜயம்பெறுவதாகவும் கூறி என்னை இம்சிக்கத் தொடங்கினான். அண்ணா அரசகேசரியே! இவ்வளவுதான் நடந்த விஷயம். இச்சமயத்தில் தாங்கள் இங்குத் தோன்றி யது தெய்வசகாயமேயாயினும் இப்பாழும் சுரங்கத்திற் குள் தாங்கள் வந்ததெப்படி? நான் இங்கிருப்பது தங்க

ளுக்கு எப்படித் தெரியும்?" என்று சில கேள்விகளைக்கேட்டாள் அறிவுள்ள விஜயா.

அதற்கு அரசகேசரி அரசனுடைய கடிதம் தனக்குக் கிடைத்தது முதல் தான் திருடர்களால் பிடிக்கப்பட்டுச் சுரங்கத்திற் சேர்ந்து விஜயாளைக் கண்டதுவரையில் நடந்த விஷயங்கள் யாவையும் கூறினன்.

அரசகேசரி கூறியவிஷயங்களைக் கேட்டவுடன் விஜயா வியப்பும் திகிலுமுற்று அவனைநோக்கி, "இந்தச் சித்திரசேனனை இதோ இருக்கும் பெட்டிக்குள் போட்டு மூடிவிடுங்கள்" என்றுகூறிப் பெரியதொரு மரப்பெட்டியை அவனுக்குக் காண்பித்தாள்.

உடனே அரசகேசரி குற்றுயிருடன் இருந்த சித்திரசேனனைத் தூக்கி அம்மரப்பெட்டிக்குட் போட்டுப் பெட்டியைப் பூட்டி விட்டு விஜயாளைநோக்கி "அம்மணீ! இனி நாம் இங்கிருந்து தப்புவதெப்படி? இங்கிருந்து வெளியில் செல்ல வழியையுங் காணேமே" என்று கூறினன்.

அவ்வார்த்தையைக் கேட்டவுடன் விஜயா அரசகேசரியை நோக்கித் தாங்கள் அதைப்பற்றிக் கிஞ்சித்தும் கவலைப்படவேண்டாம். நான் கூறப்போவதைச் சற்று கவனியுங்கள். இச்சுரங்கத்திற் குரியர்களான கொள்ளைக் கள்வர்களுடைய தலைவனாகிய வீரவசு என்பவனுக்கு விவாகமான பதினான்காம் வருஷம் அவனுடைய மனைவி இறந்தாள். அதாவது அவள் இறந்து இப்போது ஐந்துவருஷங்களாகின்றன. வீரவசுவுக்கு விவாகமான மறுவருஷம் ஒரு பெண் பிறந்தது. அதற்குப்பிறகு வேறு சந்ததி கிடையாமலே அப்பெண்ணின் தாய் மாண்டாள். அப்பெண்ணை வீரவசு நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்து அவளுடைய ஐந்தாவது வயதில் அவளுக்குக் கல்விகற்பிக்க விரும்பி எங்கிருந்தோ சகலகலாவல்லப

ரொருவரை அவருடைய மனச் சம்மதத்தின் பேரில் இட்டுக்கொண்டு வந்து அவர் மூலமாய் அப்பெண்ணுக்குச் சகலவித கல்வியையும் கற்பித்து, அக்கலா வல்லபரின் இஷ்டப்படியே அப் பெண்ணுக்கு அமிர்தசாகரி என்னும் பெயரு மிட்டு அவள் நன்மையில் கண்ணும் கருத்துமாயிருந்து வருகின்றான். அப்பெண்மணியாகிய அமிர்தசாகரிக்குக் கல்வி கற்பித்தவரும் சென்ற வருடந்தான் இச்சரங்கத்திற் காலஞ்சென்றாராம். வீரவசுவின் குமாரத்தியாகிய அமிர்தசாகரியைப் பார்த்தால் அவள் கள்வர் கூட்டத்திற் பிறக்கக்கூடியவள்—பிறந்தவள்—என்று எவருமே கூறமுடியாது. அவள் அழகை இம்மட்டென்று கூற என்னால் முடியாது. அவளிடத்தில் எவரும் கண்டு ஆச்சரியப்படும்படியான நாகரிகமும், நற்குணமும் அமைந்திருக்கின்றன. அமிர்தமயமான அவளுடைய வார்த்தையைக் கேட்டவர்கள் எவரும் அவளை அமிர்தசாகரி என்று அழைப்பது மிகையாகாதென்று கூறுவார்கள். அதிகம் கூறுவானேன்? பதினெட்டு வயது இன்னும் சரியாக நிரம்பப்பெறாத இக் கட்டழகி நத்தைவயிற்றில் முத்துப்பிறப்பதுபோல் அக் கள்வர்களிடையில் தோன்றி இருக்கிறாளெனக் கூறவேண்டியதோடும் அத்தகைய பெண்மணிக்கு என்னைப்போன்ற அரசகுடும்பத்திற் பிறந்த பெண்களும் இணையாகமாட்டார்களென்றும் நான் திண்ணமாய்க்கூறுவேன். அண்ணா அரச கேசரீ, அப்பெண்மணியைப்பற்றி நான் இவ்வளவு கூறவேண்டிய காரணம் யாதெனில், சித்திரசேனன் என்னை இங்குக் கொண்டுவந்து விட்டுச்சென்றபிறகு அமிர்தசாகரி தான் வீரவசுவின் உத்திரவுப்படி எனக்கு ஆகாரம்கொண்டு வந்தாள். அவள் என் நிலைமையைக்கண்டு என் வரலாறுகளைக் கேட்டறிந்து வியசனித்து, "அம்மணீ விஜயா! தாங்கள் வருத்தப்படவேண்டாம். நான் இக்கொடும்பாவி

களின் இடையில் பிறந்ததற்கு வருந்துகின்றேன். இன்னும் இரண்டு தினங்களுள் ஒரு தினம் இரவில் உங்களை இங்கிருந்து வெளியேற்றிவிடுகிறேன். ஆனால் வெளியிற் சென்றவுடன் தங்களுக்குப் பிரிதிவிபுரம் போகவழி தெரியுமோ?” என்று கேட்டாள்.

அதற்கு நான், “ஆம்; தெரியும். ஆனால் என்னால் நடந்து செல்ல முடியாது. எனக்குக் குதிரைச்சவாரிதெரியும். இங்குக் குதிரைகள் உண்டோ?” என்று கேட்டேன்.

அதற்கவள், “அரசியே! தங்களுக்குக் குதிரைசவாரி செய்யத் தெரியுமென்று நான் நினைக்கவில்லை யாதலால் இச்சுரங்கத்திற்கு வெளியில் உள்ள ஒரு லாயத்தில் அநேக விதச் சவாரிக் குதிரைகளிருப்பதைப்பற்றி நான் தங்களிடம் கூறவில்லை. தங்களை நான் தகுந்தவொரு குதிரையிலேற்றி யனுப்புகின்றேன்” என்று கூறினாள்.

அதற்கு நான் அவ்வழகிய அறிவுள்ள பெண்மணியைப்பார்த்து, “அம்மணி, உன் இஷ்டப்படியே ஆகட்டும்” என்று கூறி மறுபடியும் அவளைப் பார்த்து, “அம்மா, உனக்கு, நீ வாசிக்கின்ற மாதிரியால், இங்கு வசிக்கப் பிரியமில்லை யெனத் தோன்றுகிறது. உன் தயையால் நான் இச்சுரங்கத்தினின்றும் வெளியேறியவுடன் பிரிதிவிபுரத்துக்குப்போக எனக்கும் ஒருவர் துணையிருந்தால் நலமாயிருக்கும். ஆகையால் நீயும் என்னோடு வந்துவிடுவாயாயின் உன்னை என்னாயுள் பரியந்தம் கைவிடமாட்டேன். உன் அபிப்பிராயம் என்ன?” என்று கேட்டேன்.

அதற்கவள் தன் முழு மனதுடன் சம்மதித்தாள். பிறகு அவள் முகமலர்ச்சியுடன் என்னைப் பார்த்து, நான் மேற்கூறிய அவளுடைய வரலாறுகளை என்னிடம்கூறி, என்னிடம் உத்தரவுபெற்றுக்கொண்டு தன்னுடைய இடத்திற்குச் சென்றாள்.

"நேற்றைய இரவுகூட வெகுநேரம் கள்வர்கள் ஒரு வரும் அறியாதபடி" என்று கூறி அங்குள்ள மற்றொரு சுரங்கவாயிலை அரசகேசரிக்குக்காண்பித்து, "இச்சுரங்கத்தின் வழியாகத் தன்னுடைய அறையிலிருந்து அமிர்தசாகரி இங்கு வந்து என்னிடம் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போகும் போது என்னையும் தன்னுடன் இச்சுரங்க வழியாக, தன்ன றைக்கு அழைத்துச் சென்றாள். அங்கு நான் அவளோடு படுத்துறங்கி விடியுமுன் இங்குவந்தேன். வழக்கம்போல் ஒன்று மறியாதவள்போல் கள்வர்கள் சந்தேகிக்காவண் ணம் அவர்களுக்குத் தெரியும்படி அமிர்தசாகரி எனக்கு ஆகாரத்தை இங்குக் கொண்டுவந்து வைத்துச் சென்றாள். இன்று மாலை இக்கொடும் பாவி சித்திரசேனன் இங்கு வந்துவிட்டான். இன்று அவனுடைய வார்த்தைகளுக் கிணங்காமலும், அவன் பலாத்காரத்துக் குட்படாமலும் நான் தப்பியது எல்லாம்வல்ல இறைவன் செயலேயாம். சித்திரசேனன் இங்கு என் வார்த்தையை முன்னிட்டுக் கள்வர்கள் அமிர்தசாகரியை ஆகாரம் எடுத்துக்கொண்டு இங்கு வரவொட்டாமல் தடுத்துவிட்டதாகத் தெரிகிறது. அதனால்தான் அவள் இன்று இதுவரையில் இங்குவரவில்லை என நினைக்கின்றேன். இனி நான் அரை நிமிஷமும் தாம திக்காது இச்சுரங்க வழியாய் அமிர்தசாகரியின் அறைக் குச் சென்று உள்ளவிஷயங்களை அவளிடம் கூறி அவளை இங்கு அழைத்துக்கொண்டு வருகிறேன். பிறகு அப்பெண் மணி இச்சுரங்கத்தினின்றும் வெளியேறும்வழியைக் காட்டு வாள். இவ்விதம் செய்வதில் தங்களுடைய கருத்து யாது?" என்று பலவிஷயங்களைக்கூறி முடிவில் ஒரே கேள்வியைக் கேட்டாள்.

விஜயாள் இப்படிக் கூறிய பல விஷயங்களையும் நன்றா கக் கவனித்துப் பலவித ஆலோசனையிலாழ்ந்த அரசகேசரி

முடிவில் விஜயாகேட்ட கேள்விக்குப் பதிலாக, "சரி, சீக்கிரமாகச் சென்று அப்பெண்மணியை அழைத்துக்கொண்டு வருவது அவசியமேயாம்" என்று கூறினன்.

இவ்வார்த்தையைக் கேட்டவுடன் விஜயா அமிர்தசாகரியின் அறைக்குச் செல்லும் சுரங்கத்தின் வழியாக அவளைக் காணச் சென்றாள்.

விஜயா சென்றவுடன் அரசகேசரி அங்கிருந்த ஓர் அழகிய ஆசனத்திலமர்ந்தான். அவன் மனம் விஜயா கூறிய மாதிரியில் இன்பமான வேறு எண்ணத்துடன் அமிர்தசாகரியை விரைவில் காண விரும்பியதோடும், அச்சுரங்கத்தினின்றும் ஒரு நொடியில் விஜயாவையும், அமிர்தசாகரியையும் அழைத்துச் செல்ல வேண்டுமென்றும் எண்ணியது. இவ்விதமாகப் பலவித எண்ணங்களால் நிரப்பப்பட்ட மனத்தினையுடைய அரசகேசரி திடீரென்று எழுந்து விஜயா சென்ற சுரங்கவாயிலின் வழியாகத் தானும் அமிர்தசாகரியின் அறைக்குட் செல்லலானன்.

---

## அத்தியாயம் 4

### தப்பியோடுதல்

கொள்ளைக் கள்வர்களின் தலைவனுகிய வீரவசுவின் புத்திரியாகிய அமிர்தசாகரி சற்றேறக்குறைய பதினெட்டு வயதுடையவள். அவளுடைய சுருண்டு நீண்டு வளர்ந்த கேசராசியும், மூன்றாம் பிறையை நிகர்த்த நெற்றியும் வேப்பிலையைப் போன்ற புருவங்களும், கரியவண்டுகளுக் கொத்துக் கருணை நிறைந்து விசாலித்துள்ள கண்களும், முருக்க மலரெனச் சிவந்த உதடுகளும், குமிழம்போன்ற நாசியும், சற்றே கதிப்புற்ற கன்னங்களும் முத்தைப் பழித்து முல்லையை நிகர்க்கும் பற்களும், வள்ளைத் தண்டை

தனளோ என்னவோ ஒன்றும் தெரியவில்லையே' என்றிவ்விதமாக அமிர்தசாகரி தன்னுள் ஆலோசித்துக் கொண்டிருக்கையில் விஜயாள் தன் பின்புறமிருந்த சுரங்கத்தின் வழியாக தன்னறைக்குள் வந்து தன்னெதிரில் நிற்பதைக் கண்டாள்.

அவளைக் கண்டவுடன் அமிர்தசாகரி திடுக்கிட்டெழுந்து அவளைக் கட்டி யணைத்து பரிவுடன் அன்பின் பெருக்கால் அவள் முகத்தை நோக்கி, "சகோதரீ! தாங்கள் இந்நேரத்தில் இங்குவந்ததைப்பற்றி மகிழ்கின்றேன். ஆயினும் சித்திரசேனன் தங்கள் அறைக்கு இன்று நாம் எதிர்பாராத வண்ணம் வந்தமையினுல் நான் இக்கள்வர்களின் கண்டிப்பின்பேரில் தங்களைக் காண முடியாமல் வருந்திக் கொண்டிருந்ததற்கு மன்னியுங்கள். சித்திரசேனனின் கதியென்ன? அவன் உறங்குகின்றுனு?—" என்று கூறி அவள் பின்னும் ஏதோ கூறப்போகுமுன் விஜயா அவள்வார்த்தையைத் தடுத்து "இல்லை: அவன் தூங்கவில்லை" என்று கூறி மறுபடியும் அவளைப்பார்த்து, அரசகேசரி சுரங்கவாயில் வழியாகத் தன் அறைக்குள் திடீரென்று தோன்றியது முதல் நடந்த விஷயங்களை யெல்லாம் கூறித் தான் தற்சமயம் அவளிடம் எதற்காக வந்தாளென்பதைப் பற்றியும் கூறினுள்.

இவ்வார்த்தைகளை யெல்லாம் கேட்ட அமிர்தசாகரி விஜயாளை நோக்கி, "விஜயா, நான் உள்ள விஷயத்தை உன்னிடம் இப்போதே கூறி விடுகிறேன். இன்று இரவு, அதாவது, சில நாழிகைகளுக்கு முன் அவரை—அரசகேசரி என்னும் அழகான பெயரினையுடைய அவரை—கள்வர்கள் கொண்டுவந்தபோதே நான் கண்டேன். கண்டதுமுதல் என்மனம் அவரை விரும்பி நிற்கின்றது. அவர் உன்னைத் தன்னுடன் பிறந்த சகோதரியினும் பன்மடங்கு அதிக

மாகக் கருதுபவரென்று நீ கூறியபடியால் உள்ள விஷயத்தைக் கள்ளமின்றி உன்னிடம் கூறினேன். ஆனால் அவர் மனவிருப்பம் எவ்வாறிருக்குமோ'' என்று கூறினாள்.

"அமிர்தா, நாம் மூவரும் ஒன்று சேருங்காலத்தில் உங்களிருவரையும் மணமகன் மணமகளாக்கி என் கண்களால் காணவேண்டுமெனக் கருதியே நான் இதற்கு முன் உன்னைப்பற்றி எனது அருமைச் சகோதரர் அரசகேசரியிடம் ஒருவாறு கூறினேன். உன்னைப்பற்றி நான் கூறிய சில விஷயங்களைக் கேட்டவுடன் அவர் முகக்குறிப்பால் அவர் மனம் உன்னில் ஈடுபட்டு விட்டதென்பதை நன்கு அறிந்து கொண்டேன். நீ எவ்வளவு அதிகமாக அவரை விரும்புகின்றாயோ அவ்வளவினும் அதிகமாக அவர் உன்னை....விரும்புகின்றார் என்பது நிச்சயம். வீரம் பொருந்திய எனது சகோதரரை நீ விரும்புவதும், கள்ளிவயிற்றில் அகில் பிறப்பதுபோல் தோன்றியுள்ள கண்மணியாகிய உன்னை எனது சகோதரர் காதலிப்பதும் தகுதியுடையதேயாம்'' என்று விஜயா அமிர்த சாகரியைப் பார்த்துக் கூறி விட்டு மறுபடியும் அவளைப் பார்த்து "அமிர்தா, இனியும் காலம் தாழ்த்துவானேன்? நாம் இங்கிருந்து வெளியேறத் தடையாதுளது?'' என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை. என் தந்தையை நான் இன்னொருமுறை பார்த்துவிட்டுச் செல்ல எண்ணினேன்- என்மனம் சம்மதிக்கவில்லை. ஆம்; பெற்ற தந்தையாயினும் கொடியவராயிருப்பின் அவரை மனச்சம்மதத்துடன் மக்கள் விரும்புவரோ? இல்லை. பிரகலாதன் இரணியனையும், பரதன் தாயையும் விரும்பாமையே இதற்குப்போதிய உதாரணங்களாம்'' என்று கூறி, "சரி; இனி நாம் மூவரும் இங்கிருந்து போகவேண்டியது அவசியமேயாம். ஆனால் என்னுடைய அறையிலிருந்தே இச்சுரங்கத்தின் வெளியே போவதற்கு

வழிஅமைக்கப்பட் டிருப்பதால் தாங்கள் சென்று தங்கள் சகோதரர் அரசகேசரியை அழைத்துக்கொண்டு வருவீர்களாயின் நாம் இப்படியே வெளியேறி விடலாம்'' என்று விஜயாளைப்பார்த்துக் கூறினாள் அமிர்தசாகரி என்னும் அறிவுள்ளமாது.

இவர்கள் இருவருக்கும் இதுவரையில் நடந்த சம்பாஷணைகளை யெல்லாம் சுரங்கவாயிலுக்குள் இருந்தபடியே கவனித்துக் கொண்டிருந்த அரசகேசரி தன்னை அழைத்து வரும்படி விஜயாளிடம் அமிர்தசாகரி கூறியவார்த்தையைக் கேட்டவுடன் தான் ஒன்றுமறியாதவன்போலும், அப்பொழுதுதான் சுரங்கத்திற்குள்ளிருந்து வருகிறவன் போலவும் வெளிவந்து விஜயாளைக் கவனித்தான். அவனைப்பார்த்தவுடன் அவன் தேக அமைப்பை ஏற இறங்க ஒரு முறை உற்றுப்பார்த்து மகிழ்ச்சியுற்ற அமிர்தசாகரி வெட்கத்தால் தலைகவிழ்ந்தாள்.

திடீரென்று தோன்றிய அரசகேசரியைக் கவனித்த விஜயா ''அண்ணா! தங்களை அழைக்கவே நான் எத்தனித்தேன். தாங்களும் யாரோ கூறியதுபோல் வந்து விட்டீர்கள். நாம் வெளியேறிப் போகவேண்டியது தானே?'' என்று கேட்டாள்.

''ஆம் அமிர்தசாகரியின் தயையிருந்தால்—'' என்று கூறினான் அரசகேசரி.

அதற்கு விஜயா, ''அமிர்தசாகரி தயையினால்தான் எல்லாம்'' என்று கூறுமுன் அமிர்தசாகரி அவன் முகத்தைப்பார்த்து, ''எல்லாம் கடவுள் தயை'' என்றுகூறினாள்.

உடனே அரசகேசரி விஜயாளைப் பார்த்து ''நாம் நாளைய தினத்திற்குள் பிரிதிவிபுரம் போகவேண்டும். ஆகையால் இனிக் காலம் தாழ்க்காது புறப்பட வேண்டியது அவசியமாகும்'' என்று கூறினான்.

அவன் கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடன் விஜயா ஒன்றும் கூறாமல் அமிர்தசாகரியின் முகத்தைநோக்கினாள். உடனே அமிர்தசாகரி சிறிதும் தாமதமின்றி அங்குச் சுவரில் தொங்கிக்கொண்டிருந்த மெல்லிய சங்கிலி ஒன்றைப் பிடித்து இழுத்தாள். உடனே அந்தச் சுவரில் ஒரு பெரிய வழி உண்டாயிற்று. அவ்வழியாக மூவரும் செல்லுமுன் அமிர்தசாகரி புன்னகை தவழ அரசகேசரியைப்பார்த்துத் "தங்களுக்கு ஏதாவது போருக்குரிய ஆயுதங்கள் தேவையோ? தேவையானால் எவ்விதமான ஆயுதங்கள் வேண்டு" மென்று கேட்டாள்.

இன்பமுறும் அவள் வார்த்தையைக் கேட்ட அரசகேசரி, "எனக்கு ஒரு பெரிய வாளும் நீண்டதொரு ஈட்டியும் தேவை" எனக் கூறினான்.

உடனே அமிர்தசாகரி அங்கிருந்த ஒரு பெட்டியைத் திறந்து கூறியதும் பெரியதுமான வாள் ஒன்றையும், ஈட்டி ஒன்றையும் எடுத்து அரசகேசரி வசம் கொடுத்தாள்.

உடனே விஜயாள் அரசகேசரியைப்பார்த்து "அண்ணா! வீரம் பொருந்திய பெண்மணிகள் தங்கள் காதலர்களுக்குக் கொடுக்கக்கூடியவை இத்தகைய பூஷணங்களேயாம். இவைகளைக் கொண்டே தாங்கள் எவ்விஷயத்திலும் ஜயம்பெறுமாறு கடவுள் கடாட்சிப்பாராக" என்று கூறினாள்.

இவ்விதம் அவள் கூறியவைகளைக் கேட்டவுடன் அமிர்தசாகரி வெட்கமுற்றாள். அரசகேசரி விஜயாளைப் பார்த்து, "சகோதரி! நாம் விளையாடிக்கொண்டிருப்பதற்கு இது தருணமல்ல. நாம் விரைவில் செல்லவேண்டும்" என்று கூறினான்.

உடனே அம்மூவர்களும் சுவரில் தோன்றிய வழியாக வெளியே செல்லலாயினர். பிறகு அரைமணி நேரத்தில் அவர்கள் சுரங்கத்தின் வெளியே சென்றனர். உடனே

அமிர்தசாகரி விஜயாளேயும், அரசகேசரியையும் அங்கோரிடத்தில் மறைவாக நிறுத்திவிட்டுத் தான்மட்டும் சுரங்கத்திற்கு வெளியிலிருந்த குதிரை லாயத்திற்குச் சென்று அங்குக் காவலாகப் படுத்துறங்கிய கள்வர்களும் அறியாவண்ணம் நன்ருக ஓடக்கூடிய மூன்று சவாரிக் குதிரைகளேப் பிடித்து அவைகளுக்குப் பிரயாணத்திற்குரிய கடிவாளம் முதலிய சாமான்களேப் பூட்டி, அவைகள் மூன்றையும் அரசகேசரியும் விஜயாளும் நிற்கும் இடத்திற்குக் கொண்டுவந்து நிறுத்திஞள். அவைகளொன்றில் அரச கேசரியும் மற்றென்றில் விஜயாளும், பிறிதொன்றில் அமிர்தசாகரியும் ஏறிக்கொண்டு அமிர்தசாகரியும் விஜயாளும் முன்னும் அவர்களுக்குப் பின் அரசகேசரியுமாக பிருதிவிபுரம் நோக்கிக் கூடியவரையில் விரைவாகப் பிரயாணம் செய்யலாஞர்கள்.

---

## அத்தியாயம் 5

### விவாகங்கள்

அரசகேசரி விஜயாளேயும் அமிர்தசாகரியையும் அழைத்துக்கொண்டு பிருதிவிபுரத்துக்குப்போய்ச் சேர்ந்தவுடன் அவர்களிருவரையும் பிருதிவி ராஜனின் பத்தினியிடம் ஒப்புவித்துவிட்டுத் தான் சற்றுப் பிரயாணம் செய்த களேப்பாறியவுடன் சிறிது ஆகாரம் உட்கொண்டு போர்க்கோலத்துடன் தன் காதலி கொடுத்த ஆயுதங்களேயே கையிற்கொண்டு குதிரையிலேறி பிருதிவிராஜன் மகமத் கோரியோடு போர்செய்யும் இடத்திற்குப் போஞன். இவனேக்கண்டவுடன் பிருதிவி ராஜனுக்கு ஏற்பட்ட சந்தோஷம் அளவு கடந்ததாகும். பிறகு இருவருமாக யுத்த வீரர்களே நடத்தி அன்று மாலேப்பொழுதிற்குள் மகமத் கோரியை

புறமுதுகிட்டோடும்படி செய்து அவனுடைய சேனைகளை யெல்லாம் அதம்பண்ணி ஜயக்கொடி நாட்டி அரண்மனைக் குத் திரும்பினார்கள். அரசகேசரியால் அன்று பிரதிவிராஜ னுக்கு ஏற்பட்ட ஜயமானது எக்காலத்தும் கவனிக்கத் தக்கதாகும். செய்நன்றி மறவாத பிரிதிவி மன்னனும் மறு தினம் தன் சேனைகளோடும் அரசகேசரியோடும் சுவர்ண புரியின் மீது படையெடுத்துச் சென்று அவ்வூரைக் கைப் பற்றி விஜயாளின் தந்தையாகிய இராஜசிம்ஹரை சிறையி னின்றும் விடுவித்து அமிர்தபுரிக்கு அவரை எப்போதும் போல் அரசராக்கிவிட்டு சுவர்ணபுரிக்கு அரசகேசரியை அரசனாக்கினான். இதற்கிடையில் சித்திரபுரியின் அரசனாகிய இராஜசிம்ஹன் தன்னோடு போர்புரிந்த சர்தார்சிங் என் னும் சிற்றரசனை ஜயம் பெற்று பிரிதிவிராஜ், அரசகேசரி, இராஜசிம்ஹர் முதலியவர்களை வந்துகண்டு களிகூர்ந்தான். "ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம், பொறுத்தார்க்குப் பொன்றுந்துணையும் புகழ்" என்னும் திருவாக்குப்படி இக்கதையில் பல விஷயங்கள் நடந்தேறி இருப்பதோடும் "பிறர்க்கின்னா முற்பகற் செய்யின் தமக்கின்னா பிற்பகற் றாமே வரும்" என்னும் வாக்கியத்திற் கிலக்கியமாகவும் இக்கதையில் சில சம்பவங்கள் நேர்ந்திருப்பதையும் வாச கர்கள் அறிவதோடும், கள்வர்களின் சுரங்கத்தில் பெட்டி யிற் போட்டுப் பூட்டப்பட்ட சித்திரசேனன் அதற்குள் இறந்தொழிந்தா னென்பதையும், அவன் இறந்ததையும் அமிர்தசாகரியும், அரசகேசரியும், விஜயாளும் அங்கில்லா மையையும் அறிந்த கள்வர்கள் இனி நாம் இங்கிருந்தோ மானால் தப்பிச் சென்றவர்களால் ',அபாய நேரு' மென்று அச்சுரங்கத்தை விட்டு எங்கோ போய்விட்டமையையும் வாசகர்கள் அறிவார்களாக.

* * * *

சித்திரை மாதம் முப்பதாந் தேதி அரசகேசரி அமிர்த சாகரியையும், சித்திரபுரி அரசனாகிய இராஜசிம்ஹன் விஜயாளையும் மணந்துகொண்டனர். அரசகேசரியின் தந்தையும் தாயும் தங்கள் தவப்புதல்வனின் மணக்கோலத்தினைக் கண்ணாரக்கண்டு மகிழ்ந்து தங்கள் பிறவி ஈடேறிற்றென்று கூறி சந்தோஷித்தனர். அமிர்தசாகரிக்கு தன் தந்தையைப் பற்றிய குறை ஒன்றைத் தவிர வேறுகுறை ஒன்றுமில்லை. விவாகங்கள் பிரிதிவிபுரத்திலேயே நடந்தேறின. அவ்விவாகங்களுக்கு பிரிதிவிராஜனே முன்னின்று எல்லா விஷயங்களையும் கவனித்தான். அவ்விவாகங்கள் நடந்தேறிய சிறப்பின் பெருமையைக் குறித்து எழுத என்னால் முடியாதெனினும் அநேக சிற்றரசர்களும், அரசர்களும் அவ்விவாகங்களுக்கு வந்து சிறப்பித்தார்களென்று மட்டும் கூறுகிறேன். சில தினங்களுள் விவாகங்களுக்கு வந்திருந்தவர்களெல்லோரும் உத்தரவு பெற்றுத் தங்கள் தங்கள் ஊர்களை நாடிச்சென்றனர். பின்னும் சில தினங்கள் ஆயின.

சுருங்கக் கூறுமிடத்து பிறகு வெகுகாலம் வரை இராஜசிம்ஹர், பிரதிவிராஜ், அரசகேசரி முதலியவர்கள் அவரவர்களுக் குறியநாட்டில் தங்கள் தங்கள் தாய் தந்தை மனைவி முதலியவர்களுடன் வெகுகாலம்வரை இன்புற்று வாழ்ந்துவந்தனரென்று நாம் அறிகிறோம்.

# குலசேகரி

## அல்லது

# குணத்தின் தோஷம்.

(திருவானைக்காவல் சி. குழந்தைவேலன் எழுதியது.)

## அத்தியாயம் 1

### அதிசய சம்பவம்.

இரவு பூரண சந்திரனொளி யிருந்தும் திடீரென்று கரிய மேகங்கள் சூழ்ந்து சந்திரனை மறைத்துக் கொண்டதால், உடனே காரிருள் கவிந்துகொண்டது. ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரிவது அருமையாய் விட்டது. மின்னல் இடைவிடாது மின்னிற்று; மழை வருவதை முன்னறி அறிவிப்பதுபோல் குளிர்ந்த காற்று ஜில்லென்று வீசிக்கொண்டிருந்தது. மணியோ பதினொன்றடித்து முப்பது நிமிஷமாயிற்று. அப்பொழுது ஸ்ரீ ரங்கத்தில் ஒருவாறு அரவம் அடங்கிவிட்டதென்றே கூறலாம். அவ்வூரின் இராய கோபுரத்தைக் கடந்து ஓர் உருவம் வந்துகொண்டிருந்தது. அவ்வுருவத்தின் பின்னால் மற்றோர் உருவம் நீண்ட கவச மணிந்துகொண்டு முன் செல்லுகிற உருவத்தைத் தொடர்ந்து வந்துகொண் டிருந்தது. செல்லுகிற உருவமோ பின்னால் தொடர்ந்துவரும் உருவத்தைக் கவனியாமல் இராய கோபுரத்தைக் கடந்ததும் திரும்பிக் கொல்லன் பட்டரை வீதிவழியாகச்சென்று மேல அடையவளஞ்சான் வீதியை அடைந்தது. அங்குச் சென்றதும் சிறிது

நேரம் அவ்விடத்திலேயே நின்று தன்னை யாராகிலும் பார்க்கிறார்களா வென்றோ? அல்லது வேறு எக்காரணத்தாலோ? சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுச் சரேலென்று ஓர் வீட்டினுள் நுழைந்தது. அவ்வீடு முன்னமேயே சாத்தப் பட்டிருப்பினும், இவ்வுருவம் நுழைந்த சில நிமிஷங்களுக்கெல்லாம் அவ்வீட்டின் கதவு படீறென்று திறக்கப்பட்டது. உடனே ஓர் மாது வெளியில் வந்து, "ஆ! நீயா? உன்னைத்தான் நான் ஒவ்வோர் விநாடியும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்று கூறி, அவ்வுருவத்தை உள்ளே அழைத்துக்கொண்டு சென்றாள். உடனே கதவும் சாத்தப் பட்டது. அம்மாதின் முகம் கலவரம் நிறைந்திருந்ததால் சவம்போல் வெளுத் திருந்தது. ஒவ்வொரு விநாடியும் தன்னை மறந்தே நடுங்கினாள். உள்ளே சென்றதும் அம்மாது அவ்வுருவத்தை நோக்கி, "ஏன்? காரியம் முடிந்ததல்லவா?" என்று வினவினாள்.

உருவம்:—ஓ! அதுவா? இல்லை யில்லை; அக்காரியம் நிறைவேற வில்லை. அதன் விஷயமாக முயற்சி எடுத்தது நிர்பிரயோஜனமாய் விட்டது. நீங்கள் கூறியவாறு அவ்விடத்தி லில்லை.

மாது:—அதுபோனால் போகிறது; நம்முடைய ரகசியம் வெளியாக வில்லை யல்லவா? அந்தோ! அதைத் தான் நான் நிறைவேறுமாறு கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

உருவம்:—அந்தோ! நானதை எவ்வாறு கூறுவேன்? அதை நினைத்தாலும் என் தேகம் நடுங்குகிறது. ஆ! இப்பொழுது நாம் பெரிய ஆபத்தில் சிக்கி யிருக்கிறோம்.

மாது:—என்ன! என்ன! ஆபத்தா? ஏன்? வெளியாய் விட்டனவோ? அந்தோ ஏன் இவ்விதம் நடுங்குகிறாய்? சீக்கிரம் உண்மையைக் கூறு; நம்மைக் கண்டுபிடிக்க ஏற்பாடாய் விட்டதோ?

உருவம்:—ஆமாம், அதுவே! நம்முடைய ரகசியம் முற்றிலும் வெளியாய் விட்டது, நம்மைக் கண்டுபிடிக்கும் படியாக ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இனி நமக்குத் திண்டாட்டமே. இப்பொழுது நம்மைப் பல விபத்துக்கள் சூழ்ந்துகொண் டிருக்கின்றன. ஒவ்வோர் நிமிஷமும் நம்முடைய உயிர் தப்புவது அரிதே. அவ்வாபத்தி லிருந்து நாம் தப்புவதும் அரிதுதான் என்றது.

இவ்வார்த்தையைக் கேட்டதும் அம்மாது உண்மையில் நடு நடுங்கி விட்டாள். முகத்தில் இரத்தம் குபீரென்று ஏறிவிட்டது; தடுமாற்றத்துடன், “அந்தோ!....அந்தோ!.... பிறகு நமது கதியென்ன?” என்று திகிலுடன் கூறினாள்.

உருவம்:—ஆம்; நமது கதி மிகவும் பயங்கரமானதே. ஒவ்வொரு வினாடியும் நாம் நம்மைக் காப்பாற்றிக் கொள்வது மிகவும் பிரயாசை. நம்மைக் கொடுந்தண்டனை செய்யக் கூடிய பல வேவுகாரர் தொடர்வார்கள். அவர்கள் கண்களுக்கு நாம் சிறிதும் அகப்படக் கூடாது. இல்லாவிடில் நமதுயிர் அவர்கள் கையில் சிக்கிக்கொள்ளும். பிறகு நமது கதி பாம்பின் வாயில் அகப்பட்ட தேரைக்குச் சமானமே யாகும். அந்தோ! அவர்கள் கண்களுக்கு அகப்படாமலிருப்பதுதான் அதிக கஷ்டம். இக்கொடிய ஆபத்தினின்றும் தப்புவதற்கு ஏதாவதொரு முயற்சி எடுக்கவேண்டும். ஆம், இல்லாவிடில் நமக்குப் பெரிதும் திண்டாட்டமாய் முடிந்து விடும். ஆ! இதற்கென்ன ஏற்பாடு செய்யலாம்.

மாது:—அந்தோ! மெதுவாகப்பேசு; நாம் பேசுவதை ஒற்றுக் கேட்கப் போகிறார்கள். இவ்வாபத்திற்கு நீயே யோசனை செய்து ஓர் ஏற்பாடு செய். என்னை இதினின்றும் காப்பாற்று. எல்லாவற்றிற்கும் உன்னையே நம்பி யிருக்கிறேன். என்னை இவ்வாபத்தில் கைவிட்டு விடாதே. அவ்

விதம் செய்யமாட்டாயல்லவா? என்று இரக்கமான பார்வையுடன் வினவினள்.

உருவம்:—இல்லை யில்லை; கைவிட மாட்டேன். அதற்காக வேண்டுமானால் சத்தியம் கூடச் செய்வேன். அதைப் பற்றி நான் சிறிதும் கவலை கொள்ளவில்லை. எப்படியும் நாம் இவ் வாபத்தினின்றும் தப்பிவிட வேண்டுமென்பதே எனது எண்ணம். ஏன்? இவ்விதம் செய்துவிட்டா லென்ன? என்று அம்மாதின் காதருகில், குசு குசு வென்று இரண்டொரு வார்த்தைகள் கூறிற்று.

அதைக் கேட்டதும் அம்மாது சிறிது தைரியமடைந்தவளாகி, "ஆம். ஆம்; அதுவே சரி. அவ்விதமே செய்துவிடலாம். அந்தோ! நீ எனக்காக மிகவும் பிரயாசை எடுத்துக் கொள்ளுகிறாய். என்னால் உனக்குக் கஷ்டம் ஏற்படுகிறது. இந்தப் பேருபகாரத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். இதோ இச்சிறு தொகையை உன் உபகாரத்தின் பலனாக வைத்துக்கொள்" என்று கூறி, சவரன் நிறைந்த ஓர் பையை அளித்து; "எப்பொழுது பிரயாணப் படலாம்; ஒவ்வொன்றும் உன் யோசனைப் பிரகாரமே நடக்கவேண்டு மாதலால் உன் முடிவான வார்த்தையைக் கூறிவிடு" என்றாள்.

உருவம்:—ஏன்? அதற்கு நாளை இரவே தகுந்தநேரம்; ஆதலால் சரியாகப் பத்துமணிக்கெல்லாம் நான் வருவேன். அதற்குள் பிரயாணத்திற்குத் தயராய் இருக்கவேண்டும். மறந்துவிடாமல் செலவுக்குத் தாராளமாய்ப் பணம் எடுத்து வரவும். நான் போய் வருகிறேன்; நேரமாய்விட்டது என்று சொல்லிப் பிராயாணப்பட்டது.

உடனே அம்மாது அவ்வுருவத்தை நோக்கி "அந்தோ! இன்னொரு விஷயம் கேட்க மறந்துவிட்டேன். நான் வைத்திருந்த கடிதம் கிடைத்ததா? ஆம், கிடைத்திருக்கும்.

அதை அறிந்துதானே நீ இவ்விடம் வந்தாய். இல்லாவிடில் நீ வர முடியாதல்லவா?'' என்று கூறினாள்.

இம்மொழியைக் கேட்டதும் அவ்வுருவம் விலவிலத்துப் போயிற்று; கைகள் நடுங்கின. இடுப்பைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தது; தடுமாற்றமான குரலுடன் "ஆ! அக்கடிதம்.... .... கடிதம் எங்கோ தவறி விட்டது. ஆம், உண்மையாய்த் தவறி விட்டது'' என்றது.

இதைச் செவியுற்ற அம்மாது, கலவரமான பார்வையுடன், "என்ன என்ன? அக்கடிதம் தவறி விட்டதா? அந்தோ! அதில் நமது ரகசியம் வரையப்பட்டிருந்ததே! ஆ! என்ன நமது துரதிர்ஷ்டம்'' என்று வெறுப்புடன் கூறி, "சரி அதனால் குற்றமில்லை; நீ போய்வா? மறந்து விடாமல் குறிப்பிட்ட நேரத்திற்கு வந்துசேர். நான் உன்னை நம்பியே ஒவ்வோர் விநாடியும் உன்னை எதிர் பார்த்துக் கொண்டிருப்பேனென்பதை ஞாபகத்தில்வை. முன்னால் உனக்களித்த பணத்தை உன் சிரமத்திற்காக வைத்துக் கொள், இந்தா, இதை உன் வீட்டில் செலவிற்குக் கொடுத்து விட்டுவா'' என்று முன் கொடுத்ததைவிட அதிக பணம் நிறைந்த மற்றோர் பையைக் கொடுத்தாள். அதைப் பெற்றுக்கொண்டதும் அவ்வுருவம் சரேலென்று புறப்பட்டு வெளியில் வந்தது.

இவ்வுருவத்தைத் தொடர்ந்து வேறொரு உருவம் வந்ததென்று கூறினதை, நண்பர்கள் மறந்து விட்டிருக்க மாட்டார்களென்றே நம்புகிறோம். அவ்வுருவமும், அடயவளஞ்சான் வீதியை அடைந்ததும் முன் உருவம் வீட்டினுள் செல்வதைக் கண்டு, தானும் அவ்வீட்டின் திண்ணையின் பேரில் அரவமில்லாமல் ஏறி, அவ்வீட்டின் சாளரத்தின் வழியாக, அவர்கள் பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தது. முடிவில், முன்

உருவம் புறப்பட்டதைக் கண்டதும் ஓர் விநாடிகூடத் தாமதியாமல் சடுதியில் அவ்விடத்தை விட்டு ஓர் மறைவான இடத்திற்கு வந்து, முன் உருவத்தின் வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்தது. அதே சமயத்தில் முன் உருவமும் வந்துசேர்ந்தது. அதைக் கண்டதும் கவசமணிந்த உருவம் ஆனந்தமடைந்து மறுபடியும் முன்போலவே தொடர ஆரம்பித்தது. சிறிது தூரம் செல்லவும், முன் சென்று கொண்டிருந்த உருவம் திடீரென்று மறைந்துவிட்டது. அதைக் கண்ணுற்ற கவசமணிந்த உருவம் கலவரமடைந்து "ஆ! இதென்ன மாயம்? நாம் இவ்வளவுதூரம் தொடர்ந்து வந்தும் நிர்ப்பிரயோஜனமாய்ப் போய் விட்டதே" என்று வெறுப்புடன் கூறித் தன் வழியே நடந்து சென்றது.

அதே சமயத்தில் இராயகோபுரத்தின் வெளியில் ஓர் ஜட்கா வண்டி புறப்பட்டது. அவ்வண்டியில் கறுத்த ஓர் மனிதனும், வண்டி ஓட்டுபவனும் ஆக இருவரே இருந்தார்கள். ஆனால் அவ்வண்டியின் கீழ், குதிரைக்குப் புல் வைக்கும் கோணிப்பையில் ஓர் உருவம் அமர்ந்திருப்பதை வண்டியிலிருக்கும் மனிதனாவது, வண்டி ஓட்டுபவனாவது அறியார்கள். வண்டி புறப்பட்டுச் சுமார் அரைமணி நேரத்திற்கெல்லாம் திருச்சிக் கோட்டை மணிக்கூண்டருகில் வந்து நின்றது. உடனே வண்டியிலிருந்த மனிதன் வண்டிக்காரனுக்குச் சேரவேண்டிய பணத்தை அளித்துவிட்டு, வண்டியை விட்டுக் கீழிறங்கி, கிழக்கு நோக்கி நடக்கலானான்.

அம்மனிதனுக்குச் சுமார் முப்பது வயதிருக்கும்; திடகாத்திர சரீரமுடையவன்; கறுத்த மீசைகள் அடர்ந்திருந்தன. முகம் மாத்திரம் சிறிது தெரியும்படி விட்டுத் தன் தேகம் யாவும் மறையும்படி ஓர் சால்வையைப் போர்த்துக் கொண்டிருந்தான். இவனை நோக்கினால், இவன் ஏதாவதொரு குற்றம் செய்துவிட்டோ, அல்லது வேறு ஏதாவது

அடாதகாரியம் செய்துவிட்டோ போகிறனென யாரும் எளிதில் உணருமாறு கலவரத்துடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு, தள்ளாடித் தள்ளாடி நடந்துசென்றான்.

அவ்விடம் அதிகம் இருள் சூழ்ந்திருப்பினும் முனிசிபல் விளக்கு ஆங்காங்கு மினுக்கு மினுக்கென்று பிரகாசித்துக்கொண் டிருந்தது. அவ்வொளி சிறிது வெளிச்சத்தையே கொடுத்தன. பொசு, பொசு வென்று மழை தூரவாரம்பித்தது. அம்மனிதன் அப்பொழுது வேகமாக நடக்கலானான். சிறிது தூரம் சென்றதும் அம்மனிதன் ஆவென்றலறிப் பின்னிடைந்தான். ஏனெனில்? இவனுக்கு முன்னால் ஒரு உருவம் வந்துகொண் டிருந்தது. அவ்வுருவத்தைக் கண்டதும் உண்மையில் இம்மனிதன் மிகவும் பீதியடைந்துவிட்டான். கொஞ்ச நேரத்திற் கெல்லாம் அவ்வுருவம் அம்மனிதனை உற்று நோக்கிக்கொண்டே மறுபக்கம் போய்விட்டது. அவ்வுருவம் போய்விடவே, அம்மனிதன் சிறிது தைரியமடைந்து, மனத்திகிலுடன் தனக்குத் தானே, "அந்தோ! நான் ஏன் இவ்விதம் அஞ்சுகிறேன். என்னை யார் கண்டு கொள்ளப் போகிறார்கள்? இந்தப் பாதையின் வழியாக இரவும் பகலும் ஜனங்கள் நடப்பது சகஜந்தானே. நாம் ஏன் அந்த ஆளைக் கண்டு பயப்பட்டோம்? இவ்விதம் நாம் பயப்படுவது சுத்தமூடத்தனமாகும். இனி இவ்விதம் பயப்படலாகாது. அந்தோ! நான் என்ன செய்வேன்! எவ்வளவோ தைரியமாக விருந்தாலும் ஒரு சந்தேகமுள்ள மனிதனைக் கண்டவுடன் அத்தைரியம் எங்கோ பறந்து விடுகின்றதே. ஆ! நான் ஏன் இதில் சிக்கினேன். அதனா லல்லவா ஒவ்வோர் மனிதனையுங்கண்டு அஞ்சவேண்டியதா யிருக்கிறது? ஆ! இஃது என் மதியீனம்." என்று யோசித்துக்கொண்டே பின்புறம் திரும்பினான். அப்பொழுது ஓர் உருவம் தன்னைத்

தொடர்ந்து வருவதைக் கண்டவுடன் நடுநடுங்கிவாய்குளறி அந்தோ! .... .... அந்தோ!'' என்று தடுமாற்றத்துடன் கூறித் திடீரென்று நின்றுவிட்டான். மறுநிமிடம் அம்மனிதன் தன் மனதைத் திடப்படுத்திக்கொண்டு மறுபடியும் அவ்வுருவத்தைக் கண்ட விடத்தை நோக்கினன். ஆனல் அவ்விடத்தில் யாதொரு பிராணியும் இல்லாதிருக்கவே, தான் கண்டது மனத் தோற்றமே யொழிய வேறல்ல வென்று தைரியமடைந்து,சிறிது வேகமாக நடக்கலானன். அதேசமயம் ஓர் மரத்தடியிலிருந்து ஓர் உருவம் கிளம்பி முன்னல் செல்லுகிற மனிதனைத் தொடர வாரம்பித்தது. முன்னல் செல்லுகின்ற மனிதனே, அப்பொழுது மனச் சஞ்சலமின்றிச் செல்வதால் ஒன்றையுங் கவனியாமல் சிறிது தூரம் சென்று, திரும்பித் திரும்பி இரண்டு மூன்று சந்துகளின் வழியாக நடந்து, திடீரென்று மாயமாய் மறைந்து விட்டான். பின்னல் தொடர்ந்து வந்த உருவம் எவ்வளவோ ஜாக்கிரதையாகஅம்மனிதனை விடாது தொடர்ந்து வந்தும் அம்மனிதன் திடீரென்று மறைந்துவிடவே பெருமூச் செறிந்து "ஆ! ஆ! இவனென்ன மாந்திரீகனு யிருப்பானே? அல்லது தேவதை வசிய முள்ளவனுயிருப்பானே? அந்தோ! நாம் இவ்வளவு தூரம் பிரயாசைப்பட்டும் அம்மனிதன் நம்மை இரண்டு முறையும் ஏமாற்றித் தப்பித்துக் கொண்டானல்லவா? ஆம். அவன் ஒருமகேந்திர ஜால மாயக்காரனுகத்தா னிருக்கவேண்டும். ஆயினும் நாம் அவனை இதோடு விட்டுவிடப் போவதில்லை. அவனும் ஒரு நாளைக்கு நம்முடைய கையில் சிக்காமல் தப்பப் போகிறதில்லை. கேவலம் இம்மனிதனை நாம் பிடிக்காவிட்டால், இத்தனை காலமாகச் செய்து வந்த இத் துப்பறியும் உத்தியோகத்திற்குத்தான் என்ன பெருமை? இத்தென்னிந்தியா முழுவதும் துப்பறிவதில்பிரக்யாதி பெற்றவன் ராஜப்பனே

என்று கூறும் புகழ்ச்சி வார்த்தையை நாம் இவனாலேயா இழப்பது ! ஒருக்காலு மில்லை. இக்குற்றவாளியை மாத்திரம் நான் கண்டு பிடிக்காவிடில் என் பெயரும் ராஜப்பனோ? என்று வெகு ஆத்திரத்துடன் கூறிவிட்டு, வெகு துரிதமாகத் தன் இருப்பிடத்தை நோக்கிப் புறப்பட்டது.

---

## அத்தியாயம் 2

### பழனியப்ப செட்டியாரின் படுகொலை.

திருச்சிக்கோட்டை ஆண்டார் வீதியில், தென்னண்டை வரிசையிலுள்ள ஓர் பெரிய மாளிகையில், ஒரு நாட்டுக்கோட்டை செட்டியார் வசித்து வந்தார். அவருக்கு, ப. ள. ரு. ம. பழனியப்ப செட்டியார் என்று பெயர் இவர் தம்முடைய இனத்தாரைப்போல் பணத்தை வட்டிக்குக்கொடுக்கும் கந்துகடை இவ்வூர் பெரிய கடைத்தெருவில் வைத்திருக்கிறார். அதுவுமல்லாமல் வேறொரு கடையும் அவருக்குண்டு. அது மேற் குறித்த கந்துக்கடையல்ல, அது என்னவெனில், இக்காலத்தில் புதிதாய் வெளிவந்த இமிடேஷன் கற்கள் வர்த்தகம் செய்யும் கடையே.

பழனியப்ப செட்டியார் இக்கடை வைத்ததன் பிறகு, இதில் பெருத்த லாபமடைந்தார். ஒரு சமயம் பம்பாயிலிருந்து இமிடேஷன் கற்களைத் தளமாக வரவழைத்து அவற்றைத் திருச்சியிலுள்ள சக்கரச்சாணை பட்டரைக்காரர்களிடம் கொடுத்து, பட்டைக் கற்களாக வேலைசெய்து வாங்கி அவற்றை விற்றதில் பட்டரைக்காரர்களுக்குக் கூலி கொடுத்ததுபோக ஐம்பதினாயிரம் ரூபாய் இலாபம் கிடைத்தது. அதிலிருந்துதான் செட்டியார் இப்பொழுது வசிக்கும் மாளிகையை முப்பதினாயிரம் ரூபாய்க்கு வாங்கினார். சொந்தமாக ஓர் மோட்டார் காரும் அவருக்குண்டு.

தொடர்ந்து வருவதைக் கண்டவுடன் நடுநடுங்கி வாய்குளறி அந்தோ! .... .... அந்தோ!" என்று தடுமாற்றத்துடன் கூறித் திடீரென்று நின்றுவிட்டான். மறுநிமிடம் அம்மனிதன் தன் மனதைத் திடப்படுத்திக்கொண்டு மறுபடியும் அவ்வுருவத்தைக் கண்ட விடத்தை நோக்கினன். ஆனால் அவ்விடத்தில் யாதொரு பிராணியும் இல்லாதிருக்கவே, தான் கண்டது மனத் தோற்றமே யொழிய வேறல்லவென்று தைரியமடைந்து,சிறிது வேகமாக நடக்கலானன். அதேசமயம் ஓர் மரத்தடியிலிருந்து ஓர் உருவம் கிளம்பி முன்னல் செல்லுகிற மனிதனைத் தொடர வாரம்பித்தது. முன்னல் செல்லுகின்ற மனிதனே, அப்பொழுது மனச் சஞ்சலமின்றிச் செல்வதால் ஒன்றையுங் கவனியாமல் சிறிது தூரம் சென்று, திரும்பித் திரும்பி இரண்டு மூன்று சந்துகளின் வழியாக நடந்து, திடீரென்று மாயமாய் மறைந்து விட்டான். பின்னல் தொடர்ந்து வந்த உருவம் எவ்வளவோ ஜாக்கிரதையாகஅம்மனிதனை விடாது தொடர்ந்து வந்தும் அம்மனிதன் திடீரென்று மறைந்துவிடவே பெருமூச்செறிந்து "ஆ! ஆ! இவனென்ன மாந்திரீகனு யிருப்பானே? அல்லது தேவதை வசிய முள்ளவனுயிருப்பானே? அந்தோ! நாம் இவ்வளவு தூரம் பிரயாசைப்பட்டும் அம்மனிதன் நம்மை இரண்டு முறையும் ஏமாற்றித் தப்பித்துக் கொண்டானல்லவா? ஆம். அவன் ஒருமகேந்திர ஜால மாயக்காரனுகத்தா னிருக்கவேண்டும். ஆயினும் நாம் அவனை இதோடு விட்டுவிடப் போவதில்லை. அவனும் ஒரு நாளைக்கு நம்முடைய கையில் சிக்காமல் தப்பப் போகிறதில்லை. கேவலம் இம்மனிதனை நாம் பிடிக்காவிட்டால், இத்தனை காலமாகச் செய்து வந்த இத் துப்பறியும் உத்தியோகத்திற்குத்தான் என்ன பெருமை? இத்தென்னிந்தியா முழுவதும் துப்பறிவதில் பிரக்யாதி பெற்றவன் ராஜப்பனே

என்று கூறும் புகழ்ச்சி வார்த்தையை நாம் இவனாலேயா இழப்பது! ஒருக்காலு மில்லை. இக்குற்றவாளியை மாத்திரம் நான் கண்டு பிடிக்காவிடில் என் பெயரும் ராஜப்பனோ? என்று வெகு ஆத்திரத்துடன் கூறிவிட்டு, வெகு துரிதமாகத் தன் இருப்பிடத்தை நோக்கிப் புறப்பட்டது.

---

## அத்தியாயம் 2

### பழனியப்ப செட்டியாரின் படுகொலை.

திருச்சிக்கோட்டை ஆண்டார் வீதியில், தென்னண்டை வரிசையிலுள்ள ஓர் பெரிய மாளிகையில், ஒரு நாட்டுக்கோட்டை செட்டியார் வசித்து வந்தார். அவருக்கு, ப. ள. ரு. ம. பழனியப்ப செட்டியார் என்று பெயர் இவர் தம்முடைய இனத்தாரைப்போல் பணத்தை வட்டிக்குக்கொடுக்கும் கந்துகடை இவ்வூர் பெரிய கடைத்தெருவில் வைத்திருக்கிறார். அதுவுமல்லாமல் வேறொரு கடையும் அவருக்குண்டு. அது மேற் குறித்த கந்துக்கடையல்ல, அது என்னவெனில், இக்காலத்தில் புதிதாய் வெளிவந்த இமிடேஷன் கற்கள் வர்த்தகம் செய்யும் கடையே.

பழனியப்ப செட்டியார் இக்கடை வைத்ததன் பிறகு, இதில் பெருத்த லாபமடைந்தார். ஒரு சமயம் பம்பாயிலிருந்து இமிடேஷன் கற்களைத் தளமாக வரவழைத்து அவற்றைத் திருச்சியிலுள்ள சக்கரச்சாணை பட்டரைக்காரர்களிடம் கொடுத்து, பட்டைக் கற்களாக வேலைசெய்து வாங்கி அவற்றை விற்றதில் பட்டரைக்காரர்களுக்குக் கூலி கொடுத்ததுபோக ஐம்பதினாயிரம் ரூபாய் இலாபம் கிடைத்தது. அதிலிருந்துதான் செட்டியார் இப்பொழுது வசிக்கும் மாளிகையை முப்பதினாயிரம் ரூபாய்க்கு வாங்கினார். சொந்தமாக ஓர் மோட்டார் காரும் அவருக்குண்டு.

இவர் இவ்வூருக்கு வந்து இரண்டே வருடங்கள் தான் ஆயின. அதற்குள் இமிடேஷன் வியாபாரத்தில் லக்ஷக் கணக்கான திரவியம் சம்பாதித்து விட்டார். இதனாலேயே இவருக்கு "இமிடேஷன் வியாபாரி" என்ற காரணப்பெயர் உண்டாயிற்று. இந்தக்கடை நிலைத்துப்போகவே முதலில் வைத்த கந்துக் கடையை எடுத்து விட்டார்.

இவருக்குப் பல வேலையாட்கள் உண்டு. சமையல் செய்வதற்கும் வேலையாளை வைத்திருந்தார். அவன் பெயர் முனியாண்டி. இவனைத் தன் ஊரிலிருந்தே செட்டியார் அழைத்து வந்திருக்கிறார். இம் முனியாண்டி என்பவன் பத்து வருஷகாலமாக இச் செட்டியாரிடத்திலேயே வேலைசெய்து வருவதால், செட்டியாருக்கு இவன் பேரில் பெரிதும் நம்பிக்கை யுண்டு. இவர் தினமும் காலை எழு மணிக்கெல்லாம் படுக்கையை விட்டெழுந்து, காலைக்கடன் கள் முடிந்ததும் வேலையாளினால் தயார் செய்யப்பட்ட சிற்றுண்டிகளை அருந்திவிட்டுத் தம் மோடார்காரில் ஏறிக் கொண்டு சுமார் பத்து மணிக்கெல்லாம் தம்முடைய கடையில்போய் உட்கார்ந்து வியாபாரத்தைக் கவனிப்பார். அக் கடையில் நம்பிக்கையான ஓர் கணக்கப்பிள்ளை இருக்கிறார். அவர் பெயர் தம்புசாமி. இவரே பட்டரைக்காரர்களுக்குக் கல் கொடுப்பதும் வாங்குவதுமாகிய வேலைகளைச் செய்து வந்தார். தம்புசாமி என்பவர் அவ்வூரினரே; மெத்த நல்லவர். அதனாலேயே செட்டியார் அவரை நம்பி எல்லாக் காரியங்களையும் அவரிடமே விட்டு வந்தார்.

பழனியப்ப செட்டியார் மாளிகைக்கு மேல்புறம் நாலைந்து வீடுகள் தாண்டி ஓர் சிறு வீடு இருந்தது. அவ்வீட்டில் ஓர் மாது தனிமையில் வசித்து வருகிறாள். அவள் பெயர் மனோகரி, மிகவும் சௌந்தர்ய முடையவள். சுமார் 23-வயதிருக்கும். சொல்பமாக ஆபரணங்கள் அணிந்திருக்

கிருள். ஆனல் அவள் திக்கற்றவளைப்போல் தனிமையில் வசிக்கும் காரணமோ தெரியவில்லை. நிற்க, செட்டியார் எவ்வளவோ நற்குணம் நற்சிந்தை யுடையவராயிருந்தும் எப்படியோ நாலைந்து வீடுகளுக்கு அப்பாலிருக்கும் மனோகரி யிடத்தில் நட்பு கொண்டார். அதனல் செட்டியார் அவள் வீட்டிற்கு அதிகம் போக்கு வரத்தாக யிருந்தார். ஏன் மறைபொருளாகக் கூறவேண்டும்? முடிவில் செட்டியார் மனோகரியின் காம வலையில் சிக்கிவிட்டார். அவளும் செட்டியாரை மயக்கி அவர் மூலமாகத் தன்னுடைய ஜீவனத்தை நடத்திவந்தாள்.

சில மாதங்கள் கடந்தன. ஓர் நாள் காலை பழனியப்ப செட்டியாரின் வீட்டு வேலைக்காரியாகிய நாகம்மாள் என்பவள் செட்டியார் வீட்டை முழுதும் பெருக்கிவிட்டுக் செட்டியார் படுக்கும் அறையின் பக்கத்திலுள்ள கூடத்தைப் பெருக்குவதற்காக வந்தாள். என்றுமில்லாமல் அன்றைய தினம் செட்டியாரின் அறையினுடைய கதவு திறந்து இருக்கவே உள்ளே பார்க்கலாமென்று எட்டிப்பார்த்தாள். உடனே ஆவென்றலறி பின்னிடைந்து கூச்சலிட்டாள். இச்சத்தத்தைக் கேட்ட வாயில்காப்போன் முதலிய வேலைக்காரர்கள் எல்லாம் ஓடிவந்து, என்ன என்ன வென்று வினவினர்கள். அவ்வேலைக்காரி அவர்களுக்கு ஒன்றும் கூருமல், “அந்தோ! அந்தோ! இவ்வறையினுள்ளே பாருங்கள்” என்று கூவினள். அவ்வேலைக்காரர்கள் உடனே செட்டியாரின் அறையினுள் வெகு பர பரப்புடன் நுழைந்தார்கள். நுழைந்ததும் திடீரென்று நின்றுவிட்டார்கள். ஏனெனில், பழனியப்ப செட்டியார் தமது கட்டிலின்பேரில் கொலையுண்டு கிடந்தார். அவருடைய வஸ்திரங்கள் சின்னபின்னமாகக் கிடந்தன. தலையணையைவிட்டுக் கீழே படுத்திருந்தார். திறந்தகண் திறந்தபடியே யிருந்தது. ஓர்வித

கோரமான பார்வையுடன் படுத்திருந்தார். அவருடைய அருமையான இரும்புப் பெட்டி திறக்கப்பட்டிருந்தது. ஆனால் அதினுள்ளிருந்த சாமான்கள் காணப்படவில்லை. இவை யனைத்தும் கண்ணுற்ற ஒருவன் சரேலென்று போலீஸ்டேஷனுக்குச் சென்று, இச்செய்தியை அறிவித்தான். உடனே போலீஸ் இன்ஸ்பெக்டர் முனிசாமி நாயுடும் நான்கு கானிஸ்டேபில்களும் வந்து சேர்ந்தார்கள். 'பழனியப்பசெட்டியார் கொலை செய்யப்பட்டார்' என்ற வதந்தி எங்கும் பரவிவிட்டது. செட்டியார் மாளிகையில் கும்பல் நிறைந்திருந்தது. போலீஸ் இன்ஸ்பெக்டர் வேலைக்காரி நாகம்மாளையும், வாயில் காப்போனாகிய கறுப்பனையும் இன்னும் மற்ற வேலைக்காரர்களையும் கேட்கவேண்டிய கேள்விகளைக் கேட்டுக் குறித்துக்கொண் டிருந்தார். அதே சமயத்தில் சவ பரிசோதனை செய்யும் டாக்டர் பாலு வந்து சேர்ந்தார். இவர் சுமார் அரைமணி நேரம் வரையில் சவத்தைச் சோதனைசெய்து, முடிவில் "இவர் கொலையுண்டு சுமார் எட்டுமணி நேரமாகிறது. அதாவது, இரவு சுமார் பன்னிரண்டு மணிக்கெல்லாம் ஓர்வித விஷமருந்தினால் கொல்லப்பட்டாரென்று தெரியவருகிறது" என்றுகூறி முடித்தார்.

உடனே இன்ஸ்பெக்டர், சமையற் காரனாகிய முனியாண்டியை அழைத்துவரும்படி ஓர் கான்ஸ்டேபிலை அனுப்பினார். அவன் எங்குத் தேடியும் முனியாண்டி அகப்படாமையால் மணிக் கூண்டிற்குக் கிழக்கேயுள்ள அவனுடைய வீட்டில் போய்க்கேட்டான். அதற்கு அவன் பெண் சாதி, "நேற்றுப்போனவர்கள் இன்னும்வரவில்லை" யென்று கூறினாள். அதைக் கேட்டதும் கான்ஸ்டேபில், இன்ஸ்பெக்டரிடம் அவ்விஷயத்தைக் கூறினான். அதைச் செவியுற்ற இன்ஸ்பெக்டர் சிறிது நேரம் பேசாமல் இருந்து, 'சரிதான்: அவன்தான் இக்காரியத்தைச் செய்திருக்கிறான்.

ஆம், அவனே இக்காரியத்தை முடித்துவிட்டுப் பொருள்களைக் களவாடி யிருக்கிறான்" என்று தனக்குள் யோசனை செய்துகொண்டு முனியாண்டியைக் கண்டு பிடிக்கும்படியான ஏற்பாட்டிற்கு முயற்சி செய்துகொண்டிருந்தார். இந்தச் சமயத்தில் சுரு சுருப்பான ஒருமனிதன் வெகு தீக்ஷண்யமான பார்வையுடன் அங்குமிங்கும் சுற்றிக் கவனித்துக்கொண் டிருந்தான். அவன் முகத்தில் கம்பீரமான தோற்றம் காணப்பட்டது. ஆனால் அவன் தன்னை ஒருவரும் அறியாவண்ணம் மாறுவேடமணிந் திருந்தானென்றே காணப்பட்டது. அம்மனிதன் கவனித்துக் கொண்டிருக்கும்பொழுது, திடீரென்று ஓர் கடிதத்தை எடுத்து யாரும் அறியாவண்ணம் ஜேபியினுள் வைத்துக்கொண்டான். பிறகு வெளியில்வந்து ஓர் மறைவிடத்தில் நின்று, அக்கடிதத்தைப் பிரித்து வாசிக்கலானான். அதில் வரையப்பட்டிருந்த விஷயத்தைக் கண்ணுற்றதும், அம்மனிதன் மிகவும் ஆச்சரிய மடைந்தான். அவன் முகத்தில் சந்தோஷக் குறிகள் காணப்பட்டன. "ஆ! நாம் வந்தகாரியம் பலித்தது" என்று வாய்விட்டுக் கூறினான். பிறகு சிறிது சலிப்படைந்து "ஆ! இஃதென்ன விந்தையாயிருக்கிறது. இவ்விதம் மற்றவர்களுக்கு விளங்காவகையில் கடிதம் எழுதுவாரும் உண்டோ? இதை எழுதினவரும் எவருக்காக எழுதப்பட்டுள்ளதோ அவரும் தவிர வேறு யாரும் இதன் இரகசியத்தை அறியாவண்ணம் புனைந்து எழுதியிருப்பதாகக் காணப்படுகிறது. இதனாலேயே நாம் நாடிவந்திருக்கும் காரியத்திற்கு இஃதோர் பெருந்துணையா யிருக்குமென்று எண்ணுகிறேன். இனி நமது காரியம் முடிவுபெறுவதற்குள் இதன் பொருளை யறியாது விடுவதில்லை. ஆனால் இதன் பொருளைச் சுலபமாய் அறிவதுதான் சிறிது பிரயாசை; இருந்தாலும் இதை அறியாமல் விட்டு விடப்போவ

தில்லை" என்று வெகு உறுதியுடன் கூறி அக்கடிதத்தைக் கூர்ந்து கவனித்தான். அதில் அடியில் வருமாறு வரையப் பட்டிருந்தது:—

## அர்த்தம் விளங்காத அதிசயக் கடிதம்.

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அ | மு | ணி | யா | அ | ண் | டி | நீ | அ | நே | ரா | க | அ | க் | கா |
| க | ரி | அ | ய | ம் | மு | அ | டி | ந் | த | அ | து | ம் | சீ | அ |
| ர | ர | ங் | க | அ | ம் | மே | ல | அ | அ | ட | ய | அ | வ | ள |
| ம் | ஞ் | அ | சா | ன் | வீ | அ | தி | யி | லு | அ | ள் | ளா | ஆ | அ |
| நீ | ரு | ம் | ந | அ | ம் | ப | ர் | அ | வீ | ட் | டி | ஆ | ற் | கு |
| க் | வா | அ | நா | ன் | உ | அ | ன் | னை | அ | அ | ங் | கு | ச | அ |
| கி | ந் | தி | ப் | அ | பே | ன் | நா | அ | ன் | சி | ல | அ | கா | ர |
| அ | ண | அ | ங் | க | ளை | அ | மு | ன் | னி | அ | ட் | டு | மு | அ |
| ர் | ன் | று | டி | அ | செ | ல் | லு | அ | கி | றே | ன் | அ | ம | று |
| த் | ந் | அ | து | வி | டா | அ | ம | ல் | அ | அ | வ் | வி | ட | அ |
| த | ம் | வ | ந் | அ | து | சே | ர் | அ | அ | வ் | வி | அ | ட | த் |
| ம் | தி | அ | ல் | நா | ன் | அ | உ | ன் | னை | அ | ஒ | வ் | வோ | அ |
| கொ | ர் | வி | று | அ | டி | யு | ம் | அ | எ | தி | ர் | அ | பா | ர் |
| ள் | ப் | அ | பே | ன் | எ | அ | ன் | ப | தை | அ | க் | க | வ | அ |
| க | ளி | இ | ப் | அ | ப் | டி | க் | அ | கு | ம | ஞே | அ | க | ரி |

இக் கடிதத்தைச் சிறிது நேரம் வரையில் உற்றுப் பார்த்து முடிவில் சரியென்று கூறி, கடிதத்தை ஜேபியினுள் வைத்துக்கொண்டு, துரிதமாக தன்னிருப்பிடத்தை நோக்கிப் புறப்பட்டான்.

அன்று சாயந்திரமே அவ்வூரில் வெளியான ஒவ்வோர் தினப் பத்திரிகைகளிலும் கீழ்க்கண்ட விஷயம் காணப் பட்டது.

கொலை செய்யப்பட்டார்! கொலை செய்யப்பட்டார்!

பிரபல தனவந்தரும், இமிடேஷன் வியாபாரியுமான ப. ள. ரு. ம. பழனியப்ப செட்டியார், இன்று காலையில் கொடிய விஷ மருந்தினால் கொலை செய்யப்பட்டார்.

இவரை, இவர் சமையற்காரனாகிய முனியாண்டியே விஷ மருந்து கொடுத்துக் கொன்றுவிட்டு இரும்புப் பெட்டியில் ரொக்கமாக வைத்திருந்த ஐம்பதினாயிரம் ரூபாயையும் மற்றும் சில சாமான்களையும் களவாடிக்கொண்டு எங்கோ ஓடிவிட்டானென்று இன்ஸ்பெக்டர் முனுசாமி நாயுடு தீர்மானித்ததின் பேரில் அவனைக் கண்டு பிடிக்கும்படியான ஏற்பாட்டை செய்திருக்கிறார்கள். குற்றவாளி என்றைக் கிருந்தாலும் ஒரு நாளைக்கு அகப்படுவா னென்பது திண்ணம். போலீஸார் இதைச் சிரத்தையுடன் கவனிப்பாராக. (ப-ர்)

மற்றும் ஓர் விளம்பரம் அதே பத்திரிகைகளில் காணப்பட்டது; அது பின் வருமாறு:—

## இனாம் 1000 ரூபா இனாம்

இன்று காலை சுமார் 6-மணிக்கு இமிடேஷன் வியாபாரத்தில் பிரசித்தி பெற்றவரான ப. ள. ரு. ம. பழனியப்ப செட்டியார் தன் கட்டிலின்பேரில் கொலை செய்யப்பட்டுக் கிடந்ததை அவர் வேலைக்காரியாகிய நாகம்மாள் பார்த்தாள். அதன்பிறகு சவபரிசோதனை செய்ததில் டாக்டர் பாலு, அவர் விஷமருந்தினால் இறந்துவிட்டாரென்று அநுமானித்ததின்பேரில் இன்ஸ்பெக்டர், சமையற்காரனாகிய முனியாண்டியை விசாரிப்பதற்காகப் பார்க்கும்பொழுது அவனைக்காணாமையால், அவனே கொலை செய்தான் என்று அநுமானிக்கப் படுகிறது. ஆனதினால் அம்முனியாண்டியைக் கண்டு பிடிப்போருக்கு மேற்குறித்த 1000-ரூபாய் வெகுமதி யளிக்கப்படும். அவனுடைய அடையாளம் என்னவெனில்; கறுத்த தேகமுடையவன். அடர்ந்த மீசையுண்டு. சுமார் ஐந்தடி உயர மிருப்பான். சிறிது தடித்தவன். இதே அவனுடைய அடையாளம்.

தம்புசாமி பிள்ளை
கணக்குவேலை
பெரியகடைத்தெரு, திருச்சி.

இதாநிற்க, காலையில் கான்ஸ்டேபில் வந்து இன்ஸ்பெக்டரிடம் முனியாண்டி எவ்விடத்திலும் இல்லையெனக் கூறி, அதன்பிறகு அவனைக் கண்டு பிடிக்கும்படியான ஏற்பாட்டைச் செய்துவிட்டு, இன்ஸ்பெக்டர் செட்டியாரின் அறையினுள் நுழைந்து, அவ்வறையைப் பரிசோதித்தார். செட்டியாரின் இரும்புப்பெட்டி திறந்து வைக்கப்பட்டிருந்தது. அதன் சாவியும் பூட்டிலேயே இருந்தது. பெட்டியிலிருந்த பொருள்கள் களவாடப்பட் டிருந்தன. செட்டியார் கையில் அணிந்திருந்த சுமார் முப்பதினாயிரம் ரூபாய் மதிப்பிடக்கூடிய உயர்ந்த வைர மோதிரமும், தங்கக் கடிகாரமும் மற்றும் சில சாமான்களும் களவாடப்பட் டிருந்தன. இவைகளை யெல்லாம் முனிசாமிநாயுடு தன் கைப்புத்தகத்தில் குறித்துக்கொண்டு வேலைக்காரி நாகம்மாளையும் வாயில் காப்போனையும் கூட்டிக்கொண்டு சவத்தைக் கடையின் கணக்கப்பிள்ளையிடம் ஒப்பித்துவிட்டுப் போய் விட்டார்.

மறுநாள் விசாரணை நடந்ததில், வேலைக்காரர்கள் பேரில் குற்றமில்லை யென்றும், சமையற்காரனாகிய முனியாண்டியே பணத்திற் சாசைபட்டுக் கொலை செய்துவிட்டு ஓடிவிட்டான் என்று தீர்மானிக்கப்பட்டது. உடனே வேலைக்காரியும் வாயில் காப்போனும் விடுதலையடைந்து தங்கள் தங்கள் வீடடைந்தார்கள்.

தம்புசாமிபிள்ளை தன்னிடம் சவத்தை ஒப்புவித்த உடனே, செட்டியாரின் ஊருக்கு ஒரு அவசர தந்தி யடித்தார். இத்தந்தி கிடைத்ததும் செட்டியார் பெண்ஜாதியும் தாயாரும் வெகு துக்கத்துடன் அழுதுகொண்டு பகல் சுமார் 3-மணிக்கு வந்து சேர்ந்தார்கள். அதன்பிறகு தம்புசாமிபிள்ளை, சவத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து அவர்கள் ஆசாரப்படி சுமார் 6-மணிக்குச் சவத்தை அடக்

கம் செய்தார்.

இது முடிந்த பத்தாம்நாள் கருமமும் நடந்தது. செட்டியார் பெண்சாதியும், தாயாரும் ஆண்டார் வீதியிலேயே வசிக்கலானார்கள். கடையைத் தம்புசாமிப்பிள்ளையிடமே நம்பி விட்டுவிட்டார்கள். அவரும் அந்த மரியாதையை மென்மேலும் விருத்திசெய்துகொண்டிருந்தார். ஆனால், அவர் மனதில் செட்டியாரைக் கொலைசெய்தவனை எப்படியாவது கண்டுபிடிக்கவேண்டுமென்னும் எண்ணம் மாத்திரம் நீங்கவில்லை. தான் எழுதிய விளம்பரத்திற்கு யாதொரு பதிலும் வாராமலிருக்கவே, ஓர் துப்பறிவோனை வைத்து நடத்தவேண்டுமென்று செட்டியார் பெண்சாதியிடமும் தாயாரிடமும் அனுமதி கேட்டார். அவர்கள் தம்புசாமி பிள்ளைக்குப் பூரணசுதந்திரம் கொடுத்ததின் பேரில் துப்பறிவதில் பிரக்கியாதிபெற்ற ராஜப்பனை வரவழைத்துத் தன் எண்ணத்தை வெளியிட்டார்.

ராஜப்பன்:—நீங்கள் கூறுவதற்குமுன் நானே இக் குற்றத்தைக் கண்டுபிடிக்கத் தலையிட்டு வேலைசெய்து வருகிறேன் என்பதைத் தாங்கள் அறிந்தால் சந்தோஷப் படுவீர்களென்றே நினைக்கிறேன்.

தம்புசாமிப்பிள்ளை:—ஆ! அப்படியா? மிகவும் சந்தோஷம்; நீங்கள் எடுத்துக்கொண்ட சிரமத்திற்கு நான் நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறேன். இதற்கு வேண்டிய கேள்விகளுக்கு எனக்குத் தெரிந்தவரையில் பதில் சொல்லத் தயாராயிருக்கிறேன்.

ராஜப்பன்:—நான் தங்களை அதிக கேள்விகளைக் கேட்டுச் சிரமப்படுத்தவில்லை. இரண்டொரு கேள்விகளே கேட்கவேண்டும். அதாவது, செட்டியார் யாரையாவது வைப்பாட்டியாக வைத்திருந்தாரோ?

தம்புசாமி:—ஆம்; அவள் ஒரு பிராமணமாது என்றே யாவரும் கருதுகிறார்கள்.

ராஜப்பன்:—சரி அவள் பெயர் என்ன?

தம்புசாமி:—அவள்பெயர் மனோகரி

ராஜப்பன்:—சரி அவ்வளவே நான் உங்களைக்கேட்க வேண்டியகேள்வி. இதனால், அம்மாதுதான் இக்கொலை செய்திருக்கவேண்டுமென்று நான் எண்ணி யிருப்பதாக நினைத்து விடாதீர்கள். இது என் சுபாவகுணம். என் காரியம் முடிந்துவிட்டது; நான் போய்வருகிறேன், என்று விடைபெற்றுப் போய்விட்டான்.

---

## அத்தியாயம் 3

### விவாக ஆலோசனை

இச்சம்பவம் நடப்பதற்குச் சுமார் பதினைந்து பதினாறு வருஷங்களுக்குமுன் நடந்த ஓர் விஷயத்தை தொடர்வோம். அது நாம் ஆரம்பித்திருக்கும் கதைக்கு மிகவும் பொருத்தமானதே யென்பதை நண்பர்கள் கருதுவார்களென்றே நாம் நம்புகிறோம். திருவையார் என்ற ஊரின் நீண்ட அக்ராகாரவீதியின் கோடியில் "சுந்தரவிலாசம்" என்ற ஓர் சிறுமாளிகை வெகு விசித்திரமாக அமைக்கப்பட்டிருந்தது. அம்மாளிகையின் சொந்தக்காரர் பெயர் சுந்தரமையர். இவருக்குச் சுமார் முப்பத்தைந்து வயதிருக்கும். சற்றுப் பருத்த தேகத்தினர் பணத்தின்பேரில் மிகவும் விருப்பமுற்றவர். இவருக்கு நஞ்சையில் நாலைந்து காணிகளும், புஞ்சையில் பத்துப் பதினைந்து காணிகளும் இருக்கின்றன. இதுவுமன்றி ரொக்கமாகப் பத்தாயிரம் ரூபாய் வரையிலும் வைத்துக்கொண்டு வட்டிக்குக் கொடுத்துக்கொண்டிருந்தார். இவருக்குச் சுமார் பதினாறு

வயதுள்ள ஒரே புத்திரன் இருந்தான். அவன்பெயர் ஞானசேகரன். இவன் இப்பொழுது மெட்ரிக்குலேஷன் பரீக்ஷையில் தேரியிருக்கிறான். நேர்மையான நன்னடக்கை யுடையவன்.

ஓர்நாள் காலையில் சுந்தரமையர் தன்னறையில் ஓர் நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ யோசனை செய்துகொண் டிருந்தவர் திடீரென்று, "சுந்தரா, சுந்தரா" என்று கூவினார். அதைக்கேட்டதும் சமையலறையில் வேலைசெய்து கொண்டிருந்த அவருடைய மனைவியாகிய சுந்தராம்பாள் தன் புருஷனிடம்வந்து "என் கூப்பிட்டீர்கள்" என்று வினவி நின்றாள்.

சுந்தரமையர்:—சுந்தரா! நம்முடைய குமாரனுக்குக் கலியாணம் செய்யவேண்டாமா? அவனும் வாலிபப் பருவமடைந்துவிட்டான். இன்னும் நாம் அவனுக்கு விவாகம் செய்யாமல் விட்டிருப்பது மிகவும் மூடத்தனமாகுமல்லவா? நம்முடைய ஜாதியாரில் இந்த வயதுப் பிள்ளைகளெல்லாம் குழந்தைகளைப்பெற்றுக் கொஞ்சிக்கொண்டிருக்கிறார்கள். நாம் அவ்விதம் முற்றும் விரோதமான பால விவாகம் செய்ய முன்வரவில்லையே. நமது குமாரனை விவாகம் புரிந்துகொள்வதற்கு முற்றும் பொருந்தினவன் என்றே கூறலாம். மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேரியிருக்கிறான். இவனுக்குப் பெண்கொடுக்க யாரும் பின்னிடையார்கள் என்பது நிச்சயம். எல்லாம் யோசித்தே நான் உன் அபிப்பிராயத்தைக்கேட்கக் கூப்பிட்டேன்.

சுந்தரம்பாள்:—ஆஹா! அதற்கு என் அபிப்பிராயத்தைக் கேழ்ப்பானேன். என் அரும்புதல்வனுடைய விவாகத்திற்கு நான் ஏதாவது தடைகூறுவேனென்றோ நினைத்தீர்கள்? நான்தான் நாலைந்துவருஷமாக இக்கலியாணத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்துக்கொண் டிருந்தேனே. தாங்

கள்தான் அதைப்பற்றிச் சிறிதும் கவலை யில்லாமலிருந்தீர்கள். இப்பொழுதுதான் மனந்திரும்பியதுபோலும். சீக்கிரத்தில் முயற்சி எடுத்து இக்காரியத்தை முடியுங்கள். நம்முடையகுமாரன் என்ன அழகில் குறைந்தவனா? குணத்தில் குறைந்தவனா? எல்லாம் பொருந்தினவன். இவையெல்லாம் கவனித்து, நல்ல குணமுடையவளாயும் அழகுடையவளாயும் உள்ள ஓர் பெண்ணையே நம் புத்திரனுக்கு விவாகம்புரிந்து, நாம் மகிழ்ச்சி யடையவேண்டும். வீணுகப் பணத்திற்காசைப்பட்டு அறிவீனமுள்ள பெண்ணை யாவது பேசித் தீர்மானம் செய்துவிடாதீர்கள். நான் தங்களுக்கு அதிகம் கூறவேண்டியதில்லை யல்லவா?

சுந்தரமையர்:—ஆம், ஆம்; எனக்கு எல்லாம் தெரியும்; யோசியாமலா செய்துவிடுவேன்? நானே நமது புத்திரனுடைய விவாகத்தைப்பற்றிக் கவலையற்றிருந்தேன் என்று நீ நினைத்திருந்தாய். நன்றாய்க்கூறினாய்! நீயாவது விவாகத்தைப்பற்றிச் சிறிதுநேரம் வாயினாற் கூறிவிட்டுப் பிறகு பேசாமலிருந்துவிடுவாய். நானோ, அல்லும் பகலும் அதேகவலையா யிருந்தேன். எத்தனை ஊர்களுக்குப் பெண் விஷயமாகக் கடிதம் எழுதியிருக்கிறேன் தெரியுமா? அஃதெல்லாம் உனக்குத்தெரியாது. அதனால்தான் எனக்குக் கவலையில்லை யென்று நீ கூறினாய். இல்லாவிடில் அவ்விதம் கூறமாட்டா யல்லவா?

சுந்தராம்பாள்:—என்ன! பெண் விஷயமாகக் கடிதம் எழுதியிருக்கின்றீர்களா? எப்பொழுது எழுதினீர்கள்? அஃதெல்லாம் எனக்குத்தெரியாதே. நான்தான் தெரியாமல் கூறிவிட்டேன்; மன்னியுங்கள். பெண் எங்கேயாவது நிச்சயம் செய்திருக்கிறீர்களா?

சுந்தரமையர்:—ஆமாம்; ஒரு பெண்ணை நிச்சயம் செய்திருக்கிறேன். நல்ல அழகுடையபெண். அது யாரெ

னில், கும்பகோணத்தில் இராமஸ்வாமி ஐயர் இருக்கிறாரே, அவர் உனக்குத்தெரியுமா?

சுந்தராம்பாள்:—தெரியாமலென்ன, ஹைகோர்ட்டு வக்கீல்தானே. அவருடைய பெண்சாதி சேஷியும் நானும் பள்ளிக்கூடத்தில் ஸ்நேகமாக விருந்தோம். ஏன்? அவளுடைய பெண்ணை நம்முடைய புத்திரனுக்கு விவாகம் செய்யத் தீர்மானித் திருக்கிறீர்களோ?

சுந்தரமையர்:—ஆமாம்; அப்பெண்ணின்பெயர் குலசேகரி; வயது பன்னிரண்டு ஆகிறது. அவளுடைய தகப்பனாருக்கோ ஹைகோர்ட்டுவக்கீல்வேலை. அவர் நமது குமாரனை மருமகனாகக்கொண்டால் அவனுக்குக் கௌரவமான உத்தியோகம் கிடைக்கும் என்பது நிச்சயம். எல்லாம் தீரயோசித்தே அவர் தம்முடைய பெண்ணை நமது புத்திரனுக்குக்கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்.

சுந்தராம்பாள்:—அப்படியா! அப்பெண்ணையா தீர்மானம் செய்துவிட்டீர்கள்! சிவ, சிவ; அப்பெண்ணை விவாகம் செய்வதைவிட நமது புத்திரனுக்கு விவாகம் செய்யாமலே விட்டுவிடுதல் உத்தமம்; அதனால் தோஷமில்லை. நான் சொல்லுவதைக்கேளுங்கள். அப்பெண் நமக்கு வேண்டாம். தங்கள் மைத்துனன் பெண்ணாகிய குணசுந்தரம் என்பவளையே நமது குமாரனுக்கு விவாகம்செய்து விடலாம். அவளோ அழகில் லக்ஷ்மியை யொத்தவள்; அறிவிலே ஸரஸ்வதிக்கு நிகரானவள். அதற்குத் தகுந்த குணமும் அவளிடம் அமைந்திருக்கிறது. அவளே நம்முடைய குமாரனுக்குப் பொருத்தமானவள். நீங்கள் கூறினவளோ இதற்கு முற்றும் விரோதமானவள். ஆனால், அழகுமாத்திரம் அமைந்திருக்கிறது. அழகு இருந்து என்னபயன்? அழகு இல்லாவிடினும் குணமன்றோ பெண்களுக்கு அவசியம் அமையவேண்டியது. அவளோ நட

வடிக்கையில் மிகவும் கேளிவிலாச மானவளென்று பலரும் கூறுகிறார்கள். புருஷர்களிடத்தில் சிறிதும் நாணமின்றி வார்த்தை யாடுவாளாம். அடிக்கடி, டிருமா, பயாஸ் கோப், முதலிய கண்காக்ஷிகளுக்குப்போகப் பிரியப்பட்டவளாம். இவ்வித தூர்நடத்தையுடைய பெண்ணையா நமது குமாரனுக்கு விவாகம்புரிவது? வேண்டாம், வேண்டாம்; நமக்கோ ஒரே புத்திரன். அவனுக்கு இப்பெண்ணை விவாகம்செய்வது சிறிதும் பொருந்தாது. தயவுசெய்து இவ்வெண்ணத்தை மாற்றிவிட்டு, என் தமையன் புத்திரியாகிய குணசுந்தரத்தையே ஞானசேகரனுக்கு விவாகம் செய்யும்படியான ஏற்பாட்டைச் செய்யுங்கள். இதற்குமுன் அவர்களிருவருமே மனமொத்த காதலர்களாக விருக்கிறார்கள். அதற்கு ஒன்றும் தடைசெய்யவேண்டாம். இதுவே என்னுடைய அபிப்பிராயமாகும்.

சுந்தரமையர்:—உனக்கென்ன பயித்தியமோ? நீ பெண்பிள்ளையானதால் இவ்விதம் குருட்டுத்தனமாக உளருகிறாய். அவர்க ளிருவரும் சிறுவர்க ளானதால் ஒற்றுமையுடனிருக்கிறார்கள். இதற்காக அவர்களிருவரையும் பிரிக்கலாகாது என்பது மிகவும் அசம்பாவிதமாகும். உன் தமையன் செல்வத்தில் சிறந்தவனா? அல்லது உத்தியோகத்தில் சிறந்தவனா? ஒன்றுமில்லாதவன். கும்பகோணம், ராமசுவாமி ஐயரோ ஹைகோர்ட்டில் பெயர்போன வக்கீல்; செல்வமிகுந்தவர். அப்பேர்ப்பட்டவர் சம்மந்தம் நமக்குக் கிடைக்குமானால் நமக்குக் கௌரவமாகும்; நமது புத்திரனுக்கும் உயர்ந்த உத்தியோகம் கிடைக்கும். அவர் பெண்ணோ இப்பொழுது எட்டாவது வகுப்பு வாசித்துக் கொண்டிருக்கிறாள். ஊரில் அநேகர் அநேகவிதமாகத்தான் கூறுவார்கள். ஊர்வாயைமூட உலைமூடி உண்டா? அதற்காக நாம் அப்பெண்ணைக் கெட்டநடவடிக்கை யுள்

ளவள் என்று கருதுவது பெரிதும் மூடத்தனமாகும். மேலும் இராமசுவாமி ஐயரோ நமது புத்திரனுக்கு ஐயாயிரம் ரூபாய் வரதக்ஷிணை கொடுக்கிறேனென்று கூறியிருக்கிறார். உன்னுடைய தமையன் இவ்வளவுரூபாய் கொடுப்பானா? இவ்வளவு ரூபாய் கொடுப்பதற்கு அவனிடம் என்ன ஐவேஜு இருக்கிறது. எனக்கு ஒன்றும் நீ புத்தி கற்பிக்கவேண்டாம். எனக்கு எல்லாம் தெரியும், நீ உன் வேலையைப் போய்ப்பார் என்று வெறுப்புடன் கூறினார்.

சுந்தராம்பாள்:—இவ்விதம் கூறுகிறவர் என்னையேன் அழைத்தீர்கள்? உங்கள் யோசனைப்பிரகாரமே நடத்துவது தானே. என் வார்த்தைதான் உங்களுக்கு எக்காலத்திலும் பிடிக்காதென்பது தெரிந்ததுதானே. நான் பேசாமல் என்வேலைகளை செய்துகொண்டிருந்தாலும் இப்படி வலுவில் அழைத்துக் கோபமாய்ப் பேசுகிறீர்கள். நீங்கள் கலியாணம் செய்துகொள்ளும்பொழுது என் தகப்பனார் வீட்டில் ஐவேஜு இல்லையென்று தெரிந்துதானே விவாகம் செய்துகொண்டீர்கள். இனிமேல் எதுவேண்டுமானாலும் பேசி இவ்வித அசம்பாவிதவார்த்தைகளைக் கூறலாமன்றோ? நான் இக்காரியத்தில் சிறிதும் தலையிடவில்லை. நீங்கள் யாரைவேண்டுமானாலும் விவாகம் செய்து வையுங்கள். உங்களுக்கே எல்லாம் நியாயமாக விருந்தால் சரிதான், என்று முணுமுணுத்துக்கொண்டே சுந்தராம்பாள் சமையலறையினுள் நுழைந்தாள்.

சுந்தரமையர் நாற்காலியில் உட்கார்ந்தவாறே கன்னத்தில் கையைவைத் தூன்றிக்கொண்டிருந்தார். அவருடைய மனதில் பலபல யோசனைகள் உதித்தன. தன் மனைவி கூறியவாறு அப்பெண் கெட்டநடத்தை யுடையவளாக இருப்பாளோ என்று யோசிப்பார். மறுசமயம், நாம் அதை யோசித்தால் இவ்வளவு பெருந்தொகை வேறு

யாரும் கொடுக்கமாட்டார்களல்லவா! என்று நினைப்பார். இவ்விதம் அவர் யோசனை ஒருவிதத்திலும் நில்லாது குழம்பிக்கொண்டிருந்தது. முடிவில் எதற்கும் ஞானசேகரனைக்கேட்டு, அவன் அபிப்பிராயம் எப்படியிருக்கிறது என்று தெரிந்ததும் தீர்மானம் செய்துவிடலாம் என்று நினைத்து வாளாயிருந்துவிட்டார். அதேசமயம், இவருடைய புத்திரனான ஞானசேகரன் அவ்வறையினுள் நுழைந்தான். அவனைக்கண்டதும் சுந்தரமையர் "ஆ! வந்துவிட்டாயா. உன்னைத்தான் எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறேன்" என்று அவனை ஒரு நாற்காலியில் உட்காரவைத்து, "உன் நண்பன்வீட்டிற்குச் சென்றிருந்தனையோ?" என்று வினவினார்.

ஞானசேகரன்:—ஆம் அப்பா! அங்குத்தான் சென்றிருந்தேன். என்ன விசேடம்? எனக்காக நீங்கள் காத்திருக்கவேண்டிய காரணமென்ன? நான் ஏதாவது தங்கள் மனதிற்குப்பிடிக்காதகுற்றம் செய்துவிட்டேனே? அப்படி ஏதாவது இருக்குமானால் தயவுசெய்து மன்னிக்கும்படி கோருகிறேன். "சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற் பொருப்பதுகடனே" என்று ஔவையாரும் கூறியிருக்கிறாளல்லவா என்று வணக்கத்துடன்? கூறினான்.

இம்மொழிகளைக் கேட்டதும் சுந்தரமையர் நாற்காலியை விட்டெழுந்து ஞானசேகரனைக் கட்டித்தழுவி "அடா என் கண்மணி! அறிவிற்சிறந்த புத்திர ரத்தினமே! நீ யொரு குற்றமும் செய்யவில்லை. ஓர் விஷயத்தைக் குறித்த அபிப்பிராயத்தை கேட்கவே உன்னை எதிர்பார்த்துக்கொண் டிருந்தேன். அது என்னவெனில், உன் விவாகத்தைக்குறித்த விஷயமே. உனக்கும் வயதாய்விட்டது; இப்பொழுதே உனக்குக் கலியாணம்செய்து நாங்கள்

மனங்குளிரப் பார்க்கவேண்டுமென்பது எங்களெண்ணம். இதற்கே உன் அபிப்பிராயத்தை யறியவிரும்புகிறேன்" என்று கூறினர்.

ஞானசேகரன்:—தந்தையே! அதற்கு என் அபிப்பிராயத்தைக் கேழ்ப்பானேன். தங்கள் வார்த்தையை மறுப்பதும் உண்டோ. உங்கள் இஷ்டம் எப்படியோ அப்படியே செய்து முடியுங்கள். அதற்கு நான் யாதொரு ஆக்ஷேபணையும் செய்யமாட்டேனென்பது தாங்க ளறிந்ததே. நான் அதிகம் கூறவேண்டியதில்லை என்றான்.

உடனே சுந்தரமையருக்கு ஆனந்தம் பொங்கிற்று. தன் மகன் தன்னுடைய வார்த்தையை மறுக்கமாட்டானென்று தெரிந்திருந்தும் அவன் வாய்மொழியைக் கேட்டுச் சந்தேகத்தை நிவர்த்திசெய்துகொள்ள வெண்ணியே நேரில் கேட்டார். அவனும் ஒப்புக்கொள்ளவே மன மகிழ்ந்தார். இராமசுவாமி ஐயரிடமிருந்து ரூபாய் ஐயாயிரம் பெற்றுக்கொண்டதாகவே கருதினர். அதன் பிறகு, ஞானசேகரனைநோக்கி "இக்கலியாணத்தை விரைவில் முடித்துவிடவேண்டும்; அதிக ஆலசியம் செய்யலாகாது" என்று கூறினர். அதற்கு ஞானசேகரன், "அப்படியே செய்துவிடலாம், என்றைக்கிருந்தாலும் ஒருநாளைக்கு நடப்பது நடந்துதானே ஆகவேண்டும். சீக்கிரத்திலேயே இச்சடங்கை நிறைவேற்றிவிடலாம். பெண் யார்? குணசுந்தரம்தானே?- ஆம், அவளைத்தான் நான் காதலித்திருக்கிறேன். அவளையே தாங்களும் தீர்மானம் செய்திருப்பீர்களென்றே நம்புகிறேன்" என்றான்.

இதைக்கேட்டதும் சுந்தரமையர், பேரிடி விழுந்தவர் போலானர். வாஸ்தவத்தில் தன்மகன் இவ்விதம் கூறுவானென்று சிறிதும் அவர் எதிர்பார்க்கவில்லை. ஞானசேகரனே, தன் கலியாணத்தைப்பற்றித் தன் தகப்பனர்

தன் அபிப்பிராயத்தைக்கேட்க, தன் மாமன் மகளையே தனக்கு விவாகம் செய்வதாக முன்னமேயே ஏற்பாடா யிருந்தமையால், அதன் பிரகாரமே நடக்குமென்று மேற் கண்டபடி தன் தந்தையிடம் வணக்கமாகக் கூறினான். இப் பொழுது தன் தகப்பனார் தான் கேட்டகேள்விக்குப் பதில் சொல்லாமலிருக்கவே தனக்கு வேறு பெண்பேசித் தீர்மா னித்திருப்பாரோ என்று அப்பொழுதுதான் அவன் மனத் தில் புலப்பட்டது. உடனே அவன் தன் தந்தையை நோக்கி, "ஏனப்பா! பெண் யார்? குணசுந்தரம் தானே என்று நான் சொன்னதும் நீங்கள் என் அவ்வாறு தயங்கி னீர்கள்? அப்படியானால் வேறு ஒரு பெண்ணையா எனக்கு விவாகம்செய்யப் பேசியிருக்கிறீர்கள். குணசுந்தரம் அல் லவா? உண்மையைக் கூறலாகாதோ? நீர் தயங்கவேண்டிய விஷயமென்ன?" என்றான்.

சுந்தரமையர்:—ஞானசேகரா! உன் மாமனோ ஏழை, நம்முடைய அந்தஸ்திற்குச் சிறிதும் பொருந்தாதவன். அவனுடைய பெண்ணை நீ காதலித்திருப்பதாக நீ கூறுவது எனக்கு மிகவும் மனவருத்தத்தை யுண்டுபண்ணுகிறது. நானோ கும்பகோணத்தில் பிரசித்திபெற்ற வக்கீலான இராமசுவாமி ஐயருடைய பெண்ணை உனக்கு விவாகம் செய்வதாகப்பேசி வந்திருக்கிறேன். அவர்களும், உன் அழகிலும் குணத்திலும் ஈடுபட்டு, பெண்தருகிறோமென்று வாக்களித்திருக்கிறார்கள். அவர்கள் சொன்னசொல் தவ றார்கள். அப்பெண்ணோ மிகவும் அழகுடையவள். ஸ்கூ லில் வாசித்துக்கொண் டிருக்கிறாள். அப்பெண்ணைவிட குணசுந்தரம் எவ்விதம் மேம்பட்டவளாவாள். அவள் சிறிதே கல்வி கற்றிருக்கிறாள். மேலும் இராமசுவாமி ஐயர் வரதக்ஷிணையாக ஐயாயிரம் ரூபாய் தருகிறேனென்று கூறி யிருக்கிறார்கள். இவ்விதம் குணசுந்தரத்தின் தந்தை

வரதக்ஷிணை கொடுப்பானே: ஒருக்காலும் கொடுக்க வியலாதவன். அவனுடைய பெண்ணையோ நாம் கொள்வது. உனக்கு அப்பெண்ணே பொருந்தினவள். ஞானசேகரா! நான் உனக்கு அதிகம் கூறவேண்டியதில்லை. நான்தான் அவர்கள் பெண்ணை விவாகம் செய்துகொண்டேனென்றால் உனக்கும் நான் அவ்வித அந்தஸ்துக்குறைவான இடத்திலா பெண்ணை விவாகம் செய்வேனென்று நீ நினைத்திருந்தாய். அவ்விதம்செய்ய நான் ஒருக்காலும் சம்மதியேன். நீயும் இதற்கு இணங்குவாய் என்றே கருதுகிறேன். உன் சம்மதமெப்படி? என்றார்.

அதற்கு ஞானசேகரன்:—தந்தையே! தங்களுடைய வார்த்தையை நான் மறுக்கக்கூடா தென்பது நியாயமேயெனினும் நான் ஒரு விஷயமாத்திரம் தங்களிடம் அறிவித்துக் கொள்ளுகிறேன். அஃது என்னவெனில், நானே தங்கள் மைத்துனன்மகளாகிய குணசுந்தரத்தின் பேரில் காதல்கொண்டிருக்கிறேன் என்பது தாங்களு மறிந்தது தான். மேலும் 'நானே அவளைக் கலியாணம் செய்து கொள்வதாக வாக்குறுதியும் செய்திருக்கிறேன். அப்படியிருக்க, இப்பொழுது நீங்கள் கூறுவதற்கு நான் இணங்குவேனாகில் நான் செய்துகொடுத்த வாக்குறுதியி னின்றும் தவறி, அசத்தியவானாகக் கருதப்படுவேன். மேலும் நீங்கள் கூறுகிறபெண்ணே, அற்பசகவாச முள்ளவளென்றும், துர்நடத்தை யுள்ளவளென்றும் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்பெண்ணின் தந்தையாகிய இராமசுவாமி ஐயர் பிரபல வக்கில் என்பது யாவரு மறிந்ததே. அவருடைய அந்தஸ்து நம்மைவிடப் பதின்மடங்கு மேலானது. ஆனால் ஏழைகளிடத்தில் பெண்ணைக் கொள்ளவேண்டும், தனவந்தர் வீட்டில் பெண்ணைக் கொடுக்கவேண்டும். அப்படி நடந்தால் நாயகனுக்கேற்ற பணிவிடையை நாயகி கவனித்துச் செய்

வாள். தந்தையே நான் சொல்லுவதைக் கேளுங்கள். இராமசுவாமி ஐயர் சம்மந்தம் நமக்கு வேண்டாம். பேசாமல் குணசுந்தரத்தையே விவாகம் செய்யும்படியான ஏற்பாட்டைச் செய்யுங்கள். இதுவே நான் கூறவேண்டியது. பிறகு தங்களிஷ்டம் எப்படியோ அப்படிச் செய்யுங்கள்.

சுந்தரமையர் அதுகேட்டு "ஞானசேகரா நீயும் வரவரக் கெட்டுவிட்டாற்போ லிருக்கிறது. என்னுடைய வார்த்தைக்கு எதிர்பேசாதவன், இப்பொழுது என்னுடன் எதிர்த்து வார்த்தையாடத் துணிந்துவிட்டா யல்லவா? இது கலிகாலக் கோலம்போலும்; எனக்குத் தெரியாத யோசனை நீ ஒன்றும் கற்றுக்கொடுக்க வேண்டாம். நான் எல்லா யோசனையும் செய்துதான் பெண்பேசி யிருக்கிறேன். உனக்கு அப்பெண்ணை விவாகம் செய்து கொள்ள விருப்பமா? இல்லையா; நான் இதுவே உன்னைக் கேட்கவேண்டிய கேள்வி" என்று கோபமாகச் சொன்னர். அதுகேட்ட ஞானசேகரன்; "தந்தையே நான் நியாயத்தைத் தெரிவித்தேனே யொழிய வேறொன்றுமில்லை. அதற்காக மன்னிக்கவும். உங்களிஷ்டப்பிரகாரமே யாவும் செய்யலாம். அதற்கு நான் கடமைப்பட்டவனாகி யிருக்கிறேன்" என்றதும் சுந்தரமையர் ஞானசேகரனை வெளியில் அனுப்பிவிட்டு இராமஸ்வாமி ஐயருக்கு ஓர் கடிதம் வரையலானார்.

---

## அத்தியாயம் 4

### பெண்கள் சம்பாஷணை

கும்பகோணம் மேலவீதியில் பல வீடுகளின் மத்தியில் ஓர் மாளிகை வெகு உன்னதமாயும், உயரமாயும், வெகு அழகாயும், மூன்றடுக்குடையதாயும், சலவைக் கற்களால்

தூண்கள் நிறுத்தி, வெண்சாந்துபூசி, வெகு வெண்மையா யும், மிகு வழவழப்பாயும், பார்ப்பவர்களுக்கு நாகரீக மாயும், ரமணீயமாயும் கட்டப்பட்டிருந்தது.

இவ்வழகிய மாளிகையின் எதிரில் ஓர் நாள் சாயங் காலம் சுமார் 6-மணிக்கு நாணயமான ஒரு கோச்சுவண்டி வந்து நின்றது. அவ்வண்டியிலிருந்து கம்பீரமாக ஒருவர் கீழிறங்கி அம்மாளிகையினுள் நுழைந்தார். உடனே அங்கிருக்கும் அறைக்குட்சென்று தான் அணிந்திருந்த, கோட், ஷர்ட், முதலியவைகளைக் களைந்துகொண்டிருந்தார். இவர்தான் முந்திய அத்தியாயத்தில் சுந்தரமையர் அறி வித்த ஹைகோர்ட் வக்கீல் இராமசுவாமி ஐயர். இவர் உடைகளைக் களைந்துகொண் டிருக்கும்பொழுதே இவ ருடைய குமாரத்தியான குலசேகரி கையில் ஓர் கடிதத் துடன் அவ்வறையில் நுழைந்தாள். அவளைக் கண்டதும் இராமசுவாமி ஐயர், "குழந்தாய்! அது என்ன கடிதம்" என்று வினவினர்.

குலசேகரி அவரைப்பார்த்து "அப்பா! இது தங் களுக்குத்தான் வந்திருக்கிறது. நீங்கள் வீட்டைவிட்டுப் போன சிறிது நேரத்திற்கெல்லாம் தபாற்காரன் கொண்டு வந்து கொடுத்துப்போனனென்று என் தாய் தெரிவித் தாள். இதன் நாலுபுறமும் மஞ்சள் தடவியிருக்கிறதே! இது எதாவது கலியாணகடிதமாக யிருக்குமோ? உடையுங் கள் பார்ப்போம்" என்று தன் கையிலிருந்த கடிதத்தை இராமசுவாமி ஐயரிடம் அளித்தாள்.

அவரதை வாங்கிப்பிரித்து உள்ளிருந்த கடிதத்தை எடுத்துச் சிறிதுநேரம்வரையில் வாசித்துவிட்டு "ஆ! இது சுந்தரமையர் எழுதியிருக்கிறர். உன் கலியாண விஷயத் தைப்பற்றியே எழுதி யிருக்கிறர். இதோ இதை நீயே வாசித்துப்பார்" என்று கூறி, கடிதத்தைக் குலசேகரியி

னிடம் கொடுத்தார்! குலசேகரி, தன் கலியாணத்தைப் பற்றிய கடிதம் என்றவுடன், வெகு ஆவலாய் அக்கடி தத்தைவாங்கி அடியிற் கண்டவாறு வாசிக்கலானாள்.

திருவையார்

க்ஷேமம் சித்திரை மீ 8உ

ம-ா-ா-ஸ்ரீ இராமஸ்வாமி ஐயரவர்களுக்கு அநேக நமஸ்காரம். க்ஷேமோபரி, நான் தங்களிடம் நேரில் பேசி வந்த பிரகாரம் விவாகத்தை நடப்பித்து விடலாமென்று தீர்மானித்திருக்கிறேன். அதிகம் நாள் தாமதிக்காமல் இந்த மாதத்திலேயே ஓர் தேதியைத் தீர்மானித்து, அத் தேதியிலேயே விவாகத்தை நடத்திவிட வேண்டுமென்பது எனது எண்ணம். தங்களுடைய சௌகரியங்களை யோசித்து ஓர் தேதியை நியமிப்பதே மேன்மையாகும். வரதக்ஷிணை விஷயத்தில் நாம் நேரில் பேசியபடியே சம்மதிக்கிறேன். எல்லாவிஷயங்களுக்கும் நான் இன்னும் இரண்டொரு நாட்களில் அவ்விடம் வருகிறேன். மற்ற விஷயங்களை நேரில் பேசிக்கொள்ளலாம்.

இங்ஙனம்

சுந்தரையர்.

இக்கடிதத்தை வாசித்ததும் குலசேகரிக்கு ஆனந்தம் பொங்கிற்று. தனக்குக் கூடியசீக்கிரம் விவாகமாகப் போகிறதைப்பற்றி அவள்கொண்ட சந்தோஷம் சொல்லி முடியாது. அடங்கா மகிழ்ச்சியுடன் தன் தந்தையை நோக்கி, "அப்பா! இதில் என் விவாகத்தைப்பற்றித்தான் எழுதியிருக்கிறது. முன்வந்து பேசிப்போனவரே அவர் தானே எழுதியிருக்கிறார்? ஏதோ நீங்களிருவரும் வர தக்ஷிணை விஷயத்தைப்பற்றிப் பேசியிருப்பதாகவும், அவ ரதற்குச் சம்மதிப்பதாகவும் எழுதியிருக்கிறாரே; வர தக்ஷிணை எவ்வளவு பேசி முடித்திருக்கிறீர்கள்? சீக்கிரத்

தில் கல்யாண தேதியை வைத்துக்கொள்ள உங்களுக்குச் சம்மதந்தானே?'' என்று இரண்டு மூன்று கேள்விகளைக் கேட்டாள்.

இராமசுவாமி ஐயர்:— குலசேகரி! நீ இவ்விதம் பல கேள்விகளைக் கேட்டால் எல்லாவற்றிற்கும் உடனே பதில் சொல்ல எனக்குப் பல வாய்களில்லை யாதலால் ஒவ்வொன்றாய்க் கூறுகிறேன், சாவதானமாய்க்கேள். அதாவது, நாலைந்து நாட்களுக்குமுன் வந்திருந்த சுந்தரமையர் என்பவரே இக்கடிதத்தை எழுதியிருக்கிறார். அவருடைய குமாரனை ஞானசேகரன் என்பவனுக்கே உன்னைக் கலியாணம் செய்யவேண்டுமென்று கேட்டார். நானும் அதற்குச் சம்மதித்தேன். ஏனென்றால், அந்தச் சிறுவன் மிகவும் நேர்மையான நன்னடக்கை யுடையவன். மேலும், அவன் இவ்வருஷம் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறியிருக்கிறான். அவனுக்கே உன்னை நான் விவாகம் செய்ய வேண்டுமென்னும் எண்ணத்தால் வரதக்ஷிணைரூபாய் ஐயாயிரம் கொடுக்கிறேனென்று சம்மதித்தேன். நானதைப் பற்றிச் சிறிதும் கவலைகொள்ளவில்லை. எப்படியும் உன்னை அச்சிறுவனுக்கு விவாகம்செய்து பார்க்கவேண்டு மென்பதே என் அபிப்பிராயம். அக்கலியாணமும் சீக்கிரத்திலேயே நடைபெறவேண்டும். அதில் எனக்குப் பூரண சம்மதமே. உனக்கும் இவ்விஷயம் சம்மதந்தானே?

குலசேகரி:—ஆஹா! எனக்கும் சம்மதந்தான். ஆனால் மாப்பிள்ளை முகலக்ஷணமாகயிருப்பார் அல்லவா? அப்படியிருந்தால் தான் என்மனம் சந்தோஷமடையும்; அது உங்களுக்குத் தெரிந்ததுதானே.

இராமசுவாமி ஐயர்:—ஆம்! ஆம்! அது எனக்குத் தெரியும். நானதை யறியாமலா பேசி முடிப்பேன். அச்சிறுவன் மிகவும் அழகுடையவன். மேலும் அவன் நன்

ருகப் படித்து, பரீக்ஷையில் முதல்தரமாகத் தேர்ச்சி யடை யும் சாமர்த்தியமும் அவனிடம் அமைந்திருந்தது. நல்ல கூர்மையான புத்தியுடையவன். எல்லாம் யோசித்துத் தானே இந்த வரதக்ஷிணை ரூபாய் ஐயாயிரத்திற்குச் சம் மதித்தேன். இல்லாவிடில் இவ்வளவு பெருந்தொகை யார் கொடுப்பார்கள்? உன்னுடைய அதிர்ஷ்ட பாக்கியமே நீ அச்சிறுவனைப் புருஷனாக அடையப்போவது.

இவ்வார்த்தைப்பேசி முடிந்ததும் அவரவர்கள் இராப் போஜனமுண்டு தம்தம் படுக்கையில் சயனித்தார்கள். இரவுமுழுதும் குலசேகரிக்குச் சரியான தூக்கம் பிடிக்க வில்லை. தன் கலியாண சம்பந்தமான கனவுகளையே கண்டு விழித்துக்கொள்வாள். இவ்வாறாக இராப்பொழுது கழிந் தது. காலையில் இராமசுவாமி ஐயர் சிற்றுண்டி அருந்தி விட்டுச் சரியாக ஒன்பது மணிக்கெல்லாம் கோர்ட்டிக்குப் புறப்பட்டார். அவர் மனைவியாகிய சேஷம்மாள் மத்தி யான போஜனத்திற்காகவேண்டிய சாமான்களைச் சமை யற்காரர்களுக்கு எடுத்துக் கொடுத்துக்கொண்டிருந்தாள். அன்று புதன்கிழமையாயிருந்தும் எக்காரணத்தினாலோ பள்ளிக்கூடத்தில் விடுமுறையா யிருந்தமையால், குலசே கரி தனிமையில் ஓர் நாவலை வாசித்துக்கொண்டிருந்தாள். திடீரென்று அவளுக்கு ஓர் யோசனை உதிக்கவே அப்புஸ்த கத்தைக் கீழே வைத்துவிட்டுத் தன் சினேகிதைகளான எதிர்விட்டுப் பிச்சம்மாளையும் அடுத்தவீட்டு நஞ்சம்மா ளையும் கூட்டிவந்து பொழுதைப் போக்கலாமென்று அழைத்துவந்தாள். அவர்களிருவரும் குலசேகரியின் வய துடையவர்களே யாயினும் குலசேகரியைவிட வினய மாகப்பேசும் திறமை அவர்களிடம் உண்டு. அவர்கள் சிறுவயதினராக யிருந்தாலும்; எல்லாம் அறிந்தவர்களைப் போலவே வார்த்தையாடுவார்கள். இவர்கள் சிறிதும்

நன்னடக்கை யில்லாதவர்களென்பது அவர்கள் வார்த்தையினின்றும் தெற்றெனை விளங்கும். இவர்களுடன் சகவாசம் செய்யும் குலசேகரிக்கு அவர்களுடைய குணம் படிவது சகஜமல்லவா? குலசேகரி அவர்களிருவரையும் கூட்டிவந்து தன்னறையில் உட்காரவைத்துத் தானும் உட்கார்ந்து வார்த்தையாடலானாள்.

பிச்சம்மாள்:—(நஞ்சம்மாளைப் பார்த்து) இன்று என்ன ஆச்சரியமா யிருக்கிறது? நாவல் ஒன்றும் சுகமானதாயில்லையோ? அதனால்தான் நம்மை அழைத்து வந்து விட்டாள் குலசேகரி. இல்லாவிடில் இவ்வறையிலேயே படித்தவண்ண மிருப்பாளே!

நஞ்சம்மாள்:—ஆம்! ஆம்! அதற்குச் சந்தேகமென்ன? ஏதாவது நல்ல நாவலாக அகப்பட்டு விட்டால் போதுமானது. பிறகு குலசேகரியைப் பார்ப்பதும் அருமையாய்விடும். இன்று ஏதோ நீகூறுவதுபோல் நாவல் ஒன்றும் அகப்படவில்லைப்போ லிருக்கிறது. அதனால் தான் நம்மை அழைத்துவந் திருக்கிறாள். இல்லாவிடில் நம்மைத் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டா ளல்லவா?

குலசேகரி:—நஞ்சம்மா! நானப்படி ஒன்றும் உங்களை அலக்ஷியம் செய்யவில்லை. அதோ நான் படித்துக்கொண்டிருந்த புஸ்தகமும் இருக்கிறது. உங்களை அழைத்துவந்தது எதற்கெனில், பொழுதைப் போக்குவதற்கே யன்றி வேறொன்றுமில்லை. ஆனால், இப்பொழுது உங்களிடம் ஓர் சந்தோஷ சமாசாரம் அறிவிக்கிறேன். அது என்னவெனில், என் விவாகத்தைப்பற்றியதேயாகும். திருவையாற்றில் சுந்தரமையர் என்ற ஒரு பணக்காரர் இருக்கிறார். அவருடைய மகனுக்கு என்னை விவாகம் செய்வதாகத் தீர்மானமா யிருக்கிறது. மாப்பிள்ளை மெட்ரிக்குலேஷன் பரீக்ஷையில் தேரியிருக்கிறாராம்; நல்ல அழகுடையவராம்.

இதைக்கூறவே உங்களை முக்கியமாக அழைத்துவந்தேன், இந்தச் சமாச்சாரத்தைப்பற்றி உங்களுக்குச் சந்தோஷந்தானே ?

நஞ்சம்மாள்:—என்ன, என்ன! உனக்குக் கலியாணமா? ஆஹா! அந்தச் சமாச்சாரத்தைக் கேட்கவும் சந்தோஷப் படுகிறோம். ஆனால், ஒருவிதத்தில் சஞ்சலத்தையுண்டுபண்ணுகிறது. அது என்னவெனில், நீ கலியாணமானவுடன் எங்களைவிட்டுப் பிரிந்துவிடுவாயல்லவா? எப்படியும் உன் கலியாணவிமரிசையைப் பார்ப்பதே எங்களுக்குப் பரமசந்தோஷம்.

பிச்சம்மாள்:—(நஞ்சம்மாளைப் பார்த்து) ஆம்! ஆம்! நீ கூறுவது சரியே; என்றைக்கிருந்தாலும் ஒரு நாளைக்குக் குலசேகரி நம்மைவிட்டுப் பிரியவேண்டியவளே. நாமும் ஒருநாளைக்குக் குலசேகரியைவிட்டுப் பிரியவேண்டியவர்களே. அதற்காக நாம் விசனப்படுவதில் பிரயோசனமில்லை. குலசேகரி ! உன் கலியாணத்தைப்பற்றி எப்பொழுது பிரஸ்தாபமாயிற்று? தீர்மானமே ஆய்விட்டதா?

குலசேகரி:—ஆமாம் ! தீர்மானம் ஆய்விட்டது. நாலைந்து நாட்களுக்குமுன் மேற்சொன்ன சுந்தரமையர் என்பவர் இவ்விடம் வந்திருந்தார். அவரும் என் தகப்பனாரும் பேசியே தீர்மானம் செய்தார்களாயினும் சுந்தரமையர் தன் ஊருக்குப்போய்ச் சிறிது யோசனை செய்துகொண்டு முடிவான தீர்மானத்திற்கு லெட்டர் எழுதுகிறேனென்று கூறிப்போய் விட்டார். நேற்றையதினம் தான் அவருடைய லெட்டர் வந்தது. அதில் அவர்கள் பேசிய தீர்மானப்படியே விவாகத்தை நடத்திவிடலாமென்றும், ஆனால், கலியாண தேதியைச் சீக்கிரத்திலேயே வைத்துவிடவேண்டுமென்றும் எழுதி யிருந்தார். என் தகப்பனாரும் அதற்குச் சம்மதித்தார். எப்படியும் இக்கலியாணம் ஒரு

மாதத்திற்குள் நிறைவேறுமென்று யோசிக்கிறேன்.

பிச்சம்மாள்:—அப்படியானால் நீ விவாக மானவுடன் ஸ்கூலுக்கு வரமாட்டாயல்லவா? கலியாணம் முடிந்தவுடன் எங்களையும் லக்ஷியம் செய்யமாட்டாய். முடிவாக எங்களை அடியோடு மறந்துவிடுவா யல்லவா?

நஞ்சம்மாள்:—பிச்சம்மா! குலசேகரி கலியாணம் செய்துகொண்டவுடன் தன் ஆசைநேசனைக் கவனிப்பாளே யொழிய நம்மைத் திரும்பிக்கூடப்பாரராள். ஸ்கூலுக்கு வருவதும் சந்தேகமே. போகட்டும்; எப்படியாவது குலசேகரி தன் காதலனுடன் கூடிக்குலாவி சுகித்திருக்கப் போவதைப்பற்றி நமக்கு மிகவும் ஆனந்தத்தை விளைவிக்கின்றனதல்லா? அதுவே நாம் வேண்டிக் கொள்வது.

பிச்சம்மாள்:—ஆம்! ஆம்! குலசேகரி நம்மைக் கவனிக்காவிடினும் தன் காதலனைக் கவனித்து அவனுடன் சந்தோஷமாய் இஷ்டபோகங்களை அனுபவித்துக் காலங் கழித்தால் அதுவே நமக்குத் திருப்திகரத்தை யுண்டு பண்ணும். குலசேகரியே தன் புருஷன் அழகுடையவன் என்று கூறுவதால் அவனிடம் இவளுக்கு விருப்பமிருக்கிறது என்று தோன்றுகிறதல்லவா? அழகுள்ள மாப்பிள்ளையிடம் தானே அன்பாயிருப்பாள். அவனைக்கவனித்து அச்சந்தோஷத்தில் நம்மை மறந்துவிடுவாள் என்பது சகஜந்தானே?

குலசேகரி:—நீங்களிருவரும்சேர்ந்து என்னைப் பரிகாசம் செய்கிறீர்கள். எனக்குக் கலியாணமானால் உங்களை ஏன் மறக்கவேண்டும். கலியாணத்திற்கும் உங்களை மறப்பதற்கும் என்னசம்பந்த மிருக்கிறது, பிச்சம்மா! நீ கூறுவது மிகவும் அசம்பாவிதமாகும். இனி அவ்விதம் கூறாதே. நீ கூறியவார்த்தைகள் என் மனத்தை வருத்துகிறது. உங்களைப் பிரிந்து வாழ்வதைப் பார்க்கிலும், இக்

கலியாணத்தையே வேண்டாமென்று மறுத்து விடுவேன்.

பிச்சம்மாள்:—குலசேகரி! நீ இப்பொழுது சிறுபிள்ளைத்தனமாகக் கூறுகிறாய். எங்களை முன்னிட்டு உன் கலியாணத்தை மறுப்பது சுத்த மூடத்தனமாகும். உனக்கு விவாகமானவுடன் ஒரு வருஷமோ அல்லது இரண்டுவருஷமோ கழித்து உன் புருஷன் வீட்டிற்குப் போகவேண்டுமேயொழிய இவ்விடமே வசிக்கமுடியாது என்பது உனக்கும் தெரிந்ததுதான். உன்னைப்போலவே நாங்களும் அவரவர்கள் கணவன்வீடு செல்லவேண்டியதுதான். அப்பொழுது நாம் ஒருவர்க்கொருவர் அடிக்கடி சந்திக்க முடியாதல்லவா? ஆதலால் நீ எங்களை முன்னிட்டு உன் கலியாணத்தை மறுத்துவிட முயற்சிக்காதே. நாங்கள் இப்பொழுது கூறிவந்ததெல்லாம் விளையாட்டுக்கேயன்றி வேறொன்றுமில்லை. உனக்குக் கலியாணம் நடக்கவேண்டுமென்றுதானே நாங்கள் எதிர்ப்பார்ப்பது. அதற்காக நீ விசனப்படுவது உன் குற்றமேயாகும்.

குலசேகரி:—நான் வேறொன்றுக்கும் வருத்தப்படவில்லை. உங்கள்பிரிவை நினைத்தால் தான் மனதிற்கு சஞ்சலத்தை யுண்டுபண்ணுகிறது. இன்னும் இரண்டு வருஷமோ அல்லது ஒருவருஷமோதான் நாம் சேர்ந்திருப்பதெல்லாம். பிறகு, அவரவர்கள் புருஷன்வீட்டை யடைய வேண்டியதுதா னல்லவா?

நஞ்சம்மாள்:—அதிலும் சந்தேகம் வேண்டுமோ. அவரவர்களின் கணவன்வீட்டை யடையாமல் இவ்விடமே வசிப்பதோ மேன்மை? எப்படியும் நமக்குப் புருஷன் வீடுதானே சதம்.

பிச்சம்மாள்:—ஏன்? நாம் நமது வீட்டிலேயே வசித்தால் ஆகாதோ. வேண்டுமானால் நமது புருஷன் வீட்டிற்கு வருகிறான். நாம் அவர்கள் வீட்டிற்குப் போகவேண்டு

மென்று எந்த சாஸ்திரம் கூறுகிறது. அதெல்லாம் பூர்வ வழக்கம். முன்காலத்தில் பெண்கள் கலியாணம் செய்து கொண்டு புருஷன் வீடடைந்ததும், அவ்வீட்டிலுள்ள வேலைகள் அனைத்தையும் அவளே மாடுபோல் உழைத்துச்செய்ய வேண்டுமென்று திட்டம் செய்வார்கள். அப்பெண்களும் அவ்விதமேசெய்து மிருக்கிறார்கள். போதாக்குறைக்கு, மாமி நாத்திகள் கொடுமைகளையும் சகித்திருக்கிறார்கள். இஃது எவ்வளவு அறியாமை யாகும்! ஒரு பெண்பிள்ளை எவ்வளவு கஷ்டங்களை அனுபவிப்பாள்? அவ்வளவு கஷ்டங்களை அனுபவிக்கிறவள் தன் புருஷனுடன் சிறிது சந்தோஷமாகப் பேசிவிட்டால் போதும், உடனே எமதூதர்களைப் போல் மாமி நாத்திகள் வந்து கண்டபடதூஷித்து, "உன் புருஷனுடன் சம்பாஷிக்க இதுதான் நேரம்போலிருக்கிறது. செய்யவேண்டியவேலைகள் அப்படியே யிருக்கின்றன. அந்த வேலைகளை இன்னும் சரிவரச்செய்யவில்லை. அதற்குள் உன் புருஷனுடன் குலாவப் போய்விட்டாயா?" என்று வைது, தங்கள் கைகள் சலிக்கும் வரையிலும் அடிப்பார்கள். அந்தோ! இது எவ்வளவு பரிதாபம். அப்பெண்ணும் இவைகளையெல்லாம் அனுபவித்தே இறக்கிறாள். நாமெல்லாம் அவ்விதம் இருக்கச் சாத்தியப்படுமோ, ஒருக்காலும் முடியாதல்லவா?

நஞ்சம்மாள்:—அடேயப்பா! அவ்விதமிருக்க யாரால் முடியும். பேதைப் பெண்கள்தான் அவ்விதம் கஷ்டப்படுவார்கள். நம்மையெல்லாம் அவ்விதம் கண்டிக்கமுடியுமா? நாமே மாமி நாத்திகளுக்கு வேலைகொடுப்போமே. நம்மிடமா அவர்களின்கொள்கை பலிக்கும்? ஒருக்காலும் அவர்களுடைய அதிகாரம் செல்லாது. முன்னிருந்த பெண்களெல்லாம் தங்க ளறியாமையாலேயே கஷ்டப்பட்டார்கள். நாமும் அவர்களைப்போல் கஷ்டப்படுவோமா?

ஒருக்காலுமில்லை. நம்மாலும் அவ்விதம் கஷ்டப்பட முடியாது. அவ்விதம் நம்மைக் கஷ்டப்படுத்தினால் நம்முடைய வீடு யிருக்கவே இருக்கிறது. வேண்டுமானால் நீகூறியவாறு நமதுபுருஷன் நம்முடைய வீட்டிற்கு வருகிறான். இப்பொழுது ஜட்ஜ் இராமனாதய்யர் மகள் இராஜாம்பாள் புருஷன், தன் மாமனார் வீட்டிலேயே வசிக்கவில்லையா? அதுபோல் நாமும் நம்முடைய புருஷனுடன் நமதுவீட்டிலேயே இருந்தாலென்ன?

பிச்சம்மாள்:—ஆஹா! தடையில்லாமல் அவ்விதமே செய்யலாம். அறியாமையாலேயே பெண்கள் புருஷன் வீட்டிற்குப் போகவேண்டுமென்று கூறுகிறார்கள். இப்பொழுது எவ்வளவோ பெயர்கள் தங்கள் மருமகனைத் தமது வீட்டிலேயே வரவழைத்து வைத்துக்கொண்டு, தங்கள் புத்திரிகளுடன் சந்தோஷமாகக் காலத்தைக் கழிக்கிறார்கள். அவர்களெல்லாம் தெரியாமலா அவ்விதம் செய்கிறார்கள்.

குலசேகரி:—பிச்சம்மா! நீ கூறுவது வாஸ்தவமேயாயினும் அது நியாயத்திற்குப் பொருந்தாது. பெண்களே புருஷன்வீட்டிற்குப் போகவேண்டுமே யன்றி புருஷன் பெண்வீட்டில் வசிப்பது நியாயமல்ல. அவ்விதம் பெண்வீட்டில் வசிக்க சம்மதிப்பவர்களும் அதிகம்பேர் இருக்கமாட்டார்கள். சில ஏழை மாப்பிள்ளைகளே தங்கள் மாமனார் வீட்டில் வசித்தால் கஷ்டமின்றி காலத்தைக் கழிக்கலாமெனக் கருதி, தங்கள் தாய் தகப்பனார் கஷ்டப்படுவதையும் கவனியாமல், தங்கள் மாமனார் வீட்டிலேயே வசிக்கிறார்கள். நஞ்சம்மாள்கூறிய ஜட்ஜ் இராமனாதய்யருடைய மருமகன் ஏழையென்பது உனக்கும் தெரிந்ததே. அவனுடைய படிப்பிற்காகவேண்டியே இராமனாதய்யர் தமது மகளை அவனுக்கு விவாகம்செய்வித்து அவனைத்தமது

வீட்டிலேயே வைத்துக்கொண்டு வக்கீல்வேலைக்கு ஏற்பாடு செய்கிறார். சிலர், ஏழையாயிருந்தாலும் தங்கள் மாமனார் வீட்டில் வசித்தால் கௌரவக் குறைச்சலாகுமென்று எவ்வித கஷ்டம் நேரிட்டாலும் தங்கள் வீட்டிலேயே வசித்து வருகிறார்கள். அதுவே மேன்மையாகும். இதனாலேயே அறிந்தவர்கள், மாப்பிள்ளைமார்கள் மாமனார் வீட்டிற்குச் சென்றால் ஒரு நாளைக்குமேல் இருக்கப்படாது என்று கூறுகிறார்கள்; அது உண்மையே. ஏனெனில், "பழகப் பழகப் பாலும் புளிக்கும்" என்றபடி, மாப்பிள்ளை முதல் நாள் போனவுடன் மாமனார்வீட்டில் செய்யும் மரியாதை வெகு தடபுடலா யிருக்கும். மறுநாள் அதில் கால்பாகம் இருப்பதும் அரிதுதான்.

பிச்சம்மாள்:—இந்த நியாயமெல்லாம் கர்னாடககாலத்தில் தான் பொருந்தும். இப்புது நாகரீக காலத்தில் சற்றும் பொருந்தாது. நீ வேண்டுமானால் முன்காலத்தைப் போல நடந்துகொள். நாங்கள் அவ்விதம் மாமியார் வீட்டில் மாடுபோல் உழைக்க எங்களால் முடியாது. நீ அவ்விதம்தானே செய்யப்போகிறாய்?

குலசேகரி:—பிச்சம்மா! நீ கூறுவதன் அர்த்தமென்ன? புருஷன்வீட்டிற்குச் சென்று வேலைகள் செய்யாமல் பின் என்னசெய்வது?

நஞ்சம்மாள்:—பிச்சம்மா! குலசேகரியோ மிகவும் படித்தவள். இதற்காகத்தான் நம்மை அழைத்துவந்தாள் போலும். இனி நாம் இவளுடன் சேர்ந்திருப்பது தகாது. போதும் இவளுடைய சினேகம், எழுந்திரு. குலசேகரி! நீ உன் இஷ்டப்பிரகாரம் உன் புருஷன்வீட்டில் நன்றாக உழைத்து நல்லவள் என்று பெயரெடு. நாங்கள் ஒன்று மறியாதவர்கள். எங்களுடன் நீ சேர்ந்திருந்தாலும் கூட உனக்குக் கெட்டபழக்கம் ஏற்பட்டுவிடும். ஆதலால் நாங்

கள் செல்லுகிறோம். என்று கூறி நஞ்சம்மாளும் பிச்சம்மாளும் எழுந்திருந்தார்கள்.

இதைக்கண்ட குலசேகரி உடனே எழுந்திருந்து அவர்களைப் பிடித்து உட்காரவைத்து, "நஞ்சம்மா! நீ என்ன இவ்வளவு கோபங்கொள்ளுகிறாய்? நானவ்விதமே நடப்பேனென்று கருதினாய்? நீ என்னகூறுகிறாய்ப் பார்ப்போம் என்று அவ்வாறு சொன்னேன், அந்த அநாகரீகத்திற்கு நானா கட்டுப் படுபவள்! ஒருக்காலுமில்லை. இதற்குள் நீ கோபித்துக்கொண்டு புறப்பட்டு விட்டாயே" என்றுகூறி தானும் அவர்கள் பக்கத்தில் அமர்ந்தாள்.

நஞ்சம்மாள்:—நீ அவ்விதம் கூறியது எனக்கு மிகவும் கோபத்தை யுண்டாக்கிவிட்டது. அதனால்தான் எழுந்து விட்டேன். என்னுடன் சிநேகமா யிருப்பவர்கள், என் விருப்பப்படி யிராவிட்டால் நான் அவர்களுடன் சேரவே மாட்டேன். அது என்சுபாவ குணமாகும். அவ்விஷயம் போனால்போகிறது, இன்றையதினம் சாயங்காலத்திற்கு சினிமாவுக்குப் போகவேண்டும்: என்ன கூறுகிறாய்?

குலசேகரி:—ஆஹா! தடையில்லாமல் போகலாம். நீ சொல்லி நான் புறப்படாம லிருந்ததுண்டா? இன்றைய தினம் கட்டாயம் சினிமாவுக்குச் செல்வோம். இப்பொழுது என்ன ஆட்டம் நடக்கிறது; நோட்டீஸ் பார்த்தாயா?

நஞ்சம்மாள்:—ஓ! நான் அதைப் பார்க்காமலா உன்னை யழைப்பேன். இப்பொழுது பிரசித்திபெற்ற எடிபோலோ ஆக்ட்செய்யும் "காப்டன் கிட்" என்னும் 31 பாகங்கள்கொண்ட பெரியகதையின் முன் தொடர்ச்சி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இக்காக்ஷி நமக்கு மிகவும் ஆனந்தத்தை விளைவிக்கும் என்பதை நான் உனக்கு அறிவிக்கவேண்டியதில்லை யல்லவா?

குலசேகரி:—ஆம்! ஆம்! எனக்குத்தெரியும். எடி போலோ ஆக்ட் மிக்க நேர்மையானது. இதற்கு நாம் அவசியம் செல்லவேண்டும். பிச்சம்மா! உனக்கு ஏதாவது ஆக்ஷேபனையுண்டா?

பிச்சம்மாள்:—இல்லை யில்லை; எனக்கென்ன ஆக்ஷேபனை யிருக்கிறது? நீங்களிருவரும் புறப்படும்பொழுது எனக்கு என்ன ஆக்ஷேபனைநேரிடினும் நானதைச் சிந்திக்க மாட்டேன்.

என்றதும் பிச்சம்மாளும் நஞ்சம்மாளும் குலசேகரியிடம் விடைபெற்றுக்கொண்டு தங்கள் வீடடைந்தார்கள்.

---

## அத்தியாயம் 5

### அற்பசகவாசம் பிராணசங்கடம்

மாலை சுமார் நாலுமணிக்கெல்லாம், குலசேகரி நாணயமாக உடுத்திக்கொண்டு, தன் தகப்பனாரிடம் விடை கேட்டாள். அவர் யாதொரு ஆக்ஷேபனையும் கூறாமல் விடைகொடுத்ததும், தன் சினேகிதையான நஞ்சம்மாள் வீட்டிற்குச்சென்றாள். அங்கு நஞ்சம்மாளும் பிச்சம்மாளும் உடுத்திக்கொண்டு புறப்படத் தயாரா யிருந்தார்கள். குலசேகரியைக் கண்டதும் அவர்கள் சந்தோஷமடைந்து "ஆ! குலசேகரி! வந்துவிட்டாயா? ஏது இவ்வளவு சீக்கிரத்தில் புறப்பட்டுவிட்டாய்? நாங்கள் இப்பொழுது தான் உன் வீட்டிற்கு வரலாமென்று யோசித்தோம். நல்லவேளையாக நீயே வந்துவிட்டாய்; மிகவும் சந்தோஷம். உன் தகப்பனாரிடம் விடைபெற்றுக் கொண்டாயல்லவா?" என்று வினவினார்கள்.

குலசேகரி:—ஆஹா! விடைபெற்றுக் கொள்ளாமலா வருவேன். நல்லவேளையாக இன்று என் தகப்பனார் மத்

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR-623 106

தியானத்திற்குமேல் எங்கும் வெளிச்செல்லாமல் வீட்டிலேயே இருந்தமையால், சீக்கிரம் விடைபெற்றுக்கொண்டு வர அநுகூலமாயிற்று. இல்லாவிடில் என் தாயிடம் விடை கேட்டால் அவள் ஏதாவது தடங்கல்செய்து தான் பிறகு விடைகொடுப்பாள். என் தகப்பனர் அப்படியல்ல, நான் போய் விடைகேட்டவுடன் யாதொரு தடையுங்கூறமல் விடைகொடுத்துவிடுவார். அதனுல்தான் நான் இவ்வளவு சிக்கிரம் புறப்படநேர்ந்தது. இல்லாவிடில் இன்னும் சற்று நேரமாகு மல்லவா?

பிச்சம்மாள்:—ஆம்! ஆம்! இன்னும் சற்று நேரமாகுமென்று கூறுவானேன். இன்னும் அரைமணி நேரமாகும் என்பதில் தடையில்லை. நான் மூன்றரைமணிக்கே உடுத்திக்கொண்டு என் தகப்பனரிடம் விடைகேட்டேன். அதற்கு அவர் மறுத்தாராயினும் நான் கேளாமல் என் தாயிடம் கூறிவிட்டு இவ்விடம்வந்தேன். அப்பொழுதுதான் நஞ்சம்மாள் உடுத்திக்கொள்ள ஆரம்பித்துக்கொண் டிருந்தமையால் நானும் இவ்விடமே தங்கினேன். இப்பொழுதுதான் நஞ்சம்மாள் புறப்படத் தயாரானமையால் நாங்க ளிருவரும் புறப்பட்டு உன் வீட்டிற்கு வரலாமென்று புறப்படும் சமயத்தில் நீயே வந்துவிட்டாய். சரி; புறப்படுங்கள், மணி ஆகிறது''

என்றதும், மூவரும் புறப்பட்டு, கடைத்தெருவிற்கு வந்தார்கள். அங்கு ஓரிடத்தில் ஒருவன் கையில் ட்ரம் வைத்துக்கொண்டு அடித்துக்கொண் டிருந்தான். அவனெதிரிலுள்ள பெரிய கட்டடத்தில் யாவரும் பார்க்கும் வண்ணம் பெரிய எழுத்தில் "கமலா சினிமா" என்று ஆங்கிலத்தில் வரையப்பட்டிருந்தது. எங்குப்பார்த்தாலும் எலக்ரிக் லைட்டுகள் விளங்கின. அநேகம்பேர்கள் டிக்கட் வாங்கிக்கொண்டு உள் நுழைந்தார்கள். குலசேகரியும் அவள்

சிநேகிதைகளும் சற்று முன்னடியே சென்றுவிட்டமை யால், சிரமமின்றி ஆளுக்கு ஒரு முதல்வகுப்பு டிக்கட் வாங் கிக்கொண்டு உள்நுழைந்தார்கள். நுழைந்ததும் ஸ்திரீ கள் உட்காரும்படியான இடத்திற்குச்சென்று, வசதியான இடம்பார்த்து அவரவர்கள் தங்கள் தங்கள் ஆசனத்தில் அமர்ந்தார்கள்.

இக்கமலாசினிமாவென்பது இவ்வூருக்குவந்து இரண்டு வருடங்களே ஆயின. இச்சினிமாவின் தலைவரான மோஹனதாஸ் என்பவர் பம்பாய் தேசத்தினர். நல்ல செல்வம் வாய்ந்தவர். இவர் முதல் முதலில் இந்தக் கும்ப கோணத்திற்கு வந்ததும், சினிமா கம்பெனி ஸ்தாபிக்கலா மென்று எண்ணம் தோன்றினமையால் உடனே ஓர் காலி நிலத்தைச் சொந்தமாக விலைக்குவாங்கி, கட்டிடம் கட்டி, அதில் சினிமா கம்பெனியை ஸ்தாபித்தார். முதலில் அவருக்கு அதில் சிறிது நஷ்டம் ஏற்படினும் பிறகு சரி யான இலாபம் கிடைத்ததென்றே கூறலாம். இந்த இரண்டு வருடகாலத்திற்குள் தாம் செலவழித்தபணம் பூரா வும் சம்பாதித்துவிட்டார் இப்பொழுது இவர் இதில் அதிக லாபகரமானபொருள்கள் அடைந்தமையால் இக்கம் பெனியை இவ்விடத்திலேயே எப்பொழுதும் இருக்கும்படி திட்டம் செய்துவிட்டார். தினமும் இரண்டுமுறை 6-30-க் கும் 9-30-க்கும் ஆட்டங்கள் நடைபெற்றன. இஃதல்லா மல் ஞாயிறு, புதன் கிழமைகளில் மாலை 4-45-க்கு ஸ்பெஷல் ஆட்டமும் நடைபெற்றது. இப்பொழுது நமது கதாநாயகியாகிய குலசேகரியும் அவள் சிநேகிதை களும் சென்றது, இந்த ஸ்பெஷல் காக்ஷியாகிய 4-45 மணி ஆட்டமே. இவர்கள் தங்கள் ஆசனத்தில் அமர்ந்த கால்மணி நேரத்திற்கெல்லாம் ஆட்டம் ஆரம்பிக்கப் பட் டது. சாயங்காலமானதால் கதவுகளெல்லாம் சாற்றித்

தாளிடப்பட்டன. பிரசித்திப்பெற்ற எடிபோலோ ஆக்ட் செய்த "காப்டன் கிட்" என்ற 31-பாகங்கொண்ட பெரிய கதையின்மூன் ஆறுபாகம் மாத்திரம் காண்பிக்கப்பட்டது. ஆட்டம் ஆரம்பித்து ஒருமணிநேரமாயிற்று. எடிபோலோவின் ஆக்டை கண்ணுற்ற ஜனங்களெல்லாம் ஆனந்தமடைந்து, ஆரவாரம்செய்துகொண் டிருந்தார்கள். மூன்று பாகம் முடிந்து நாலாவதுபாகம் ஆரம்பிக்கப்பட்டது.

அச்சமயத்தில் திடீரென எலக்ரிஸிடி நின்று விட்டமையால் ஆட்டமும் நிறுத்தப்பட்டது. ஜனங்கள் எல்லோரும் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். எலக்ரிக் லேட்டுகளெல்லாம் அணைக்கப்பட்டமையாலும், கதவுகள் தாளிடப்பட்டிருந்தமையாலும் உள்ளே இருள் சூழ்ந்து கொண்டது. இச்சமயத்தில் அங்கு அமர்ந்திருந்த ஜனங்களின் மத்தியிலிருந்து சில துஷ்டவாலிபர்கள் தங்களிருப்பிடத்தைவிட்டு ஸ்திரீகள் அமர்ந்திருந்த இடத்திற்குச் சென்று ஆரவாரஞ்செய்ய ஆரம்பித்தார்கள். இதனால் ஸ்திரீகளெல்லாம், ஐயோ! ஐயோ! என்று கூச்சலிட்டார்கள். குலசேகரியின் சிநேகிதைகளான நஞ்சம்மாளும் பிச்சம்மாளும். குலசேகரியைத் தனிமையில் விட்டுவிட்டு எங்கோ மறைந்துகொண்டார்கள். குலசேகரியோ அத்துஷ்டர்களுக்குப் பயந்து தன் பக்கத்திலிருந்த தன் சிநேகிதைகளைப் பார்த்தாள். அவர்களைக் காணாமையால் மிகவும் பயந்து தான் உட்கார்ந்திருந்த நாற்காலியின் அடியில் ஒளித்துக்கொண்டாள். அப்பொழுது அத்துஷ்டர்கள் செய்யும் கோலாகலத்தில் அந்நாற்காலி இடிபட்டுக் குலசேகரியின் தலைபில்தாக்கி, அவளை மிகவும் வருத்தியது. வரவர ஜனங்களின் கூச்சல் அதிகமாயிற்று. இன்னும் சிறிதுநேரம் கதவு திறக்கப்படாமலிருந்தால் கதவை

உடைத்துக்கொண்டு ஜனங்கள் வெளிவருவார்கள்போ லிருந்தது. அநேசமயம் பட்டுரென்று எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டன. ஜனங்களெல்லாம் வெளிவந்தனர். அநேகர் தாங்கள்பட்ட கஷ்டத்தை மானேஜரிடம் அறிவித் தனர். அவர் அதைப்பற்றி இனி அதிக ஜாக்கிரதையாக இருக்கிறோம். இனி இவ்விதம் நடவாது என்று கூறினர். இதுநிற்க, குலசேகரி நாற்காலியின் அடியில் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் கதவு திறக்கப்படவே வெகு சிரமத்துடன் வெளியில்வந்தாள். வந்ததும் தன் சினேகிதைகளைப் பார்த்தாள். அவர்களைக்காணுமையால் வெளிவரும் ஜனங்களில் ஒவ்வொருவரையும் கவனித்துக் கொண்டிருந்தாள். அவர்களோ மிகவும் அதைரிய முடைய வர்களானதால் அத்துஷ்டர்கள்செய்த அட்டஹாசத்தைக் கண்டு மிகவும் பயந்து குலசேகரியைவிட்டுப் பிரிந்து, படம் காட்டும் வெள்ளைத்திரையின் பின்புறம்போய் ஒளித் துக்கொண்டார்கள். பிறகு எல்லாஜனங்களும் வெளிச் சென்றபிறகு வெளியில் வந்தார்கள். வெளியில் நின்று தங்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் குலசேக ரியைக் கண்டதும், "ஆ! நீ எங்களை எதிர்பார்த்துக் கொண்டா நிற்கிறாய்? நீ வீட்டிற்குப்போயிருப்பாய் என் றல்லவோ நினைத்திருந்தோம்" என்றார்கள்.

குலசேகரி:—நன்றாய்க் கூறினீர்கள். உங்களை விட்டு நான் தனியாய்ச் செல்வேனே? உங்களைத்தான் எதிர்பார்த் துக்கொண் டிருக்கிறேன். நீங்கள் எவ்விடம் சென்று விட்டீர்கள்?

நஞ்சம்மாள்:—அத்துஷ்டர்கள் கலவரம் செய்யவே உண்மையில் நாங்கள் மிகவும் பயந்து படம்காட்டும் திரை யின் பின்புறம்போய் ஒளித்துக்கொண்டோம். நாங்கள் செல்லும்பொழுது உன்னைப்பார்த்தோமே; நீ எங்குச்

சென்றிருந்தாய்?

குலசேகரி;—நானும் அச்சண்டாளர்களுக்குப்பயந்து ஓர் நாற்காலியின் அடியில் ஒளித்துக்கொண்டேன். அப்பொழுது ஒருவன் கால்பட்டு அந்நாற்காலி விழுந்து என் மண்டையில் பலத்தகாயம் பட்டுவிட்டது. நான் அவ்வேதனையை சகித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் கதவு திறக்கப்பட்டதும், வெளியில்வந்து உங்கள் வரவையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நீங்களும் வந்துவிட்டீர்கள்; வாருங்கள் வீட்டிற்குச் செல்லலாம்.

என்று கூறினதும் மூவரும் வீட்டைநோக்கிப் புறப்பட்டு, சுமார் கால்மணிநேரத்தில் அவரவர்கள் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். வக்கீல் இராமசுவாமி ஐயர் தன்மகளுக்கு நேர்ந்த கஷ்டத்தைப்பற்றிப் பெரிதும் வருந்தினர். அந்தோ! இது என்ன மதியீனம். ஒருபெண்ணை அவள் இஷ்டப்பிரகாரம் எவ்விடத்திற்கும் தனிமையில் புருஷர் துணையின்றி அனுப்புவதின் குற்றத்தைப் பெரிய பட்டப்பரீக்ஷையில் தேரிய இவர் உணரார்போலும். அதனாலேயே முதலில் குலசேகரியை சினிமா பார்க்கப்போவதற்கு அனுமதிகொடுத்துவிட்டு இப்பொழுது அதனால் ஏற்பட்ட கஷ்டத்திற்கு வருந்துகிறார். இது சுத்த முழுமூடத்தனம் என்பதை நாம் கூறவும் வேண்டுமோ? நிற்க, நஞ்சம்மாள் பிச்சம்மாள் போன்ற தோழிகள் குலசேகரியுடன் சேர்ந்திருக்கிற பரியந்தம் டிராமா பயாஸ்கோப் முதலிய கெட்ட நடவடிக்கைகளை விடமாட்டாளென்பது திண்ணம். அதைப் பெற்றோர்களன்றோ கண்டிக்கவேண்டும். நாம் எழுதுவதனால் என்ன பிரயோஜனம்? நாகரீகப்பேயன்றோ இவர்களையெல்லாம் கெடுக்கிறது.

---

# அத்தியாயம் 6

## கன்னிகையின் துயரம்.

கதிரவன் மேற்கடலில் ஆழ்ந்து சுமார் மூன்றுமணி நேரமாயிற்று. பக்ஷி சாதிகளெல்லாம் தங்கள் தங்கள் கூடு களை யடைந்து அவற்றின் பேடுகளுடன் கூடிக்களித்துக் கொண்டிருந்தன. மதியும் மதிகலங்கி புறப்படும் நேரம் தவறியும் யாதுகாரணத்தாலோ இன்னும் வெளிவரவில்லை. நக்ஷத்திரங்களெல்லாம் மேகத்தால் தடைபட்டு ஆங்காங்கு ஒன்றிரண்டு சிதறிக் கிடந்தன. இது சமயம், தஞ்சாவூர் ராஜவீதியிலுள்ள ஓர் சிறு வீட்டில் விளக்குக ளெல்லாம் அணைக்கப்பட்டு, சந்தடியில்லாமலிருந்தது. அவ்வீட்டி லுள் ளோர் யாவரும் நித்திரை புரிந்தனர். ஆனால் அவ்வீட்டின் ஓர் அறையில் மாத்திரம் சிறு விளக்கொளி பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவ்வறை சுமார் பன்னிரண்டடி சதுர முள்ள ஓர் சிறு அறையே. ஆயினும், அவ்வறை நாணய மாகவும் நாகரீகமாகவும், படங்களாலும் விசித்திர மணிக ளாலும் சிங்காரிக்கப்பட்டிருந்தன. காற்றுப்போக்கு வரத் துக்காக ஓர் அழகிய சாளரம் அமைக்கப்பட்டிருந்தது. சுவற்றில் ஓர் அலமாரி புதைக்கப்பட்டிருந்தது. அறைபி னுள் இரண்டு மூன்று நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. இவ்வறையின் மத்திய பாகத்தில் ஒரு மஞ்சத்தின் பேரில் ஓர் அழகிய கன்னிகை சயனித்திருந்தாள். அவளுக்குச் சுமார் பதின்மூன்று வயதிருக்கும். அவள் முகத்தை உற்று நோக்குங்கால் பக்குவமடையாத சிறு கன்னிகையே என்று காணப்பட்டது. ஆயினும் அவள்முகம் சந்திரனைப் போல் பிரகாசித்தது. அவளுடைய நீண்ட கூந்தலோ கரிய மேகத்தைப் பழித்தது. மூன்றும் பிறையை நிகர்த்த புருவ மும், வேலாயுதத்தை யொத்த கண்களும், முத்து வரி

சையை நிகர்த்த பற்களும், தங்கக்கிண்ணங்களோ என ஐயுறும் தனமும், உடுக்கை யொத்த இடையும், வாழைத்தண்டை யொத்த கைகளும், ஆடவரை வெகு எளிதில் மயங்கும்படி செய்யும் தன்மையி லிருந்தது. ஆனால், அவளுடைய முகம் வாடின தாமரை மலர்போ லிருக்கும் காரணம் தான் தெரியவில்லை. தூக்கம் பிடிக்கவில்லை யாதலால் படுக்கையில் புரண்டுகொண் டிருந்தாள். அவள் மனதில் துயரம் குடிகொண் டிருப்பதை அவள் முகம் தெள்ளென விளக்கிற்று. கடைசியாக அவள் மஞ்சத்தைவிட்டு எழுந்து உட்கார்ந்துகொண்டு, ஓ! கடவுளே! என்னை ஏன் இவ்விதம் சோதிக்கிறாய்? இது உண்மைதானா? அந்தோ! இது உண்மையாயின் என்கதி யென்னவாகும்? ஆ! இவ்விதம் நடக்குமென்று நான் சிறிதும் நினைக்கவில்லை. அந்தோ! காதலா! நீரும் இதற் குடன்பட்டுவிட்டீ ரல்லவா? ஆ! அப்படியாயின் நீர் என்பேரில் காதல் கொண்டேனென்றது பொய்யேயாகும். என்னிடம் கூறிய வார்த்தை யெல்லாம் ஆசை வார்த்தையேயொழிய ஒரு வார்த்தையாவது உள்ளன்புடன் கூறிய வார்த்தை யல்லவென்பது இப்பொழுதன்றோ வெள்ளிடைமலைபோல் விளங்குகிறது. ஆ! ஆடவரை நம்பலாகாது என்பதை இப்பொழுதுதான் நான் உணர்ந்தேன். ஆம் அது மெய்யே, இல்லாவிடில் அவர் நம்மிடம் கூறிய உறுதி வார்த்தையைக் கைவிடுவாரா? உண்மையுள்ள புருஷனாயிருந்தால், தான் கூறிய உறுதி வார்த்தையைக் கைவிடாரல்லவா? அந்தோ! நான் என்ன சுத்த முழு மூடத்தனமாக வாயில் வந்ததெல்லாம் பிதற்றுகிறேன். அவரா உண்மையில் தவறக்கூடியவர். ஓ! ஒருக்காலும், அவரை அசத்தியவான் என்று கூறமுடியாது. நாம் அவருடன் சிறுவயதிலிருந்தே பழகியிருந்தும் இப்பொழுது வந்திருக்கும் கடிதத்தால் அவர்மேல் குற்றம்

சாட்டுவது நம்முடைய மூடமதியே யாகும். அவர் கூறிய வார்த்தையைச் சிறிதும் கைவிடாரென்றாலும் அவருடைய தகப்பனாராலேயே அவர் கூறிய வார்த்தையினின்றும் தவறும்படி ஏற்படுகிறது. அந்தோ! அவர் தகப்பனார் ஏன் நம்மை மருமகளாக ஏற்றுக்கொள்ளமாட்டேன் என்கிறார்? ஆ! இதுவும் நம்முடைய துரதிர்ஷ்டமே. ஓ! கடவுளே! எல்லாம் உமது செயலன்றோ? நடக்கிறபடி நடக்கட்டும்'' என்று விசனத்துடன் கூறி அங்கிருந்த அலமாரியைத் திறந்து ஓர் கடிதத்தை எடுத்தாள். பிறகு விளக்கைச் சிறிது தூண்டிவிட்டு மஞ்சத்தின் பேரில் உட்கார்ந்து பின் வருமாறு அக் கடிதத்தை வாசிக்கலானாள்.

திருவையார்

சித்திரை மீ 28உ

''சிறஞ்சீவி குணசுந்தரத்திற்கு நினது அன்பைச் சிறிதும் அடையப் பெறாத துர்ப்பாக்கியனான உன் காதலன் எழுதியது. இப்பவும் நான் மிகவும் சகிக்க முடியாத துயரத்தில் அழுந்தப்பட்டவனாயிருக்கிறேன். அஃது எவ்வித துயரம் என்பதை நீ யறிய ஆவல்கொள்வாய். அந்தோ! அதை உன்னிடம் கூறுவதற்கு என் மனம் நடுங்குகிறது. ஆயினும் எப்படி யிருந்தாலும் அவ்விஷயத்தை உன்னிடம் கூறியே தீரவேண்டி யிருப்பதால் முடிவில் மனந்துணிந்தே வெளியிடுகிறேன். இதை முற்றிலும் வாசித்து முடிந்ததும் என்னை வெறுப்பாய் என்பது திண்ணம். அது என் குற்றமன்று. இதற்கெல்லாம் காரணம் என் தகப்பனாரே யாவார். அவர் என் செய்வார்? அவர்மேல் குற்றம் கூறுவது சிறிதும் பொருந்தாது. எல்லாம் நம்முடைய ஊழ்வினைப்பயனே யாகும். காதலீ! இவ்விதச் சஞ்சலத்திற்கெல்லாம் காரணம் என்னவென்பதை இனி வெளியிடுகிறேன். அது என் விவாகத்தைப் பற்றியதே யாகும்.

ஆனால் என் மனம் அதற்குச் சற்றும் இடந்தர மாட்டே னென்கிறது. ஆ! உன்னிடம் கூறிய உறுதி வார்த்தையி னின்றும் தவறி அசத்தியவா னாக்கப்பட்டேன். அந்தோ! நான் உன்னை இழக்கும்படியான துரதிர்ஷ்டசாலியுமா னேன். ஆ! நான் என்ன செய்வேன்? என் தகப்பனார் பணத்திற்காசைப்பட்டு, என் மனதிற்குச் சற்றும் பிடித்த மில்லாத ஓர் பெண்ணை எனக்கு மணமுடிப்பதாக நிச்சயித் திருக்கிறார். அப் பெண்ணின் நடவடிக்கைகளை விசாரித் தறிந்ததும் என் மனம் பட்டபாடு கடவுளே யறிவார். சிறிதும் நன்னடக்கையுள்ளவளாகத் தெரியவில்லை. இதை யெல்லாம் என் தகப்பனாரிடம் அறிவித்து நம்முடைய விவாகத்தைப் பற்றியும் எவ்வளவோ எடுத்துரைத்தேன். அவர் பணத்தையும் கௌரவத்தையும் கருதினரே யொழிய நான் கூறினதைச் சிறிதும் செவியேற்கவில்லை. இது நமது துரதிர்ஷ்டம்தான். நாமிருவரும் கூடிக்களிப்பது கடவு ளுக்கே சம்மதமில்லைபோலும். அந்தோ! உன் பிரிவை நினைக்கும்பொழுது என்மனம் அனலிலிட்ட மெழுகுபோல் உருகுகிறது. முடிவாக நாமிருவரும் பிரிக்கப்பட்டோம். கடந்துபோன விஷயத்தைப்பற்றிச் சிந்திப்பதில் சிறிதும் பிரயோஜனமில்லை. இனி நான் உனக்கு ஓர் சகோதரனே யாவேன். இனி நானும் உன்னை என் உடன் பிறந்த சகோ தரி போலவே பாவிப்பேன். நீயும் அவ்விதமே கருத வேண்டும். அந்தோ! குணசுந்தரம்! நான் உன்னிடமளித்த உறுதிமொழியை வெகு தாழ்மையுடனும் மிகு விசனத்துட னும் திருப்பி வாங்கிக்கொள்ளுகிறேன், என்பதை யறிவிக்க நான் மிகவும் வருந்துகிறேன். வருந்தி என் செய்வது? கடவுள்செயல் அவ்வித மிருக்கும்பொழுது நம்மாலாவது என்ன யிருக்கிறது. நடந்த விஷயத்தைப்பற்றிப் பன்னிப் பன்னிப் பேசுவதால் யாது பிரயோஜனம்? நிற்க, எனக்குச்

கூடிய சீக்கிரத்தில் விவாகம் முடிந்துவிடும்போலிருக்கிறது. அதற்கு உன் தகப்பனுருக்கு அழைப்புச் சீட்டு வரும். அப்பொழுது நீயும் உன் தகப்பனுருடன் கூட வருவா யென்றே நம்புகிறேன். நீ உன் மனதிற்கிசைந்த வேறொரு அன்பனிடம்கூடி, என்றும் சுக ஜீவியாக வாழவேண்டுமாய் நான் என் முழு மனதுடன் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்

உன் அன்பை என்றும் மறவாத

ஞானசேகரன்.

இக்கடிதத்தை முழுதும் வாசித்து முடிந்ததும் அவள் மனம் துடித்தது. தேகமெங்கும் குபீரென்று வியர்வை பொழிந்தது. கைகள் நடுக்கலுற்றன. சிறிதுநேரம் வரை யில் பிரமை பிடித்தவள்போ லிருந்தாள். பிறகு மனந் தெளிந்து அக்கடிதத்தை இன்னும் இரண்டு மூன்றுமுறை திருப்பித்திருப்பி வாசித்தாள். அவள்மனம் நிலைகொள்ள வில்லை. பயித்தியம் பிடித்தவளைப்போல் அக்கடிதத்தை மஞ்சத்தின் பேரிலேயே வைத்துவிட்டு எழுந்து அவ்வறை யில் உலாவலானுள். அதேசமயம் கதவுதிறக்கப்பட்டதும் ஒருவர் அவ்வறையினுள் நுழைந்தார். அவருக்குச் சுமார் முப்பதுவயதிருக்கும். சிறிது குட்டையானவர். ஆனல் தேககாந்தியுடையவராயும் அழகினராயும் காணப்பட்டார். அவருடையமுகம் மிகவும் தீக்ஷண்யமான பார்வையை விளக்கிற்று. இவரைக்கண்டதும் அக்கன்னிகை திடுக்கிட்டு, அப்பா! நீங்களா? என்று அலறினுள்.

இப்பொழுது வந்தவர்தான் திருவையாற்றில் வசிக்கும் படியான சுந்தரமையரின் மைத்துனர். இவர் பெயர் மணி மந்திரமையர் என்று யாவரும் அழைப்பார்கள். சகல சாஸ்திரங்களையும் கற்றவர். ஆனல் இக்காலத்திற்கேற்ற நாகரீகமான ஆங்கிலக்கல்வியை கற்காதவர். திரிகால

ஸ்நான முடையவர். நியமநிஷ்டையிற் சிறந்தவர். இவருக்கு அருமையான புத்திரியாகிய குணசுந்தரம் என்ற ஒரேபெண்தான். ஆதலால் அப்பெண்ணை மிகவும் அருமையாக வளர்த்துவந்தார். அப்பெண்ணை யாராவது தூஷித்தால் போதுமானது, அவர்களிடம் சண்டைக்குப் போய் விடுவார். அவ்விதசெல்வமாக வளர்த்துவந்த காலத்தில் தன் தங்கையின் புத்திரன் ஞானசேகரனுக்கே தன் புதல்வியை விவாகம் செய்வதாகத் தீர்மானித்திருந்தார். அதற்கேற்றப்போல் அவர்களிருவருமே மிகு அன்யோன்யமாக இருப்பதைக் கண்டதும் அவர்கொண்ட ஆனந்தத்திற்கு அளவில்லை. நிற்க, மணிமந்திரமையர் இன்றையதினம் நித்திரை செய்துகொண் டிருக்கும்பொழுதே தன் குமாரத்தியின் அறையில் ஆள் உலாவுவதுபோல் அரவம் கேட்கவே உடனே எழுந்திருந்து யாதொரு தடையுமின்றிக் கதவைத் திறந்துகொண்டு உள் நுழைந்தார். இவரைச் சிறிதும் எதிர்பாராமலிருந்த இவருடைய குமாரத்தியான குணசுந்தரம் என்ற அக்கன்னிகை திடீரென்று தன் தகப்பனர் தன்னறையில் நுழையவே, அவ்விதம் "அப்பா! நீங்களா?" என்று வினவினின்றுள்.

மணிமந்திரமையர்:—ஆமாம்! நீ ஏன் இன்னும் நித்திரைசெய்யாமல் இவ்விதம் உலவிக்கொண்டிருக்கிறாய்? உன் முகம் வாட்டமடையக் காரணம்யாது? இதை யறியவே நானிவ்விடம் வந்தேன். குணசுந்தரம்! உன்மனம் வருந்தும்படியாக யாராவது எதையாகிலும் கூறினார்களோ? அவ்விதமிருப்பின் நானதை உடனே கண்டிக்கிறேன். அதற்காக இவ்விதம் இரவில் நித்திரைசெய்யாம லிருந்தால் உடம்பு அசௌக்கியமடையாதோ? உன் நித்திரையைப் பங்கப்படுத்தக்கூடிய எவ்வருத்தமாயினும் என்னிடம் உடனே அறிவி. அதற்கு நான் தகுந்தபடி கண்டிக்கி

றேன், என்று கூறினர்.

குணசுந்தரம்:—தந்தையே! என்னை யாரும் ஒன்றும் கூறவில்லையாயினும் என் வருத்தத்திற்குக் காரணம் தெரிவிக்கிறேன். அஃது இக்கடிதத்திலுள்ள விஷயமே; அதை நீங்களே வாசித்தறிந்துகொள்ளுங்கள் என்று மஞ்சத்தின்பேரிலிருந்த கடிதத்தை எடுத்துத் தன் தந்தையிடமளித்தாள்.

அவரதைவாங்கிச் சிறிதுநேரம்வரையில் உற்றுநோக்கி வாசித்தார். முழுமையும் வாசித்து முடிந்ததும் அக்கடிதத்தைக் கீழேவைத்துவிட்டு, பெருமூச்செறிந்து "ஆ! இஃதென்னமோசமாயிருக்கிறது. நானிவ்விதம் நடக்குமென்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அந்தோ! அவன் மிகவும் நல்ல சிறுவன். அவனை அவன் மனதிற்குப் பிடித்தமில்லாதபடி ஓர் காரியத்தை நடத்தும் அவன் தந்தையும் தந்தையாவரோ? ஆ! இஃதென்ன கொடுமை? நாம் அதைப்பற்றி இனி சிந்திப்பதில் பயனில்லை. நம்முடைய காரியத்தை நடத்துவதுதான் சரி, என்று தனக்குள் கூறிக்கொண்டு, குணசுந்தரத்தை நோக்கி, உனக்கு இக்கடிதம் எப்பொழுது கிடைத்தது என்று வினவினர்.

குணசுந்தரம்:—இன்று காலையில்தான் கிடைத்தது.

மணிமந்திரவையர்:—சரி; இதைப்பற்றிக் காலையில் பேசிக்கொள்வோம். நீ உன் படுக்கையில் படுத்து நிம்மதியாகத் தூங்கு. மனதில் விசனத்தை வைத்துக்கொண்டு நித்திரைசெய்யாமலிராதே, கடவுள்விட்டபடி யாகட்டும். நானும்போய் நித்திரைசெய்கிறேன் என்று கூறி அவ்வறையைவிட்டு வெளியில் சென்றார்.

---

## அத்தியாயம் 7

### கதாநாயகியின் கலியாணம்.

சுந்தரமையர் வக்கீல் இராமசுவாமி ஐயருக்கு லட்டர் எழுதின மறுமாதத்திலேயே விவாகத்திற்கு வேண்டிய முயற்சியெடுத்து முடிவில் வரதக்ஷிணை ரூபாய் ஐயாயிரமும் பெற்றுக்கொண்டு, வெகு விமரிசையாக ஞானசேகரனுக்கும் குலசேகரிக்கும் விவாகத்தைச் செய்துமுடித்தார். கலியாணத்தில் ஞானசேகரன் சிறிதும் சந்தோஷமாயிருந்ததாகக் காணப்படவில்லை. அவன் முகம் பெரிதும் வாட்டமடைந்திருந்தது. அவன் கலியாணம் செய்துகொள்ளும் பொழுதெல்லாம் கனவில் நடப்பதாகவே கருதினன். பிறகு மனந்தெளிந்து தன் காதலியை நினைந்துருகுவான். அந்தோ! என்னபரிதாபம்! பணத்தின் நிமித்தம் ஒருவனுக்குச் சற்றும் மனதிற்கு ஒவ்வாத ஓர் காரியத்தைச் செய்யத் தலைப்படுவது எவ்வளவு மூடத்தனம். பணத்தின்பேராசையன்றே அவ்விதம் செய்யும்படி தூண்டிற்று? என்னே பணத்தின்மகிமை? பணத்தினல் மனிதனுக்குச் சுகமும் துக்கமும் இருக்கிறது. அதில் பணத்தையே சதமென்று நம்பி, அதனை அடையும் வழியையே சதா சிந்தித்துக்கொண்டிருப்பவன் என்றைக்கும் மீளாத கவலையுடையவனுகின்றுன். அந்தோ! இவனைத்தான் பேராசைப்பேயன் என்று எல்லோரும் அழைப்பார்கள். இவ்வித பேராசைப் பேயன் ஒருகாலத்தில் இறப்பானுகில் அவனுடைய திரண்ட ஆஸ்திகள் ஒருவரும் அறியாவண்ணம் எங்கோ புதைக்கப்பட்டுக் கிடக்கிறது. அவனும் அதை அடைவதற்கு மனம்வாராமல் பிறர்க்கும்கொடுக்க மனம்வாராமல் இறக்கும்பொழுதும் ஒருவருக்கும் அறிவிக்காமலே இறப்பானுகில் அவனுடைய மூடமதியை நாம் என்னென்று

கூறுவது. பிறகு எக்காலத்திலோ யாருக்கோ அப்பொருள் கிடைத்து அவனதை அநுபவிக்கிறான். இவ்விதமே ஒருவன் வெகு பாடுபட்டுச் சேர்த்துவைக்கும் திரவியம், இன்னொருவன் அதைச் சிரமமின்றிச் செலவழித்துக் காலம் கழிக்கிறான். இதை நாம் நம்முடைய கண்ணெதிரிலேயே பார்க்கிறோம். இதுநிற்க,

விவாகமான மறுவருடத்திலேயே குலசேகரி புஷ்பவதியானாள். புஷ்பவதியான அடுத்தவருஷம் வெகு சிறப்புடன் வக்கீல் இராமசுவாமி ஐயர் ஸ்ரீதனம் ஏராளமாய்ப் பெண்ணுக்களித்துச் சாந்திக்கல்யாணத்தை நடத்தினார். அதிக உல்லாசமாக இரண்டு வருடங்கள் கழிந்தது. ஞானசேகரனோ குலசேகரியை ஏறெடுத்தும் பாராமலிருந்தான் அவனுக்குக் குலசேகரியின் நடவடிக்கையில் பெரிதும் வெறுப்புண்டாயிற்று. அவளுடன் பேசுவதையே விட்டுவிட்டான். குலசேகரியோ சிறிதும் நாணமின்றி யாராயிருந்தாலும் அவர்களுடன் சிறித்து விளையாடி வார்த்தையாடுவாள். வேலைசெய்வதென்றால் அவளுக்கு மிகவும் வெறுப்பாய்விடும். யாதொருவிதமான வேலையும் கையினால் தொடமாட்டாள். அவளைப் பார்க்கவேண்டுமானால் அடுத்த வீட்டிலாவது எதிர் வீட்டிலாவதுதான் பார்க்கலாம். அவ்வீட்டுக்காரர் எவ்வளவோ கண்டித்தும் நிர்பிரயோஜனமானதைப்பற்றி யாரும் கண்டிப்பதை விட்டார்கள். ஞானசேகரனோ, குலசேகரி இருக்கிறாளா வென்றாவது, எங்கே யென்றாவது, விசாரிப்பது கிடையாது. அவன் இப்பொழுது பி. ஏ. (B. A.) வாசித்துக்கொண்டிருக்கிறான். அவனுக்கு இப்பொழுது ஓர் நண்பன் கிடைத்திருக்கிறான். அவன் பெயர் சோமசேகரன். அவனும் ஞானசேகரனைப்போலவே நன்னடக்கையுடையவன். இவர்களிருவரும் மனமொத்த நண்பர்க

ளாக காலேஜில் வாசித்து வந்தார்கள். குலசேகரி பொழு தைப் போக்குவதி னிமித்தம் அடுத்தவீட்டில்சென்று அவ் விடத்திலே பேசிக்கொண்டு பொழுதைக் கழிப்பது வழக் கம். அவ்வீட்டில் வயது முதிர்ந்த ஓர் மாதும் ஓர் இளம் வாலிபனுமே வசித்து வந்தார்கள். அம்மாதின் பெயர் பத்மாவதி. சுமார் நாற்பது வயதிற்குமேலிருக்கும்; புரு ஷனையிழந்தவள். இவளுடைய புத்திரனே அவ்வாலிபன். அவன் பெயர் கோபாலன். அவன் சிறிதும் நன்னடக்கை யுடையவனல்ல. இவன் தாயார் எவ்வளவோ பாடுபட்டுப் படிக்கவைத்தும் அவன் பள்ளிகூடம் போகாமல் நாடோ டிப் பிள்ளைகளுடன் சேர்ந்துகொண்டு, கெட்ட பழக்கங் களையே கைக்கொண்டான். அதனால் பத்மாவதியம்மாள் கொண்டவிசனம் சொல்லத்தரமன்று. இது இப்படியிருக்க, குலசேகரி பொழுதைப் போக்குவதினித்தம் இவ்விட்டிற்கு வந்து போய்க்கொண்டிருக்கும் பொழுது அவ்விட்டி லுள்ள கோபாலனிடம் சினேகம்கொண்டாள். பிறகு வரவர இருவரும் வெகு அன்புடையவரானார்கள். முடிவில் அக்கோபாலனால் குலசேகரி தன் அரிய ஆபரணமாகிய கற்பையிழந்தாள். இவர்கள் இப்படி அன்புடனிருப்பதை கோபாலனுடைய தாயார் பத்மாவதிகண்டு இவ்விஷயம் குலசேகரியின் வீட்டாருக்குத் தெரிந்தால் மனஸ்தாப மாகுமென்று குலசேகரியைத் தன் வீட்டிற்கு வரவேண்டா மென்று நிர்தாக்ஷண்யமாகக் கூறிவிட்டாள். அதிலிருந்து குலசேகரிக்கு மிகவும் மனவருத்தம் ஏற்பட்டது. கோபாலனை எப்பொழுது சந்தித்து அவனுடன் சந்தோஷ மாக வார்த்தையாடுவோம் என்று ஏங்கினாள். ஓர்நா ளிரவு கோபாலன் குலசேகரியை அவள் வீட்டுக் கொல்லையில் சந்தித்து "நாம் எங்காவதுசென்று விடலாம். அப்பொழுது தான் நமக்கு யாதொருவிதமான பயமு

மிராது. நாமும் சுகம்பெறலாம்; என்ன சொல்லுகிருய்?'' என்று வினவினன்.

அந்தோ! ஓர் ஆடவன் தன்மேல் பிரீதியுற்ற ஒரு ஸ்திரீயை தன்வசம் நடத்துவது மிகவும் எளிதன்ருே? உடனே குலசேகரி அவன் விருப்பத்திற் கிணங்கினள். அதன் பிறகு கோபாலன், நாளையிரவு இவ்விடத்திலேயே சந்திக்கிறேன்; நீ பிரயாணப்பட்டுத் தயாராய்வந்து இரு'' என்றுகூறிப் போய்விட்டான். மறுநாளிரவு குலசேகரி தன் நகைகளையெல்லாம் எடுத்து அணிந்துகொண்டு, கையில் வேண்டிமான பணத்தையும் எடுத்துக்கொண்டு யாரும் அறியாவண்ணம் கொல்லைப்புரம் வந்தாள். இதற்கு முன்னமேயே கோபாலன்வந்து காத்திருந்தமையால் உடனே இருவரும் புறப்பட்டு நடந்தார்கள். சற்றுத் தூரம் வந்ததும் அங்கோர் வண்டி நின்றிருந்தது. அத னருகாமையிற் சென்றதும் கோபாலன் குலசேகரியை நோக்கி அதில் ஏறும்படியாக சைகை காண்பித்தான். குல சேகரி ஏறி உட்கார்ந்தவுடனே கோபாலனும் வண்டியில் ஏறினன். உடனே வண்டிப்புறப்பட்டு ரயில்வேஸ்டேஷனை யடைந்தது. கோபாலன் வண்டியைவிட்டிறங்கி, திருச் சிக்கு இரண்டு முதல்வகுப்பு டிக்கட் வாங்கினன். அதே சமயம் ட்ரெயினும் புறப்படத் தயாரானமையால் வண்டிக் காரனுக்கு வாடகையைக் கொடுத்துவிட்டு இருவரும் ட்ரெயினில் ஏறினர்கள். உடனே வண்டியும் புறப்பட்டு பல ஸ்டேஷன்களில்நின்று திருச்சிக்கோட்டையை அடைந் தது. உடனே கோபாலனும் குலசேகரியும் இறங்கி ஓர் வண்டியை வைத்துக்கொண்டு ஆண்டார்வீதிக்குச் சென்ருர் கள். கோபாலன் முன்னமேயே இதற்கென ஓர் வீடு வாடகைக்குப்பேசித் தீர்மானித்திருந்தமையால் அவ்வீட் டின் அடையாளத்தை வண்டிக்காரனிடம் கூறி அவ்வீட்

டண்டை வண்டியை நிறுத்தும்படியாக உத்தரவிட்டான். வண்டிக்காரனும் அவ்விதமே அவ்வீட்டண்டை நிறுத்தினுன். உடனே கோபாலனும் குலசேகரியும் வண்டியை விட்டிறங்கி அவ்வீட்டினுள் நுழைந்தார்கள். அவ்வீட்டில் இதற்குமுன் யாரும் குடியிருந்ததில்லை. ஆதலால் அது மிகவும்பாழடைந்து கிடந்தது. ஓர் அறைமாத்திரம் கோபாலனுல் சுத்தம்பண்ணி யிருந்தமையால் அவ்வறையிலேயே இராப்பொழுதைக் கழித்தார்கள். மறுநாள் கோபாலன் இரண்டு ஆட்களைக்கொண்டு அவ்வீட்டின் மற்ற இடங்களையெல்லாம் சுத்தம் செய்யும்படி கூறினுன். அவர்க ளவ்விதமே சுத்தம் செய்தானதும் சாப்பாட்டிற்கு வேண்டிய சாமான்களை வாங்கிவந்து குலசேகரியிடம் அளித்தான். அவளும் அன்று முதல் சமையல்வேலையைத் துவக்கினுள்.

இப்படி யிருக்கக் கோபாலன் யாதொருவேலையுமின்றி குலசேகரியுடன் சுக மனுபவிப்பதிலேயே காலந்தள்ளினுன். சில வருஷங்கள் செல்லவே குலசேகரி கொண்டுவந்த திரவியமும் செலவழிந்து, தான் அணிந்திருந்த நகைகளிலும் சில அழிந்துபோகவே குலசேகரி சிறிது அச்சமடைந்து கோபாலனை ஏதாவதொரு வேலையைச்செய்யும்படி அறிவித்தாள். அவனும் ஆகட்டுமென்று கூறினுனேயொழிய வேலைக்கு வேண்டிய பிரயத்தினமொன்றும் செய்யவில்லை. இவ்விதம் நாளடைவில் பொருளெல்லாம் போய்விடவே சோற்றுக்குச் சிறிது சிறிதாக கஷ்டமேற்படத் தலைப்பட்டது. அச்சமயம் பார்த்துக் கோபாலனும் சொல்லாமல் எங்கேயோ சென்றுவிட்டான்.

இப்பொழுது குலசேகரியின் பாடு மிகவும் பரிதாபகரமா யிருந்தது. சாப்பாட்டிற்கு மிகவும் கஷ்டப்பட்டாள். அப்பொழுதுதான் குலசேகரிக்குத் தான்செய்த அடாதகாரியத்தின் உண்மை விளங்கிற்று. அந்தோ! நாம்

நமது குணத்தின் தோஷத்தினலல்லவா? இவ்வித கதிக்குள்ளானேம். நாம் செய்தகாரியம் மிகவும் மதியீனமல்லவா? "எண்ணறக்கற்று எழுத்தறவாசித்தாலும் பெண் புத்தி பின்புத்தி" தான் என்பது நம்மிடத்திலேயே விளங்கிவிட்டதல்லவா? என்று தனக்குத்தானே கூறி மனம் நொந்து கொள்வாள். என்னநொந்துதான் இனி என்ன செய்வது. "ஆடவன் இறந்தபிறகு அறுதலிக்குப் புத்திவந்தது" போல், இவள் இப்பொழுது யோசிப்பதால் யாது பிரயோஜனம். அதன் பிறகு குலசேகரி தன்னிடமிருந்த சில சில்லறை நகைகளைவிற்று அதனல் தன்னுடைய காலக்ஷேபத்தை அவ்விடத்திலேயே கழித்துவருகலானாள். இது இவ்விதமிருக்க திருவையாற்றில் என்ன நடக்கிறது என்பதைக் கவனிப்போம்.

குலசேகரி சென்றுவிட்ட மறுநாளே அவ்விஷயம் ஊர் முழுதும் பரவிவிட்டது. சுந்தரமையர் தன் மருமகள் ஓடிப்போனதை யறிந்ததும் மிகவும் வருந்தினார். அதை விடத் தன் மகனுக்கு மறுபடி பொருள்செலவுசெய்து விவாகம் செய்யவேண்டுமே என்ற கவலையே அவரைப் பெரிதும் வாட்டிற்று. ஞானசேகரன் தன் மனைவி சென்றுவிட்ட சங்கதியைச் செவியுற்றதும் தனக்கு அவமானமானதைப் பற்றி வருந்தினனேயொழிய அவள் சென்றுவிட்டதைப் பற்றிச் சிறிதும் வருந்தவில்லை. இவனைப்போலவே இவன் தாயார் சுந்தரம்மாளும் வருந்தினாள். தன் மகள் ஓடிவிட்டதை சுந்தரமையர் மூலமாயறிந்த இராமசுவாமி ஐயர் மகாகோபம் கொண்டவராய் "நீங்கள் என்மகளை அதிக ஹிம்சை செய்திருப்பீர்கள். அதனலேயே அவள் ஹிம்சை பொறுக்கமாட்டாமல் எங்காவது சென்றிருக்கவேண்டும். நீங்கள்தான் என்மகளுக்கு ஜவாப்தாரியாக வேண்டுமென்பதை கண்டிப்பாய் அறியவும்" என்று இன்னும் பல விஷ

யங்கள் எழுதிய ஓர் நீண்ட லெட்டரை சுந்தரமையருக்கு அனுப்பினார்.

இந்த லட்டரைக் கண்ணுற்ற சுந்தரமையர் "ஆ! அப்பொழுதே என் அரும்புதல்வன் வார்த்தையைக் கேளாமல் பணத்தின்பேரில் ஆசைவைத்து இத்துன்மார்க்கன் பெண்ணை நம்புத்திரனுக்கு விவாகம் செய்ததனாலல்லவோ? அவள் நம் வம்சத்திற்கு என்று மழியாத அவமானத்தை உண்டுபண்ணிவிட்டுப் போய்விட்டாள். இவன் என்னமோ "என் பெண்ணுக்கு நீதான் ஜவாப்தாரி" என்று பயங்காட்டுகிறான். ஒருவேளை கோர்ட்டில் வழக்காடினாலும் ஆடுவான். அந்தோ! முடிவில் கிணறுவெட்டப் பூதம் கிளம்பினதுபோ லாயிற்று. சிறிதுபொருளைக் கவனிக்கப் போய் என்று மழியாத அவமானம் ஏற்பட்டுவிட்டதல்லவா?" என்று துக்கித்துக்கொண் டிருக்கும்பொழுது சுந்திராம்பாள்வந்து, "என்ன யோசனை செய்கிறீர்கள்? நடந்துபோன விஷயத்தைப்பற்றித் துக்கிப்பதில் என்ன பிரயோஜனம்? அச்சனிதான் நமது குடும்பத்திற்கு என்றுமில்லாத அவமானத்தை யுண்டாக்கிவிட்டுத் தொலைந்து போயிற்றே. அதைக்குறித்து இன்னும் யோசனை செய்வானேன். அவள் தொலைந்ததே நல்லதாயிற்று. அதற்காக நீங்கள் கவலைப்பட்டுக்கொண் டிருக்கவேண்டாம். நான்தான் அப்பொழுதே கூறினேனே. ஏழைப்பேச்சு அம்பலத்திலேறுமா? அதன் பயனை இப்பொழுது அனுபவிக்கிறீர்கள். நடந்துபோனதெல்லாம் போகட்டும். இனிமேலாவது தங்கள் மைத்துனன் புத்திரி குணசுந்தரத்தை நமது புத்திரனுக்கு விவாகம் செய்யும்படியான முயற்சியைத் தேடுங்கள். அவளும் நமது புத்திரனை விவாகம் செய்துகொண்டாலன்றி வேறு புருஷனை அடையமாட்டேனென்று ஒரே பிடிவாதமா யிருக்கிறாள்" என்று கூறினாள்.

சுந்தரமையர்:—ஆம்! ஆம்! அதுதான் சரி; அதைச் செய்துவிடவேண்டியதே: உன் வார்த்தையின் உண்மையை யறியாமையாலே இவ்வித அவமானம் ஏற்பட்டுவிட்டது. நமது குமாரனும் இக்கவலையால் இளைத்துவிட்டான்; சரி, இன்றே கடிதம் எழுதிவிடுகிறேன். ஏன் சுந்தரா! குணசுந்தரம் புஷ்பவதி யாய்விட்டாளே; அவளை இனி விவாகம் செய்யலாமோ?

சுந்தராம்பாள்:—ஆஹா! தடையில்லாமல் செய்யலாம். இதுதான் முறை. முற்றும் விரோதமான பால விவாகம் செய்வதனால் எவ்வளவு கெடுதல்கள் விளைகின்றன தெரியுமா? அதையெல்லாம் யோசித்துத்தானே பால விவாகம் செய்யலாகாது என்பதைப்பற்றி ஓர் சங்கமேற்பட்டு அதில் தீர்மானமா யிருக்கிறது. அதுதான் நன்மை; எல்லோரும் அதன்படி நடந்துவிடுவார்களென்றே புலப்படுகிறது. சிலரே இதற்குத் தடைகூறிக்கொண்டு வருகிறார்கள். எல்லோருமே தடைகூறிக்கொண்டிருந்தால் ஓர் விஷயம் எப்படித்தான் பரவுவது. ஒருவர் இவ்விதம் துணிந்துசெய்தால் தானே அதைப் பார்த்துக்கொண்டு "அவன்தான் செய்தானே நாமும் அவ்விதம் செய்தாலென்ன" என்று இன்னொருவன் வெளிவருவான். இவ்விதமாகவே யாவரும் செய்வதற்கு ஹேதுவிருக்கிறது. உங்களுக்குத் தெரியாத விஷயமா நான் கூறுகிறேன்; யாவும் நீங்களறிந்ததேதான். இதற்காக யோசனைசெய்யாமல் கண்டிப்பாய் இக்காரியத்தை முடியுங்கள். அதன் பிறகு இன்னொருவர் உங்களைப் பார்த்துக்கொண்டு அவ்விதமே செய்கிறார்களா இல்லையாவென்று பாருங்கள். இதில் தாங்கள் கட்டாயம் பிரவேசியுங்கள்.

சுந்தரமையர்:—ஆமாம்! அவ்விதம் செய்வதுதான் சரி. இனி இதற்கு யாதொரு ஆக்ஷேபனையுமில்லை. கூடிய

சீக்கிரம் விவாகத்தை நடத்திவிடவேண்டியதே, என்றுகூறி சுந்தரமையர் அடியிற்கண்டவாறு லெட்டர் எழுதலானார்.

திருவையார்
வைகாசிமீ 6வ

ம-prashant-ஸ்ரீ, மைத்துனர் மணிமந்திரமையர் அவர்களுக்கு, திருவையார் சுந்தரமையர் எழுதியது. இப்பவும் இவ்விடம் அனைவரும் க்ஷேமம்; அவ்விடம் உங்கள் க்ஷேமத்தையும் உங்கள் மகள் குணசுந்தரத்தின் க்ஷேமத்தையும் அறிய ஆவலுள்ளவனு யிருக்கிறேன். என்னுடைய மருமகளான குலசேகரி ஓடிப்போனவிஷயம் நீங்கள் அறிந்திருப்பீர்க ளென்றே நம்புகிறேன். அது விஷயத்தில் நான் மிகவும் வருந்துகிறேன். ஆனால் அத்துஷ்டை இவ்வளவுடன் போனதே நன்மை. இவ்வளவிற்கும் காரணம் என்னுடைய மூடமதியினலேயே என்பது இப்பொழுது தான் புலப்படுகிறது. நாம் ஆதியில் பேசியபிரகாரம் விவாகத்தை முடித்திருந்தால் இவ்வளவுதூரம் நேர்ந்திருக்காது என்பது நிச்சயம். போனதுபோகிறது; இப்பொழுது நான் ஞானசேகரனுக்கு அவனிஷ்டப் பிரகாரம் தங்கள் குமாரத்தியை விவாகம்செய்து முடித்துவிடலாமென்று யோசித்திருக்கிறேன். நீங்கள் இதுவிஷயத்தில் மனப்பூர்வமாய் ஒத்துக்கொண்டு இக்காரியத்தை நடத்தவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,
சுந்தரமையர்.

இக்கடிதம் எழுதிமுடிந்ததும் ஓர் கவரினுள்வைத்து, தபாலில் அனுப்பிவிட்டார்.

---

## அத்தியாயம் 8

### காதலர் திருமணம்.

ஆறாம் அத்தியாயத்தின் இறுதியில் மணிமந்திரமையர் தன் குமாரத்தியான குணசுந்தரத்தை நித்திரைசெய்யச் சொல்லிவிட்டு அவ்வறையினின்றும் வெளியில் சென்றார் என்று கூறினேமல்லவா? அதன் பிறகு அவர் என்ன செய்தார் என்பதைச் சிறிது கவனிப்போம். அவர் வெளியில்சென்றதும் தன்னுடைய அறைக்குச் சென்று படுக்கையில் சயனித்தார். ஆனால் அவருக்குச் சிறிதும் நித்திரை பிடிக்கவில்லை. அவர் மனதில் பல பல எண்ணங்கள் உதித்தன. ஒரு யோசனையாவது முடிவிற்கு வரவில்லை. மனம் குழப்பமடைந்திருந்தது. "நம்மகளையே தன் குமாரனுக்கு விவாகம் செய்யவேண்டுமென்று கூறிய சுந்தரமையர் இப்பொழுது ஏன் அவ்வெண்ணத்தை விட்டுவிட்டார்? நாம் பணக்காரன் அல்லவென்றெண்ணியோ? ஆம் அப்படியாகத்தானிருக்கும். ஞானசேகரன் எழுதிய கடிதத்தில் தன் தகப்பனார் பணத்தையும் கௌரவத்தையும் தான் கருதுகிறார். நான் சொல்லுவதைக் கேட்கமாட்டேனென்கிறார், என்று வரைந்திருக்கிறானல்லவா. அந்தோ? அவன் மிகவும் விவேகசாலியாயிற்றே. அவன் மனம் வருந்தும்படியோ ஒரு காரியத்தைச் செய்வது? அவன் சில வாலிபரைப் போல் தந்தை வார்த்தையைத் தட்டக்கூடியவனல்லவே. ஆ! அவனுக்கா இவ்விதம் சம்பவிக்கவேண்டும். அவன் எழுதியிருந்த கடிதத்தைப் படிக்கும்பொழுதே என் மனம் வருந்துகிறதே. ஓ! கடவுளே! இவையெல்லாம் நின் திருவிளையாடல்கள் போலும். அந்தோ! என் மகள் இக்கவலையை எவ்விதம் சகிக்கப்போகிறாள். ஆ! இதனாலேயே அவள் சரீரம் இளைத்துவிடும்போலிருக்கிறதே. என் குமாரத்தியை

இக்கவலையினின்றும் நான் எப்படித் தேற்றப்போகிறேன். இன்றிரவு முழுதும் நித்திரை செய்யமாட்டாள் என்பது நிச்சயம். எது எப்படியானாலும் அவளுக்குத் தகுந்த ஓர் நாயகனைத் தேடி விவாகம் செய்துவிட வேண்டியதே. அதுதான் முடிவான தீர்மானம். அந்தோ! நான் என்ன மூட எண்ண மெல்லாம் யோசிக்கிறேன். என் குமாரத்தி இதற்குச் சற்றும் இணங்கமாட்டாளே. அவள் ஞானசேகரனைத் தவிர வேறுபுருஷனை அடைவதில்லையென்று உறுதி மொழியும் கூறியிருக்கிறாளே. இதற்கென் செய்வது? அவனுக்கோ அவன் மனம் சற்றும் விரும்பாதபடி ஓர்பெண்ணை விவாகம் செய்யப்போகிறார்கள்! இங்கே என் குமாரத்தியோ ஞானசேகரனை அடைவதற் கில்லாமல் போயிற்றே என்ற பெரிய கவலையுடனிருக்கிறாள். முடிவில் இருவருக்கும் மனக்கவலையை யுண்டுபண்ணியது ஞானசேகரினின் காலியாணமே. அவனுக்கு அவனிஷ்டப் பிரகாரம் நம் குமாரத்தியை விவாகம் செய்தால் அவர்களிருவரும் எவ்வளவு சந்தோஷத்துட னிருப்பார்கள். இனி அதை யோசிப்பதனால் என்ன பயன்? நம்மாலாவது ஒன்றுமில்லை. எல்லாம் ஈசன் செயலேயாகும். அதன்படி நடக்கிறது நடக்கட்டும்'' என்று பலவாறு யோசனைசெய்துகொண்டே அன்றிரவு பொழுதைக் கழித்தார்.

பொழுது விடிந்ததும் படுக்கையை விட்டெழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு காலைபோஜனம் அருந்தினார். உடனே தன் குமாரத்தியின் அறைக்குச் சென்றார். குணசுந்தரமோ தனக்கு நேரிட்ட கவலையினால் இரவு முழுதும் தூங்கவில்லை. அவள் மனதில் ஞானசேகரனை எப்படி அடையப்போகிறோம் என்ற கவலை பெரிதும் வாட்டிற்று. இதனாலேயே அவளுக்கு இரவு முழுதும் சிறிதும் நித்திரை பிடிக்கவில்லை. ஆனால் விடியற் காலையில்

சிறிது கவலையை மறந்தவளாய் நித்திரை செய்யலானாள். மணிமந்திரமையர் பார்க்கும் பொழுதும் நித்திரை செய்து கொண்டுதா னிருந்தாள். அவள் முகத்தைப் பார்த்ததும் மணிமந்திரமையருக்குச் சொல்லொணு விசனம் ஏற்பட்டது. அந்தோ! ஓரிரவிற்குள் இவ்விதம் இவள் முகம் விகாரமடைந்து விட்டதே; இன்னும் சில மாதங்கள் போனால் இவள் முகத்தை பார்க்கவும் அருவருப்பாய் விடுமல்லவா? ஆ! நான் இதற்கு என்ன செய்வென். எவ்விதம் இவள் மனக்கவலையை ஆற்றுவேன்? ஓ! கடவுளே! என்று பலவாறு எண்ணமிடலானார். அதே சமயம், குணசுந்தரமும் விழித்துக்கொண்டு தன் தந்தை நிற்பதையும், அவர் தன்னை நோக்கி விசனப்பட்டுக்கொண்டிருப்பதையுமறிந்து உடனே படுக்கையை விட்டு எழுந்திருக்கப்போனாள். அதைக்கண்டதும் மணிமந்திரமையர், அந்தோ! நீ இப்போது எழுந்திருக்கவேண்டாம். இன்னும் சற்று நித்திரை செய். நானிதோ வெளியில் செல்லுகிறேன் என்று கூறி வெளியில் செல்வதற்காக எத்தனப்பட்டார்.

குணசுந்தரம்:—தந்தையே! நீங்கள் இதற்காக வெளி செல்லவேண்டாம். நான் இன்றையதினம் வெகுநேரம்வரையில் தூங்கிவிட்டேன், அதற்குக் காரணம் தாங்களறிந்ததே. இரவு முழுதும் நித்திரையே பிடிக்கவில்லை, அதனாலேயே இன்று காலை இவ்வளவு நேரம் வரையில் தூங்கிவிட்டேன். தங்களுக்குக் காலைபோஜன மாய்விட்டதல்லவா

மணிமந்திரமையர்:—ஆம், நீயும் பல்துலக்கிக்கொண்டு சிறிது போஜனமருந்து; மற்ற விஷயங்களைப் பிறகு பேசிக் கொள்ளுவோம்.

என்றதும் குணசுந்தரம் படுக்கையை விட்டெழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு சிற்றுண்டிகளை அருந்தினாள். அதன்பிறகு தன் தந்தையிடம் வந்து சேர்ந்தாள்.

அவளைக்கண்டதும் மணிமந்திரமையர், "ஆ! அதற்குள் போஜனம் அருந்திவிட்டாயா? இப்பொழுதுதானே சென்றாய்." என்று வினவினர்.

குணசுந்தரம்:—ஆம், எனக்குப் போஜனம் அதிகம் தேவையில்லாமையால் சிறிதுமட்டும் அருந்திவந்தேன்.

மணிமந்திரமையர்:—அந்தோ! உனக்கு உன் மனக் கவலையே போஜனம் தேவையில்லாமற் செய்துவிட்டது. ஆ! நீ இக்கவலையி னின்றும் எவ்விதம் நீங்கப்போகிறாய் என்ற துயரமே என் மனதை வாட்டுகிறது. இனி நான் காலதாமதம் செய்யமாட்டேன். உனக்கு எப்படியாவது ஓர் வரனைத் தேடி விவாகம் செய்துவிட்டே மறுவேலை பார்ப்பேன். உன் விருப்ப மென்ன வென்பதைத்தான் அறியவேண்டும்.

குணசுந்தரம்:—என்னருமைப்பிதாவே! என்ன வார்த்தை கூறினீர்கள். தாங்கள் இவ்விதம் கூறுவீர்கள் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. ஒரு பெண் ஓர் நாயகன் மேல் விருப்புற்றிருக்கும்பொழுது வேறுநாயகனை அடைய விருப்பமுறாள் என்பது தாங்களறிந்ததே. அப்படியிருந்தும் தாங்கள் இவ்வார்த்தை கூறினது என் மனதை மிகவும் வாட்டுகிறது. இனி இவ்வித வார்த்தை கூறாதிருக்குமாறு பன்முறையும் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மணிமந்திரமையர்:—குணசுந்தரம்! நீ கூறிய யாவும் நியாயமேயாயினும் நீ விருப்பமுற்ற காதலன் நின்னைக் கைவிட்டபின் உன் கதியாவது என்ன? உன் காதலன் வேறொரு கன்னிகையை மணம் புரிந்துகொண்டு வாழும் பொழுது நீ அவனை அடைய முடியாமற் போனதைப்பற்றி வருந்திக்கொண் டிருப்பதோ நியாயம். ஆதலால், பிடிவாதம் செய்யாமல் நான் சொல்லுவதைக் கேள். நான் உனக்கு உன் மனத்திருப்தியான ஓர் நல்ல வரனைந்தேடி

விவாகம்செய்து முடிக்கிறேன். உனக்கோ வயது வந்து விட்டது. புஷ்பவதியாகும் தருணத்தி லிருக்கிறாய். இனி தாமதிப்பது பெரும் மூடத்தனமாகும். நம்முடைய ஜாதியில் புஷ்பவதியான பெண்ணை யாரும் விவாகம் செய்து கொள்ளமாட்டார்க ளென்பது உனக்குத் தெரிந்ததே. நன்றாய் யோசித்துச்சொல். இனி ஞானசேகரனை அடையலாம் என்னும் யோசனை பிரயோஜன மற்றதாகும்.

குணசுந்தரம்:—தந்தையே! நான் என்ன கூறுவேன்? என்மேல் தாங்கள் தயவுசெய்து கோபித்துக் கொள்ளவேண்டாம். எனக்குக் கலியாணமே வேண்டாம். நான் எப்பொழுதும் கன்னிகையாகவேயிருந்து மடிந்துபோகிறேன்; அதனால் தோஷமில்லை. நான் ஒருவன்மீது காதல் கொண்டிருக்கும்பொழுது இன்னொருவன் பேரில் நான் காதல் கொள்வேனாகில் என் கற்புக்குப் பங்கமேற்படு மென்பது உங்களுக்கும் தெரிந்ததே. ஆனதால் நான் கன்னிகையாக விருந்து காலத்தைக் கழித்தாலும் கழிப்பேனே யொழிய நான் கற்பையிழந்து ஒருவினாடியும் உயிரோடிரேன் என்பது திண்ணம். நான் இவ்வளவு தூரம் தங்களிடம் கண்டிப்பாகக் கூறியதற்கு மன்னிக்கவும், என்று வெகு கண்டிப்பாகக் கூறினாள்.

இம்மொழிகளைக் கேட்டதும் மணிமந்திரமையர் திகைத்து விட்டார். தன் மகள் கூறிய வார்த்தையி னின்றும் அவள் அவ்விதமே நடத்திக் காண்பிப்பாள் என்று புலப்பட்டது. அதனால் அவர் வேறொரு வார்த்தையும் கூறாமல் வெளியேபோய் விட்டார். பிறகு எவ் விஷயமும் நடவாமல் சிலமாதங்கள் கடந்தன. அடுத்தவருடம் குணசுந்தரம் புஷ்பவதியானாள். அதனால் மணிமந்திரமையர் அடைந்ததுயரம் சொல்லொணாது. குணசுந்தரமோ சதா தன்னறையிலேயே ஏதாவதொரு புத்தகத்தை வாசித்துக்

கொண்டு காலத்தைக் கழித்து வந்தாள். வெளியில் என்ன நடக்கிறது என்பது அவளுக்குத் தெரியாது. தினமும் கடவுள் தியானம் செய்வதை மறக்காள். இவ்விதமாகக் குணசுந்தரம் தன் வாழ்நாளைக் கழிக்கலானாள். மணிமந்திர மையரும், அவர் மனைவி சாந்தவல்லி அம்மாளும் தங்கள் மகள் இவ்விதம் வாழ்வதைக் குறித்து, சதாவருந்தி துக்கக் கடலில் ஆழ்ந்தார்கள். அந்தோ! இவர்கள் இவ்வித துக்கத்தை அனுபவிக்கவேண்டுமென்று கடவுளின் சித்தம் போலும். ஊழ்வினையின் பயனன்றோ இவ்வளவும்.

மணிமந்திரமையர் தன்மகள் விவாகம்செய்து கொள்ளாமல் கன்னிகையாகவே காலங்கழித்து வருவதைப்பற்றி வருந்திக் கொண்டிருக்கும் காலத்தில் திருவையார் சுந்தரமையரின் கடிதம் கிடைத்து. அதைப்படித்ததும் ஆனந்த பரவசமானார். ஆனால் தன் மருமகனாகிய ஞானசேகரன் பெண்ஜாதி அவமானத்தை யுண்டுபண்ணி விட்டுச் சென்றதைப்பற்றி வருந்தினார். உடனே புறப்பட்டுத் திருவையார் சென்றார். அங்கே சுந்தரமையரைக் கண்டு வார்த்தையாடினார். கூடிய சீக்கிரம் தன் மகளுக்கும் ஞானசேகரனுக்கும் விவாகம் செய்து முடித்துவிட வேண்டுமென்று பேசித் தீர்மானித்தார். அதன் பிறகு தன் ஊருக்கு வந்து நடந்த சமாசாரங்களைத் தன் மகளுக்கும் மனைவிக்கும் அறிவித்தார். இதைக் கேட்டதும் குணசுந்தரம் அளவுகடந்த ஆனந்தம் கொண்டாள். தான்செய்த தவம் பலித்ததென்று கூத்தாடினாள்.

இது நிற்க திருவையாற்றில் ஞானசேகரன் தன்பெண்ஜாதி ஓடிப்போனதி லிருந்து, "சனிவிட்டது" என்று கவலையற்றிருந்தான். இனி எப்படியும் குணசுந்தரத்தை யடைந்துவிடுவோமென்ற எண்ணம் அவனுக்குப் பூரணமாயிருந்தது. தன்தகப்பனார் இவ்வித ஏற்பாடுசெய்ததால்

அவன் கொண்ட ஆனந்தத்திற்கு அளவேயில்லை. அடுத்த மாதத்திலேயே ஓர் முகூர்த்த தேதியில் "ஞானசேகரனுக்கும் குணசுந்தரத்துக்கும் வெகு ஆடம்பரமாக விவாகம் நடந்தேறியது. காதலர் இருவரும் மனமகிழ்ந்தார்கள். அவர்களிருவரும் சந்தோஷம் கொண்டதை நாம் இங்கு எழுதுவது அசாத்தியம், ஆதலால் எழுதாது விடுத்தனம்.

ஞானசேகரன் பி. ஏ. பட்டப் பரீக்ஷையில் முதன்மையாசத் தேற்சி பெற்றான். சிலவருடங்களில் பெயர் பெற்ற பாரிஸ்டரானான். காதலர் இருவரும் ஒருமனதுடன் கூடிக் களித்தார்கள். சுந்தரமையரும் அவர் மனைவி சுந்தராம்பாளும் அளவற்ற ஆனந்தத்துடன் காலத்தைக் கழிக்கலானார்கள்.

மணிமந்திரமையரும் அவர் மனைவி சாந்தவல்லி அம்மாளும் தங்கள் புத்திரியும் மருமகனும் கூடிக் களிப்பதைக் கண்டு மனம் பூரித்தார்கள்.

ஊரிலுள்ளோர் அனைவரும் சுந்தரமையர் மகன் ஞானசேகரனுக்குப் புஷ்பவதியான அவன் தாய் மாமன் பெண்ணை விவாகம் செய்துவிட்டார்கள் என்ற பேச்சையே பேசிப் பொழுதைப் போக்கினார்கள். அதில் சிலர் அவ்விதம் செய்வது நமது ஜாதிக் கடுத்ததல்ல வென்றார்கள். வேறு சிலர் இவ்விதம் செய்வது தான் நியாயம். இதன் மாதிரியே ஊரிலுள்ளோர் அனைவரும் செய்யத் துணிந்து விட்டார்களாயின் மிக மேன்மையா யிருக்கும். சிறிதும் நியாயமில்லாத பால விவாகம் புரிவதனால் எவ்வளவோ கெடுதிகள் இருக்கின்றன. அதனை அறிந்தும் அறியாதது போலவே ஜனங்கள் இன்னும் அதைக் கையாடி வருகின்றார்கள். இதற்கு நல்லவழி காட்டினார் சுந்தரமையர் என்றார்கள். இது இப்படி யிருக்க, நாம் முதலில் ஆரம்பித்த கதையின் போக்கைச் சற்றுக் கவனிப்போம்.

## அத்தியாயம் 9

### வைர மோதிரம்

அநேகம் ஜனங்கள் நிறைந்த சென்னைமாநகரத்தில் ஓர் நாளிரவு சுமார் எட்டுமணிக்கு இரத்தினவியாபாரம் செய்யும்படியான ஒரு வீதியின் வழியாக எண்ணிக்கையில்லாத ஜனங்கள் நடமாடிக்கொண் டிருந்தார்கள். அதில் அநேகர் நகரவாசிகளாகவும், சிலர் நாட்டுப்புறவாசிகளாகவும், பெரும்பாலார் ஆண்களாகவும் சிலர் பெண்களாகவும் காணப்பட்டார்கள். இதன் மத்தியில் ஓர் நாணயமான உடையணிந்த மனிதன் சென்றுகொண்டிருந்தான். அம்மனிதனுக்குச் சுமார் முப்பத்தைந்து வயதிருக்குமெனக் கூறலாம். காதில் கடுக்கன் அணிந்திருக்கிறான். தலையில் தலைப்பாகையும், மேலே சட்டையும் அணிந்திருக்கிறான். அவன்கையில் அணிந்திருக்கும் வைர மோதிரத்தின் பிரகாசமானது எதிரில் வந்துகொண்டிருக்கும் ஜனங்களின் கண்களை ஒளிமங்கச்செய்தது. இவன் எவ்வளவோ சாமர்த்தியமாக தன்னுடைய நடையுடைய பாவனைகளால் அந்நகரவாசிபோல்நடித்தாலும், சிலசமயங்களில் மாத்திரம் அவன் ஓர் நாட்டுப்புறத்தானே என்று யாரும் எளிதில் உணருமாறு தோற்றப்பட்டான். இவன் பின்னால் கந்தல் உடைதரித்த ஒரு பிச்சைக்காரன், இவன் எவ்வளவோ கண்டித்துப் போகச்சொல்லியும் கேளாமல் "ஐயா! ஒரு காலணா கொடுங்கள்" என்று கூறிக்கொண்டே தொடர்ந்து வந்துகொண் டிருந்தான். அப்பிச்சைக்காரன் தன்னைத் தொடர்ந்து வருவது இம்மனிதனுக்கு மிகவும் கஷ்டமாகத் தோன்றிற்று. அவன் கையிலோ காசில்லை. அதனால் கோபமூண்டு அப்பிச்சைக்காரனைநோக்கி "அடே நீ போகிறாயா? இல்லையா? அல்லது உதைவேண்டுமா?

நான் எவ்வளவுதூரம் சொல்லியும் கேளாமல் பிடிவாதமாக என் பின்னாலேயே தொடர்ந்துவருகிறாயே. காசு இல்லையென்றால் போகவேண்டியதுதானே. என் பின்னால் வந்துகொண்டிருந்தால் உனக்குக் காசு கிடைத்துவிடும்போலிருக்கிறது. போடாபோ, பைத்தியக்காரனா யிருக்கிறாய்; இன்னும் யாரையாவதுபோய்க்கேள். இனி என் பின்னால் வராதே'' என்று வெகு கண்டிப்பாய்க் கூறினான்.

அதற்கு அப்பிச்சைக்காரன் "ஐயா! நீங்கள் ஏன் இவ்விதம் கோபித்துக் கொள்ளுகிறீர்கள்? ஒரு காலணா காசு கொடுத்துவிட்டால் நான் ஏன் உங்கள்பின்னால் வருகிறேன். தங்களுக்கு அதிக கோபமானால் இதோ சென்றுவிடுகிறேன்'' என்று கூறி அப்புறஞ் செல்லாமல் அவ்விடத்திலேயே நின்றுவிட்டான்.

உடனே அம்மனிதன் இரத்தினவியாபாரம் செய்யும் ஓர் ஷாப்பினுள் நுழைந்துவிட்டான். இதைப்பார்த்துக்கொண்டிருந்த பிச்சைக்காரன், தானும் அக்கடையின் வெளியில்சென்று நின்றுகொண்டு, பிச்சை கேட்பவன் போல் அக்கடையில் என்னநடக்கிறது என்பதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான்.

அம்மனிதன் ஷாப்பினுள் நுழையவே, அந்த ஷாப்பின் தலைவன் அவனை வெகு மரியாதையுடன் வரவேற்று ஓர் ஆசன மளித்தான். அவன் அந்த ஆசனத்தில் அமர்ந்ததும் தன் கைவிரலில் அணிந்திருந்த வைர மோதிரத்தைக் கழற்றி அந்த ஷாப்பின் தலைவனிடம் அளித்து, அதன் மதிப்பைத் தெரிவிக்கும்படி கூறினான். ஷாப்பின் தலைவனும் அதை வாங்கிச் சிறிதுநேரம்வரையில் உற்றுக் கவனித்தான். உடனே அவனுக்கு மிகவும் ஆச்சரியமும் பிரமையும் உண்டாய்விட்டது. அதன் மதிப்பை அவனால் அறியக்கூடவில்லை. அதேசமயத்தில் நாணயமானவேறொரு

மனிதன் அந்த ஷாப்பினுள் வெகு துரிதமாக நுழைந்தான். ஆனால் வெளியில் நின்றுகொண்டிருந்த பிச்சைக்காரனைக் காணவில்லை. அம் மனிதன் முகத்தில் தீக்ஷண்யமான பார்வை விளங்கிற்று. அவன் நுழைந்ததும் ஷாப்பின் தலைவனுக்கு ஓர் விதசமிக்கை செய்துவிட்டு நேராக அந்த ஷாப்பினுள்ளிருக்கும் ஓர் அறையினுள் சென்றுவிட்டான். உடனே ஷாப்பின் தலைவன் எழுந்திருந்து உட்கார்ந்திருக்கும் மனிதனை நோக்கி, "இதோ இவ்விடமே இருங்கள். ஐந்து நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்" என்று கூறி, இரண்டாவதாகவந்த மனிதன் சென்ற அறையினுள் சென்றான். இருவரும் குசு குசுவென்று நாலைந்து வார்த்தைகளாடினதும் ஷாப்பின் தலைவன், தான் முன்னிருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான். முன் மனிதன் அவனைக் கண்டதும் "அந்த மோதிரத்தை என்ன மதிப்பிடுகிறீர்கள்" என்று வினவினான். ஷாப்பின் தலைவன், "இதோ தெரிவிக்கிறேன்; ஓர் அவசரகாரியமாக ஆள்வந்தது. அதற்காகத் தான் சென்றுவிட்டேன். இதோ கூறிவிடுகிறேன்" என்று மறுபடியும் அம்மோதிரத்தை எடுத்து, வெகுநேரம்வரையில் பார்த்து முடிவில், இது சுமார் ஐயாயிரம் ரூபாய் பெறும். தாங்கள் இதை விற்கப்போகிறீர்களா? அல்லது இதன்மதிப்பை அறியும் பொருட்டு வந்தீர்களா? என்று வினவினான்.

அம்மனிதன்:—இல்லை யில்லை; இதை விற்கவே வந்தேன். இது உங்களுக்குத் தேவையிருக்குமானால் விலையைத் தீர்மானித்து எடுத்துக்கொள்ளுங்கள்.

ஷாப்பின் தலைவன்:—வேறு ஒன்றும் தீர்மானம் கிடையாது. இதுவே தீர்மானம்தான். தங்களுக்கு இஷ்டமானால் இந்த விலைக்கு நான் எடுத்துக்கொள்ளுகிறேன்; பணமும் கையிலிருப்பிலிருக்கிறது. வேறு ஷாப்பிற்குச்

சென்றால் உடனே பணம் கிடைப்பது அரிது. அதைக் கவனியுங்கள். பிறகு தங்களிஷ்டப்பிரகாரம் செய்யலாம்.

இதைக்கேட்டதும் அம் மனிதன் சற்றுத்தயங்கினான். அம்மோதிரம் இந்த விலையைவிட இன்னும் அதிகவிலை பெறுமென்று அவன் மனதில் பட்டது. ஆயினும் இவ்விடத்தைவிட்டுப் போனால் இன்னும் வேறு பல ஷாப்பிற்குப் போகவேண்டும். அப்படிப்போய் வேறு ஷாப்புக்காரனிடம் கொடுத்து, அவன் இந்த விலையைவிட குறைத்துக் கேட்டால் என்னசெய்வது? வேறு ஷாப்பிற்குச் சென்றால் பணமும் உடனே கைக்குக் கிடைக்காது என்பது நிச்சயம். ஆதலால், இப்பொழுது இந்த விலைக்கு இந்த ஷாப்பின் தலைவனிடமே கொடுத்துவிட்டால் யாதொரு சிரமமு மிராது. வேறு ஷாப்பிற்குப் போக வேண்டியதில்லை. பணமும் உடனே கைக்குக் கிடைத்துவிடும், என்று தனக்குள் சிந்தித்துக்கொண்டு ஷாப்பின் தலைவனிடம் அவ்விலைக்குக் கொடுப்பதாகச் சம்மதித்தான். உடனே ஷாப்பின் தலைவன் அம்மோதிரத்தை வாங்கிப் பெட்டியினுள் வைத்துவிட்டு ஐயாயிரம் ரூபாய்க்கு நோட்டாக அம்மனிதனிடம் அளித்தான். அவனதைவாங்கி ஒருதரம் எண்ணிப்பார்த்து, சரியாயிருக்கிறதென்று தன் மனம் திருப்தியானதும் பத்திரமாகத் தன் ஜேபியினுள் வைத்துக்கொண்டு ஷாப்பின் தலைவனிடம் விடைபெற்றுக்கொண்டு ஷாப்பைவிட்டுச் செல்லலானான்.

அச்சமயத்தில் ஷாப்பினுள்ளிருந்த மனிதன் உடனே தானிருந்த அறையைவிட்டு வெளியேவந்து ஷாப்பின் தலைவனை நோக்கி "ஆ! நான் சொன்ன பிரகாரமே செய்து முடித்துவிட்டாயே. அந்தோ! அவனொரு மூடன்; இல்லாவிடில் இவ்விதம் கொடுத்துவிட்டுப் போகமாட்டா னல்லவா? ஆம்! அது போனால்போகிறது; நான் சொன்ன பிர

காரம் செய்வதற்கு உனக்குச் சம்மதந்தானே?'' என்றான். அதற்கு அந்த ஷாப்பின் தலைவன் "ஆஹா! அதற்கு ஆக்ஷேபனை என்ன? இதோ கொடுத்துவிடுகிறேன். தங்களிடம் கூடவா தடைகூறுவேன்'' என்று கூறிக்கொண்டே பெட்டியைத்திறந்து, முன் மனிதன் கொடுத்துப்போன மோதிரத்தை எடுத்து அம்மனிதன்கையில் கொடுத்தான்.

அவனதை வாங்கிச் சிறிது நேரம்வரை உற்றுப் பார்த்து "ஆம்! ஆம்! இதுதான்; அதில் சிறிதும் சந்தேகமில்லை: நல்லவேளையாக நாம் நாடிவந்தகாரியம் பலித்தது'' என்று தனக்குத்தானே கூறிக்கொண்டு ஜேபியில் கையைவிட்டு ஷாப்பின் தலைவன் இம்மோதிரத்திற்காகக் கொடுத்த ஐயாயிரம் ரூபாயும் மேலே ஐந்நூறு ரூபாயும் எடுத்து அந்த ஷாப்பின் தலைவனிடம் அளித்துவிட்டுத் துரிதமாக அந்த ஷாப்பைவிட்டுச் செல்லலானான். முன்சென்ற மனிதனோ இவனுக்கு முந்நூறுகஜ தூரத்திலேயே சென்று கொண்டிருந்தான். அவனைக் கண்டதும் இம் மனிதன் வெகு துரிதமாகச்சென்று முன் மனிதனைக்கிட்டி அவன் பின்னாலேயே சென்றுகொண்டிருந்தான். முன்னால் செல்லும் மனிதன் இதையொன்றும் கவனியாமல் இரண்டு வீதிகளைக் கடந்ததும் ஓர் சந்தினுள் நுழைந்து, அங்கிருக்கும் ஓர் வீட்டின் வாயற்படியின்மேல் வந்து நின்று ஒருவித சப்தம் செய்தான். உடனே கதவு திறக்கப்பட்டதும், இம்மனிதன் உள் நுழைந்தான்.

அவ்வீடு இரண்டு அறைகளையும் ஓர் தாழ்வாரமுமுடைய ஓர் சிறு வீடேயானாலும், வெகு நாணயமாக அமைக்கப்பட்டிருந்தது. அவ்வீட்டில் சாமான்கள் அதிகமின்மையால் இப்பொழுது தான் புதிதாக யாரோ குடியேறியிருக்கிறார்க ளென்று புலப்பட்டது. நிற்க, அம் மனிதன் வீட்டினுள் நுழைந்த அந்த க்ஷணமே ஓர் மாது

கதவைச்சாற்றித் தாளிட்டுவிட்டு அம்மனிதனை நோக்கி, "ஏன், என்ன சமாச்சாரம்?போனகாரியம் ஜெயந்தானே." என்று கேட்டாள்.

அம்மனிதன்:—ஆம்! ஆம்! போனகாரியம் ஜெயந்தான். ஆனால் விலைதான் குறைந்துவிட்டது. அதுதான் என் மனதிற்கு வருத்தமா யிருக்கிறது. உங்கள் மனதிற்கு அதிருப்தியைக் கொடுக்குமென்றே நினைக்கிறேன்.

அம்மாது:—ஏன்? என்ன அதிருப்தி ஏற்படுமென்கிறாய்? மிகவும் குறைந்தவிலையாகப் போய்விட்டதோ?

அம்மனிதன்:—ஆமாம்! மிகவும் குறைந்த விலையே. அதைக் கூறுவதற்கும் என் மனம் வரவில்லை; என்ன செய்வது? நம்முடைய சந்தர்ப்பம் அப்படியாய்விட்டது.

அம்மாது:—போனது போகிறது. இனிமேல் அதைப்பற்றிச் சிந்திப்பதில் என்ன பிரயோஜனம்? விலையைக் கூறு.

அம்மனிதன்:—ஆம்! அது வாஸ்தவமே. இனி அதைப்பற்றிச் சிந்திப்பதில் சிறிதும் பிரயோஜன மில்லைதான். ஆயினும் அதை நாலாயிரம் ரூபாய்க்கு விற்றது தான் என் மனம் வருந்துகிறது.

அம்மாது:—என்ன! என்ன! நாலாயிரம் ரூபாயா? அந்தோ! இதுவென்ன அநியாயம்? உண்மையாக அதை நாலாயிரம் ரூபாய்க்கா விற்றாய். என் மனம் கொதிக்கிறதே, என்னமாகயிருந்தாலும் இதுபெருங்கொள்ளையே.

அம்மனிதன்:—ஆமாம்; இது மிகவும் கொள்ளையே; என்ன செய்வது? நம்முடைய சமயபேதம் அவ்வித மிருக்கிறதே. சாதாரணமா யிருந்தால் அதன் விலை வேறுதான். இப்பொழுது நம்முடைய சந்தர்ப்பம் எப்படிப்பட்டதென்பதை யோசித்துப் பாருங்கள். அதனாலேயே நான் இவ்விலைக்கு சம்மதிக்க நேர்ந்தது.

அம்மாது:—ஆம்! நம்முடைய சந்தர்ப்பம் மிகவும் கொடிதானதே. போனது போகட்டும்; எங்கே பணத்தைக் கொடு.

என்றதும் அம்மனிதன் ஜேபியினுள் கையை விட்டு நாலாயிரம் ரூபாயை எடுத்துக்கொடுத்தான். அம்மாது அதைவாங்கிப் பத்திரமாக ஓர்பெட்டியினுள் வைத்துப் பூட்டினாள். உடனே அம்மனிதன் அம்மாதை நோக்கி "நான் வெளியேபோய்ச் சரியாகப் பத்துமணிக்கெல்லாம் வந்துவிடுகிறேன். வெளியில் சிறிது வேலை யிருக்கிறது. அதைப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று கூறி விடை பெற்றுக்கொண்டு வெளியில் வந்தான்.

அப்பொழுது அவன் முகத்தில் சந்தோஷக் குறிகள் பலதோன்றின, மனமடங்கா மகிழ்ச்சிகொண்டான். ஆனந்தமேலிட்டதால் அவனுக்குப் பின்னால் வரும் மனிதனைக் கவனியாமலே சென்றுகொண் டிருந்தான். பத்து நிமிஷத்திற் கெல்லாம் கடைத்தெருவிற்கு வந்தான். சிறிது தூரம் சென்றதும் ஓர் கட்டடத்தினுள் நுழைந்தான். அக்கட்டடம் ஏழைகள் பணம் சேர்த்து வைக்கும் "இந்து சேவிங்ஸ் பாங்கி" ஆனதால் அதில் அநேகர் உட்கார்ந்திருந்தனர். இவன் சென்றதும் தனக்குக் கொள்ளையாகக்கிடைத்த ஆயிரம் ரூபாயையும் பாங்கியில் செலுத்தித் தன்பேருக்கு ரசீது வாங்கிக்கொண்டு வெளியில்வந்தான். அப்பொழுது அவன் முன் கண்ட கந்தல் உடைதரித்த பிச்சைக்காரன் தெருவில் நின்றுகொண்டிருந்தானதலால், இம் மனிதன் பாங்கை விட்டு வெளிவந்ததே அவனை நோக்கி "ஐயா! ஒரு காலணா கொடுங்கள்" என்று கூவினான். இவனைக் கண்டதே அம்மனிதனுக்கு மனத்தில் பீதி யுண்டாய் விட்டது. "இவன் ஏன் நம்மைத் தொடர்ந்து வருகிறான். நம்முடைய ரகசியம் ஏதாவது இவனறிவானோ? ஆ! அப்படி யிருந்தால்

நமக்குப் பெரிதும் திண்டாட்டம்தான்.'' என்று மனத்தில் எண்ணிக் கலவரமடைந்தவனாய் அப்பிச்சைக்காரனை நோக்கி "அடே நீ ஏன் என் பின்னாலேயே வருகிறாய். நான்தான் முன்னமேயே இல்லை யென்று கூறி விட்டேனே. மறுபடி ஏன் என்னைத் தொடர்ந்து வருகிறாய். இனி என் பின்னால் வருவாயானால் வீணாகக் கஷ்டமடைவாய்'' என்று கூறி வெகு துரிதமாக அம்மனிதன் போய்விட்டான்.

கந்தல் உடைதரித்த பிச்சைக்காரன், அம்மனிதன் கூறியதைக் கேட்டதும் பேசாமல் நின்று, அவன் போன தும் மறுபுறம் திரும்பி "உன்னைத் தண்டனைக்குக் கொண்டு வர வெகுகாலம் ஆகாது. கூடிய சீக்கிரம் என் கையில் சிக்கிக்கொள்வாய் என்பது திண்ணம். நீ என்னை பல்லவா கஷ்டமடைவாய் என்று கூறினாய். அதற்குப் பதிலாக நீயே கஷ்டமடையப் போகிறாய் என்பது உனக்குத் தெரியாது போலும்.'' என்று வெகு கோபத்துடன் கூறிவிட்டுத் தன் வழியே சென்றான்.

---

## அத்தியாயம் 10

### பழனியம்மாள்

பழனியப்ப செட்டியாரின் கொலை நடந்து சுமார் நாலைந்து வருடங்கள் ஆயின. ஏறக்குறைய அக்கொலை யைப்பற்றித் திருச்சி ஜனங்களெல்லாம் ஒருவாறு மறந்து விட்டார்களென்றே கூறலாம். அச்சமயம் ஸ்ரீரங்கம் வடக் குச் சித்திரை வீதியில் ஓர் சிறு வீட்டில் ஒருமாது வசித்து வந்தாள். அவளுக்குச் சுமார் முப்பது வயதிருக்குமென்று கூறலாம். கட்டுள்ள தேகமுடையவள். இவள் அவ்வீட்டில் தனிமையிலேயே வசித்து வருகிறாள். இவளுக்கு ஏழுவய துள்ள ஓர் பெண் குழந்தை மாத்திர மிருந்தது. இவள்

இவ் வீட்டிற்குக் குடியேறி இரண்டு மாதங்களே ஆயின. இவளை அவ்வீதியின் ஜனங்க ளெல்லாம் பழனியம்மாள் என்று அழைப்பார்கள். ஏனெனில் இவள் தன்னுடைய சொந்த ஊர் பழனி என்று கூறியிருப்பதால் அதை முன்னிட்டு அவளுக்குப் பழனியம்மாள் என்ற காரணப் பெயர் உண்டாயிற்று. இரண்டொருவருக்கு மாத்திரம் தன்னுடைய உண்மைப் பெயர் லக்ஷ்மியம்மாள் என்று கூறியிருக்கிறாள். அதில் முக்கியமாக அவளிருக்கும் வீட்டுக்குடையவரான ரங்கநாதபட்டரே யறிவார். ரங்கநாதபட்டருக்கு ரங்கநாதர் கோவிலில் அர்ச்சகர் வேலை. அவர் எவ்விதமாகவோ அதில் சிறிது பொருள் சம்பாதித்து அப்பொருளுக்கு இரண்டுமூன்று வீடுகளைக் கட்டி அதை வாடகைக்கு விட்டுவந்தார். அதிலவருக்குச் சிறிது பொருள் கிடைத்து வருகிற தென்றே கூறலாம். இவர் வசிக்கும் வீடும் அவ்வீதியிலேயே தானிருந்தது. இவருக்கு அதிகம் பொருளில்லாவிடினும் அன்னவஸ்திரத்திற்குக் குறைவின்றி போதுமான செல்வம் இருந்தது. இவருக்குப் பன்னிரண்டு வயதுள்ள ஓர் ஆண்பிள்ளை இருக்கிறான். இச்சிறுவன் பிறந்த ஐந்தாறு வருஷங்களுக் கெல்லாம் இவர் பெண்ஜாதி இறந்துவிட்டமையால் இப்பொழுது மறு விவாகம் செய்துகொண்டார்.

இது நிற்க, பழனியம்மாளைக் கவனிப்போம். பழனியம்மாளுக்குத் தன்னுடைய சொந்தப்பெயர் லக்ஷ்மியம்மாள் என்று இருந்தும், அவளை எல்லோரும் பழனியம்மாள் என்றே அழைப்பதால் நாமும் அப்பெயரையே இங்கு உபயோகப்படுத்துவோம். பழனியம்மாள் மிகுந்த அழகுடையவள். அவள் நடவடிக்கைகளிலிருந்து அவள் ஓர் பிராமண மாதே யென்று யாரும் எளிதில் உணரலாம். அவள் புத்திரியின் பெயர் ஸரஸ்வதி. அப்பெண்ணும் மிகவும் சௌந்தர்ய

முடையவளே. பழனியம்மாள் மங்கிலிய ஸ்திரீயா யிருந்தும், அவள் கணவனில்லாமல் தனிமையில் வசிக்கும் காரணம் தான் தெரியவில்லை. ஆனால், அவள் நடவடிக்கையில் மாத்திரம் பிசகினவள் என்று யாரும் கருதினார்கள். அது பொய்யல்ல. எப்படி யெனில், இரண்டொரு மாதங்களுக்கெல்லாம் பழனியம்மாள் தான் இருக்கும் வீட்டிக்குடையவரான ரங்கனாதபட்டரையே தன்மோகவலையிற் சிக்கும்படி செய்துகொண்டாள். அந்தோ! எவ்வளவோ வேதசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவரான ரங்கனாத பட்டரே இச்சிற்றின்ப வின்பத்தில் மயங்கினாரானால் கேவலம் முற்று முணராத வாலிபர்கள் மயங்குவது ஆச்சரியமாகுமோ? அதன் பிறகு ரங்கனாதபட்டர் பழனியம்மாள் வீடேகதியா யிருந்தார். பழனியம்மாளோ, அவருக்குப் பிரியமான பலகார பக்ஷணங்கள் செய்து அவரை புண்பிக்கச் செய்வதிலேயே தன் பொழுதைப் போக்கினாள்.

இப்படியாக ஒவ்வொருநாளும் பழனியம்மாளும் ரங்கநாதபட்டரும் சரஸ சல்லாபமாய் யிருக்கும் பொழுது ரங்கநாதபட்டர் பழனியம்மாளிடம் ரொக்கமாக யிருந்த மூவாயிரம் ரூபாயையும் மெதுவாகக் கைப்பற்றினார். பழனியம்மாள் சிறிது கெட்டிக்காரியானதால், அப்பணத்திற்குத் தானிருக்கும் வீட்டை ஈடாகஎழுதி வாங்கிக் கொண்டாள். அவர் அப்பணத்தை வாங்கினதும் ஓர் கந்துக் கடை ஸ்தாபித்து வியாபாரம் செய்யலானார். பழனியம்மாள் வசிக்கும் வீட்டிற்கு அடுத்த வீட்டில் ஸ்ரீனிவாச ஐயங்கார் என்ற ஒருவர் வசித்துவந்தார். அவருக்கு இவ்வூர் ரங்கனாதர் கோவிலில் பேஷ்கார்வேலை. மிகவும் நல்லவர். அதேவீதியின் கீழ்கோடியில் இவருக்குச் சொந்தமான ஓர் மாது வசித்து வருகிறாள். அம்மாதின் புருஷனுக்கு மேற்படிகோவிலில் சமையல்வேலை. அம்மாதுக்கு ஓர் தம்பி

யிருக்கிறான். அவன் பெயர் நாராயணன். மிகவும் நேர்மையான நன்னடக்கை யுடையவன். ஒருவருக்கும் தீங்கு செய்ய மாட்டான். நல்ல குணமுடையவன். பிறர் தன்னை இகழ்ந்து கூறினால் மனம் பொறாதவன். இவன் இப்பொழுது ஸ்கூலில் வாசித்துக்கொண் டிருக்கிறான். இவன் அடிக்கடி தன் அத்தானாகிய ஸ்ரீனிவாச ஐயங்கார் வீட்டுக்கு வந்துபோவான். ஸ்ரீனிவாச ஐயங்காருக்கு நாராயணன் பேரில் அதிகபிரியம் உண்டு. இவர் பெண்சாதியாகிய ரங்கம்மாளுக்கு நாராயணன்,பெரியம்மாள் புத்திரனாதலால் ரங்கம்மாள் நாராயணன்பேரில் வாஞ்சையாயிருந்தாள்.

ஓர் நாள் ஸ்ரீநிவாச ஐயங்கார் தன்னுடைய அருமையான தங்கக் கடிகாரத்தை நடைகூடத்தில் யாரும் பார்க்குவண்ணம் சுவரில் மாட்டிவிட்டு, உள்ளே தன்னுடைய அறையில் உட்கார்ந்து ஏதோ தஸ்தாவேஜுகளைக் கவனித்துக்கொண் டிருந்தார். அன்றையதினம் நாராயணனுக்கு விடுமுறை நாளானதால் அவர் வீட்டிற்கு வந்தான். அப்பொழுது அவர் வீட்டுக்கொல்லையி லுள்ள தென்னமரத்தில் குரங்குகள் ஏறித் தேங்காய்களைப் பிடுங்கி நாசம் பண்ணினமையால் அதை வெருட்டுவதற்காக நாராயணனும் அத்தெருவிலுள்ள இன்னும் இரண்டுமூன்று சிறுவர்களுமாகச்சேர்ந்து, ஸ்ரீநிவாச ஐயங்கார் வீட்டின் வழியாகக் கொல்லைப்புறம்சென்று குரங்கை வெருட்டிவிட்டு, தெருவிற்குவந்து, அதைப்பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்கள். அப்பொழுது ஸ்ரீநிவாசஐயங்கார் தன்னறையைவிட்டு வெளியில்வந்து கைக்கடிகாரத்தைப் பார்த்தார். அது அவ்விடத்தி லில்லாமையால் திடுக்கிட்டு, தன் மனைவியைக் கூப்பிட்டு, கடிகாரத்தைப் பார்த்தாயா? என்று வினவினார். அந்தம்மாள் "ஐயோ! நான் பார்க்கவில்லையே. எடுத்திருந்தால் யார் எடுப்பார்கள்? நீங்கள்தானே இருந்தீர்கள்.

ஒருவேளை நாராயணன் எடுத்திருப்பானே?'' என்று கூறி னதும் கூருததுமாக வெளியில்சென்று அங்கு நின்று கொண்டிருந்த நாராயணனைக் கூப்பிட்டு "ஏனப்பா நாரா யணு! நடைகூடத்தில் மாட்டியிருந்த உங்கள் அத்தான் கைக்கடிகாரத்தை எடுத்தாயா?'' என்று வினவினாள்.

இதைக்கேட்டதும் நாராயணன் மலைத்துப் போய்விட் டான். அவனறியாமல் அவனுக்குக் கோபம்வந்தது. தன் குணம் தெரிந்திருந்தும் இவ்விதம் அடாத கேள்வியைக் கேட்கிருளே என்று எண்ணி மனவருத்தத்துடன் "அக்கா! நான் எடுக்கவில்லை. நான் எடுப்பதென்றால் அத்தானைக் கேட்காமல் எடுப்பேனு?'' என்றுகூறினான். இதைக்கேட்ட தும் ரங்கம்மாள் தன்னுடைய புருஷனிடம் சென்று நாரா யணன் கூறினதைச் சொன்னாள். அவரதைக்கேட்டு விச னத்துடன் பேசாமலிருந்துவிட்டார். இதிலிருந்து நாரா யணன் ஸ்ரீனிவாச ஐயங்கார் வீட்டிற்குவருவதில்லை. அக் கடிகாரத்தை எடுத்தவர்களைமாத்திரம் எப்படியாவது கண்டுபிடித்துத் தன்மேலிருக்கும் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ளவேண்டும் என்ற எண்ணம் அவன் மனத் தில் குடிகொண்டிருந்தது. ஸ்ரீனிவாச ஐயங்கார் எவ் வளவோ சமாதானம் சொல்லியும் அவனதை மறக்கவில்லை. நாராயணன் ஓர் நாள் கீழ்க்கண்டவாறு யோசிக்கலானான்.

நாமோ அன்றையதினம் நம்முடன் கூடவந்த ராமன் கிருஷ்ணன், கோவிந்தன் முதலான எல்லோரையும் கேட் டோம். அவர்கள் இல்லையென்று கூறிவிட்டார்கள். அவர்களும் அப்பேர்ப்பட்ட திருட்டுக் குணமுடையவர் ளல்லவென்பது நமக்கு நன்றாய்த்தெரியும். நாமோ நமது மனமறிய அதை எடுக்கவில்லையென்பது நிஜம். பிறகு அக் கடிகாரத்தை யார் எடுத்திருப்பார்கள்? நம் அத்தானே அன்றுகாலையில் தான் அக்கடிகாரத்தைச் சுவற்றில் மாட்

டினதாகக் கூறுகிறார்; அது உண்மைதான். அப்படி யானல் நாமும் மற்றப்பிள்ளைகளையும் தவிர வேறு எவரும் எடுப்பதற்கு நியாயமில்லையே? எப்படியெனில், நாமும் மற்றப்பிள்ளைகளும் குரங்கை வெருட்டுவதற்காகப் போகும் பொழுது நம்முடைய கண்ணாலேயே அக்கடிகாரத்தைப் பார்த்தோம். அதன் பிறகு எல்லோரும் வெளிவந்ததும் அக்கடிகாரத்தைக் காணுமென்றால் அது ஆச்சரிய மாகத்தானிருக்கிறது. என்? நாம் கொல்லைப்புறம் சென்றிருக்கும்பொழுது யாராவது வந்திருந்தால் எடுத்திருக்கலா மல்லவா? அப்படி யார் வந்திருப்பார்கள்? ஒருவரும் வந்ததாகத் தெரியவில்லையே? ஓ! இப்பொழுதுதான் ஞாபகம் வருகிறது. அடுத்தவீட்டில் குடியிருக்கும் பழனியம்மாள் என்பவள் நாம் வெளியில்வரும் சமயம் வாசற்படியினின்றும் இறங்கிச்சென்றாளே? அவள் எதற்காக அவ்விடம் வந்தாள்? ஒருவேளை அவள் எடுத்திருந்தாலும் எடுத்திருக்கலா மல்லவா? இதை நாமறியவேண்டும். முதலில் அவள் அவ்விடம் எதற்காக வந்தாளென்பதை விசாரித்தறியவேண்டு மென்றெண்ணித் தன் நண்பனாகிய கிருஷ்ணனை அழைத்து, கடிகாரம் காணமற்போன தினம் பழனியம்மாள் வந்தாளா? அவள் எதற்காகவந்தாள்? அவள் வரும்பொழுது என்னமணி யிருக்கும் என்று இரகசியமாகக் கேட்டறிந்து வரும்படியாகக் கூறினான். அவனும் போய்வந்து அன்றையதினம் பழனியம்மாள் வரவேயில்லை யென்று கூறியதாகத் தெரிவித்தான். இதைக்கேட்டதும் நாராயணனுக்கு பழனியம்மாளின்பேரில் சந்தேகம்பிறந்துவிட்டது. அன்றையதினம் பழனியம்மாள் ஸ்ரீனிவாச ஐயங்கார் வீட்டின் வாசற்படியினின்றும் இறங்கினதைக் கண்ணாரக்கண்டதால் அவள் எதற்காகவோ வந்தது வாஸ்தவமே. வந்ததும் கெடியாரத்தைப் பார்த்திருக்கிறாள். சட்-

டென்று அதை எடுத்துக்கொண்டு ஒருவருமறியாவண்ணம் போய்விடலாமென் றெண்ணியே போயிருக்கிறாள். அதை நாம் பார்த்துவிட்டோம். ஆம்! இதுவேதிண்ணம்'' என்று உடனே தீர்மானித்து விட்டான். இதிலிருந்து இதைக் கண்டு பிடிப்பதற்காகப் பலபல யோசனைகள்செய்து ஒரு முடிவிற்கு வந்தான்.

ஓர்நாள் இரவு பழனியம்மாள்வீட்டில் பழனியம்மாளும் ரங்கநாதபட்டரும் ஓர் தனி அறையில் சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். இதை ஸ்ரீனிவாச ஐயங்கார் வீட்டாருக்குத் தெரியாமல் அவ்வீட்டினின்றும் கேட்டுக் கொண்டிருந்த நாராயணன், சரேலென்று ஸ்ரீனிவாச ஐயங்காரரிடம் சென்று "அத்தான் இங்கே வாருங்கள்; தாமதியாமல் என் பின்னாலேயே வாருங்கள்'' என்று கூறி துரிதப்படுத்தினான். இவனைப் பார்த்ததும் ஸ்ரீனிவாச ஐயங்கார் வியப்புற்று, கொஞ்சநாளாக வாராதிருந்து இப்பொழுது இவன்வந்து அழைக்கவே நம்முடைய கெடியார விஷயமாக இவனுக்கு ஏதாவது உளவு அகப்பட்டிருக்குமென்று எண்ணித் திடீரென்று எழுந்திருந்து, நாராயணன் நேராக ஸ்ரீனிவாச ஐயங்கார் புத்தக அறைக்குச் சென்று அதன் ஜன்னல் வழியாகப் பழனியம்மாள் வீட்டில் அவர்களிருவரும் சம்பாஷிப்பதைக் கவனிக்கச் சொன்னான். ஸ்ரீனிவாச ஐயங்காரும் சரியென்று கூறி, உற்றுக் கவனித்தார். ரங்கநாதபட்டரும் பழனியம்மாளும் அடியிற் கண்டவாறு சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

ரங்கநாதபட்டர்:—அதை நீயேன் எடுத்துவந்தாய்? பேசாமல் கொடுத்துவிடு. வீணாகத்தெரிந்துவிட்டால் அவமானமாய் நேரிடும். உனக்கு இவ்விதபுத்தி யிருக்குமென்று நான் நினைக்கவில்லை. உனக்கெப்படி இவ்வெண்ணம் உதித்தது.

பழனியம்மாள்:—என் கெட்டகாலம் தான் போலி ருக்கிறது. நான் தெரியாமல் எடுத்துவந்து விட்டேன். கோபித்துக் கொள்ளாதீர்கள். இனி இவ்வித காரியம் செய்யமாட்டேன். நடந்தது நடந்துவிட்டது. இனி அக்கடிகாரத்தை அவர்களிடம் கொடுத்தால் நான் தான் எடுத்தே னென்பது பரிஷ்காரமாய்த் தெரிந்துவிடும். அதன் பிறகு என்னை எல்லோரும் கேவலமாக மதிப்பார் கள். இப்பொழுதாவது யாரோ எடுத்து விட்டார்க ளென்று நினைத்துக்கொண் டிருக்கிறார்கள். அப்படியே இருந்துவிடட்டும். இத்தப்பிதத்திற்கு மன்னியுங்கள்.

ரங்கனாதபட்டர்:—நீ நேரே அவர்களிடம் கொடுக்க வேண்டாமே; நீ எப்படி எடுத்தாயோ, அப்படியேகொண்டு போய் வைத்துவிட்டு வந்துவிடு. இது எப்படியும் ஒரு நாளைக்கு வெளிவந்துவிடு மென்பது திண்ணம். பாவம், இவ்விஷயத்தால் அடிக்கடி வந்துகொண்டிருந்த நாரா யணன் என்ற சிறுவனும் இப்பொழுது வராமலிருக்கிறான். பேசாமல் நான் சொல்லுகிறபடிகேள்; வீணாக எனக்கு அவமானத்தை யுண்டாக்காதே, என்றார்.

இச்சம்பாஷணையைக் கேட்டதும் ஸ்ரீனிவாச ஐயங் கார் மலைத்துப்போய்விட்டார். பழனியம்மாள் தான் எடுத்திருப்பா ளென்று அவர் சிறிதும் எண்ணவில்லை. அப்படியிருக்க, இப்போது அவர், "நான் எடுத்தது தப்பிதம், மன்னியுங்கள்" என்று ரங்கனாதபட்டரிடம் அவள் கூறித் தன் குற்றத்தை ஒப்புக்கொள்ளுவதை நேரில் கேட்டால் அவருக்கு ஆச்சரிய முண்டாயிற்று என்பதை நாம் கூறவேண்டுமோ? வாஸ்தவத்தில் பழனியம்மாள் தான் அக்கடிகாரத்தை எடுத்திருக்கிறாளென்று அவர்கள் சம்பாஷணையினின்றும் விளங்கிவிடவே ஸ்ரீனிவாச ஐயங் கார் நாராயணனைக் கூட்டிக்கொண்டு ஹாலுக்குவந்தார்.

அவ்விடத்திற்கு வந்ததும், நாராயணன் ஸ்ரீனிவாச ஐயங்காரைநோக்கி "அத்தான்! இப்பொழுது தங்கள் கடிகாரத்தை யார் எடுத்தார்களென்பது விளங்கிவிட்டதல்லவா?" என்று கூறினன்.

ஸ்ரீனிவாச ஐயங்கார்:—ஆம்! ஆம்! தெரிந்துவிட்டது. உன்மேல் சந்தேகங்கொண்டது பிசகு. நீதான் எடுத்திருப்பாய் என்று நான் தீர்மானமாய்க் கூறவில்லையே. எடுத்திருப்பாயோ, என்னமோ என்று சந்தேகம் கொண்டு தானே உன் அக்காள் உன்னைக்கேட்டாள். அப்படி அவள் சந்தேகம்கொண்டதும் நீ திருட்டுத்தனமாய் எடுத்திருப்பாயென்று நினைக்கவில்லை. நீ ஸ்கூலுக்குப் போவதால் எடுத்துப் போய் கொண்டுவந்து கொடுத்துவிடலா மென்று நினைத்து எடுத்திருப்பாய் என்றே அவள் கேட்டாள். அதற்காக நீ கோபித்துக்கொண்டு இவ்விடம் வருவதையே மறந்துவிட்டாய். அதுபோனல் போகிறது நீ இதை எப்படிக் கண்டுபிடித்தாய்? அதை விபரமாய்க் கூறு.

நாராயணன்:—அத்தான்! அக்காள் என்மேல் சந்தேகம்கொண்டு கேட்டதுமுதல் இதை எப்படியாவது கண்டுபிடித்து, அக்காள் என்மேல் கொண்டிருந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள வேண்டுமென்று எண்ணியிருந்தமையால் அக்கடிகாரத்தை யார் எடுத்திருப்பார்களென்று யோசித்தேன். என்னுடன்வந்த பிள்ளைகளெல்லாம் எடுக்கவில்லையென்று கூறிவிட்டமையால் மறுபடி யார்வந்து எடுத்திருப்பார்களென்று யோசித்து பார்க்கும்பொழுது, கடிகாரம் காணமற்போனதினம் இப்பழனியம்மாள் இவ்விடம்வந்து போனதை நான் பார்த்தமையால் அவள்மேல் சந்தேகித்து இதை யறியும்பொருட்டு தான் கிருஷ்ணனைவிட்டு அக்காளிடம் விசாரிக்கச் சொன்னேன். அக்காள் அன்றையதினம் அவள் வரவேயில்லையென்று

கூறிவிட்டமையால், சரி, அவளே அக்கடிகாரத்தைக் கைப் பற்றி யிருக்கவேண்டுமென்றெண்ணி அதைக் கண்டுபிடிப்ப தற்காக இராத்திரியில் தாங்களறியாமல் தங்கள் புத்தக அறைக்குவந்து பீரோவின் மறுபுறம் ஒளித்துக்கொண்டு அங்கு இருக்கும் ஜன்னலின்வழியாகப் பழனியம்மாளின் வீட்டிலுள்ள நடவடிக்கைகளைக் கவனித்து வந்தேன். இப் படி இரண்டுநாளாகியும் யாதொரு சங்கதியும் தெரியாம லிருந்தது. பழனியம்மாள் திருடியசங்கதி எப்படியோ பட்டருக்குத் தெரிந்து விட்டதுபோ லிருக்கிறது அதனால் தான் அவ்விதம் அவளிடம் வார்த்தையாடிக்கொண்டிருந் தார். அப்பொழுது நான் உற்றுக் கேட்டுக்கொண்டிருந் தமையால் உடனே சிறிதும் தாமதியாமல் தங்களை நேரில் கூட்டிக்கொண்டுபோய்க் காண்பித்துவிட்டேன். பிறகு அவர்கள் சம்பாஷணை தாங்களறிந்ததே'' என்று கூறினன்.

அதன் பிறகு ஸ்ரீனிவாச ஐயங்கார் அவனைப்புகழ்ந்து அவன்மேலிருந்த சந்தேகத்தைநீக்கி, முன் இருந்த அன்பை விட அவனிடம் அதிக அன்புகொண்டொழுகி தன்னிடமே வசிக்கும்படி கூறினாராயினும் நாராயணன் வெகு தந்திர மாக அவ்வார்த்தையை மாற்றிவிட்டான். இது நிற்க மேலே கவனிப்போம்.

ஸ்ரீரங்கத்தில் மார்கழிமாதம் சொர்க்கவாசல் என்ற ஓர் பெரிய திருவிழா நடப்பது எங்கும் பிரசித்தமானதே. அதற்கு அநேகம் ஊர்களினின்றும் ஜனங்கள் திரள் திர ளாகவந்து கூடுவார்கள். இவ்விதம் கூடும் கும்பல்களில் களவு நடப்பது சகஜமன்றோ? இப்படியாக இராப்பத்து இரண்டாம் திருவிழாவின் இரவு எட்டுமணிக்கு ரங்கநாதப் பெருமாள் அமர்ந்திருக்கும் சமயம் எதிரில் தொங்க விடப்பட்டிருந்த திரை விலக்கப்பட்டதும் தீபாராதனை ஆயிற்று. அதைக் கண்ணுற்ற ஜனங்க ளெல்லோரும்

எம்பெருமானை ஸ்தோத்திரம் செய்தார்கள். அதே சமயத்தில் கூட்டத்தின் நடுவிலிருந்து, "களவு! களவு!" என்ற கூக்குரல் கிளம்பிற்று. உடனே அவ்விடத்தில் விலக்க முடியாத கும்பல் கூடிவிட்டது. விசாரிக்கும் பொழுது திருச்சினாப்பள்ளியில் வசிக்கும் வக்கீல் ராமய்ய ருடைய குழந்தையின் கையிலிருந்த தங்க வளையலை ஓர் மாது கழற்றிவிட்டாளென்று தெரியவந்தது. அதுவாஸ் தவமே. வக்கீல் ராமய்யருடைய பெண்சாதி தன் ஒரு வயதுக் குழந்தையை இடுப்பில்வைத்துக்கொண்டு பெரு மானை சேவிக்கும் பொழுது அவளுக்குப் பின்னாலிருந்த ஓர் மாது அக்குழந்தையின் கையிலிருந்த வளையலைக் கழற்றிவிட்டாள். அவளுடைய கெட்டகாலத்தின் பய னாய் அதையொரு கான்ஸ்டேபிலே பார்த்துவிட்டதால் உடனே சிறிதும் தாமதியாமல் அம்மாதை நகையுடன் பிடித்து விட்டான். அம்மாது வாஸ்தவத்தில் நடுநடுங்கி விட்டாள். அதன் பிறகு அவளைப் போலீஸ் டேஷனுக்கு அழைத்துச்சென்று ரிமாண்டில் வைத்தார்கள்.

அம்மாதை யாரென்றும் நாம் யோசிக்கவேண்டிய தில்லை. அவளே பழனியம்மாள். அவளும் சொர்க்க வாசல் திருவிழாவைப் பார்ப்பதற்கே வந்தாள். சுவாமி தெரிசனத்திற்குவந்த இடத்திலும் அவளுக்கு இவ்விதமூட மதி தோன்றியது ஓர் அதிசயமே. அந்தோ! பரிதாபம்; இவ்வித குணமுள்ள பெண்களும் உலகத்தில் வசித்து வரு வது ஆச்சரியத்திலும் பேராச்சரிய மல்லவா? நிற்க, மறு நாளே ரங்கனாதபட்டர் முயற்சியின்பேரில் அவ்வூரில் வசிக் கும் பிச்சை ஆசாரி என்ற ஓர் தட்டானையும், இன்னும் ஓர் தக்க மனிதனையும் ஜாமீனாகக் கையெழுத்துப் போடச் செய்து பழனியம்மாளை மீட்டுவந்தார். அதன் பிறகு விசாரணை நடந்தது. அதில் பழனியம்மாள் கண்டிப்பாக

தண்டனை யடையவேண்டியவளே யாயினும் வக்கீல் சாமய்யர் சில வக்கீல்களைப்போல் கல்மனதுடையவ ரல்லாததாலும், தன் நகை கைக்கு வந்துவிட்டமையாலும் வீணுக அம்மாதை ஏன் கஷ்டத்திற் குள்ளாக்கவேண்டுமென்று பரிதாப முற்றவராய்ப் பழனியம்மாளை விடுதலை செய்யும்படியான மார்க்கத்தைச் செய்தார்.

பழனியம்மாள் விடுதலையானதும் ஸ்ரீரங்கத்தில் வசிப்பதற்கு வெட்கப்பட்டுக்கொண்டு தானிருந்தவீட்டைப் பூட்டி அதன் சாவியை மேற்படி பிச்சை ஆசாரியிடம் அளித்துவிட்டு, மதுரை போய்ச்சேர்ந்தாள். அவளுக்கு அங்கும் ஓர் நாயகன் கிடைத்து விட்டமையால்அவ்விடமே சௌக்கியமாகத் தன் காலத்தைக் கழிக்கலானுள். அந்த நாயகன் பெயர் தாமோதரன். அற்ப ஸகவாசமுள்ளவன். பழனியம்மாள் புத்திரியான ஸரஸ்வதி தன் தாயுடனேயே வசித்துவருகிறாள்.

ரங்கநாத பட்டருக்குப் பழனியம்மாள் செய்த துர்க்காரியங்களால் அவள்மேல் வெறுப்புத்தோன்றி, அவளை அடியோடு மறந்துவிட்டனர். கொஞ்சகாலம் வரையில் பழனியம்மாள் இருந்தவீட்டைக் கவனியாமலே யிருந்தார். அதன் பிறகு அவ்வீட்டைத்திறந்து யாரையாவது வாடகைக்குவைக்கலாமென்று யோசித்தார். இதை எப்படியோ அறிந்த பிச்சை ஆசாரி அவரிடம்வந்து, சுவாமிகளே! அவ்வீட்டைப் பழனியம்மாள் என்னிடம் ஒப்புவித்துப்போயிருப்பதால் அந்தம்மாள் வந்தபிறகு நீங்கள் எதுவேண்டுமாலும் செய்யுங்கள் என்று கூறினன். இதைக்கேட்ட ரங்கநாதபட்டர் சினங்கொண்டவராய், பிச்சை ஆசாரியை நோக்கி, "போடாபோ, பையித்தியக்காரனு யிருக்கிறய். பழனியம்மாளாவது திருப்பதியம்மாளாவது. யார்வீட்டை யார் ஒப்புவித்துப்போவது? என் வீட்டைத் திறப்பதற்கு

இன்னொருவருடைய அனுமதியைக் கேழப்பானேன். என்றுகூறி, இரண்டு மனிதர்களை வைத்துக்கொண்டு அவ் வீட்டின் பூட்டை உடைத்தார்.

பிச்சை ஆசாரி கூறினதைக்கேளாமல் ரங்கனுதபட்டர் அவ்வீட்டின் பூட்டை உடைத்துவிடவே, உடனே பிச்சை ஆசாரி போலீஸ்டேஷனுக்கு மனு கொடுத்துவிட்டான். மனுவைக்கண்ட போலீஸ் இன்ஸ்பெக்டரும் இரண்டு கான்ஸ்டேபில்களும் உடனே அவ்விடத்திற்குவந்து ரங்கனுதபட்டரிடம் மனுவைக் காண்பித்தார்கள். பட்டர் போலீஸாஸரநோக்கிச் சொன்னதாவது:—இன்ஸ்பெக்டரவர்களே! அவ்வீடு எனக்குச் சொந்தமானது என்பது இவ்வூரிலுள்ளோர் அனைவரும் அறிந்தவிஷயம். அவ்வீட்டில் பழனியம்மாள் என்பவள் குடியேறி யிருந்தாள். அவள் திடீரென்று வீட்டைப் பூட்டிவிட்டுப் போய்விட்டமையால் நான் என்னுடையவீட்டைத் திறப்பதற்காக அப்பூட்டையுடைக்க நேர்ந்தது. அப்பொழுது இந்தப் பிச்சை ஆசாரிவந்து தடுத்தான். நான் அவன் சொல்லுவதைக் கேளாமல் இரண்டு பெரிய மனிதர்களை வைத்துக்கொண்டு தான் அதன் பூட்டையுடைத்தேன். அவ்வீட்டிலுள்ள சாமான்களும் இதோவிருக்கின்றன. அவள் வந்தபிறகு எடுத்துக்கொள்ளட்டும். இவ்வளவுதான் நடந்த விஷயம். பிறகு நீங்கள் என்ன கூறுகிறீர்களோ அதன்படி நடக்கச் சித்தமா யிருக்கிறேன் என்று கூறினார். இதைச் செவியுற்ற இன்ஸ்பெக்டர் சிறிதுநேரம் யோசித்து இதில் சில சிக்கலான விஷயங்கள் இருக்கின்றன. எதற்கும் நீர் நாளை ஸ்டேஷனுக்கு வாருமென்று கூறிப்போய்விட்டார்.

இவ்விஷயங்கள் நடந்து சில மாதங்களாயின. மறுபடி அதைப்பற்றிய பிரஸ்தாபம் யாதொன்றும் நடைபெறவில்லை. பழனியம்மாளும் இரண்டொரு நாட்களில் இவ்

விடம் வந்துசேர்ந்தாள். அவள், தான் முன்னிருந்த வீட்டிலேயேவசிக்கலானாள். ஆனால் இவளிடமிருந்த தாமோதரன் என்பவன் இவளைக் கைவிட்டான் என்று தெரியவந்தது. ஸரஸ்வதி இப்பொழுது ஓர் அழகிய கன்னிகையாக விளங்குகிறாள். பழனியம்மாள் வந்த சிலநாள் வரையிலும் தான் முன் திருடி அகப்பட்டுக்கொண்ட வெட்கத்தினால் வெளிவராதிருந்தாள். அதன் பிறகு நாள் செல்லச்செல்ல முன்போலவே திரியலானாள். இவள் அதிகமாக பிச்சை ஆசாரி வீட்டிலேயே பொழுதைப் போக்குவாள். ரங்கநாதபட்டருக்கும் பழனியம்மாளுக்கும் பேச்சுவார்த்தை என்பதே இல்லாதுபோய்விட்டது.

இவ்விதமாய் பலநாட்கள் சென்றபிறகு திடீரென்று பழனியம்மாளும் பிச்சை ஆசாரியும் புறப்பட்டு ட்ரான்ஸ்வாலுக்குச் சென்றார்கள். அவர்கள் சென்ற காரியமாவது இன்னதென்று ஒருவருக்கும் தெரியாது. இவர்கள்சென்று சுமார் இருபத்தைந்து நாட்கள்கழிந்து திரும்பிவந்தார்கள். விசாரித்ததில் பழனியம்மாளின் புத்திரியான ஸரஸ்வதியை ரொக்கமாக ரூபாய் ஐயாயிரம் வாங்கிக்கொண்டு ட்ரான்ஸ்வாலில் ஓர் பிராமணப்பிள்ளைக்குவிவாகம்செய்துகொடுத்துவிட்டு வந்ததாகத் தெரியவந்தது. அந்தோ! பரிதாபம். பரிதாபம். ஓரறியாத பன்னிரண்டுவயது முற்றுப்பெறாத பேதைப் பெண்ணைத் தனக்கு வேண்டியமட்டும் பணத்தை வாங்கிக்கொண்டு மாட்டை விலைக்கு விற்பதுபோல் விவாகம் செய்துகொடுத்து, முகமறியாத அத்தேசத்திலேயே விட்டு வந்துவிடுவது எவ்வளவு பரிதாபகரமானது. அந்தோ! கொடுமை! கொடுமை! கொடுமை! இவ்வித கன்மனதுடைய தாயாரும் தாயாவாளோ? இல்லை யில்லை, ஒருக்காலும் தாயாகமாட்டாள். அப்பெண்ணுக்கு இடிக்கண் விளைவிக்கவந்த பேயென்றே கூறலாம். பழனியம்மாள் தன்

மகள் ஸரஸ்வதியைப் பிரிந்ததில் யாதொருவிதமான விசாரமும் இல்லாதிருந்தாள். அவள் தன் மகளை நினைக்கவேயில்லை. தனக்கு அப்பெண்மூலமாய்க் கிடைத்த ஐயாயிரம் ரூபாயையும் பார்த்தே மனம்பூரித்தாள். ஆ! இவளின் கருணையை நாம் என்னவென்று கூறுவது. பொதுவாகப் பெண்களுக்குச் சிறிதாகிலும் கருணை என்பது அமையும் என்பதைப் பலரும்கூறக் கேள்விப்பட் டிருக்கிறோம். அப்படியிருக்க அந்தோ! பழனியம்மாளுக்குக் கடுகளவாவது கருணை என்பது இல்லாதிருப்பது பெரிதும் விந்தைதான். இவள் ஜென்மமும் மானிட ஜென்மந்தானல்லவா? இவ்வாறாக பழனியம்மாள் ஸ்ரீரங்கத்தில் காலத்தைக் கழித்துவருகலானாள்.

---

## அத்தியாயம் 11

### துன்மார்க்கரின் முடிவு

ஸ்ரீரங்கம் வடக்குசித்திரை வீதியிலுள்ள ரங்கனாத பட்டர் வீட்டில் பழனியம்மாள் தனிமையிலேயே வசித்து வருகிறாள். அவளுக்கு இப்பொழுது வேறு ஒருவரும் ஆசை நாயகனாக ஏற்படவில்லை யாதலால் தனக்கு உதவி செய்த பிச்சை ஆசாரியையே தன் மோகவலையில் சிக்க வைத்தாள். அவனும் மதியிழந்து அவள் மையலிற்சிக்கி அவளுடன் சரசசல்லாபமாய் இருந்துவந்தான். ரங்கனாத பட்டர் சிறிது யோக்யரானதால் பழனியம்மாள் தன் வீட்டில் வசித்து வருவதைப்பற்றி யாதொன்றும் கவனியாமலிருந்துவிட்டார். இப்பொழுது பழனியம்மாள் யாதொரு கவலையுமின்றிச் சுகமாக வேளாவேளைக்குச் சாப்பிடுவதும் மற்ற நேரத்தைப் பிச்சை ஆசாரிவீட்டில் குதூகலமாகப் பொழுதைப் போக்குவதுமாக சில நாட்களைக் கழித்து வருகலானாள்.

இவ்விதம் வசித்துவரும் நாட்களில் ஓர் நாள் காலை பழனியம்மாள் சிற்றுண்டி அருந்திவிட்டு, பிச்சை ஆசாரி எங்கேயோ ஓர் ஊருக்குச் சென்றிருந்தமையால், தன் வீட்டிலேயே ஒரு புஸ்தகத்தை வாசித்துக்கொண் டிருந்தாள். அப்பொழுது இரண்டு மூன்று கான்ஸ்டேபில்கள் திடு திடு வென்று உள்நுழைந்தார்கள். பழனியம்மாள் இவர்களைக் கண்டதும் திடுக்கிட்டு நடு நடுங்கி எழுந்து நின்றாள். அவர்கள் உடனே அவளைநோக்கி 'நீ நாலைந்துவருடத்திற்குமுன் ஆண்டார்வீதியில் வசித்துவந்த பழனியப்ப செட்டியாரைக் கொலைசெய்ததாக வாரண்ட் பிறந்திருப்பதால், சட்டப்படி உன்னைக் கைதுசெய்கிறோம்'' என்று கூறினதும் அவள் கைக்கு விலங்குமாட்டி வெளியில் நின்ற வண்டியிலேற்றிக் கொண்டு போய்விட்டார்கள்.

இதைக் கண்ணுற்ற அவ்வீதியிலுள்ளோ ரனைவரும் பிரமையும், ஆச்சரியமுமடைந்து. ஆ! இப்பேர்ப்பட்ட கொடியவளா என்று அவளை வெறுத்தார்கள். அநேகர் 'இதோடு இவள் வாழ்நாள் முடிந்துவிட்டது போலும் அதனல்தான் நாலைந்து வருடங்களுக்குமுன் நடந்த கேஸ் இப்பொழுது கண்டுபிடித்து, இவள்தான் கொலைசெய்தவள் என்று தீர்மானித்து பிடித்துக்கொண்டுபோய்விட்டார்கள். அது இவளுடைய துர் அதிஷ்டமே அல்லவா? என்றார்கள். இச்செய்தி சிறிதுநேரத்திற்கெல்லாம் அவ்வூர் முழுதும் பரவிவிட்டது. இதைப்பற்றி அநேகர் அநேகவிதம் எண்ணினார்கள். நிற்க பழனியம்மாளைப் பிடித்துக்கொண்டு போன மறுதினமே கோர்ட்டில் விசாரிக்கப்பட்டது. அதில் அவள் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு கூறியதாவது.

கோர்ட்டா ரவர்களுக்கு பேதையாகிய நான்தெரிவிப்பது யாதெனில்; நான்தான் மேற்படி செட்டியாரவர்களைக்

கொலைசெய்தே னென்பதை வெகுபணிவுடன் ஒப்புக்கொள்ளுகிறேனாயினும் அதை நான் என் சுயபுத்தியுடன் செய்யவில்லை யென்பது இப்பொழுது நான் கூறப்போகும் விஷயத்தினின்றும் தெள்ளென விளங்கும்.

நான் கும்பகோணம் பிரபல வக்கீலாகிய இராமசுவாமி ஐயருடைய மகள். என் சொந்தப்பெயர் குலசேகரி; என்னை என் தகப்பனார் ஸ்கூலில் கல்வி பயிலும்படி விட்டு இருந்தபொழுது தகாத சிநேகிதைகளுடன் ஸகவாசம்செய்தமையால் அவர்களுடைய துர்க்குணமே எனக்கும் படிந்திருந்தது. அதனால் என்னை மணம் செய்துகொள்ள அநேகர் மறுத்தனர். அப்பொழுது திருவையாற்றில் வசிக்கும் சுந்தரமையர் குமாரனான ஞான சேகரனுக்கு என்னை என் தந்தை மணமுடித்தார். பிறகு எனக்கு சாந்திக்கல்யாணம் நடந்து என் மாமனார்வீட்டை யடைந்தேன். என் புருஷனான ஞானசேகரன் என்பவருக்கு என்னுடைய குணம் சிறிதும் பிடிக்காமையால் என்னுடைய முகத்தைக்கூட ஏறெடுத்துப் பாராம லிருந்தார். இவ்வித மிருந்து வருகையில் அடுத்தவீட்டில் வசித்துவந்த கோபாலன் என்னும் வாலிபனால் நான் மயக்குண்டு வெளியேறினேன் அவன் என்னைக் கூட்டிவந்து ஆண்டார் வீதியில் ஒரு வீட்டில் அமர்த்தினான். சில மாதங்களுக்குள் நான் அணிந்திருந்த நகைகளில் முக்கால் பாகம்வரையில் சாப்பாட்டுக்கே சரியாய் விட்டமையால் அவ்வாலிபன் சமயம் பார்த்து என்னைக் கைவிட்டுப் போய்விட்டான். அதன் பிறகு நான் பின்னும் இருக்கும் நகைகளைவிற்று காலக்ஷேபம் செய்யலானேன். என்னுடைய பெயர் இன்னதென்று வெளியில் தெரிந்தால் என்னுடைய மாமனார் வீட்டிற்கும், என் தகப்பனாருக்கும் கேவலமும் அவமானமு முண்டாகுமென்று மனோகரி என்று மாறுபெயர்

வைத்துக் கொண்டேன். இவ்விதம் மாறுபெயர் வைத்து கொண்டு வசித்துவரும் நாளில் எப்படியோ கொலையுண்ட பழனியப்ப செட்டியார் என்னிடம் சிநேகமானார். பிறகு அவர்மூலமாகவே என்னுடைய வாழ்நாளைக் கழித்துவந் தேன். ஓர்நா ளிரவு பழனியப்பசெட்டியார் கடைக்குப் போயிருக்கும் சமயத்தில் அவருடைய சமயற்காரனாகிய முனியாண்டி என்னிடம்வந்து ரகசியமாக "அம்மா நீங்கள் இவ்விதம் எத்தனைநாளைக்குக் காலம் கழிப்பீர்கள். கையில் தாராளமாய் பணம் இருந்தாலல்லவோ யாருக்கும் மனம் சந்தோஷமா யிருக்கும். அது இல்லாமல் இந்தச் செட்டியார் கொடுக்கும் சிறு தொகை உங்களுக்கு எப் படிப்போதும். அப்படிப் போதுமானாலும் நீங்களுள்ள வரையிலும் இந்தச் செட்டியார் காப்பாற்றுவா ரென்பது என்ன நிச்சயம். எதற்கும் கையில் மிகுதியாகப் பணம் வைத்துக்கொண்டாலல்லவா சமயத்திற்கு உதவும். நீங்கள் எப்படித்தான் அவர் கொடுக்கும் பணத்தைக்கொண்டு ஜீவித்து வருகிறீர்களோ அது எனக்கு விந்தையாகத்தா னிருக்கிறது என்று கூறினான். அதற்கு நான் "முனி யாண்டி! நாம் என்னசெய்வது? நம்முடைய தலையெழுத் துப் பிரகாரம்தானே நடக்கும்" என்று கூறினேன். இதைக் கேட்டதும் அவன் "தலையெழுத்து என்ன செய்யும். நாம் சிறிது முயற்சி எடுத்தால் நமக்கு ஏன் பெருந்திரவியம் கிடைக்காது" என்று புதையிலிருப்பிடத் தைப்பார்த்து வந்தவன்போல் கூறினான். நான் வெகு ஆச்சரியத்துடன் எப்படி யென்று வினவியதற்கு வெகு ரகசியமாக என் பக்கத்தில்வந்து குசுகுசுவென்று "இந்தச் செட்டியாரைக் கொன்றுவிட்டால் நாம் என்றும் காணாத திரவியத்தை யடையலா மென்பதற்கு யாதொரு ஆக்ஷே பனை இல்லை" என்று கூறினான்.

இம்மொழிகளைக் கேட்டதும் எனக்குத் திகைப்பு உண்டாய்விட்டது. மிரளமிரள விழித்தேனேயன்றி யாதொரு பதிலும் கூறத்தோன்றவில்லை. அதைக்கண்ட அவன் வெகு பணிவாகவும் மிகு உறுதியாகவும் சில வார்த்தைகளைக்கூறி எப்படியோ என்னை அக்காரியத்திற் திற்குட்படுத்திவிட்டான். நானும் பணம் வருமென்கிற பேராசையினால் முன்பின் யோசனையின்றி அக்காரியத் திற்கு உடன்பட்டுவிட்டேன். உடனே அவன் சிறிது நேரத்திற்குள் எங்கேயோ வெளியில் சென்றுவந்து, ஓர்வித பாஷாணமருந்தை என்னிடம் கொடுத்து, இராத்திரிக்குச் செட்டியாருக்கு கொடுக்கும் பாலில் கலந்து கொடுத்து விடுங்கள் என்று கூறிப் போய்விட்டான்.

பழனியப்பசெட்டியார் அதிகமாக இரவில் என்வீட்டி லேயே நித்திரைசெய்வது வழக்கமானதால் அன்றிரவும் அவர் என் வீட்டிலேயே நித்திரை செய்வதற்காக வழக்கப் பிரகாரம் இரவு சுமார் பத்துமணிக்கு வந்துசேர்ந்தார். அன் றையதினம் அவர் முகத்தில் என்றுமில்லாத சந்தோஷக் குறிகள் காணப்பட்டன. நான் உடனே அவரைநோக்கி "என்ன சங்கதி; இன்றையதினம் வெகு சந்தோஷத்துடன் இருக்கிறீர்களே?" என்று வினவினேன். அதற்கு அவர் "இன்றையதினம் எனக்குச் சரியான வியாபாரம் நடந்தது. அதில் எனக்கு அதிகம் இலாபம் கிடைத்தமையாலேயே நான் சந்தோஷத்துட னிருப்பதற்குக் காரணம்" என்று தெரிவித்தார். இதைக் கேட்டதும் எனக்கு அதிக ஆச் சரியமாய்விட்டது. 'அப்படியானால் எவ்வளவு தொகைக்கு வியாபாரம் நடந்தது?' என்று வினவினேன். அதற்கு அவர் வெகு சந்தோஷத்துடன் என்னைநோக்கி "ஏன்? சரி யாக ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு வியாபாரம் நடந்து. இவ் வளவு தொகைக்கும் ஒருவனிடமேதான் வியாபாரம் செய்

தேன். அவனும் வியாபாரத்திற்காகத்தான் சரக்கு மிகுதியாகக் கட்டிக்கொண்டு போகிறான். எப்படியோ நமக்கு பணம் வந்துவிட்டது. இதோபார் சாவி; இப்பொழுது தான் அப்பணத்தையெல்லாம் என் இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டு வருகிறேன். என்று மனமடங்கா மகிழ்ச்சியுடன் கூறித் தன் இடுப்பில் சொருகியிருந்த சாவியை எடுத்து என்னிடம் காண்பித்தார்.

பிறகு நாங்களிருவரும் சயன அறைக்குச்சென்றோம். செட்டியார் இரவில் தினமும் பால் சாப்பிடுவது வழக்கமானதால் அப்பாலிலேயே மேற்படி பாஷாணத்தைக் கலந்து கொடுத்துவிட்டேன். அவரும் அதைவாங்கிச் சிறிதும் யோசியாமல் தாராளமாகக் குடித்துவிட்டார். குடித்தது தான் தாமதம் உடனே மயக்கம் வருகிறது. என்று கூறி மஞ்சத்தில் படுத்துவிட்டார். படுத்தவர் தான் அப்படியே பிரேதமாய்விட்டார். எனக்கு அப்பொழுது மிகவும் பயங்கரமா யிருந்தது. அதேசமயத்தில் சமயற்காரனாகிய முனியாண்டி வந்துசேர்ந்தான். அவனைக் கண்டதும் நான் காரியம் முடிந்துவிட்டது. என்றுகூறி செட்டியார்மேலிருந்த உயர்ந்த வைரமோதிரம், தங்க அரைஞாண், பொன் கடிகாரம், வைர பொத்தான்கள், முதலிய விலையேறப்பெற்ற சாமான்களைக் களைந்து எடுத்துக்கொண்டேன். அவன் உடனே அப்பிரேதத்தைத் தூக்கிக் கொண்டுபோய் அவர் வீட்டிலேயே வைத்துவிடுவதாகக் கூறினன். நான் அதற்குச் சம்மதித்து 'செட்டியாரின் இரும்புப் பெட்டியைத் திறந்துபார். அதில் ஐம்பதினாயிரம் ரூபாய் இருக்கிறது. அதை எடுத்துவா" என்று கூறி இரும்புப்பெட்டியின் சாவியை அவனிடம் அளித்தேன். அவனும் சரியென்று வாங்கிக்கொண்டு செட்டியாரின் பிரேதத்தைத் தூக்கிச் சென்றான். நான் அப்பொழுது

தனிமையி லிருந்தமையால் எனக்கு மிகவும் பயங்கரமா யிருந்தது. ஆதலால், உடனே முன்னமேயே செட்டியா ரின்பேரி லிருந்து கழற்றிய சாமான்களைக் கையிலெடுத் துக்கொண்டு, முனியாண்டிக்கு நான் போகும் இடத்தை ஓர் அர்த்தம் விளங்காத அதிசயக் கடிதமாக எழுதி அவன் வந்தவுடன் பார்க்கும் வண்ணம் ஓர் இடத்தில் வைத்து விட்டு, ஸ்ரீரங்கம் மேல்அடையவளஞ்சான் வீதியிலுள்ள எனக்குத் தெரிந்த ஒருவீட்டில் தங்கினேன். மறுநாளிரவு முனியாண்டி வந்து இரும்புப் பெட்டியில் பணம் இல்லை யென்றும் நம்மைப் பிடிக்கப்போக பல ஆட்கள் திரி கிறார்களென்றும் கூறி நாம் எங்காவது இப்பொழுதே போகவேண்டும் என்றும் கூறினன். நான் அச்சத்தினல் மெய்நடுங்கி அவன் கூறியவாறே சம்மதித்தே. மறுநா ளிரவு முனியாண்டிவந்து என்னைக் கூட்டிக்கொண்டு போனன். உடனே சென்னைக்குப்போய்ச் சேர்ந்தோம். அவ்விடம் சிறிதுகாலம் வசித்துவந்தோம். ஓர்நாள் முனி யாண்டியிடம், செட்டியாரிடமிருந்து எடுத்துவந்த வைர மோதிரத்தைக் கொடுத்து விற்றுவரும்படி கூறினேன். அவனும் அப்படியே அதை நாலாயிரம் ரூபாய்க்கு விற்று வந்து கொடுத்தான். ஆனல் அவன்மேல் எனக்குச் சற்று சந்தேகமாகவே யிருந்தது. ஏனெனில் அம்மோதிரம் அவ்விலையைவிட இன்னும் அதிகவிலைபெறும். ஆதலால் இவன் ஏதோ இதில் சூதுதான் செய்திருக்கிறன் என்று என் மனதில் புலப்பட்டது. மறுநாள் ஒருவர் மூலமாக எனக்கு ஓர் தினசரிப் பத்திரிகை கிடைத்தது. அதைப் படித்துக்கொண்டு வரும்பொழுது ஓர் விளம்பரம் என் கண்முன் தோன்றியது. அதில் பழனியப்ப செட்டியார் கொலை செய்யப்பட்டாரென்றும் அவரை அவர் வேலைக் காரனை முனியாண்டியே கொலைசெய்துவிட்டு அவர்மேல்

அணிந்திருந்த சில ஆபரணங்களையும் இரும்புப்பெட்டியி லிருந்த சுமார் ஐயாயிரம் ரூபாயையும் எடுத்துக்கொண்டு எங்கேயோ ஓடிவிட்டானென்று எழுதி யிருந்தது.

இதைக் கண்ணுற்றதும் எனக்கு முனியாண்டிபேரில் பலத்த சந்தேகம் ஏற்பட்டது. இரும்புப்பெட்டியிலிருந்த பணத்தை எடுத்துக்கொண்டே நம்மிடம் இல்லையென்று பொய் கூறிவிட்டா னல்லவா? என்று எனக்கு அவன்மேல் குரோதம் உண்டாயிற்று. அதுமுதல் அவனை என்னிடம் வசிக்காமல் நீக்கிவிட்டேன். அதன் பிறகு அவனைப்பற் றிய சமாச்சாரம் யாதொன்றும் எனக்குத் தெரியாது. சில நாள் கழித்ததும் எனக்கு அவ்வூரில் இருக்கப் பிரியமில்லை யாதலால் உடனே புறப்பட்டு ஸ்ரீரங்கம்வந்து சேர்ந் தேன். அதன் பிறகு நடந்த வர்த்தமானமெல்லாம் நான் கூறவேண்டியதில்லை; யாவருக்கும் தெரிந்திருக்குமென்றே நம்புகிறேன். நான் இப்பொழுது என் உயிரைவெறுத்தே இவ்வளவு சமாச்சாரத்தையும் கூறினேன் என்பதை நீங் களே யறிந்திருப்பீர்கள். என்னை என் பெற்றோர்கள் சிறு வயதிலேயே நன்னடக்கைக் குட்படுத்தியிருந்தால் நான் இவ்வளவுதூரம் பாபவழிக்கு வந்திருக்கமாட்டேன் என் பது திண்ணம். கடந்துபோன விஷயத்தைக் குறித்து இனிச் சிந்திப்பதில் சிறிதும் பிரயோஜனமில்லை. அவரவர் ஊழ்வினையின் பிரகாரம் எதுவும் நடக்குமாயினும் என் னுடைய குணத்தின் தோஷத்தினாலேயே நான் முற்றிலும் கெட்டேன். இனி நீங்கள் எவ்விததண்டனை விதித்தாலும் சிறிதும் வருத்தமின்றி ஏற்றுக்கொள்ளத் தயாரா யிருக் கிறேன். ஆனால் நான் இனி இவ்வுலகில் இருக்கப்படாது. ஆதலால் எனக்குத் தூக்குத் தண்டனையே சிறந்தது. அதையே எனக்கு அளிக்குமாறு மிகவும் வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்றுகூறி வெகு பணிவுடன்

நின்றாள். அந்தோ! விபசாரத்தின் முடிவு இதுதான் போலும்.

உடனே இரண்டு சேவகர்கள் விலங்கு மாட்டப்பட்ட ஓர் மனிதனைக் கொண்டுவந்து நிறுத்தினார்கள். அவனைக் கண்டதும் அம்மாது, "ஆ! நீயும் அகப்பட்டுக் கொண்டனையா? துரோகியே! உன்னாலல்லவா உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்ததுபோல் எனக்கு யாதொரு குறைவுமின்றி அன்னவஸ்திரம் அளித்துவந்த புண்ணியவானைக் கொலைசெய்து இக்கதிக்காளானேன்." என்று கூறி வெறுப்புடன் நின்றாள். உடனே அம் மனிதனும் விசாரிக்கப்பட்டான். அவன் கூறியதாவது:—

துரைகளே! நான் இப்பொழுது மிகவும் உயிரின்மேல் வெறுப்புற்றிருக்கிறேனாதலால் நீங்கள் எவ்விதமான தண்டனை விதித்தாலும் அதைச் சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிறேன். ஆனால் நான் சில விஷயங்களை மாத்திரம் கூற விரும்புகிறேன். அனாவசியமான விஷயங்களைக் கூறிப் பொழுதைப் போக்குவதால் கோர்ட்டாருக்கு அதில் சிறிது சிரமமிருக்கலாம் அதற்காக என்னை மன்னித்துப் பொறுத்தருளக் கோருகிறேன். இனி நான் கூறவேண்டிய சில சங்கதிகளைக் கூறுகிறேன்.

நான் பிறந்தது வேலங்குடி என்னுமோர் கிராமம், என் பெயர் முனியாண்டி. என் தாய்தந்தையர்கள் என் சிறுவயதிலேயே என்னைத் தனிமையில்விட்டு இம்மண்ணுலகினின்றும் விண்ணுலகெய்தினர். அதிலிருந்து நான் என் தாய்மாமனால் வளர்க்கப்பட்டேன். அவர்கள் நான் தாய்தகப்பனற்ற பிள்ளையென்று வெகு செல்வமாக வளர்த்தார்கள். அதனால் நான் சில கெட்டபிள்ளைகளுடன் சேர்ந்து அவர்கள் செய்யும் துர்க்கிருத்தியங்களையே நானும் கையாடி வந்தேன். எனக்கு வாலிபதிசைவந்த இரண்டு வருடத்திற்

குள் என் தாய்தந்தையர் சேர்த்துவைத்திருந்த சொத்தில் முக்கால்பாகம்வரையில் அழிந்துவிட்டது. அதைக்கண்ட என் தாய்மாமனும் இன்னொருமனிதனும் கூடியோசித்து எனக்குக் கலியாணம் செய்துவிட்டால் அடங்கிவிடுவே னெனக்கருதி ஓர் பெண்ணைப்பார்த்து சிறுபொருள் செலவு செய்து எனக்கு விவாகத்தை முடித்தார்கள். அப் பொழுதுதான் எனக்குக் கவலைதோன்றினமையால் சம் பாதிக்கும் வழியைத் தேடினேன். எனக்குக் கல்வியென் பது மிகவும் பூஜ்யம். ஏதோ தட்டுத்தடுமாறி சிறிது எழு தப் படிக்கத்தெரியும். நான் சம்பாதிப்பதற்காக வேலை தேடிக்கொண் டிருக்கும்பொழுது என் வீட்டிற்கு அடுத்த வீட்டுகாரர் என்னிடம்வந்து "அப்பா முனி யாண்டி! நீவேலையில்லை யென்கிறாயே அதற்குநான் ஒரு வழிசொல்லுகிறேன்கேள். இப்பொழுது கோட்டையூர் ப. ள. ரு. ம. வீட்டில் சமயல்செய்ய ஆளில்லை. நீ உடனே சென்று அந்த வேலையை ஒப்புக்கொண்டால் மிகு மேன் மையாகும் என்று கூறினர்.

நான் உடனே அவர்சொல்படியே பழனியப்பசெட்டி யார் வீட்டையடைந்து சமயல்வேலையி லமர்ந்தேன். சில வருஷங்களுக்கெல்லாம் பழனியப்பசெட்டியார் இவ்விடம் வந்து இமிடேஷன் வர்த்தகம்செய்யும் கடைவைத்துக் கொண்டு வசிக்கலானர். நானும் இவருடன்கூடவே வந்து அவருக்குச் சமயல்செய்து போட்டுக்கொண் டிருந்தேன்.

அப்பொழுது எனக்கு ஒரு கெட்ட எண்ணம் உதித் தது. அதாவது, இந்தச் செட்டியாரைக் கொன்றுவிட்டு அவரிடம் இருக்கும்பொருளைக் களவுசெய்து கொண்டு போய்விட்டால் கஷ்டமின்றி வாழலாமென்பதே. உடனே நான் அதற்கு வேண்டிய யோசனைசெய்து அநேகமாக செட்டியார் இராக்காலங்களில் தன் வைப்பாட்டி வீட்டி

லேயே சயனிப்பது வழக்கமானதால், அவரை அவர் வைப்பாட்டியாக விருந்த மனோகரி என்ற இம்மாது மூலமாகவே காரியத்தை முடித்துவிட்டால் நம்மீதுபழி ஏற்படாமல் போய்விடுமென் றெண்ணி அதற்காகவேண்டிய ஏற்பாடு செய்தேன். என் எண்ணப்பிரகாரம் காரியம் முடிந்ததும் செட்டியார் பிரேதத்தைத் தூக்கிவந்து அவர் அறையில் போட்டுவிட்டு, மனோகரி என்ற இந்தம்மாள் கொடுத்த சாவியைக்கொண்டு செட்டியார் இரும்புப் பெட்டியைத் திறந்து பார்த்தேன். அதில் ஐம்பதினாயிரம் ரூபாய் ரொக்கமாகவும் சில நகைகளும் இருந்தன. அவற்றை எடுத்துக்கொண்டு இந்த மனோகரி அம்மாள் வீட்டிற்குவந்து பார்த்தேன். அங்கு ஒருவரையும் காணோம். சுற்றுமுற்றும் பார்த்தேன். அங்கு ஒரு இடத்தில் ஓர் அர்த்தம் விளங்காத அதிசயக் கடிதம்மாத்திரம் எழுதி வைக்கப்பட்டிருந்தது. அதை நான் பிரித்து தட்டுத்தடுமாறி வாசித்தறிந்துகொண்டு புறப்பட்டேன். அப்பொழுது என் மேல்வஸ்திரம் செட்டியார் அறையிலேயே வைத்துவிட்டமையால் அது ஞாபகம்வந்தது. அது அவ்விடம் இருந்தால் ஏதாவது கெடுதலாக நேருமோவென்று பயமேற்பட்டதால் உடனே அவ்விடம்சென்று அவ்வஸ்திரத்தை எடுத்துவந்தேன். அந்த அவசரத்தில்தான் அக்கடிதத்தை எங்கேயோ நழுவ விட்டுவிட்டேன்போ லிருக்கிறது.

பிறகு மணிக் கூண்டிற்குக் கிழக்கேயுள்ள என் வீடடைந்து நடந்த சமாச்சாரத்தை என் பெண்சாதியிடம் அறிவிக்காமல், யார்வந்து என்னைக் கேட்டாலும் இல்லையென்று கண்டிப்பாகக் கூறும்படி திட்டம் செய்திருந்தேன். மறுநாள் இவ்விஷயம் எங்குப்பார்த்தாலும் பரவிவிட்டது. நான் நினைத்திருந்ததற்கு விரோதமாக நான்தான் பழனியப்ப செட்டியாரை கொலைசெய்துவிட்டு எங்கேயோ

ஓடிவிட்டேனென்று எங்கும் வதந்தியா யிருந்தது.

இச்செய்தியைச் செவியுற்றதும் நான் திகிலடைந்து "கெடுவான் கேடுநினைப்பான்" என்றபடி நான் ஒன்று நினைக்க அது ஒன்றாய் விளைந்துவிட்டதே என்று வருந்தினேன். மனோகரி அம்மாளைப்பற்றி ஒருவரும் கவனிக்கவில்லை. இதைக்கண்டதும் நான் பயந்து இனி அவ்விடம் இருக்கலாகாதெனக் கருதி மனோகரி அம்மாள் குறிப்பிட்ட இடமாகிய ஸ்ரீரங்கம் மேல்அடைய வளஞ்சான் வீதியிலுள்ள ஆறும் நம்பர்வீட்டிற்கு அன்றிரவே சென்றேன். சென்றதும் அம்மாதிடம் இரும்புப்பெட்டியில் பணம் இல்லையென்று பொய்கூறிவிட்டு மறுபடியும் அம்மாதை நோக்கி நம்முடைய ரகஸியம் வெளியாய்விட்டதால் நம்மைக் கண்டுபிடிப்பதற்காக பல ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கின்றன. ஆதலால் நாம் வேறு எந்த ஊருக்காவது சென்றுவிடவேண்டுமென்று கூறினேன்.

அம்மாதும் பயந்து அதற்குச் சம்மதித்ததால் மறுநாளிரவு நாங்களிருவரும் சென்னைக்குப் போவதாகப்புறப்பட்டு அதற்கு மறுநாள் சென்னையை அடைந்தோம். சிலகாலம் அவ்விடமே வசித்துவருகையில் திடீரென்று மனோகரி அம்மாள் என்னை வெறுத்துவிட்டமையால் நான் உடனே என் பெண்சாதியை வரவழைத்துக்கொண்டு அவ்விடமே வசித்துவந்தேன். இப்படி யிருக்கும்பொழுது ஓர்நாளிரவு சில கொள்ளைக்காரர்கள் நான் வசித்துவந்த வீட்டினுள் நுழைந்து நான் வைத்திருந்த திரவியம் முழுமையும் களவாடிக்கொண்டு போய்விட்டார்கள். அந்தோ! செட்டியாருடைய கொலைக்கு உடைந்தையாயிருந்து கொண்டுவந்தரூபாய் ஐயாயிரமும் கள்வர்களுக்கே அர்ப்பணம் செய்துவிட்டேன்.

அதன்பிறகு நான் மனோகரி அம்மாளிடம் வசிக்கும்

பொழுது செட்டியாரிடமிருந்து களவாடி வந்த வைரமோதிரத்தைவிற்றதில், நான் ஆயிரம் ரூபாய் சூரையாடி பாங்கியில் போட்டிருந்தேன். ஆதலால் அப்பணமே என்னுடைய கஷ்டத்திற்கு உதவியது. அந்தச் சமயம்பார்த்து என் பெண்சாதி என்னிடமிருக்கப் பிரியமில்லாமல் சோரநாயகனைச் சேர்த்துக்கொண்டு எங்கோ சென்றுவிட்டாள். அவள் சென்றுவிட்டதிலிருந்து சில நாள்பரியந்தம் சாப்பாட்டிற்கு யாதொருவழியுமின்றி கஷ்டப்பட நேர்ந்தது. அதேசமயம் என்மேல் கொலைக்குற்றம் சாட்டப்பட்டு இவ்விடம் வந்தேன். இனி என்னை என்னதண்டனைக்குட்படுத்தினும் அதன்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன்.

அறிவு நிறைந்த அறிவாளர்களே! இவ்வளவுக்கும் காரணம் என்னவெனில், நான் என் சிறுவயதில் யாருக்கும் கட்டுப்படாமலும் கல்வி கற்காமலும் கேளி விலாசமாய்த் திரியும்பொழுது என்னையாரும் அடக்குவாரின்றி என் போக்கின்படி விட்டு விட்டமையாலே யாகும். சிறுபோதில் கல்வி கற்காமலும் பெரியோர்கள் பேச்சைக் கேளாமல் கெட்ட ஸகவாசமுள்ள பிள்ளைகளுடன் சேர்ந்துகொண்டு பல அடாதகாரியங்கள் செய்பவர்களெல்லாம் முடிவில் கஷ்டமே யடைவார்களென்பதற்கு நானே திருஷ்டாந்தமாவேன். இவ்வளவே நான் கூறவேண்டியவிஷயம் என்று கூறித் தலை குனிந்து நின்றான்.

உடனே நீதிபதி அவர்களைநோக்கி நீங்களிருவருமே இக்கொலையைச் செய்தோமென்று குற்றத்தை ஒப்புக்கொள்ளுவதாலும் சாக்ஷிகளின் வாக்கு மூலங்களினாலும் உங்களை மரணபரியந்தம் தீவாந்தரவாசம் செய்யும்படியாக தீர்ப்பளிக்கிறோம் என்று கூறிமுடித்தார்.

உடனே சேவகர்கள் அவர்களுக்கு விலங்கிட்டு அழைத்துச் சென்றார்கள்.

அன்பும் அறிவும் நிறைந்த சகோதர சகோதரிகளே! நாம் இவர்களால் அறிந்துகொள்ளவேண்டிய விஷயம் சில விருக்கின்றன. அதை நமக்குத் தெரிந்தவரையில் இங்குக் கூறுவோம். அதில் குற்றம் குறைகளிருப்பின் அவற்றை நீக்கிக் குணத்தைக் கிரகிப்பீர்களென்றே நம்புகிறோம். இதையும் சிறிது கவனத்துடன் படித்தால் உண்மை விளங்கும்.

"பெண்களுக்கே முக்கிய ஆபரணம் கற்பாகும். அதைக் காப்பாற்றுபவர்களே பெண்களிற்சிறந்த பெண் மணிகளாவார். அவர்களே உத்தமிகளெனப் போற்றப் படுவார்கள். அந்தோ! கற்பையிழந்து திண்டாடித்திரியும் அநேகம் ஸ்திரீகளை நாம் நேரில் பார்த்திருக்கிறோம். அவர்களின் நிலைமை மிகவும் பரிதாபகரமானது. அந்தோ! இவர்கள் முன்யோசனையின்றி செய்யுங்காரியங்களை யோசிக்கின். ஒருபக்ஷியானது வேடனொருவனு லிடப்பட்ட வலையிலிருக்கும் இரைக்காக ஆசையுற்று வெகு சந்தோஷமாக அந்த இரையைப் புசிக்கப்போய் வலையிற்சிக்கி தப்பிப்போக வழி தெரியாமல் திண்டாடுவதுபோ லிருக்கிறது. ஆ! இவர்களின் மூடமதியை நாம் என்னவென்று கூறுவது. கேவலம் சிறுபிராணியும் அனுபவிக்கக் கூடிய அற்ப இன்பத்தைச் சதமென்றெண்ணித் தன் உயிரினும் சிறந்த தன் கற்பையிழக்கக் கூடியவள் பேதையிலும் பேதையாவாள் என்பதில் யாது தடை? நாம் செய்யும் ஒவ்வொரு குற்றத்தையும் கடவுள் அணுவளவும்விடாது கவனித்து வருகிறார் என்பதை ஒவ்வொருவரும் கவனத்தில் வைக்கவேண்டும். அப்பொழுதுதான் எல்லாருக்கும் மனதில் துர்ச்சிந்தை உண்டாவதற்கு மார்க்கமிராது.

"தெய்வந்தொழா அள்கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யுமழை"

(பிறதெய்வத்தை வணங்காது கணவனைத் தொழு தெழுபவள் பெய்யென்றுசொல்ல மழைபெய்யும்.)

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனர் அருளியபடி கற்பைக்காத்து கணவனுடன் வாழ்பவளுக்கு அவ்வளவு மகிமை இருக்கிறது. அந்தோ! அப்பேர்ப்பட்ட மகிமையை இழக்கத்துணியும் ஸ்திரியை நாம் என்னவென்றுரைப்பது.

ஒரு ஸ்திரீக்குக் கணவனைவிட சிறந்ததெய்வம் வேறொன்றுமில்லை. கணவனைத்தொழுது அவன் விருப்பத்திற்கிணங்கவே எல்லாக்காரியங்களையும்செய்து அவனுடன் கூடி இல் வாழ்க்கையில் சிறிதும் பிசகின்றி நடத்துபவளே மங்கையர்க் கரசியென்றும், கற்புக்கரசியென்றும், உத்தமியென்றும், பலவாறு போற்றப்படுவாள். ஆதலால் தங்கள் தங்கள் கணவர்களையே தெய்வமென மதித்துப் பூஜித்து இல்லறம் நடத்துவீர்களானல் ஒவ்வொருவரும் முடிவில் மோக்ஷ சாம்ராஜ்யம் அடைவீர்களென்பது நிச்சயம். "மானம் படவரின் வாழாமை முன்னினிதே" என்றபடி மானம்போய் இத்தரையில் வாழ்வதைவிட இறப்பதே மேலாகும்.

ஆண்பிள்ளைகளுக்கோ அவசியம் கல்வி தேவையானது. கல்வியில்லாதவன் கடையனெனப்படுவான். இதனலேயே ஔவையார் "கற்கை நன்றே கற்கை நன்றே பிச்சைபுகினும் கற்கை நன்றே" என்று கூறியிருக்கிறார்கள். கல்வி கல்லாதவன் பல கெட்ட செய்கைகளுக்கே உட்படுகிறான். அப்படிக் கெட்ட நடவடிக்கைகளுக்கு உட்பட்டவன் முடிவில் துன்பமே யடைகிறான். அந்தோ! இவ்விதம் துன்பமடைந்த பலரை நாம் நம் கண்ணலேயே பார்த்திருக்கிறோம், உதாரணமாக இக்கதைக்குச் சம்பந்தமான முனியாண்டி என்பவன் கல்வியறிவு இல்லாதவன். அவன்

முடிவில் எக்கதியடைந்தான் என்பதைச் சற்று சிந்தித்துப் பாருங்கள். அப்பொழுது உண்மை விளங்கும். மேலும் மேலும் நாம் கூறப்புகுவது விரிவிற்கிடமேயாகும்; இச்சிறு புத்தகமும் இடந்தராது. ஆதலால் முடிவாகக் கூறி விடுவோம்.

பெற்றோர்கள் எவ்வித கஷ்டப்படினும் தங்கள் மக்களுக்குக் கல்வி பயிலவைப்பது அவசியமாகும். கல்விபயிலும் நம்மக்கள் கெட்ட சைகைகளுக்கும் துர்நடத்தைகளுக்கும் இடந்தராது. மேலும்மேலும் கல்வியை அபிவிருத்தி செய்வதே புத்திசாலித் தனமாகும். இவர்களுக்கே கடவுள் அனுக்கிரகம் செய்வார்.

---

## அத்தியாயம் 12

### ராஜப்பனின் திறமை

திருச்சிக்கோட்டை பெரியகடைவீதியின் கீழ்புறத்திலுள்ள ஓர் கடை வெகு நாணயமாக அமைக்கப்பட்டிருந்தது. அக்கடை மிகவும் விசாலமான கட்டிடம். அதில் ஓர் அறையுமிருந்தது. அக்கடையில் வரிசையாக நாலைந்து கண்ணாடிபீரோக்கள் வைக்கப்பட்டிருந்தன. அதனுள் இமிடேஷன் ரவைகளினால் செதுக்கப்பட்ட அநேக ஆபரணங்கள் வைக்கப்பட்டிருந்தன. அவைகள் அங்கு எறிந்து கொண்டிருக்கும் கியாஸ் லைட் வெளிச்சத்தினால், இரத்தினமோ? வைரமோ? என ஐயுறும்படி ஜொலித்தது. கண்ணாடி பீரோக்களுக்கு அடுத்தாற்போல் ஓர் இரும்புப்பெட்டி வைக்கப்பட்டிருந்தது. அது மிகவும் கனத்த இரும்பினால் செய்யப்பட் டிருந்தமையால் அதைக் கள்வர் கவருவது அரிதாகும் வண்ணம் அமைந்திருந்தது. அந்த இரும்புப் பெட்டியின் பக்கத்தில் ஓர் கம்பளம் விரிக்கப்பட்டு அதின்

பேரில் ஒருவர் அமர்ந்திருந்தார். அவருக்குச் சுமார் முப்பத்திரண்டு வயதிருக்கும். சற்றே பருத்த தேகத்தினர். அகண்டமார்பும், திரண்ட புஜங்களும், சுருண்ட மீசைகளும் ஆஜானுபாகராய் விளங்கினர். இவரின் முன்னல் ஓர் வட்டமேஜை யிடப்பட்டிருந்தது. அதன்பேரில் "வில்வெட்" என்னும் துணி விரிக்கப்பட்டு இமிடேஷன் கற்கள் கொட்டி வைக்கப்பட்டிருந்தன.

அந்தக் கற்கள் கியாஸ்லைட் பிரகாசத்தால் நக்ஷத்திரம்போல் ஜொலித்துக்கொண்டிருந்தன. அவற்றை அவர் ஓர் அழகிய வெள்ளி சாமணத்தைக்கொண்டு ஒவ்வொன்ருய் எடுத்துப் பார்த்துக்கொண்டிருந்தார். அப்பொழுது இரவு சுமார் 8-மணி யிருக்கும். இந்தச் சமயத்தில் ஓர் சாமானியமான மனிதன் இக்கடையினுள் நுழைந்தான். இவன் முகத்தில் சுருசுருப்பான பார்வைவிளங்கிற்று. இம் மனிதனைக் கண்டதே கடையில் உட்கார்ந்திருந்த மனிதன் வெகு பரபரப்புடன் எழுந்திருந்து. வந்தமனிதனை அவர் வெகு மரியாதையுடன் வரவேற்று ஓர் நாற்காலியில் உட்கார வைத்தார்.

வந்தமனிதன், ஐயா! தமபுசாமி பிள்ளைவாள் ! இந்நேரத்தில் கூட கற்களை நீர் பரிசோதித்துக் கொண்டிருக்கிறீரே. பகலில் பார்ப்பதற்கு அவகாசம் இல்லைபோலும் என்றன். இம்மனிதனே துப்பறிவதில் நிகரற்றவரான ராஜப்பன் என்பதை நம் நேயர்கள் அறியவேண்டும்.

தம்புசாமி:—இல்லையில்லை; பகலில் அவகாசம் இல்லாதிருப்பதிற்கு என்னவேலை யிருக்கிறது. பட்டரைக்காரர்கள் இப்பொழுதுதான் இக்கற்களைக் கொண்டுவந்து கொடுத்துப் போகிறார்கள். அவற்றை இப்பொழுது மேம்போக்காகவே பார்த்துக்கொண் டிருக்கிறேன். இப்பொழுது தாங்கள் இவ்வளவுதூரம் இவ்விடம் வந்ததற்காக

நான் மிகவும் நன்றி பாராட்டுகிறேன். நான் தங்க ளிருப் பிடம் வருவதற்காகவே எண்ணியிருந்தேன். "கும்பிடப் போனதெய்வம் குறுக்கேவந்தாற்போல" நீங்களே இவ்வி டம் வந்துவிட்டீர்கள்; ரொம்பசந்தோஷம் என்றுகூறி இமி டேஷன் கற்களை எடுத்துப் பெட்டியினுள் வைத்துப் பூட்டி விட்டு, அங்கு இருந்த ஓர் சிறுவனை நோக்கி, அடா! ரங்க ராஜு! அனந்தநாராயண ஐயர் கிளப்பிற்குச்சென்று நான் கூறினேனென்று கூறி நாலஞ்சு பலகாரமும் ஒருகப் காபி யும் வாங்கிவா, என்று கூறி தானும் ஓர் நாற்காலியில் அமர்ந்தார்.

ராஜப்பன்:—எனக்காகவா வாங்கிவரச் சொல்லு கிறீர்கள்.

தம்புசாமி:—ஆமாம்! உங்களுக்காகவே வாங்கிவரச் சொன்னது. ஏன்? அதனாலென்ன?

ராஜப்பன்:—பரவாயில்லை. நான் இப்பொழுதுதான் சாப்பிட்டுவருகிறேன். வீணாக ஏன் இப்பொழுது செலவு செய்கிறீர்கள். வேண்டாமென்று சொல்லிவிடுங்கள் (அச் சிறுவனைநோக்கி "அப்பா! தம்பி! வேண்டாம் உன் வேலை யைக் கவனி, போ.)

தம்புசாமி:—இல்லையில்லை. அவன் போய்வரட்டும். சாப்பிட்டாலென்ன. இது சொற்ப ஆகாரந்தானே. தாக சாந்திதானே இதை மறுக்கலாமோ.

ராஜப்பன்:—அது சரிதான் நான் சாப்பிட்டவுடன் நேராக இவ்விடமேவந்தேன். சாப்பிட்டவயிற்றில் மேலும் மேலும் சாப்பிடுவதானால் சிறிதுசங்கடந்தானே. காலையில் நீங்கள் இப்பொழுது செலவுசெய்யும் பணத்தையும் சேர்த்து காபி சப்ளை செய்யுங்கள் சாப்பிடுகிறேன். அதில் சிறிதும் தடையில்லை.

தம்புசாமி:—அப்படியானால் சரி. ரெங்கராஜு! நீ

உன் வேலையைப் போய்ப்பார். (என்று கூறிவிட்டு நாற்காலியை நகர்த்தி அவர் பக்கத்தில்போட்டு அமர்ந்தார்)

ராஜப்பன்:—கேஸ் நடந்ததைப் பார்த்தீர்களா? அதைப்பற்றி நீங்கள் என்ன அபிப்பிராயப் படுகிறீர்கள்.

தம்புசாமி:—ஆஹா! பார்க்காமலென்ன. நான் அப் பெண்பிள்ளைதான் நமது செட்டியாரைக் கொன்றிருப்பாளென்று சிறிதும் எண்ணவில்லை. எனக்கு அது ஒரு ஆச்சரியமாகவே யிருக்கிறது. இதை நீங்களெவ்விதம் அறிந்தீர்கள்? இதை இவ்வளவுகாலம்கடந்து கண்டு பிடித்தது தான் எனக்குப் பெரிதும் வியப்பைத் தருகிறது. முக்கியமாக அதை அறிவதற்கே உங்களிருப்பிடம் வரலாமென்றிருந்தேன்.

ராஜப்பன்:—இஃது என்ன பிரமாதம். இன்னும் இதை விட காலம் கடந்ததெல்லாம் கண்டுபிடித்து இருக்கும் பொழுது சொற்பகாலம் கடந்த இதைக் கண்டுபிடிப்பது தானு ஆச்சரியமாகும். நீங்கள் கூறுவதுதான் எனக்குப் பெரிதும் ஆச்சரியத்தை விளைவிக்கிறது.

தம்புசாமி:—உங்களுக்கு இதைப்பற்றிப் பிரமாதமாகத் தோன்றவில்லையே யாயினும். இது எனக்குப் பிரமாதமாகவும் ஆச்சரியமாகவுமே இருக்கிறது. இது யாருக்கும் உண்டானதுதான். இதை நீங்கள் எப்படிக் கண்டுபிடித்தீர்க ளென்பதை யறிவதற்கே என்மனம் தூண்டுகிறது. அதை சற்று விபரமாகக் கூறலாமல்லவா?

ராஜப்பன்:—ஆஹா! கூறுவதற்குத் தடையென்ன? தங்களிடம் கூருமல் பின் நான் யாரிடம்போய்க் கூறப் போகிறேன். முதலில் இக்கடிதத்தைப் பரிசோதியுங்கள் (என்று ஓர் கடிதத்தைத் தம்புசாமிகையில் கொடுத்தான்.)

தம்புசாமி:—இதுவென்ன கடிதம்? அப்பெண்பிள்ளை செட்டியாருக்கு எழுதி யிருந்தாளோ? (என்று கடிதத்தைக் கையில் வைத்துக்கொண்டே பிரித்துப்பார்க்காமல் வினவினுர்)

ராஜப்பன்:—எதுவோ பிரித்துப் பாருங்கள்; அதன் பிறகு உண்மைவிளங்குகிறது (என்று கூறினதும் தம்புசாமி அக்கடிதத்தைப்பிரித்து வாசிக்கலானார்) அதில் பின் கண்ட வாறு வரையப்பட்டிருந்தது.

## அர்த்தம் விளங்காத அதிசயக் கடிதம்.

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அ | மு | ணி | யா | அ | ண் | டி | நீ | அ | னே | ரா | க | அ | க் | கா |
| க | ரி | அ | ய | ம் | மு | அ | டி | ந் | த | அ | து | ம் | [illegible] | [illegible] |
| ர | ர | ங் | க | அ | ம் | மே | ல | அ | அ | ட | ய | அ | வ | ள |
| ம் | ஞ் | அ | சா | ன் | வீ | அ | தி | யி | லு | அ | ள் | ள | ஆ | [illegible] |
| நீ | ரு | ம் | ஈ | அ | ம் | ப | ர் | அ | வீ | ட் | டி | [illegible] | ற் | கு |
| க் | வா | அ | நா | ன் | உ | அ | ன் | னை | அ | அ | ங் | கு | ச | அ |
| கி | ந் | தி | ப் | அ | பே | ன் | நா | அ | ன் | சி | ல | அ | கா | ர |
| அ | ண | அ | ங் | க | ளை | அ | மு | ன் | னி | அ | ட் | டு | மு | அ |
| ர் | ன் | ஞ | டி | அ | செ | ல் | லு | அ | கி | றே | ன் | அ | ம | ற |
| த் | ந் | அ | து | வி | டா | அ | ம | ல் | அ | அ | வ் | வி | ட | [illegible] |
| த | ம் | வ | ச் | அ | து | சே | ர் | அ | அ | வ் | வி | [illegible] | ட | [illegible] |
| ம் | தி | அ | ல் | நா | ன் | அ | உ | ன் | னை | அ | ஒ | வ் | வோ | அ |
| கொ | ர் | வி | ஞ | அ | டி | யு | ம் | அ | எ | கி | ர் | அ | பா | ர் |
| ள் | ப் | அ | பே | ன் | எ | அ | ன் | ப | தை | அ | க் | க | வ | அ |
| க | னி | இ | ப் | அ | ப | டி | க் | அ | கு | ம | ணே | அ | க | ரி |

இதைக் கண்ணுற்றதும் தம்புசாமிபிள்ளை ஒன்றும் விளங்காதவராய் விழித்தார். அதன் பிறகு ராஜப்பனை நோக்கி "இதென்ன? ஒன்றும் விளங்கவில்லையே இதில்; என்ன எழுதி யிருக்கிறது. இக்கடிதம் ஓர் ஆச்சரியமான கடிதமாகவன்றோ இருக்கிறது" என்று கூறினார்.

ராஜப்பன்:—இக்கடிதமே இந்தக் கேஸைக் கண்டு பிடிப்பதற்கு ஏற்ற உதவியாயிருந்தது. இக்கடித மகப் படாவிடில் சிறிது சிரமமே யாகும்.

தம்புசாமி:—சரிதான். இதில் என்ன ரகஸியம் எழுதி யிருக்கிறதோ?

ராஜப்பன்:—ஆமாம்! பார்த்தீர்களே, ஒன்றும்விளங்க வில்லையோ? சரியாய்ப்பார்த்துச் சொல்லுங்கள்.

தம்புசாமி:—ஒன்றும் விளங்கவில்லையே.

ராஜப்பன்:—நான் கூறுகிறபடி வாசித்துப்பாருங்கள்; அப்பொழுது அர்த்தம் விளங்கும். அதாவது முதல் எழுத்து இருக்கிறதல்லவா? அதிலிருந்து கீழ்நோக்கி வாசியுங்கள். அப்பொழுது என்னவிளங்குகிறது என்பதைப் பாருங்கள்.

தம்புசாமி:—ஓ! இப்பொழுது விளங்குகிறது. அப்படி வாசித்தால் "அகரம்நீக்கி அர்த்தம்கொள்க" என்று வருகிறது. மற்றது சரியாக வாசிக்க முடியவில்லையே. இன்னும் இதில் சிக்கல் இருக்கும்போலிருக்கிறது.

ராஜப்பன்:—சிக்கல் என்னவிருக்கிறது. இப்பொழுது நீங்கள் வாசித்ததிலிருந்தே இதன் அர்த்தம் விளங்கவில்லையா? அதாவது நீங்கள் இப்பொழுது வாசித்த வார்த்தைகளை விட்டுவிட்டு மற்றவார்த்தைகளில் மூன்று எழுத்துக்கு ஓர் எழுத்தாக அமைத்திருக்கும் அகரங்களை நீக்கிவிட்டு வாசித்துப் பார்த்தால் உண்மை யின்னதென்று விளங்கிவிடும்.

தம்புசாமி:—(அக்கடிதத்தை ராஜப்பன் கூறியவாறு வாசித்துப்பார்த்து) ஓ! சரிதான்! சரிதான்! இப்பொழுது இதன்பொருள் விளங்கிவிட்டது. இதோ வாசிக்கிறேன் பாருங்கள். "முனியாண்டி! நீ நேராகக் காரியம் முடிந்ததும் சீரங்கம் மேல்அடைய வளஞ்சான் வீதியிலுள்ள ஆறும் நம்பர் வீட்டிற்குவா. நான் உன்னை அங்கு சந்திப்பேன். நான் சில காரணங்களை முன்னிட்டு முன்னடி செல்லுகிறேன். மறந்துவிடாமல் அவ்விடம் வந்துசேர். அவ்விடத்தில் நான் உன்னை ஒவ்வோர் விநாடியும் எதிர்பார்ப்பேன் என்பதைக் கவனி. இப்படிக்கு மனோகரி." இவ்வளவே எழுதியிருக்கிறது.

ராஜப்பன்:—இக்கடிதம் யார் எழுதினதென்று முதலில் இப்பொழுது விளங்கிவிட்டதல்லவா?

தம்புசாமி:—ஆம்! ஆம்! வெள்ளிடை மலைபோல்

விளங்கிவிட்டது. செட்டியார் வைப்பாட்டியான அக் கொலைகாரிதான் வரைந்திருக்கிறாள்.

ராஜப்பான்:—ஆமாம் அதுவே. இப்பொழுது எல்லாம் கூறுகிறேன் கவனமாய்க்கேளுங்கள். இந்தக் கடிதம் எனக்குச் செட்டியார் அறையிலிருந்து கிடைத்தது. அதின் அர்த்தம் தெரிந்ததும் சில காரணங்களால் அப் பெண்பிள்ளையே கொலைசெய்திருக்க வேண்டுமென்று தீர்மானித்து விட்டேன். அக்கடிதத்தில் "காரியம் முடிந்ததும்" என்று குறிப்பிட்டிருக்கிறதல்லவா அது என்னவெனில், அப்பெண்பிள்ளை செட்டியாரை விஷமருந்திட்டு கொன்று அப்பிரேதம் தன் வீட்டிலிருந்தால் தீங்காக விளையுமென் றெண்ணி முனியாண்டியாகிய சமயற்காரனை விட்டு அப்பிரேதத்தை செட்டியார்வீட்டில் கிடத்திவிட்டு, செட்டியார் இரும்புப்பெட்டியில் வைத்திருந்த 5000 ரூபாயையும் எடுத்துக்கொண்டு வருவதற்காகவே அவ்விதம் குறிப்பிட்டு வரைந்திருக்கிறாள். நான் அக்கடிதத்தைப் படித்துணர்ந்ததும், நானும் சீரங்கம் சென்று அவர்களைச் சந்தித்து அறியவேண்டுமென்று தீர்மானித்து விட்டேன். அனேகமாக இவ்விதகாரியங்களில் சிக்கியவர்களெல்லாம் பகலில் வெளிவர அச்சப்பட்டுக்கொண்டு இரவிலேயே வெளிவரத் துணிவார்க ளாதலாலும், போலீஸார் முனியாண்டியே கொலைசெய்துவிட்டு எங்கேயோ ஓடி மறைந்து கொண்டானென்று தீர்மானித்து அவனைக் கண்டு பிடிப்பதற்காக பல எவலாட்களை விட்டுத் தேடச்சொல்லியிருந்தமையாலும் இதை முனியாண்டி எப்படியும் அறிந்து இரவில் தான் வெளிவரத் துணிவானேயன்றி பகலில் சீரங்கம் போகமாட்டானென யூகித்தறிந்துகொண்டு குறிப்பிட்ட நேரத்திற்கு ஸ்ரீரங்கம்சென்று முனியாண்டியின் வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தேன். அவன் வந்ததும் அவனைப் பின் தொடர்ந்து சென்றேன்.

முனியாண்டி அக்கடிதத்தில் குறிப்பிட்ட வீட்டிற்குச் சென்று அம்மாதை சந்தித்து இருவரும் வார்த்தையாடினார்கள். அவர்கள் வார்த்தையினின்றும் இருவரும்

சென்னைக்குப்போக உத்தேசித்திருப்பதாகப் புலப்பட்டது. அதன் பிறகு முனியாண்டி வெளிப்பட்டு வந்தான். அவனிருப்பிடம் அறிவதற்காக அவனைப் பின் தொடர்ந்தேன். அவன் திடீரென்று எங்கேயோ மறைந்துவிட்டானதலால் நான் கிலேசமுற்று இராயகோபுரம் தாண்டி வரும்பொழுது அவன் ஓர் ஜட்காவண்டிக்காரனிடம் பேசிக்கொண்டிருந்தான். அவனைக் கண்டதும் நான் சந்தோஷமுற்று, இவன் திருச்சிக்கோட்டைக்கு வருவதற்காகவே வண்டிக்காரனிடம் சம்பாஷணை செய்துகொண்டிருக்கிறனென்று யோசித்து அவனறியாமல் அவ்வண்டியிலேயே குதிரைக்குப் புல் வைக்கும் கோணிப்பையில் ஒளிந்துகொண்டேன். வண்டி கோட்டை மணிக்கூண்டையடைந்ததும் முனியாண்டி வண்டியைவிட்டிறங்கி கிழக்கே நோக்கி நடந்தான். நானும் அவனைப் பின்தொடர்ந்து சென்றேன். அவன் முன்னல் சென்றுகொண்டிருக்கும் பொழுதே அவனைக் காணவில்லை. நான் சிறிதுகோபமுற்று இவன் நம்மை இருமுறை ஏமாற்றிவிட்டானல்லவா? என்று வாய்விட்டுக் கூறிப்போய்விட்டேன். அதன் பிறகு மறுநாளிரவு இருவரும் சென்னைக்குப் புறப்பட்டார்கள். நானும் அவர்களறியாவண்ணம் சென்றேன்.

சென்னையை அடைந்ததும் முனியாண்டி செட்டியாரின் வைரமோதிரத்தை விற்கவந்தான். அப்பொழுது நான் அவன் விற்கும் ஷாப்காரனிடம்சென்று விஷயத்தை சுருக்கமாகக்கூறி அம்மோதிரத்தை நாம் கைப்பற்ற வேண்டுமென்று கூறினேன். அவனும் சரியென்று அதன் விலையைக் குறைவாகக்கூறி அவன் அந்த மோதிரத்தைக் கொடுத்து விடும்படியான சில தந்திரவார்த்தைகளையும் கூறினான். முனியாண்டியும் ஷாப்காரனின் போதனையில் ஈடுபட்டு அம்மோதிரத்தை 5000 ரூபாய்க்குக் கொடுத்துவிட்டுப்போய்விட்டான். அதன் பிறகு நான் அந்த ஷாப் தலைவனிடம் அந்த மோதிரத்திற்காக அவன் கொடுத்த 5000 ரூபாயையும் மேலே 500 ரூபாயும் கொடுத்து வாங்கி வந்தேன் அந்தச் சமயத்திலேயே இவர்களிருவரையும்

பிடித்து போலீஸில் ஒப்புவித்து விடலாமென்று யோசித்தேன். அப்பொழுது ரங்கூனிலிருந்து ஓர் அவசர தந்தி வந்தது. அதைப்படித்ததில் நான் ரங்கூனுக்கு அர்ஜண்டாய்ப் போகும்படி நேரிட்டது. நான் உடனே இதைப் பிறகு பார்த்துக்கொள்ளலாமென்று போய்விட்டேன். நான் போனதும் ஓர் கேஸ்விஷயமே. அஃது என்னவெனில், ரங்கூனிலிருக்கும் தனகோடி முதலியார் குமாரத்தியை தெரியாமல் யாரோ களவாடிக்கொண்டு போய் விட்டார்களென்பதே. தனக்கோடி முதலியார் என்பவர் லக்ஷாதிபதி. அவருக்கு தனலக்ஷ்மி என்ற ஒரே ஒரு குமாரத்தியுண்டு. நல்ல ரூபசௌந்தரி. ஆதலால் அவளை அநேகர் மணம்புரிய பிரயாசைப்பட்டார்கள். தனலக்ஷ்மிக்கு தனபாலன் என்ற ஓர் மாமனிருந்தான். அவன் தனலக்ஷ்மியை வெகுநாளாக மணம்புரிந்து கொள்ள வேண்டுமென்று விருப்பமுற்றிருந்தானகையால் தனகோடி முதலியாரைக் கேட்டான். அவர் தன் மகளை அவனுக்குக் கொடுப்பதற்கு விருப்பமில்லாமல் மறுத்துவிட்டமையால் தனபாலன் கோபமுற்றவனாய்ப் போய்விட்டான். அதே சமயம் தனலக்ஷ்மியும் காணமற் போய்விட்டமையால் எனக்கு உடனே தந்தி கொடுத்தார்கள். நான் முதலில் தனலக்ஷ்மியின் மாமனான தனபாலனே களவாடிச் சென்றிருக்க வேண்டுமென்று எண்ணியிருந்தேன். அங்குப் போய் நடவடிக்கைகளைப் பார்த்ததும் வேறுவிதமான யோசனை உண்டாய்விட்டது; வேறு ஆளாய் இருக்க வேண்டுமென்று எண்ணினேன்.

தம்புசாமி:—அப்படியானல் அப்பெண்ணைக் களவாடிச் சென்றது யாரோ?

ராஜப்பன்:—அக்களவு அங்கே நான் நினைத்தவாறே முடிந்தது. அதாவது தனகோடி முதலியாரின் வீட்டிற்கு அடுத்தவீட்டில் வசிக்கும் பூபாலன் என்னும் வாலிபன் தனலக்ஷ்மியின்பேரில் வெகுநாளாகக் காதல் கொண்டிருந்தான். இது ஒருவருக்கும் தெரியாது. தனலக்ஷ்மியின் விவாகத்தைப்பற்றித் தனகோடி முதலியா

ரிடம் தனபாலன் பேசிய சமாசாரத்தைப் பூபாலன் எப்படியோ யறிந்து தனலக்ஷிமியை அதற்குமுன் கைப்பற்றி விடவேண்டுமென் றெண்ணி அவள் மாடியில் உலாவிக் கொண்டிருக்கும் சமயம் பார்த்து, தனலக்ஷிமியைத் தூக்கிக்கொண்டுபோய் அடுத்தவூரில் ஓர் வீட்டில் வைத்திருந்தான். நான் அதைச் சிறிது சிரமப்பட்டுக் கண்டுபிடித்து பெண்ணைத் தனகோடி முதலியாரிடம் ஒப்புவித்துவிட்டு இவ்விடம் வந்தேன். சென்னையில் முனியாண்டி தன்பெண் சாதியுடன் வசித்துவருவதைக்கண்டு என் சிஷ்யனை கண்ணன், பொன்னன், என்ற இருவரையும்விட்டு அவன் வீட்டைப் பரிசோதிக்கச் சொன்னேன். அவர்கள் அவ்விதமேசென்று பார்க்கும்பொழுது செட்டியார் இரும்புப் பெட்டியிலிருந்து திருடிக்கொண்டுபோன 50000 ரூபாயும் அப்படியே அகப்பட்டன. அதன்பிறகு மனோகரி என்ற அப்பெண் பிள்ளையைப் பார்த்தேன். அவள் ஸ்ரீரங்கத்தில் பழனியம்மாள் என்று பொய்பெயருடன் வசித்தாள். அவள் பெயர் மனோகரியுமல்ல அதுவும் பொய்பெயர்தான். அவள் குலசேகரிபெயர் என்பது நீங்களு மறிந்ததுதானே. அவள் அவ்விதம் பொய்ப்பெயருடன் வசித்துவருவதைக் கண்டு உடனே சிறிதும் தாமதியாமல் போலீஸ் டேஷனுக்குச்சென்று அவர்கள் நம்பும்படியான சில ருஜுவுக்களைக் காண்பித்து முனியாண்டிக்கும் அப்பெண்பிள்ளைக்கும் பிடிவாரண்ட் உண்டாகச் செய்தேன். அவர்களும் அவர்களிருவரையும் விடாமல் பிடித்துவந்தார்கள். பிறகு கோர்ட்டில் நடந்தவிஷயம் தெரிந்ததே. வேறு சந்தேகமிருப்பின் கேட்டுக் கொள்ளுங்கள்.

தம்புசாமி:—வேறு ஒன்றும் சந்தேகமில்லை. நீங்கள் இவ்வளவுதூரம் சிரமப்பட்டுக் கண்டு பிடித்ததற்காக நான் மிகவும் சந்தோஷப் படுகிறேன். இந்தப் பொருள் போனதைப்பற்றி நான் சிறிதும் பாராட்டவில்லை. கொலை செய்த ஆள் இன்னாரென்று தெரிந்ததே எனக்குப் பரம சந்தோஷம்.

ராஜப்பன்:—அது சரிதான்; இன்னொருவிஷயம் பார்த்

தீர்களா? கொலை நடந்ததினம் செட்டியார் வைப்பாட்டி இருக்கிருளா இல்லையாவென்றுவது போலீஸார் கவனித்தார்களா? இவ்விதந்தான் போலீஸார் கேஸ்கள் கண்டு பிடிப்பதெல்லாம். "தென்ன மரத்தில் தேள் கொட்ட பனைமரத்தில் நெறி ஏறினது" என்ற பழமொழிபோல குற்றம்செய்தவர்கள் ஒருவராயிருந்தால் வேறொருவரைப் பிடித்து வாட்டிடுவார்கள். இவர்களுக்கு உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடிக்கும் திறனிருக்காதுபோலிருக்கிறது.

இவ்விதம் கூறினதும் ராஜப்பன் தன் ஜேபியி னுள்ளிலிருந்து செட்டியாரின் வைரமோதிரத்தை எடுத்து தம்புசாமிப்பிள்ளையின் முன்னால் வைத்து முனியாண்டியிடமிருந்து கொண்டுவந்த ஐயாயிரம் ரூபாயையும் அளித்தான்.

அதைக் கண்ணுற்ற தம்புசாமிப்பிள்ளை அம்மோதிரத்தை எடுத்து ராஜப்பன் விரலிலணிந்து அவன் அளித்த 50000 ரூபாயில் 15500 கொடுத்து இந்த மோதிரத்தை உனக்கு நீ சிரமப்பட்டு கண்டுபிடித்ததற்காக செட்டியாரின் இனுமென்று நான் என் மனப்பூர்வமாய் அளிக்கிறேன். இந்த ரூபாயில் நீ இம்மோதிரத்திற்காக அளித்த ரூபாய் 5500-ம் போக உனக்கு 10000 ரூபாய் நான் உனக்கு இனுமாக அளிக்கிறேன். இதை சந்தோஷமாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதே எனது கோரிக்கை என்று கூறினர்.

இதைக்கேட்டதும் ராஜப்பன் மிகவும் சந்தோஷமுற்றவனய் அத்தொகைகளை ஏற்று தம்புசாமிப்பிள்ளையைவணங்கி நின்றான், என்பதோடு நமது கதையை முடிக்கிறோம்.

இக்கதையினால்,

"நன்மை விதைத்தால் நன்மைவிளையும் தீமைவிதைத்தால் தீமைவிளையும்" என்பது விளக்கியிருக்கிறது.

சுபம்

முற்றிற்று.



PRINTED AT THE SRI BHARATHI PRESS, CHOOLAI, MADRAS.

## புலிப்பாணி முனிவர் வயித்தியம் 500

மூலமும் - உரையும்.

இதில் கைபாக, செய்பாக மர்மங்களுடன் அடங்கியுள்ளது.

இதன் விலை அணா 0 12 0

---

**ஸ்ரீ வேங்கடேச பராக்கிரமம் அல்லது திருப்பதிமான்மியம்:** ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுடைய வைபவங்களையும் அவர் எழுந்தருளியிருக்கும் மலையின் சிறப்புகளையும் அதிலுள்ள தீர்த்தங்களின் பிரபாவங்களையும் இதில் விவரித்திருப்பதுடன் நான்கு யுகங்களிலும், விருடபகிரி, சேஷகிரி, அஞ்சனாத்திரி, வேங்கடாசலம் என்ற நான்கு பெயர்கள் உண்டான காரணங்களையும் சாங்கோபாங்கமாய் எடுத்துக் காட்டியுள்ளன. ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுடைய பராக்கிரமங்கள் யாவும் இதில் அடங்கியிருப்பதால் ஒவ்வொருவருக்கும் இது மிகவும் அவசியமானது.
1 0 0

**ஸ்ரீ ராம பராக்கிரமம்:**—இது ஓர் சிறந்த பக்திநூல். பாலர் பாலிகைகள் முதல் சகலரும் எளிதில் வாசிக்கத்தகுந்த செந்தமிழ் நடையில் இராமாயணம் முழுசரித்திரமும் அடங்கியுள்ளது.
0 6 0

**பழனியாண்டவர் பக்திரசக் கீர்த்தனம்:**—நவீன டிராமா மெட்டில் திருப்புகழ் சந்தப் பாக்களும், நூதன வர்ணமெட்டுகளும் நிரம்பப் பெற்றுள்ளதால் எல்லாராலும் புகழப் பெற்றது.
0 4 0

**இந்து தேகாப்பியாச சாதனம்:** இது தேகதத்துவ அவயவங்களின் அத்தியாவசியத்தைத் தெரிவித்து சரீரத்தை பலமாகவும், சௌக்கியமாகவும் போஷிப்பதற்கான அப்பியாச முறைகளைப் படங்களுடன் விவரித்திருக்கின்றது.
0 8 0

**டெய்லரிங் அண்டு கட்டிங்:**—கோட்டு, டிராவுசர் முதலிய உடுப்புகளை வெட்டுவதற்கான பிளான்களும், கணக்குகளும் உள்ளது.
1 0 0

**நவரத்தின ஒப்பாரி:**—இதில் ஸ்திரீகள் துக்கிக்கும் ஒப்பாரிகளும், மன்மதன் ரதி வாக்குவாதமும், ரதிதேவியின் புலம்பலொப்பாரியும், மன்மதன் எரிந்தான் எரியவில்லை யென்ற சந்தேக நிவர்த்தி லாவணியு மடங்கியிருக்கின்றன.
0 5 0

**இல்லறமாலிகா:**—இதில் சகலரும் அநுஷ்டித்து வரும் பண்டிகை, நோன்பு, விரதம் முதலியவைகளின் சவிஸ்தாரத்தை விளக்கி யிருப்பதால் ஒவ்வொரு குடும்பத்திலும் அவசியம் இருக்கவேண்டிய ஓர் சிறந்த பொதுநூல்.
0 6 0

**ஸ்ரீ கேதாரீஸ்வர விரதமகிமை:**- இப் புத்தகம் ஒவ்வொருவரிடமும் அவசியம் இருக்கவேண்டும்.
0 2 0

---

ஸ்ரீ பாரதி புத்தகசாலை, சூளை போஸ்ட், சென்னை.

# THE ENGLISH TEACHER

# ஆங்கில போதகன்

இதை வாசித்தால் சில மாதங்களில் ஆங்கிலம் எழுதவும் பேசவும் நன்ருய்க் கற்றுக்கொள்ளலாம். இதற்கு உபாத்தியாயர் தேவையில்லை. இதில் ஆங்கில எழுத்துக்களையும், பதங்களையும் தமிழில்



உச்சரிக்கும் விதங்களைக் காட்டி ஆங்கிலபாஷையிலுள்ள இரண்டெழுத்துச் சொற்கள் முதல் பலவெழுத்துச் சொற்களையும் விவரித்து அவற்றிற்குச் சரியான தமிழ் உச்சரிப்புக்களையும், தமிழ் அருத்தங்களையும் அவ்வப் பதங்களைக் கொண்ட வாக்கியங்களையும், படிப்படியாக யாவரும் வெகு சுலபமாய்த் தெரிந்து கொள்ளும்படி எழுதப்பட் டிருப்பதுடன் மிருகங்கள், பட்சிகள், வீட்டுச் சாமான்கள், உணவுப் பொருள்கள் குடும்ப விவகாரங்கள், வியாபார விஷயங்கள், தேகாரோக்கியம், சரீரக் கூறுகள், உத்தியோக விஷயம், நீதிஸ்தானம் முதலிய அரசாங்க விவகாரங்கள், சினேக சம்பாஷணைகள், கடிதமெழுதும் முறைகள், கிராமாதிசயங்கள், பட்டண வாழ்க்கை, தொழிற்சம்பந்தமான விஷயங்கள், விண்ணப்பங்கள், கலியாண முதலிய சுபலிகிதங்கள், வியாசங்கள், சிறு கதைகள், இன்னும் பிற விஷயங்களும் சுலபமான நடையில் ஆங்கிலத்திலும் தமிழிலும் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

இஃது ஆங்கிலம் கற்க அவாவுறும் ஆண்மக்களுக்கும் பெண் மக்களுக்கு மாத்திரமன்றி கிராமாதிகாரிகள், கணக்கப் பிள்ளைகள் தோட்டக் கங்காணிகள், கீழ்த்தர உத்தியோகஸ்தர்கள், இராணுவ சிப்பாய்கள், வியாபாரிகள், ஐரோப்பியரிடமிருக்கும் தொழிலாளர்கள் முதலிய யாவருக்கும் மிகவும் அவசியமானது.

திக்கு கடிதம் காலிகோ பைண்டு புத்தகம் 1-க்கு ரூ. 1 8 0

உயர்ந்த கிளேஸ் கடிதம் காலிகோ பைண்டு புத்தகம் 1-க்கு ரூ. 2.

ஸ்ரீ பாரதி புத்தகசாலை, சூளை போஸ்ட், சென்னை.